# ஆனந்தரங்கப் பிள்ளை

# நாட் குறிப்பு

தொகுதி ஏழு



கலை பண்பாட்டுத் துறை

புதுவை அரசு

**1998**

☆ ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு (நகல் பதிப்பு) தொகுதி **VII**

☆ மக்கள் பதிப்பு : ஜூன் 1998.

☆ விலை :

☆ வெளியீடு : கலை பண்பாட்டுத் துறை,
புதுவை அரசு.

☆ பதிப்பாக்க மேற்பார்வை : புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்,
புதுவை – 605 001.

☆ அச்சு : மோகனா பதிப்பகம்,
புதுச்சேரி.

☆ வெளியீட்டுக் குழு : திரு. கி. இராசாராம்
திரு. ஆனந்தரங்க ரவிச்சந்தர்
திரு. பிரபஞ்சன்
திரு. செபஸ்தியான்
முனைவர். எல். இராமமூர்த்தி.





பிரத்தியோகமான

# ஆனந்த ரங்கப்பிள்ளையவர்களின்

## சொஸ்த லிகித

# தினப்படி சேதி குறிப்பு

ஏழாம் புத்தகம்

கிடைக்குமிடம்:—
அரசாங்க பொது நூல் நிலையம் புதுச்சேரி.

அரசாங்க அச்சகம், புதுவை.

இதன் விலை] 1963 [ரூபா [illegible]

## பிரத்தியேகமான

# ஆனந்தரங்கப்பிள்ளை

# தினப்படி சேதி குறிப்பு



## சொஸ்தலிகிதம்

### ஏழாம் புத்தகம்

இப்படியிருக்கச்சே கோசா ஈலுத்தான்வந்து யென்னை அழைப்பிச்ச காரியமென்னவென்று கேட்டதுக்கு துரை நான் அழைப்பிச்சதில்லையென்று சொன்னார். அதிலே சோபுதாரன் சேருவைககாரனை அழைத்து கேட்டாலவர்கள் நாங்கள் ஒருத்தரும் சேவுகர்களை அனுப்பயில்லை யென்று சொன்னார்கள் யிதிலே துரையவர்களிருந்துக்கொண்டு அப்படி ஆர்போய் அழைச்சார்களோ யிங்விடத்திலே அழைச்சதில்லை யென்று சொன்னப்போலே மூசே புரியிருந்துக்கொண்டு யின்றைக்கு எப்றல் மீ முதல் தேதி அல்லவா ஆனபடியினாலே யெங்களுக்குள்ளே மோசம் பண்ணுகிறதென்று ஒரு விளையாட்டு விளையாடுவார்கள் அந்த சாடையாயி ஆருகிலும் துரையவர்களழைக்கிறார்களென்று விளையாடினார்களோ யென்னமோயென்று சொல்லிக்கொண்டு பேசியிருக்கச்சே மதாம் கோசா ஈலுத்தானுக்கு அலமேசு கபேகுடிக்க வரச்சொன்னாளென்று நிறுக்கிவந்து அழைச்சாப்போலே துரையிருந்துக்கொண்டு பெண்பெண்சாதி யனுப்பினாள்யென்று சொல்லி மூசேலமீகத்தினை (Mr. de la Gatinais) யை ஒரு தரம் யிப்படித்தான் மோசம்பண்ணினார்கள் யென்றுசொல்ல அதிலே மூசே புரியிருந்துகொண்டு மூசேலகேத்தினே சரீரம் சுவஸ்தமில்லாமல் வீட்டிலே யிருந்தான். அப்போ

மங்கள் மேஸ்திரி அனுப்பினதாய் அரூதுக்குடுத்தனுப்பினல் அவன் மங்கள் மேஸ்திரி அனுப்பினனுங் காட்டும்யென்று அரூது வாத்துக்கொண்டானென்று யிப்படி அனேகங்களுண்டு நடக்கிற தென்று பேசிக்கொண்டிருக்கச்சே கே.சா சுலுத்தான் துரையைப் பார்த்து மாபூசகான் ஒரு பல்லக்கின் பேரிலே யேறிக்கொண்டு பத்து சேவுகருடனே வந்தானும். முகங்கள் வேறுபட்டு உடம் பெல்லாம் நடுக்க வந்தானென்று யென் சேவுகன் கூடலூருக்குப் போனவன் வந்து சொன்னன்யென்று துரையுடனே சொன்னன். அப்பால் முசேபிறியேல் வந்து துரையுடனே பேசியிருந்து யென்னை அழைச்சு கூடலூரிலே வாங்குற முதல் ஆயிரம் பொன்னுக்கும் ஆயிரத்து முன்னூத்தி தொண்ணூத்தி பாசுபாகு பத்தாக்கு ஆச்சுது. அந்தப்படிக்கி கூடலூருக்கு யெழுதிவைச்சு வட்டத்துக்கும் முதலுக்கும் உண்டான வெள்ளியை வாங்கியனுப் பச் சோல்லி யெழுதியனுப்பு யென்று சொன்னர் நான் ரெண்டு நாளைக்கு முன்பாகத்தானே யெழுதியனுப்பிவிச்சேனென்று பதி லுத்தரம் சொன்னப்போலே சீனக்காறன் சம்மதிசாக்கு நிறுத்தி தீத்துப்போட்டாப்போல் ஆச்சுதே அவனுக்குள்ள விராகனை சீக்கிறமத்துக்கு சம்மதி பண்ணி தீத்துப்போடச் சொல்லென்று சொன்னர் வர்த்தகர்கள் பணமும் முஸ்தீத்துப்பண்ணுகிறுர்கள். நீங்கள் துத்தநாகம் முன்னூறு பாரத்துக்கு உண்டான ரூபாயை குடுத்தால் யிதுவும் அதுவும் சேத்து சனிவாரனுள் செலுத்திப் போடச்சே பார்க்குறேன் என்று சொன்னேன் அதுக்கு அவர் யிறநூறு பாரம் தாலோ கும்பினிருக்கு யென்று சொன்னர் அதுக்கு நான் வர்த்தகர்களுக்கு யிந்த லாபத்தை தொட்டு பணம் வாரதில்லை யானபடியினுலே உங்களுடனே சொல்லிக் கொள்ளுகிறதேயல்லாமல் வரத்துண்டானல் அவர்களாயிசமு தாயிச்சு குடுத்து தீத்துப் போடுவார்களென்று சொன்னதுக்கு நல்லது அவர்களுக்கு கோந்திருத்து கொடுக்கிறதாய் ஒடுதானுசு பண்ணிகுடுக்கிறேன். அவர்களை றெசீது யெழுதிக் கொடுத்து பணத்தை வாங்கிக்கொண்டு சீனக்காறன் சம்மதி சரக்குச் செலுத்தச்சொல்லி சொன்னர். நல்லது அப்படியே அவர்களுக்கு சொல்லிவரச் சொல்லுகிறேன் யென்று சொன் னேன். அதிலே அழகப்பசெட்டி குண்டூர் வெங்கிடாசலசெட்டி கொள்ளைக்கண் முத்தியசெட்டி சுவாமிதுரோகி அருணசலசெட்டி ராமகிருஷ்ணசெட்டி வந்தார்கள். அவர்களுடனே துரையவர்கள்

சொன்ன பேச்சைச் சொல்லி மத்த உங்கள் சரக்குப்பணத்து கனே சேர்ப்பிடிச்சு முஸ்தீத்துப்பண்ணுவியுங்கள் யென்று சொன்ன துக்கு யெவ்வளவாகிலும் அதுக்குக் கூட பதினையிரம் ரூபாயாகி லும் வாங்கிக் கொடுக்கவேணுமென்று சொன்னதுக்கு யிந்த காரியத்துக்குதானே துரை அவர்களுக்குத் தெரியப்படச்சொல்லி வெகு பிறயத்தனமாச்சென்று சொல்லி போகச் சொன்னமட் டுக்கும் அவர்களனுப்பி விச்சுக்கொண்டு போனர்கள்.

அப்பால் திருவீதி சம்பதிராயன் மனுஷர்களை கேட்டு விசாரித்துக்கொண்டு பணம் வந்து விட்டுக்கொண்டுபோறான் மூத்தாமியா சிதம்பரம் கில்லேதாரன் அவன் என் கையில் புவனகிரி குத்தகைவாங்கியிருந்தானே யிப்பவும் புவனகிரி அவன் வசமாயித்தானே நடக்குது அவன் மாபூசுகானுக்கு சீமை ஆச்சு யென்றும் யினிமேல் பணம் அவனுக்கு செலுத்துகுறபடியினலே உங்களுக்கு ஒரு காசு நான் குடுக்கிறதில்லையென்று சண்டிப் பேச்சுப்பேசிக்கொண்டிருக்கிறன் ஆனல் புவனகிரி சீமை அவன் பாரிசமாயித்தானே நடக்கிறபடியினலே பணமவனைவிட்டுபோகத் தக்கதில்லையென்று யென் மனதிலே கெட்டியாயிருக்கிறதுமல்லா மல் யென் மனுஷர்களும் பணம் உன்னை விடத்தக்கதில்லையென்று கெட்டியாய் உத்திரஞ்சொன்னர்கள். யிவன் எப்போதும் யிந்த பொல்லாப்பு நினைப்பின்பேரிலே மனதை வைத்துக்கொண்டு யிருந்தான். ஆனலவனுக்கு சுவாமி ஆக்கினை கொடுப்பாரென்று சொல்லி யிதல்லாமல் யிப்போ வெங்கிட்டம்மாள் பேட்டை சீமை கூட தோறணம்வைத்து அமுல் பண்ணுகிறனென்று சொன்ன துக்கு நம்முடைய பணம் குடுப்பானென்று துரையவர்கள்சொன் னர். அப்பால் தீர்த்தநகரிசீமை முத்து கிருஷ்ணபிள்ளை யென்கிற மேஸ்தர். பிளேயர் துபாசி தோறணம் வைத்து அமுல் பண்ணுகி றன். தேவனம்பட்டணம் சீமையும் யென்சாகீரும் யிங்கிரேசுக் காறர் தோறணம் வைத்தார்களே—விழுப்புரந்தான் ஒருத்தன் அமுல் பண்ணக்கூடாது நாசறுசங்குதானே அவர் பவுன்சுடனே கூட அங்கேதானே பீறங்கி யிருக்கிறப்போலே ஆச்சுதே ஆன படியினலே அது தெரியயில்லை பூந்தமல்லிதான் சம்பத்திராயன் தம்பி உக்குமத்ராயனும் தற்பேசி மகம்மதும் ரெண்டுபேரும் சிறிது துப்பாக்கிகள் யிங்ரேசுக்காறற் கையில் வாங்கி சிறிது துப்பாக்கிகளையும் கூடக் கூட்டி மல்றுசாவைக் காவல்விட்டு அவன் சிறிது ருணுவும் கூட்டிக்கொண்டு பூந்தமல்லி பொன்

னேரி சீமை மணிமங்கலம் காஞ்சிபுரம் செங்கல்பட்டு சீமை கூட தோறணம் வைத்துக்கொண்டு பின்னையும் அந்த வட்டங்களிலே யிருக்கிற சீமைகளெல்லாம் தோறணம் வைத்துக் கொண்டு அமுல் பண்ணிக்கொண்டு வருகிறுர்களென்று யிது முதலான சேதிகளெல்லாம் துரைப்வர்களுடனே தினமானம் சொல்லிக்கொண்டு வருகிற சேதிபடிக்கி யின்றைக்குஞ்சொல்லி பறங்கிபேட்டைக்கும் முன்சேக்கு அமீதுயென்றும்முதல்லிக்கான் மனுஷனுகயிருந்து அப்பால் பறங்கிப்பேட்டையும் புவனகிரி சீமையும் அமுல் பண்ணி செத்துபோய் அவன்தம்பி சிறிது நாளிருந்தான். யிவன் அவன் தம்பியைத்தானே பறங்கிபேட்டை அமுலுக்கு மாபூசுக்சான் அனுப்பினதாய் சேதி கேழ்விபட்டேன் யென்று யிந்த கபுறும்கூட சொன்னதுக்கு துரையவர்கள் சுவாமி உங்களுக்கு மனதிண்டடிக்கி உன் சீமைக்கி ரெட்டிப்பு சீமைகள் சுவாமி உன்வசம் பண்ணப்போறுர் ஒரு மீ த்தைக்குள்ளாக யென்று சொன்னதுக்கு நான் உம்முடைய பரிபூரண கடாட்சம் நான் பெத்துயிருக்கச்சே யிப்படி முப்பது பற்காறு வருகிறதாக சரியமா மண்டலாதிபத்தியம் பண்ணுவேனென்று சொன்னதுக்கு அந்தமட்டுக்கும் உனக்கு அதிருஷ்ட்டம் சுவாமி தயவுபண்ணி யிருக்கிறுரென்று சொன்னுர். யிதிலே முசே பிரியேல் (Mr. Friel) ஒரு சீனு பெதுமைலாக்கு போடுகிறது. அந்த பதுமையைக் குடுத்து அந்த வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார். அப்படியிருக்கச்சே சோம்பன் மாத்துரண்டையிலே யிறங்கியிருக்கிற நம்முடைய லசுக்கரிலே யிருந்து முசே தொத்தேல் யெழுதின காகிதம் வந்துது. அந்தக் காகிதம் பார்த்தவுடனே துரையவர்கள் முகம் வேறுபட்டு மெத்தவும் வேசடை அடைந்தார். அந்த சாடையைப் பார்த்தால் யின்னதென்று பிடிபடாமல் அப்பால் யென்னைப் பார்த்து நம்முடைய முசே தொத்தேல் மெத்த லீவு மெத்த பதட்டமான மனுஷன் யென்று சொல்லி சண்டையில்லாமல் சமாதானமாயிப் போமாவென்றும் மகம்மது அன்வறகான் பக்குசு பெரிய மனுஷனுக அவன் வந்து சந்தி பேசி றெண்டுபோனுல் அவன் சகிப்பானு வென்றும் யென் பணம் விஸ்தாரமாய் கடன் குடுத்து அவர்கள் கொடுத்த சாகீரெல்லாம் கும்பினீர் தாக்கில் பண்ணிப்போட்டேனிப்போ கட்சியிலே நான் பணமிழந்து போனதுமல்லாமல் கும்பினியாருடைய சாடை திறுவர்கமாய் நடந்தால் ஆதாயம் மாத்திரம் கொண்டுபோய்

கெட்டிக்காறனென்று சந்தோஷப்படுவார்கள். சத்து விக்தியா சப்பட்டாலுன்னை யார் யிப்படிப்பட்ட வேலை செய்யச் சொன்னவர்கள் வெளி சீமையாலுடனே யேன் பகைச்சுக்கொண்டாய் யென்று நிஷ்டூரஞ் சொல்லுகிறது யெசமான்கள் சுபாவமென்கிறது உனக்கு நன்றாய் தெரியுமே ஆனப்டியினாலே யிப்ப பணம் யென் சொந்தமென்கிறது உனக்குதெரியுமே ஆனபடியினாலேபணமும் போக்கடிச்சுக்கொண்டு அவர்கள் நிஷ்டூரச் சொல்லுக்கும் ஆச்சுதென்று மிப்படி மனது தைரியம் விட்டு யிதுக்கடுத்த பேச்சாய் பல பல விதமாய் ரேண்டு நாழிகை நேரம் சொன்னார். அதுக்கு நான் சொன்னது அப்படி உமக்கு ஆதாய முதலும் பின்னையும் சீமை பூமிகள் கூட டில்லி பாதுசாவைகூட சட்டைபண்ணாமல் அவருக்கு சத்துருவாயிருந்துகொண்டு யெதுத்துக்கொண்டிருக்கப்பட்டவனை நீர் சுலுயாசமாய் செயிச்சீர் யென்கிற கீர்த்தி சூரியப் பிறகாசம்போலே சமுத்திரம் சூழ்ந்த பூலோகமெல்லாம் பிறகாசிக்கவேண்டியிந்தக் காரியம் வேண்டியதென்றும் யிதின் பேரிலே பிறான்சு றாசாவுக்கு நாம் யேறோப்பு றாச்சியமெல்லாம் லூயிசு கத்தோரசு யென்கிற (Louis XIV) முன் போன றாசானாள் கொண்டு தம்முட நாள் கூட சயம்பண்ணிக்கொண்டு வருகிறோ மிதுக்கு. நாலு லட்சம் சொலுதாதுகள் யென்ன திரவிய சில வென்ன வெகு மனுஷர் சாவுகள் யிதல்லாமல் தாமும் தம்முட குமாரன் முதலான யெசமான்கள் தானே கூட பிறப்பட்டு சண்டை பண்ண யிதுகளுக்கெல்லாம் பிறான்சு றாச்சியம் ஆயிரங் காத வழியிலே யிருக்க யிப்படிப்பட்ட அனேகம் சான்சாமுகள் வைத்துக்கொண்டு சண்டைபண்ணினால் ஒவ்வொரு கெடிதலம் ஒரு பட்டணம் சாதிக்க ஆறு மீ ஒரு வரு அதுக்கும் கூடாமல் போறதும் விட்டுவிட்டுப் போறதுமாயிருக்க பிற றாச்சியத்திலே வியாபாரம் பண்ணப் போனவிடமாயிருக்க பட்டணம் ரெண்டு நாழிகை வழியேலப்படியாயிருக்க யிதுவும் பிறத்தியார் சீமையாயிருக்க றாசீகம் வேறேயாயிருக்க ஆயிரம் பேர் சொலுதாதுகள் றாணுவுமிருக்க திரவிய சான்சாமி மட்டாயிருக்க பின்னையும் சண்டை சாமான் முதலான ஆவறணங்களெல்லாம் நினைக்கவே கூடாமலிருக்கிற சானசாமிகளாயிருக்க லட்சம் குதிரைக்கி யெசமான்களாயிருக்கிற மண்டலாதிபதிகளாயிருக்கிற றாசாக்களை நினைத்த மாத்திரத்திலே செயங்கொண்டு சீமை பூமிகளும் லட்சாந்திரங்களாயிருக்க சுலுயாசமாய் அவர் திரவிய சிலவில்லாமலு

யிருக்க மனுஷ சாவில்லாமலும் யிந்தியாரூச்சிய மெல்லாம் செயித் தீர் யென்று நம்முடைய பிறான்சு வமுசத்தினுடைய கீர்த்தியை யிந்தியா ரூச்சியமெல்லாம் செயங்கொண்டார்களென்கிற பேர் உண்டாக்கினீரென்று உம்முட பேரிலே வெகு சந்தோஷப்பட்டு உங்கள் சாதி வழக்கப்படிக்கி சேம லூயி (St. Louis) முத்திரை செகப்பு பட்டை முதலான மன்னரிக்கமேன் பாடுகளென்னென்ன உண்டோ அதுகளெல்லாம் குடுத்து மரியாதை பண்ணுகிறது மல்லாமல் நீர் நம்முட பிறான்சு வமுசத்துக்கும் யிந்த ரூசரீகத் திற்கும் யிந்த ரூச்சியத்தை பிறான்சுக்காறர்கள் செயித்து செயங் கொண்டார்கள் யென்கிற கீர்த்தி வருவிச்ச நன்றி நாங்கள் வமுசத்தாரனைவரும் ரூசரீகத்தாரும் ஒருக்காலும் மறக்கத்தக்க தில்லை. உமக்கும் உம்முட பமீலுக்கும் (Family) நாங்கள் மிகுந்த பாத்யமானோமென்றும் பின்னையும் உங்கள் சாதி வழக்கப்படிக்கி மிகுந்த உபசாரமென்ன சொல்லவேணுமோ அதுகளெல்லாம் உமக்கு நடத்துவார்களேயல்லாமல் பின்னையும் மாறுபாடாய் நடக்கத்தக்கதில்லை உம்முடைய சாடையும் ஒரு விசாரம் மனதுக் குத் தோத்தாமல் மகத்தாகிய கீர்த்தியும் பிறயோசனமும் வரத் தக்கதில்லை. ஆனபடியினாலே உமக்கு வெகு கீர்த்தியும் பிறயோ சனமும் முன்னுக்கு வரயிருக்கச்சே தான் யிந்த கிலேசம் உம் முடைய மனதுக்குத் தோணித்து யெப்போ கிலேசம் தோணித் தோ மகத்தாகிய கீர்த்தியும் பிறயோசனமும் கைகிக்கு வந்து தென்று யெண்ணிக்கொள்ளுங்கோளென்றும் முன் யிங்கிரேசுக் காறர் நடப்பிச்சதுமப்பால் சென்னப்பட்டணம் வந்ததும் சேம் மிஷேல் (St. Michel) முத்திரை வந்ததும் ரூச்சியமெல்லாம் சென்னப்பட்டணம் செயிச்சு வாங்னீரென்கிற கீர்த்தியும் கும் பினியாருக்கும் அதிலேயிருந்த பொன் வெள்ளி சரக்குகள் தினிசுகள் கூட முப்பது நாற்பது லட்சத்துக்கு ஆதாயம் வந்தது. அப்பால் யிங்கிரேசுக்காரர் வந்து புதுச்சேரியை முத்திக்கைப் போட்டுக்கொண்டார்கள். அப்போ அன்வறதிகான் கூட மத் தத்து பண்ணபோது வந்த கொஞ்ச யிக்கட்டு தோத்தின மாத் திரத்திலே அன்வறதிகானை செயிச்சு புதுசாயி சுபாகற் நாடகத் துக்கு வைத்தீரென்கிற கீர்த்தியும் யிங்கிரேசுக்காறர்கள் வெகு பெலத்து வந்தவர்களை செயித்து முறிய அடிச்ச கீர்த்தியும் வில்லியநல்லூர் பாகூர் ரெண்டு பற்கனுக்களும் ஆதாயமும் லட்சத்தன்பதினாயிரம் ரெண்டு லட்சம் ரூபாய் ஸ்திதி கும்பினியா

ருக்கு ஆதாயமுண்டானதும் அப்பால் தஞ்சாவூர் செயிச்சதும் தஞ்சாவூர் சீர்மையிலே காரைக்காலுக்கு முன் தண்டகம் எண்பத்தோரு கிருமமும் ரெண்டாம் விசை யிறநூத்தன்பது கிருமமும் சிறிது திரவிய லாபமும் மகத்தாகிய கீர்த்தி யிந்தியா ராச்சியமெல்லாம் சூரியப் பிறகாசம்போலே பிரகாசிக்கிறது ஆனபடியினாலே யிப்போ நாசறு சங்கு வந்ததுக்கு ஒரு சங்கடத்தை கொடுத்ததுக்கு சுவாமி மகத்தாகிய கீர்த்தி அண்டங்கள் கூட பிறகாசிக்கவும் வெகு பூமி லாபம் வரவும் வந்துயிருக்கச்சே நீங்கள் விசாரப்படவேண்டிய காரியமில்லை யென்று யிதுக்கு அனேகந் திருஷ்டாந்திரங்கள் கூட அனேகமாய் முன் நடந்த பூர்வேத்திரங்கள் கூட நாலு நாழிகை நேரம் சொல்லி யிப்பவும் நாசறு சங்கு முறிஞ்சுபோமுன் யிதுவே அவனுக்கு பொல்லாத காலம் யிங்கிரேசுக்காறருக்கும் பொல்லாத காலம் பின்னையிமிந்த வேளையிலே ஆறர் தலையை ஆட்டிக்கொண்டு திரிபுறூர்களோ அவர்களுக்கெல்லாம் பெலக்கின காலம் வந்துதென்று கெட்டியாய் மனதிலே வையுமென்று சொன்னேன். அப்படி சுவாமி ரெட்சிக்கவேணுமென்று சொன்னர்.

அப்பால் துரையவர்கள் என்னைப்பார்த்து முசே தொத்தேல் எழுதின காகிதத்திலே ஒரு காகிதமொன்று ஒரு ஆளும் ஒரு சின்ன பிள்ளையாண்டானும் கொண்டுபோகச்சே சந்தாசாயபு மனுஷர்கள் பிடிச்சுவந்து அப்போ முசே தொத்தேல் சேக்கு அப்துல் றயிமான் சந்தாசாயபு ஷெ குமாரன் றசாசாயபு நாலு பேர்களும் சந்தாசாயபு கூடாரத்திலிருந்து அவன் கொண்டுபோன காகிதத்தைப் படிச்சுப்பார்த்து அதிலே ஏழுதியிருந்தது யென்னயென்றால் மருட்டியருடனே கூட நீங்கள் வந்தால் அதுக்குத் தக்கதாய் நடத்துவிக்குறோமென்றும் அதுக்குத்த சரியாயியெழுதியிருந்தது. ஆர் கொடுத்தார்களென்று காகிதம் கொடுத்திருந்தவனைப் பிடிச்சுயின அடக்கவேண்டியதில்லை பின்னையும் கேழ்க்கத்தக்க கண்டிப்பும் உபத்திரப்படுத்தி கேழ்க்கவேண்டிய சாடையென்னமோ அதெல்லாம் செய்து கேட்டாலும் காகிதம் வழியிலே கிடந்துதென்று சாதிச்சாப்போலேயும் அவனுடனே கூட ஒரு சிறு பிள்ளை ஒருத்தன் யிருந்தானே அவனுக்கும் மிட்டாய் கொடுத்து புசலாயிச்சுக் கேட்டால் மெய்தான் முசபர்சங்கு அண்டையிலே சமேதாரன் ஒருத்தன் யிருக்கிறவனொருத்தன் குடுத்தது தானென்றும் யிதைக்கொண்டுபோயி நாசறுசங்கு லசுக்கரிலே

போர்விளங்கன் கையிலே குடுக்கச்சொல்லி குடுத்தார்கள் யென்று சொல்லிச்சு அந்தச் சிறுபிள்ளையென்றும் அதின்பேரிலே அந்த சமாத்துதாரனை பிடிச்சுவந்து அவனைக்கேட்டால் உண்டு இல்லையென்று லாடை பாஷையாயிச் சொன்னுபோலேயும் அவனைக் கண்டிச்சுக் கேழ்க்கிறதுக்கு நபாபு முசபர்சங்கு உத்தாரமில்லாமல் தண்டனை பண்ணி கேழ்க்கிறதல்லவே யென்று முசபர்சங்கு அண்டைக்கு கூட்டி அனுப்பினுல் அதை நன்றாய் விசாரித்து அவனை தண்டிச்சு கேளாமல் ஒரு சாடையாயிக் கேட்டுப்போகச்சொன்னபடியினுலே முசபர்சங்கு நாசறுசங்குக்கு உள்வாயிருந்து யிந்தக்காகிதம் யெழுதி யனுப்புறேனென்று சந்தாசாயபுக்கும் முசே தொத்தேல் முதலான பேர்களுக்கு தோத்தியெனக்கெழுதினுர்கள் யென்று சொன்னூர். அதுக்கு நான் சொன்னது முசபர்சங்கு ஒருக்காலும்... ... ...

இத்தனுள் காலத்தாலே நம்முடைய சண்டை பவுன்சு பாளையம் யிறங்கி யிருக்கிற கும்பள மாத்தூரிலிருந்தும் யேழுமணி வேளைக்கி சாமமறேக்கு யென்கிற சாரசந்து குதிரையின் பேரிலே யேறிக் கொண்டு வந்து யிறங்கினுன். துரை யவர்களுடனே நாசறுசங்கு லசுக்கர் சமாசாரம் பேசியிருக்கச்சே வந்து முசே தொத்தேல் காகிதம் கொண்டுவந்து குடுத்துப்பின் பதினைந்து ஒபிசியால்.மார்கள் சண்டைக்கி போறதில்லையென்றும் மாறுபாடாய்ச் சொல்லிக் கொண்டிருக்கிறூர்கள் யென்றும் சொல்லி மூசே தொத்தேல் யெழுதின காகிதமும் கொடுத்து அங்கே ஒபிசியால்கள் சொலலுகிறது நம்முடைய பவுன்சு கொஞ்சம் அவர்கள் பவுன்சு அன்பதினுயிரங் குதிரை மட்டுக்கும் யிருக்குது யிங்கிறேசுக்காறர் அவர்கள் சிப்பாயிகள் வகையரு ரெண்டாயிரம் பேர்களும் பத்து பனிரெண்டு பீரங்கிகளும் கொண்டுவந்து யிருக்கிறுப்போலே ஆச்சுதே யிப்படி இருக்க நம்முடைய பவுன்சு நம்முடைய வெள்ளைக்காரர்கள் காப்பிரிகள் சிப்பாயிகள் தவிர மைத்தபேர் ஆர் சண்டைப்பண்ணப்போறுர் பிரிகள் யிதாயித்து மொகிதீன்கான் பவுன்சும் சந்தாசாயபுடைய தைரியமும் பந்தோபஸ்தும் தெரிஞ்சிருக்குமே அப்படி யிதை நம்பி நாங்கள் சண்டை பண்ணுவோம் அல்லவென்று நம்முடைய பவுன்சை அவர்கள் சுத்திக்கொண்டால் யெல்லாரும் செத்து அல்லோதிரவேணும் அதுக்கு ஒரு கோட்டை ஆசருயிருந்தால் அந்த ஆசருவை பிடிச்சுக்கொண்டு வெகு காரியம் சாதிக்கலாம் யெதிராளிகள் பலத்திலே ரெண்டிலேயுந்தாட்சியில்லாமலிருக்கச்

சே அவனை யெப்படி செல்லுகிறது யிங்கே ரெண்டுமில்லாமலிருக் கிறப்போலே ஆச்சுது நாங்கள் யென்னமாயிவ்விடத்திலிருந்து சண்டைபோடுவோமென்று சொல்லுகிறதாயும் பின்னையும் அதி லே யென்ன யென்னமோ யெழுதியிருந்ததாய் துரையவர்கள் காகி தம் பாத்தவுடனே முசே புரியையும் பின்னை ரெண்டு ஒபிசியால் மார்கள் பேர் விளங்கன் அவர்களையும் பேசிக்கொண்டிருந்தார் அப்பால் முசே காமறேக்குரே துரையவர்களுடனே பேசின சாடையின் பேரிலேயும் முசே புரியுடனே பேசின சாடையின் பேரிலேயும் மேலே எழுதின சாடை யெழுதினேன். யிப்படி இருக் கச்சே நபாபு யிதாயித்து மொகயின்கான் காகிதமொன்றும் சந்தா சாயபு காகிதமொன்றும் வந்தது. அந்த காகிதத்திலே யெழுதி யிருந்த வயணம் நேத்திய தினம் முசே தொத்தேல் சண்டை பண்ணுகிறதுக்கு யிவ்விடத்திலிருக்கிற ஒபிசியால் மார்கள் சொலுதா துகள் ஆரும் சம்மதிக்கிறதில்லை யெதிரி பவுன்சு பெலத்த பவுன்சு மருந்து குண்டு பீரங்கிகளும் சுடுகிற நெறியும் அதுக்கு துலுக்கர் களுக்கு தெரியாதென்று சொல்லக்கூடாமல் யிங்கிறேசுக்காறர் வந்து யிருக்கிறப்போலே ஆச்சு தெரியாதென்று சொல்லக்கூடாம லிக்கிறதேது. ஆசறுயில்லாமல் சண்டை பண்ணக் கூடாதென் றும் வெய்யல் யெங்களுக்கு பொருக்கயில்லை யென்று யிதுக்கு அடுத்த நியாயத்தைச் சொல்லிக்கொண்டு சண்டை பண்ணுகிற தில்லை யென்று சொல்லுகிறார்கள் யென்று முசே தொத்தேல் யென்னுடனே சொல்லி அப்பால் முசபர்சங்குடனேயும் சொல்லி தங்களுக்கும் காகிதமெழுதி அனுப்பினதுக்கு அதுக்கு சமு தாச்சு யெழுதி யெங்களுக்கும் யினிமேலுங்களுடைய மனது ப்படிக்கி நடப்பார்கள. நீங்கள் காத்திருசாமாவா யிருக்கவும் யென்று எழுதினீர்கள். முசே தொத்தேலும் சண்டைக்கு சுறு க்கு பண்ணி பவுன்சு சம்மதிச்சார்கள் ஒபிசியால் மார்கள் சம்மதி யில்லையென்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். யென்றும் மறுபடி சொன்னரிப்படி நம்முட பவுன்சு பின்வாங்கிச்சென்று நாசறுசங் குக்கு சேதியானல் அவர்கள் எத்தனை பவுன்சு யிருந்தாலும்...

**1750 ௵ அவ்ரீல் ௴ 4 உ சுக்கில ௵ பங்குனி ௴ 26 உ சனிவாரம்**

இத்தனாள் காலத்தாலே துரையவர்களழைச்சனுப்பி விச்சு வெளி சமாச்சாரங்கள் யேதாகிலும் வந்ததா வென்று கேட்டார்.

ஒரு பக்கம் சமாதானமென்றும் ஒரு பக்கம் சண்டை போறும் யிப்படி நானுவிதமாய்ச் சொல்லிக் கொள்ளுகிருர்கள். யெதையும் மெய்யென்று திட்டமாய்ச் சொல்லப் போகயில்லே யென்று சொன்னேன். அப்பால் நாசறுசங்குக்கு தம்முடைய பேர்வைத்து ஒரு கடுதாசி யெழுதி அதுக்கு நகல் ரெண்டு யெழுதி யிதாயித்து மொகதீன் கானுக்கு ஒரு நகலும் சந்தாசாயபுக்கு ஒரு நகலும் குடுக்கச் சொல்லி குடுத்தனுப்பிவிச்சு யிப்படி நாசறு சங்குக்கு கடுதாசி யனுப்பிவிச்சோமென்று யிவர்கள் ரெண்டுபேருக்கும் ரெண்டு கடுதாசி யெழுதி அனுப்பிவிச்சார். முன்னுலே நாசறுசங்கு—சூரத்து நவாபு முசே வெறியேற் மாரிபத்தாகவும் ருசடகேந்திரம் சிகாகுளம் நவாபுகோசா அப்துல்கான் குமாரன் கோசா நெமதுல்லாகான் பந்தர கப்பித்தான் முசே கொககேத்து முன்னிலேயாக கடுதாசி யனுப்பிவிச்சபோதும் சிறபி யிவ்விடங்களிலே வந்தபோது சான்வாசுகான் சயிதர்லசுக்கர்கான் முன்னிலேயாக கடுதாசி யனுப்பிவிச்சபோதும் செஞ்சி திருவண்ணுமலே யிவ்விடங்களிலே வந்தபோதும் மோரோ பண்டிதர் காசிந்தாயிம் முன்னிலேயாக கடுதாசி அனுப்பிவிச்சபோதும் அப்போயெல்லாம் அவர்களுக்கு சவுத்தா யெழுதி யனுப்பிவிச்சால் அப்போ நடக்கிற மருங்குவேறே யிப்போ நாசறுசங்கு கடுதாசி யெழுதாமலிருக்க யிவர்களா யெழுதினபடியினலே யிப்போ நடக்கிற சாடைவேறேயன்று தோணப்படுகிறது. யிதெல்லாமல் தண்டு சமாசாரம் சாயங்காலம் கேழ்விப்பட்டது யேதென்றுல் தும்பள மாத்தூரண்டையிலே நம்முடைய தண்டு யிறங்கிறவிடத்திலே முன்னுதாக அவர்கள் பாளேயம் தயாரு ரெண்டாயிரம் குதிரை முஸ்தீப்பாய்ப் பிறப்பட்டு நம்முடைய பாளேயத்துக்கு கிழக்கே தோப்பு ஆசரு பண்ணிக் கொண்டு அதிலே வந்து நின்ருர்கள் மததத்தண்டெல்லாம் ஆயிதப்பட்டு மேற்கே தயாருய் வந்து நின்றுகொண்டு முன்னுதாயி நம்முடைய பாளேயத்துமேலே ஒரு பீரங்கி குண்டு போட்டார்கள் அப்பால் நம்முடைய பாளேயமும் தயாருயிவர்களும் பீரங்கி போட்டார்கள் யிப்படி யிவர்களுக்கும் அவர்களுக்கும் ஒன்றுக்கொன்று பீரங்கி யுத்தம் சாயங்காலம்வரைக்கும் விடாத சண்டை நடந்துது யிதிலே நம்முடைய பாளேயத்திலே ரெண்டு ஒட்டகை மூணு குதிரை அஞ்சாறு மாடு சிறிது ஆடு நாலு துலுககர் ஒரு வெள்ளேககாறன் ஒரு பெண் பெண்டாட்டி யிம்மாத்திரம் சேதமாச்சுது. அவர்கள்

பாளையத்திலே நம்முடையவர்கள் போட்ட குண்டினாலே ரெண்டு அவதார் ஆனையும் நிசான ஆனையும் ஒன்று வெகுசாயி குதிரைகளும் மாடுகளும் வெகு சனங்களும் விழுந்தார்கள் அதின் பேரிலே சாயங்காலமாச்சுது சண்டையும் நின்றது. அப்பால் ருத்திரி ஒரு சமாத்துக்குமேல் ஆளும் காகிதமும் வந்தபடியினாலே நாம் கேழ்விப்பட்ட சேதியை துரையவர்களிடம் அறிக்கை பண்ணினோம் யிந்த சேதிக்கி யின்னம் காகிதம் வராமலிருக்கிறதென்னமோவெப்படி யோசனை பண்ணிககொண்டிருந்தார்.

1750 ஹ மார்ச்சு மீ 5 உ சுக்கில ஹ பங்குனி மீ 27 உ ஆதிவாரம்

இத்தனாள் காலத்தாலே நான் துரையவர்களண்டைக்கிப் போனவிடத்திலே துரையவர்கள் என்னைப்பார்த்து சொன்னசேதியெனன் யென்றால் நேத்து நடந்த சண்டை சேதிக்கியின்னம் சவிஸ்தாரமாய்க் காகிதம் வராமலிருக்கிற சேதி யென்னயென்று கேட்டார். அவரும் யென்னத்தினாலே தாமசமாயிருக்கிறதென்று யிப்படியாக பேசிக்கொண்டிருக்கச்சே மூசபாக்கான் கிட்டேயிருக்கிறவன் ஒருத்தன் வந்து தான் தண்டிலே சண்டையின் போதுயிருந்தேன் அவர்கள் தண்டிலே யிருபது முப்பது பேரும் யிருபது யிருபத்தஞ்சு குதிரையும் விழுந்துது. நம்முட தண்டிலேயும் காலத்து ரெண்டு பேருக்குச் சேதமுண்டு யென்று சொன்னான், யிப்படி யிதுவே பேச்சாக பேசிக்கொண்டிருக்கச்சே யெட்டரை மணிக்கி முசே தொத்தேல் கடதாசி துரையவர்களுக்கு வந்தது.

அந்தக் கடுதாசியைப் பார்த்துக் கொண்டு யென்னுடனே துரையவர்கள் சொன்ன சேதி யென்னயென்றால் முசே தொத்தேலெழுதினிலே நேத்து சண்டை நடந்த பிறகு காரியமெல்லாம் மார்க்கமாயித்தானே வந்தது. அப்படியிருக்க ஒப்பிசியால்மார்கள் பதினஞ்சு பேர் தாங்கள் யிருக்கிறதில்லை யென்று புதுச்சேரிக்கு வருகிறதாய் பிறப்பட்டார்கள். அதினாலே சொலுதாதுகளெல்லாம் ஒபிசியால் மார்களில்லாமல் எங்களாலே நிறுவாகம் ஆகமாட்டாது யென்று துரையவர்களும் கலைஞ்சபடியினாலே யினிமேல் நாமிருந்து யென்ன காரியம் நடக்கப்போகுது யென்று பிறப்பட்டு வில்லிய நல்லூருக்கு வருகிறோமென்று யெழுதியனுப்பி விச்சான பார்த்தாயா. யெல்லா காரியமும் அனு

கூலமாயிருக்கிற வேளையிலே யிந்த ஒபிசியால் மார்க்கச்சோறுகள் தொட்டு காரியமெல்லாம் கெட்டுப்போச்சுது. நானந்த ஒபிசியால் மாறை தாக்கிப்போடுகிறேனென்று ரெம்பவும் அவர்கள் பேரிலே கோபமாயி அப்பால் முசேபுரியை அழைப்பிச்சு ஒபிசியால்மார் யெந்த வாசற்ப்படியாலே வாறார்களோ அவர்களை யெல்லாம் கோட்டையிலே கொண்டுபோயி காவல் பண்ணச்சொல்லியும் யென்னுடனேயும் கொம்பினிக்குள்ளாக வருகிற ஒபிசியால் மாரை யின்னாரென்று விசாரித்து தம்முடனே கபுறு சொல்லச் சொல்லியும் உத்தாரங் கொடுத்தார் அப்பால் சீனு கப்பல் புருத்கி கீசுகாரன் (Portuguese) வந்து துரையவர்களைப் பணங்கேட்ட துக்கு யெம்மாத்திரங்கொடுக்கவேணுமென்று யென்னைக்கேட்டார் கும்பினீருக்கு வாங்கின சம்மந்தி யிருபத்தெண்ணாயிரத்தி நூத்தி முப்பது ரூபா குடுக்கவேணுமென்று அதுக்கு யிருபத்தொண் ணாயிரம் ரூபா பாக்கி சொன்னேன் முசே கிலியார் பேருக்கு ஒரு திணுசு காகிதம் குடுத்து அந்த ரூபாயை வாங்கி சீனு கப்பல் காறனுக்கு குடுத்து அந்த நுத்தனுகத்தை வற்த்தகருக்குத்தானே குடுத்து அந்த சரக்கை சீக்கிரமத்துக்கு வித்து அந்த பணத்தை மறுபடி கும்பினீருக்கு செலுத்தச்சொல்லி திட்டம் பண்ணி தீத்துப்போடென்று உத்காரங்குடுத்தார்.

அப்பால் ஒருதிணுசு காகிதம் கொண்டுவந்து சீனுக்காறனண் டைக்கியின்றைய தினம் ஞாயிற்றுக்கிழமையாச்சுதே நாளைக்கி ரூபாயி வாங்கிக் குடுத்துவிடுகிறோமென்று சொல்லியனுப்பிவிச் சேன். அவனும் நல்லதென்று ஒப்புக்கொண்டான். யிப்படியிருக் கச்சே அஞ்சுபேர் ஒபிசியால்மார் வழுதாவூர் வாசற்படியாலே உள்ளே வந்தார்கள் யென்று நாம் அனுப்பிவிச்ச சேவுகன் வந்து கபுறு சொன்னான். அந்த சேதி நான் துரையவர்களுடனே அவர் சாப்பிடச்சே போயி கபுறு சொன்னேன். அவரந்தக்ஷணம் தானே முசேபுரிக்கு காகிதமெழுதிக் குடுத்து அவர்களை கோட் டையிலே காவல் பண்ணச் சொல்லி உத்தார பண்ணினார். அவரந் தப்படிக்கி அஞ்சுப்பேர் ஒப்பிசியால்மாரையும் கோட்டையிலே காவல் வைச்சார். அப்பால் ஒண்ணரை மணிக்கு வேளையிலே வைக்கீல் சுப்பய்யன் தண்டிலிருந்து ஒரு சேவுகனை அனுப்பிவிச் சான் அந்த சேவுகன் சொன்னதென்னவென்றால் நம்முடைய தண்டெல்லாம் வெள்ளைக்காறர் சந்தா சாயபும் பயணம் பண்ணி பிறப்பட்டு வந்து ஒழுகரையைச் சேர்ந்தார்கள் யிதுக்கு முன்

காலமே ஒன்பது மணிக்கு சந்தா சாயபு குதிரை நாலாயிரம் குதிரை
மட்டுக்கும் பிறப்பட்டு துண்டு தர்மைக்குள்ளே வந்தீதே யிதா
யித்து மொகதின்கானை ஆனால் நம்முடவர்கள் நாம் பிறப்பட்டுவில்
லியகல்லூர் அந்த பிறுந்தியத்திலே போயிருப்போமென்று
அழைச்சது நேத்தானால் சண்டைப்பாச்சுது யின்றைக்கு அவர்கள்
சமாதானத்துக்கு வந்து பேசுறார்களே யிப்படியிருக்கிறான் விற
தில்லை செத்தாலும் பிழைச்சாலும் யிங்கேதானேயிருக்கிறே
னென்று சொன்னார் அந்த சேதி கேட்டு சம்மதியாமல் பிறப்பட்டு
வந்துவிட்டார்களென்று சேவுகன் சொன்னான். அந்தச்சங்கேதிப்
துரையவர்களுக்கு முன்னுதாக யெப்படி சொல்லுகிறதென்று
யோசனை பண்ணிக்கொண்டு யிருக்கச்சே நம்மிடவர்கள் தண்
டிலேயிருந்து மூசே பசி குதிரையின் பேரிலே யேறிக்கொண்டு
வேகனிப்பர் மாயி துரையவர்களண்டைக்கிப் போய் சேதி
சொன்ன உத்திரக்ஷணம் யிதாயித்து மொகதின்கான் மகலுக்கு
பனிரெண்டு பேர் சொலுதாதுகளையும் ஒரு சாற சந்தையும்
அனுப்பி மகலிலே சவுக்கி யிருக்கச் சொல்லி அப்பால் என்னண்
டைக்கிப் போனவுடனே துரை யென்னைப் பார்த்து றெங்கப்
பிள்ளை யிதாயித்து மொகதின்கான் மோசம் பண்ணி நாசறுசங்கத
க்கு உளவாயிருந்து நம்முடவர்கள் வரச்சொல்லி அழைச்
சாலும் வரமாட்டமென்று சொல்லி அங்கேதானே நின்றுக்
கொண்டு நம்முடவர்களை முன்னதாகப்போங்களென்று சொல்லிப்
போட்டு நம்முடவர்களிப்பால் பட்டவுடனே அவன் போயி
நாசறு சங்குடனே கட்டிக்கொண்டு போனான் பாத்தாயாவென்று
சொன்னார். அப்படியாவென்று சொன்னேன். அப்பால் துரையவர்
கள் யிதாயித்து மொகதின்கான் மகலுக்கு நீயும் பத்துயிருபது
பேர் சேவுகரை அனுப்பி பத்திரமாயி காவலிருக்கச்சொல்லி
அனுப்பு யென்று சொன்னார். இந்த பிடை சோலி நமக்கென்னத்
துக்கு என்று ஆலோசனைபண்ணி அப்படியே தயிருத்துப்பண்ணி
யிருக்கச்சொல்லுகிறதுக்கு சேருவைகாறர் சாந்தப்பன் கெட்டிக்
காரன் கும்பினீர் சேவகருடனே வெகு பத்திரமாயிருப்பான்
என்று சொன்னதுக்கு சாந்தப்ப சேருவைகாறனை அழைச்சு
யிதாயித்து மொகதீன்கான் மகலிலே போயி பத்திரமாய் காவலி
ருக்கச்சொல்லி உத்தாரம்பண்ணினார் அப்போ நான் துரையவர்கள்
முன்பாகத்தானே சாந்தப்பனுடனே சொன்னது யேதாகிலும்
ஒருத்தன் வந்து நான் சொல்லி அனுப்பினேனென்று வந்து

சொன்னாலும் நீ கேழ்க்கத்தேவையில்லை. துரையவர்கள் ஒடுதி
பிறகாரம் நடந்துகொள்ளவும் யென்று சொல்லிபோட்டு போகச்
சொன்னேன். அவனும் யிருபதுபேர் நும்பினீர் சேவகருடனே
யிதாயித்துமொகதின்கான் மகலாகிய கனகராயமுதலியார் வீட்டி
லேபோயி வீட்டிலே நாலுபக்கமும் பத்திரமாய்க் காவல்பண்ணி
வைச்சு அவனுமங்கேதானேயிருந்தான் பின்னையும் மூத்தியப்
பிள்ளை அவாகள் வீட்டிலே அவர்கள் தட்டுமுட்டுயிருக்குறபடி
யினாலே அங்கேயும் நயினார்சேவுகரையனுப்பி பத்திரமாயிக்காவலி
ருக்கச்சொல்லி சொன்னபடிக்கி நயினாரை அழைப்பிச்சு உத்தாரக்
கொடுத்தேன் அங்கேயும் நயினார் சேவுகர்போயி காவலிருந்தார்கள்.

அப்பால் துரையவர்கள் சொன்னது நம்முடவர்கள் திரும்பிக்
கோண்டுவரச்சே நாசறு சங்கு கூட்டம் பின் துடர்ந்துவந்து நம்முட
வர்களுடனே யெதித்து சண்டைகுடுத்தார்கள். நம்முடவர்களும்
நல்ல சண்டை குடுத்தார்கள். அவர்களுக்குத்தானே செத்த
குதிரை சுவார்களும் கால்றூறுவும் யிதல்லாமல் செத்தார்கள்
யென்றும் பெரியமனுஷராயிருக்கப்பட்ட சறுதார்கள் விழுந்து
போனார்களென்றும் நம்முடவர்களுக்குள்ளேயும் சிறிது சாவும்
காயமும் ஆச்சுதென்றும் அப்பால் நம்முடவாகள் தபாயிச்சுக்
கொண்டுவந்துவிட்டார்களென்றும்யிதாயித்துமொகதீன்கான் மோ
சம் பண்ணிப்போட்டு போய்விட்ட சேதியும் யிதுமுதலானதுகள்
துரையவர்கள் சொன்னாகள். யிதிலே நம்முடவர்கள் பவுன்
சாம்படியே சந்தா சாயபு றசாசாயபு மூசபர்கான் சேக்கசேன்
சேக்நூயிபரும் அல்லிகான் முதலான சறுதாறுகள வந்து சென்
னப்பட்டணம் வழி மார்க்கத்திலே புதுசாயிகட்டியிருக்கிறவஞ்சூர்
கூடத்திலே வந்து யிறங்கினார்கள் யென்று சேதிவந்தது- அப்
பால்யிதாயித்து மொகதின்கான் குதிரை ஆனை ஒட்டகம்
தட்டுமுட்டு யெழுதிக்கொண்டுவரச் சொல்லி உத்தாரம்குடுத்தார்
அப்பால் நான் பாக்குகிடங்கியே வந்தேன். துரையவர்களும்
சவாரி பிறப்பட்டு வெளியிலே வந்து யிறங்கியிருக்கிற மூசே
தொத்தே லண்டைக்குப் போயிகண்டு பேசப்போனார். நான் துரை
யவர்கள் உததாரப்படிக்கி கோதண்டறாமய்யன் பத்துநாயக்கன்
முதலானவர்களை அனுப்பி யிதாயித்துமொகத்தின்கான் ஆனை
குதிரை ஒட்டகம் முதலான சாமான்கள் யெவ்விடத்திலே யென்ன
யிருக்குதோ அதுகளையெல்லாம் யெழுதிக்கொண்டு வாரச்சொல்லி

உத்தாரங் குடுத்து அனுப்பிவிச்சேன். அப்பால் நான் ஸ்ரீத்திரி பத்துமணிமட்டுக்கும் பாக்கு கிடங்கிலேயிருந்து அப்பால் நான் வீட்டுக்குப் போனேன்.

இத்தனெள் மத்தியானம் துரையவர்கள் நபாபு நாசருசிங்குக்கு அவர்பேருக்கு ஒரு காகிதம் யெழுதிவிச்சு ஒரு பையிலே போட்டு அறக்காறர் கையிலே குடுத்து அனுப்பிவிச்சார்கள்.

இராத்திரி பனிரெண்டு மணிக்கி சந்தாசாயபு ரசாசாயபுவையும் பத்துப்பதினைந்து குதிரையுடனே உள்ளே வரச்சொல்லி உத்தாரங்குடுத்து அனுப்பிவிச்சார் அவரும் வந்து அவர் வீட்டே சேர்ந்தார்.

பத்துநாயக்கன் கோதண்டருமப்பனும் வந்து முசபர்சங்கு சாமான் யெழுதிவிச்ச வயனம்.

| | | | | |
|---|---|---|---|---|
| ஆனை சின்னது பெரியது-உருபடி... | | | ... | 16 |
| ஒட்டகை... | ... | ... | ... | 70 |
| காடி | ... | ... | ... | 26 |
| சொக்கடா | ... | ... | ... | 10 |
| பீரங்கி | ... | ... | ... | 12 |
| றெக்கலால் | ... | ... | ... | 4 |

இந்த மட்டுக்கும் யெழுதிவிச்சார்கள்.

**1750 ஸ்ரீ அப்றீல் மீ 6 உ சுக்கில ஸ்ரீ பங்குனி மீ 28 உ சோமவாரம்**

இத்தனெள் காலத்தாலே நான் துரையவர்களண்டைக்கிப் போனவிடத்திலே துரையவர்கள் என்னை சந்தாசாயபு அண்டைக்குப்போய் அவர் யென்ன சமாச்சாரம் சொல்லுகிறாரோ அறிஞ்சுக்கொண்டுவாயென்று போகச்சொல்லி உத்தாரங் குடுத்தார் அந்தப்படியே நானும் மதனாந்த பண்டிதனும்-சந்தாசாயபு வண்டைக்குப்போய் அவரைக்கண்டவுடனே அவர் சொன்ன சேதி யென்னயென்றால் யிவ்விடத்திலேயிருந்து துரையவர்கள் யெங்கள் பேரிலே சகல தயவுபண்ணி வெகுசாயி சபலாதிகளையும் மத்தத்து கொடுத்து நாங்கள் வடக்கேயிருந்து வருகிறபோது யெங்களுக்கு கனவாய்மட்டுக்கும் பவுன்சை அனுப்பிவிச்சு யெங்களுக்கு சத்துருவான அன்வறுதிகான் முதலானவர்களையும் வெட்டிப்போட்டு திக்கி விஜயம் பண்ணிக்குடுத்து சகல அம்சையிலேயும்

யேனத்து பண்ணிலோகததிலே யினிமேல் பிறுன்சுக்கார
ரைப்போல சஷிய பாக்கிரமசாலியள் யில்லை யென்கிற
மத்தத்து மகத்தாகிய கீர்த்தியும் வைச்சு யிப்படியெல்லாம் துரை
அவர்கள் யெங்கள் பேரிலே தயவு பண்ணி பரிபூறணமாய்
வைத்து நடத்தினர். ஆனால் யிப்போ யிவ்விடத்திலிருந்து நாசறு
சங்கு பேரிலே சண்டைக்கிப் போகத் தக்கதாக பிறப்பட்டபோது
பிறுன்சுக்காறருக் கெல்லாம் சறதாருப் வந்த மூசே தொத்தேல்
யெப்போ நாங்கள் சண்டைக்கி போகவேணுமென்ற அழைச்
சாலும் பிறப்படுகிறதில்லை யிப்படியாக யென்னேரமும் சண்டைக்
கிப்பிறப்படாமல் நாசறுசங்கு பவுன்சு சமுத்திரம் யிரண்டு
வந்தாப்போலே வந்திருக்கசே யெப்படி சண்டைக்கிப்போகிறது
யென்று யிப்படி சொல்லிக்கொண்டு வருவான். அப்பால் நாங்கள்
சண்டைக்கி யெப்போ பிறப்படச் சொல்லி சொல்லுகிறோமோ
அப்போ பிறப்பட்டு சண்டை பண்ணத்தக்கதாக மூசே தொத்
தேல் பேருக்கு காகிதம் யெழுதி அனுப்பவேணுமென்று
துரையவர்களுக்கு யெழுதினதுக்கு அப்படியே நாங்கள் சொன்ன
படி கேட்டு சண்டை பண்ணச்சொல்லி துரை அவர்களுக்கும்
மூசே தொத்தேல் பேருக்கு தாக்கீது கடதாசி அனுப்பிவிச்சார்
அப்பால் நாங்கள் மூசே தொத்தேலுடனே யிப்படியானால்
துரையவர்கள் உத்தரங் காகிதம் வந்தாப்போலே ஆச்சுதே
யினிமேல் யெப்படி சண்டைப்பண்ணி பத்தே பண்ண வேணுமோ
அந்தப்பிரம் உம்முடையது யென்று சொன்னதுக்கு அந்த
வேளைக்கி நல்லதென்று சொல்லிப்போட்டு அப்பால் மூந்தாம்னாள்
யெங்களுக்கானால் அவர்கள் தண்டிலே முறுரிறுயன் சானேசி
நிம்பாளகர் யிப்படிப்பட்ட சறதாருகள் உளவாயிருக்கிறார்கள்
பேசித்தி யிருக்கிறது நம்முடைய பயமானால் நாசறுசங்குக்கு
கிலி பிடிச்சியிருக்கிறது நாசற சங்கு ஆனால் பிறப்பட்டு போவோ
மென்ற யோசனை பண்ணினவிடத்திலே மாபூசுகான் மகம்மதல்
லிகான் யிப்படிப்பட்டவர்கள் அவனை யெடுத்துக்காட்டி உன்னைப்
போலே ஒத்தவன் வெகு பிறேயததனத்தின் பேரிலே வந்து
யிப்படியெல்லாம் நடத்தி யிப்போ சும்மா பிறப்பட்டுப்போனால்
அதை விட வேறே அபகீர்த்தியில்லை. அப்படிப்போகலாகா
தென்ற யிந்த அடுக்கிலே சொல்லியிருக்கிறார்கள். அப்பால் தீறுத
பட்சமாயிருக்கிறான் யென்ற யிந்த சேதி நமக்கு வந்தது. யிப்
படிக்கொத்த சமயத்திலே நாங்கள் போயி அவர்கள் பேரிலே

சண்டைப்பண்ணி பண்ணினதே உண்டானால் யிப்போ நாசறுசங்குக்கு பிறான்சுக்காறரிடத்திலேயிருக்கிற மகத்தாகிய பயத்தினால் ஒரு வேளை நாசறுசங்கு கைப்பிடியாய் அகப்படிப்பட்டாலும் அகப்படுவான் ஆனபடியினாலே சண்டைக்கிப் பிறப்படுவோமென்று சொன்னோம் அதுகு முசே தொத்தேலிருந்துக்கொண்டு நீங்கள் தெரியாமல் சொல்லுகிறீர்கள். அவர்களிலே வெகு பவுன்சு வந்திருக்குமென்று வந்த ஒபிசியால் மார்களெல்லாரும் பிறப்பட்டு புதுச்சேரிக்கிப் போறோமென்கிறார்கள். அனுப்பிவிச்சோம். அப்பால் ஒபிசியால்மார்கள் யேடாகூடம் பண்ணாமல்படிக்கி முசேபுரியை துரையவர்களனுப்பிவிச்சு சொல்லிவிச்சார். ஒபிசியல்மார் யெப்படி சொன்னால் அப்படி கேழ்க்கிறோமென்று சொன்னதின்பேரிலே முசேபுரி பிறப்பட்டு யிவ்விடத்துக்கு வந்துவிட்டார் அப்பால் நாங்கள் முசே தொத்தேலுடனே ஒபிசியால்மாரும் சம்மதிச்சு யிருக்கிறார்களே யிந்த யெதிராளியா வந்த நாசறுசங்கு பயப்பட்டுக்கொண்டிருக்கிற வேளையிலே நாம் போயி சண்டை பண்ணி பத்தே பண்ணலாம் யிந்த சமயத்திலே நீர் சும்மாயிருக்கலாமென்று சண்டைக்குப் போவோம் வாருமென்று அழைச்சதுக்கு உங்களுக்கு யென்ன சொல்லுவார்கள் நாங்களிந்த கொஞ்ச தளத்துடனே அத்தனை தும்பலின்பேரிலே சண்டைபண்ணமாட்டோம் துரை யென்ன கோட்டையிலிருந்து அவருக்கு சரிபோனபடிக்கெல்லாம் சொல்லுவார். பரிச்சேதமாயி நாங்கள் சண்டைக்கிப் போகத்தக்கதில்லையென்று சொல்லவந்தான். அதின்பேரிலே நானும் முசபர்சங்கும் யிப்படி செய்யலாகாது சமயம் வந்தபோது பின்வாங்குவார்களா உங்களைப்போலேக்கொத்த சவுரியவான்கள் பிரபஞ்சத்திலே யில்லையென்று கீர்த்தியாச்சுது யிந்த ராத்திரியிலே போயி யெவ்வளவு சண்டை குடுத்தாலும் ஓடிப்போவார்கள் நம்முட காரியம் பத்தே ஆகுமென்று சொல்லி ரெண்டுபேரும் முசே தொத்தேல் தாடியைப் பிடிச்சு வேண்டிக்கொண்டு அப்பால் காலின்பேரிலே விழாததொன்று அப்படியெல்லாம் தெரியப்படச்சொன்னோம் யெத்தனை சொன்னாலும் பரிச்சேதமாய்க் கேழ்க்கமாட்டோமென்று ஒபிசியால்மாரெல்லாரும் முன்னேதானே பிறப்பட்டு புதுச்சேரிக்கிப் போயிவிட்டார்கள் நானும் பிறப்பட்டு புதுச்சேரிக்கிப் போறேனென்று சொன்னான். ஆனால் நாம் செய்யவேண்டியதென்னயென்று முசபர் சங்கு தம்முடைய டேறாவுக்குப் போய் விட்டார்

அப்பால் நான் மூசே தொத்தேலுடனே யின்று ராத்திரிக்கி மாத்
திரம் யிங்கேயிருந்து பொழுது விடிஞ்சாப்போலே நகாறு பசாயிச்
சுக்கொண்டு யெங்கேவேணுமானாலங்கே போகலாம் யென்று
சொல்லி சொன்னேன். போபோ என்ன பேச்சு யிப்போ தானே
நாங்கள் பிறப்பட்டுப் போறோம் நீரும் மூசபர் சங்கும் யெங்க
ளுடனே கூடவந்தால் வாருங்கள் நாங்கள் நிற்கத்தக்கதில்லை
யென்று ஒரு பேச்சாய் சொல்ல வந்தான் ஆனாலிந்த உத்தரம்
மூசபர் சங்குடனே சொல்லுவான் யென்று சொன்னான். பிறப்
பட்டு மூசபர் சங்கு டேறாவுக்குப் போயி வெள்ளைக்காறரானால் பிறப்
பட்டு போயிவிடுகிறார்கள் நீரும் பிறப்படுகிற யோசனை உண்டா
யென்று. கேட்டதுக்கு மூசபர்சங்கு சொன்ன உத்தரம்
யென்னவென்றால் நான் ஒரு அமீர் மகனாயிருந்து பயப்பட்டு
வோடிப்போயி விட்டான் யென்கிற அபகீர்த்தி யெனக்குவேணுமா
பாதுஷா மட்டுக்கும் பேச்சுக்கு யிடமாயிருக்கும் அதென்ன காரி
யம் என்று சொல்லவந்தார் அப்பால் யிந்த உத்தரம் மூசே தொத்
தேலுடனே சொல்லுவோமென்று வந்தவுடனே அதுக்குள்ளே
மூசே தொத்தேல் பிறப்பட்டு வந்துவிட்டான். அவர்கள் போன
வர்களை ஒரு மார்க்கத்திலே ஒருவழியிலே போனவர்களல்ல
வெள்ளைக்காறரெல்லாரும் கலந்து நானாவிதமாய்ப் போயிவிட்
டார்கள். மூசே தொத்தேல் சிறிதுபேர் சொலுதாதுடனே
ஒரு வழியிலே போயிவிட்டான் மூசபர்கான் சிப்பாயிகளெல்லாரும்
ஒரு மூலையும் மூசபர்கான் ஒரு மூலையுமாயிப் போயிவிட்டான்.
யிப்படியாக பல பல விதமாக ஒரு நிமிஷத்திலே பிறப்பட்டுப்
போயிவிட்டார்கள்: மறுபடி நான் மூசபர்சங்கு டேறாவுக்குப்
போவோமென்றாலும் மறாட்டியர்கையிலே யெங்கே அகப்பட்டுக்
கொள்ளுவோமோவென்று பயந்து போகக்கூடாமல் போச்சுது.
அல்லவென்று மூசே தொத்தேல் முதலானவர்களை தேடிக்
கொண்டு போவோமென்றாலும் அதுவும் முடியாதுபோயி ஒரு
சங்கடம் யிப்படியாக ஒன்றுக்கொன்று யோசனை பிரியாமல்
அப்பால் கடசியிலே சுவாமியின் பேரிலே பாரத்தைப்போட்டு
வெள்ளைக்காறர் பவுன்சை தேடிக்கொண்டுபோவோமென்று நானும்
யென்னுடனே கூட பத்துபேர் குதிரை சுவார்களுமாயி பிறப்பட்
டோம் ராத்திரியிலே யிருட்டானபடியினாலே யெவ்விடத்திலே
போனாலும் மறாட்டியர் யிறங்கியிருக்கிறவர்களும் யெங்களைக்
கண்டு துப்பாக்கிகள் சுடுகிறவர்களுமாயிருந்தது. அப்பால் பின்

னையும் வழிதெரியாமல் ஒரு வழியிலே போகச்சே அவ்விடத்திலே மருட்டியர் பெங்கள்பேரிலே துப்பாக்கி சுட்டார்கள். அதையுந் தப்பிச்சுக்கொண்டு வந்தாப்போலே அவ்விடத்திலே ஒரு வெள்ளைக்காறனைக் கண்டோம் அந்த வெள்ளைக்காறனைக் கேட்டால் நம்முடவர்கள் முன்னே போனார்கள் யென்று சொன்னான். அந்த சாடைபிடிச்சுக்கொண்டு வந்தவிடத்திலே முசபர்கான் பத்து குதிரை சுவாருடனே யிருந்தான். அவனை நாங்கள் கண்டு யிந்த சமாசாரமெல்லாம் அவனுடனே சொல்லி அவனும் நாமும் சிறிதுதூரம் வந்தவிடத்திலே மூசே தொத்தேல் நூறு சொல்தாதுகளுடனே போனான் அப்போ நாங்கள் மூசே தொத்தேலைக் கண்டு பேசிக்கொண்டு நடந்துகொண்டு வரச்சே கறகறயென்று சூரிய உதயமாச்சுது. யிதுக்குள்ளே யெதிராளிகள் நாங்களெல்லாரும் பிறப்பட்டுப் போறோமென்கிற சேதிகேட்டு வெகுதளத்துடனே வெகுபேர் சறுதாறுகள் பிறப்பட்டார்கள். வந்து நாங்கள் அந்தனூர் சுட்டுபேரிக்கி அந்தப்பக்கமாயிவரச்சே வந்து வளைச்சுக்கொண்டு சண்டை குடுத்தார்கள், நம்முடவர்களும் மகத்தான சண்டை பண்ணினார்கள். அந்தச் சண்டையிலே அவர்களுக்குள்ளே சறுதாறுகளாய் வந்தமாபூசுகான் அறிதியாய் விழுந்து போயிவிட்டான் மகம்மூதல்லி கானுக்கு சாவுகாயம் பின்னையும் கடப்பை அப்துல் நபிகான் மகனுக்கு காயம் யிப்படி பின்னையும் அனேகம் சறுதாறுகளுக்கு சாவுகாயமுமாச்சுது. குதிரை ரூறுவு செத்தானால் ஆயிரங்கணக்காய் சொல்ல வேணுமே அல்லாமல் யெத்தனை மாத்திரமாய் சொல்லக் கூடாது. அப்பால் நம்முடவர்களுக்குள்ளேயும் சாவு காயமுமாச்சுது. யிப்படி நல்ல சண்டைகுடுத்தார்கள். யிப்படிப்பட்ட சண்டையிலே பதினறிலே ஒவாரு பங்காகிலும் அவ்விடத்திலேயிருந்து சண்டை குடுத்தமே உண்டானால் நாசறு சங்குவைக் கைப்பிடியாய்ப் பிடிக்கலாம் ஒரு காரியத்துக்கு சண்டை கூட பண்ணக்கவையில்லை. யேனென்றால் முசபர் சங்குக்கு முன் நடந்த ஆதிவென்னை (Adoni) முதலான சாகீர்சீமை விடவும் யெனக்கு ஆற்காட்டு சுபா கொடுக்கவும் மகம்முதலிகான் மாத்திரம் திருச்சிராப்பள்ளியிலே யிருக்கவும் யிப்படியாக சந்தி சமாதானம் நடந்தது. அதுக்கு நாங்கள் சம்மதியாமல் திருச்சிராப்பள்ளியை கூட சேர்த்துக்கொடுக்க வேணுமென்று பேசினோம். அப்படியே திருச்சிராப்பள்ளியும் சேர்த்து கொடுக்கத்தக்கதாக சயிது லசுக்கர்கான்

பேசி தீர்த்து காகித பத்திரங்களும் பிறப்பிச்சு அனுப்பியிருக்கிறோமென்று சொல்லி யெழுதி அனுப்பிவிச்சான். இந்த மட்டுக்கும் அவ்விடத்திலே நிண்ணதே உண்டானால் முதலாவது அவர்களுக்கும் நமக்கும் சமாதானமாய் சுபா நமக்கே பகலியாயிரு போகும் யிப்படிப்பட்ட காரியங்களை விட்டுப்போட்டு மூசே தொத்தேல் ஒரு பிடியாய் பிடிச்சு பிறப்பட்டு வந்து விட்டான். யெங்கள் துர் அதிருஷ்டமாகப்பட்டது வந்து மூசே தொத்தேல் மூலமாயி சேரிட்டது மூசபர் சங்கு அங்கேதானே சின்னத்தினாலே அவரும் அகப்பட்டுப் போனார். நானும் கெட்டுப் போனேன். மூசே தொத்தேலைத் தொட்டு காரியமெலாம் கெட்டுப்போச்சுது யென்றும் யிந்த சமாசாரமெல்லாம் துரையுடனே நீர் கெட்டியாய்ச் சொல்லவேணுமென்று யிது முதலானதுகள் சந்தா சாயபு வெகு தாபந்தத்துடனே கண்ணீர் விட்டுக்கொண்டு வெகு கிலேசமாய்ச்சொன்னார் அதுக்கு நான் சொன்னது யிந்தப்படிக்கி துரையவர்களுடனே சொல்லப்போகாது. அவர் மனதிலே முசபர்சங்கு மோசம் பண்ணிப் போட்டு போனான் யென்று தோணப்பட்டிருக்கிறது. அப்படி அவர் மனதிலே தோணப்பட்டிருக்கச்சே நாம் யிப்படி சொல்லுகிறது யுக்த்தமல்ல வென்று. சொன்னதுக்கு சந்தா சாயபு சொன்னது சொப்பனத்திலேயும் முசபர்சங்குவைத் தொட்டு தோஷமில்லை. அவரப்படி நாசறு சங்குவைச் சேர்ந்து போக வேணுமானால் யிப்படி யெங்களம்மான் நாசறு சங்கைண்டைக்குப் போய் விடுகிறேன் உங்களுக்கு குடுக்கவேண்டிய கடன் கொடுத்தனுப்பிவிச்சோம் யெங்கள் பெண்டுகள் பிள்ளைகளை அனுப்பிவிடவும் யென்று யெழுதி அனுப்பிவிக்கமாட்டானா அப்படி அவனைச் சம்மதிச்சுப் போகவேணுமானால் நம்மைத் தொட்டு அல்லவென்று சொல்லக்கூடுமோ விருதாவிலே முசபர் சங்குவின் பேரிலே குத்தஞ் சொல்லி காரியமில்லை. யென்று நான் குறானும் பேரிலே அடிச்சுக் கொடுக்கிறேனென்று கெட்டியாயி முசே தொத்தேலைத் தொட்டு காரியம் கெட்டுப்போச்சுது. சத்தியம் பண்ணிக்கொடுக்கிறேன் யிதல்லாமல் மூசேபுசி முதலானவர்களைக் கொண்டு கூடச்சொல்லிவிக்கிறேன் யிப்படி சவிஸ்தாரமாய் துரைக்கி அறிக்கை பண்ணாமல் போனால் அவருக்கு விசுதமாயித் தெரியுமேதப்படி யெந்தவிதத்திலேயும் ஆகிலும் நீர் சொல்லித்தீர வேணும் யென்று சொன்னதுக்கு நான் சொன்னது

நீரானால் யோசனை தப்பிதமாய் சொல்லுகிறீர் துரையவர்கள் உங்கள் நிமித்தியம் சகல சகாயமும் பண்ணி யிருக்கிறதுமல்லாமலும் வெள்ளைகாறருக்கும் காப்பிரிகளுக்கும் சிப்பாய்களுக்கும் யிப்படியாக அநேகம் பேருக்கும் சேதம் உண்டாச்சுது. யிதல்லாமல் அவர் மனதிலே முசபர் சங்கு மோசம் பண்ணிப்போட்டு போனத்தினாலே காரியம் கெட்டுப்போச்சுதென்று தோணியிருக்குது. அப்படியிருக்க நாம் யிந்த சாடையாயிச் சொன்னால் அவருக்கு கோபம் சித்தமாய் வரும். ஆனபடியினாலே சொல்லப் போகிறது கூடாது. அவருடனே நாம் சாடையாய் நாம் சொன்னதே உண்டானால் அப்போ முசே தொத்தேல் தொட்டு காரியம் கெட்டுப்போச்சுதென்று அவருக்குத் தெரியவே தெரியப்போகுதென்று சொன்னதுக்கு சந்தா சாயபு சொன்னது ஆனால் பிறபு சித்தமெப்படியோ அப்படியல்லவோ போகவேணுமென்று சொன்னப்போலே சொன்னார் அப்பால் நானும் சந்தா சாயபும் ரசாசாயபும் பிறப்பட்டு துரை அவர்கள் வீட்டுக்கு வந்தோம் துரையவர்களுக்கும் சந்தா சாயபுக்கும் மிலாக்கத்தாய் பேச்சு வார்த்தை நடக்கச்சே முசே தொத்தேலத் தொட்டு கெட்டுப் போச்சென்கிற சாடையாய்ச் சொன்னார் அப்பால் துரையவர்களுக்கு கோபம் வந்து யெங்கள் மனுஷரைத்தொட்டு ஒருக்காலும் நேரமில்லை கெட்டியாய் முசபர்சங்குதான் மோசம் பண்ணிப் போனான் யென்று சொன்னார் அதுக்கு சந்தா சாயபு ஆனாலப்படியும் நடந்திருக்குமாக்கும் யென்று சொன்னார் அப்பால் துரை சொன்னது உமக்கு முசபர்சங்கு பேரிலே விசுவாசமானபடியினாலே அவர் பேரிலே தோஷமில்லை யென்று சொல்லுகிறீர் என்றார். அப்பால் சந்தா சாயபு சொன்னது அவர்கள் பவுன்சுலே முராரி ருயனையும் சானேசி நிம்பாள்காரையும் நம்மண்டை சேரத் தக்கதாகவும் முராரி ருயனுக்கு தாட்டிபத்திரி சீமைவிடவும் சானேசி நிம்பள் காருக்கு சிறிது சீமையும் சிறிது பணங்காசு குடுக்கவும் யிப்படியாக ருச வட்டம் நடந்திருக்குது. அவர்களும் நம்முடனே சேர்ந்துப்போவார்கள் யிந்த ருசவட்டத்தைப் படிச்சுப்பேசுவோமாவென்று கேட்டார். அப்ப்டியே பேசிவிக்கச் சொல்லி துரை அவர்கள் சொன்னார்கள். அப்பால் சந்தா சாயபும் ரசா சாயபும்பிறப்பட்டு அவர்கள் வீட்டே போனார்கள் நானும் பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

அப்பால் பகலுக்கு மேலாக மதாமவர்கள் முசபர்சங்கு வீட்டுக்குப்போயி அவர் பெண்சாதி முதலான பெண்டுகளுடனே பேசிக்கொண்டிருந்து பிறப்பட்டுவந்து விட்டாள் அதினபேரிலே அவ்விடத்திலே காவல் வைத்த சிப்பாய்கள் சொலுதாதுகள் கும்பினீர் சேவுகர் நயினர் சேவுகர் யிருந்தவர்களை காவல் வாங்கிவரச் சொல்லி துரை அவர்களுத்தரரங் கொடுத்தனுப்பிவிச்சார் அந்தப் படிக்கி காவலிருந்தவர்களும் வந்துவிட்டார்கள்.

**1750-ஸு அவ்ரீல் மீ 7-உ சுக்கில ஸு பங்குனி மீ 29-உ அங்காரக வாரம்.**

மேலே யெழுதப்பட்ட சாக்திரமானபடிக்கி பிறமோதூத ஸு சேயித்திர் சுத்தபாட்டியமி அங்காரகவாரம் சம்வச்சிறுதிபித்த நாள் காலத்தாலே துரையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு சொன்னசேதி யென்னயென்றால் மாபூசுகான் செத்துப் போனனும் மமுதல்லிகான் செத்துப்போனன் பென்கிற கபுறு மெய்தானு வென்று கேட்டார். மமுதல்லிகான் சண்டையிலே குண்டுபட்டு ஆனையின்பேரிலே விழுந்தான் யென்று அவனுடைய வேலைக்காறன் தானே அப்துல்றயிமானண்டையிலே வந்து அகப்பட்டவன் சொன்னனென்று அவன் சொன்னவுடனே தன்னண்டையிலே யிருக்கிற அவனைக்குத்திதள்ளிப் போட்டாலென்றும் சொன்னபடியினாலே யினிமேல் வேறே அத்தாட்சி அறியவேண்டியதென்னயென்று சொல்லி முறாறுபன் தம்பி ஈரசிக்கறுபன் ஆனையின் பேரிலே குண்டுபட்டு செத்துப்போனனென்று யிப்படியாகச் சொல்லிக் கொள்ளுகிறார்களென்று சொன்னதுக்கு, மாபூசகானும் குண்டு பட்டு செத்துப்போய்விட்டானென்றும் ஆனை கொண்டுபோய் பொதைக்கச்சே வெகு துப்பாக்கிகள சுட்டார்கள் யென்றும் யிதுதன் கண்ணினலே கண்டேனென்றும் மாபூசக்கானைத்தான் ஆமூர் சண்டையிலே பிடிச்சபோது கண்டேன் யென்றும் அதினலே மாபூசகானை நன்றாய் அடையாளம் அறிவேன் யென்றும் சொன்னன் யென்று ஒரு காப்பிரி பிறகே கினறவன் வந்துச் சொன்னன் யென்றும் கடப்பை அப்துல் நபிக்கான் குமாரன் கந்தனூர் யிம்மயித்து பாதர்கான் சாமேசி நிம்பளகார் வகைபரு முதலானபேர் செத்துப்போனபேர்களும் காயப்பட்டுப் போனவர்களுமாயிருக்கிற சேதி யபாமுசபர்சங்கு அண்டையில் யிருக்கிறவன் நேத்து வந்து சொன்னன். யென்றும் யென் பெண்

சாதி நேத்து ராத்திரி மூசபர்சங்கு பெண்சாதி அண்டைக்கிப்போ யிருந்தவளுடனே அறக்காடு வந்தவனைவிட்டுச்சொல்லி விச்ச துக்கு யென்பெண்சாதி பின்னையும் அந்த வயணம் நன்றாய்த் தெரிஞ்சுக்கொண்டுவந்து யென்னுடனே சொன்ன பேச்சு பொய் யாவென்று கேட்டார். அப்படித்தானிருக்கும் சொன்னேன். அப்பால் மூசபர்சங்குடைய ஆனைகளும் ஒட்டகங்களுக்கும் குதிரைகளுக்கும் தீனிபோடாமல் விருதாவாயி செத்துப்போகு தென்று சொன்னதுக்கு கோபிச்சுக்கொண்டு அதுகளுக்கு கூட நான் தீனிபோடவேணு அவர்கள் பெண்சாதி தர்பார் சில வுக்குப் போடப் போகாதா யிது கொஞ்சம் காரியம் யிதுகளுக்கு யென்ன வேசடை பண்ணிவிச்சுக்கொண்டு அவர்கள் வீட்டுக் கான் சர்மான் ஆசி பாசல்கான் என்கிறவனை அழைப்பியென்று சொன்னார். அவனை அழைத்து வந்தவுடனே ரெண்டு மூனு னாளைக்குமாத்திரம் நீங்கள் விசாரித்துக்கொள்ளுங்கோள் அப்பால் வேணுமானால் பார்ப்போமென்று போகச்சொன்னார் அவன் யெங்கள் கையிலே ஒரு காசுக்கு அவகாசமில்லை ஒடமை உங்க ளுக்கு யிடாயிருக்குது ஆனபடியினாலே நீங்கள்தானே தானு கான்கபோட்டுவிசாரித்துக்கொள்ளுங்கள் யில்லாவிட்டால் யெங் களாலே நிறுவாகம்பண்ணக்கூடாதென்று சொன்னான்.

அப்பால் நீ குடுத்து விசாரியென்று யெனக்குச்சொல்லி அப்பால் கோரை அகரத்தையிலே யிருக்குதே அதை அறுத்துப்போடச் சொல்லென்று சொன்னார் அப்படி வாசற்படிக்காறர்களுக்கு ஒரு சீட்டு கொடுக்கவேணுமென்று கேட்டதுக்கு சீட்டெழுதிகுடுத்து ஒரு சோபுதாரனையும் கூடக்கூட்டி பத்துராபுக்கனையும் கூட கூட்டி அனுப்பிவிச்சோம் அப்பால் சந்தாசாயபு வந்தார் வந்து துரையுடனே சொன்னசேதி மோரோ பண்டிதன் அண்டையி லிருந்து ஒரு பெரியமனுஷன் முன் மயிலாப்பூரிலேயிருந்த தஸ்த் கிர் சாயபுபெண்ணுபிர்சாதாயிருந்தான் அவர் குமாரன் மகம்மது மொகதீன்கான்சாயபு யென்கிறவன் ஒரு பெரியமனுஷனிடத்தி லிருந்தும் வந்தேனென்றும் அவர் ஆற்காடு யெனக்குக்கொடுக் கிறதாய்ப்பேசி தீத்துயிருக்குது. அதுக்கு யென் அபிப்பிறாயம் அறியத்தக்கதாக வந்தேனென்றும் சொல்லி அனுப்பினேன்.

1750ஸு அப்ரீல்மீ 9௳ சுக்கில ஸு பங்குனிமீ 31௳ குருவாரம்.

இத்தனை காலத்தாலே துரையவர்களிடத்துக்கு யேழு மணிக்கு போகவேணுமென்று பிறப்பட்ச்சே துரைசேவுகன்வந்து அழைச்சான். போனவுடனே பேதக்கிலும் சேதிவந்துதாவென்று கேட்டார். இத்தனை நாசருசங்குவந்து வழுதாவூர் பக்கீர் பாளயத்தண்டையிலே வந்து பிறங்கியிருக்கிறனென்று சேதி வந்ததென்று சொன்னதுக்கு அந்த ஸ்தானம் முன் கும்பளமாத் தூரண்டையிலே நம்முடைய பாளயம் பிறங்கியிருந்தவிடத்தில் நாசருசங்கு முன் 27௳ ஆதிவாரம் சூரிய உதய வேளையிலே முசபர்சங்குவை நபா நாசருசங்கு பிடிச்சவுடனேதான் அதுக்கு மெதிராக பாளயம் நாலுநாழிகை வழியிலே பிறங்கியிருந்தவன் அன்றையதினம் கொம்பளமாத்தூர் ஆத்தங்கரையிலே வந்து பிறங்கினான். இன்றையதினம் அந்த யிடம் விட்டுப் போட்டு வழுதாவூரண்டையிலே வந்து பிறங்கினானென்று பெஷ்க்காளு வும் நாசருசங்கு சொண்டாவும் கொண்டுவந்து போட்டார்கள் யென்று நாசருசங்கும் சூரிய உதயத்திற்கு சாமம் பத்து நாழி கைக்கு வந்து சேருவானென்று கபுறுவந்ததாய்ச் சொன்னீர் களென்று சொன்னதுக்கு மகம்மதுமாபூசுகான் மமுதல்லிக்கான் முதலான பேர்களை யித்தனை சனங்களை உன்னைத்தொட்டு அல்லோசாக்கு கொடுக்கவேண்டி வந்ததுயென்று கோபம்பண்ணி தம்முட முன்பாக வாக்கவையில்லை யென்றும் ஆற்காடு சுபாவுக்கு சயிதுலசுக்கர்கானை கேமிச்சதாகவும் அதுக்குத் தன்னுடையிருக்கக்கூடாதென்று சொன்னதாகவும் அதின் பேரிலே நாசருசங்கு கோபம் பண்ணதாயும் அதுக்கு சயிதுலசுக்கர்கான் தனக்கு உத்திபோகம் கவையில்லையென்று பரிகரிச்சுக்கொண்ட தாயும் யிப்படியாக கெட்கிறதுமல்லாமல் யிங்கிறேசுக்காறர்கள் புதுச்சேரி பட்டணத்தின் பேரிலே சண்டை போடுறதுக்கு தங்கள் ருசாவுக்கும் பிறங்க ருசாவுக்கும் சீமையிலே சமா தானமாயிருக்கிறபடியினாலே தங்களுக்கு சண்டை போடக் கூடாதென்று சொன்னார்களென்று சொன்னதுக்கு மதாம் கூடலூருக்கு ஆளனுப்பியிருந்தாள் அங்கே யிருக்கிறவனும் நீ சொன்ன சேதியாம்படியே யெழுதினதாய் முன்னேதானே மதாம் சொன்னபடிக்கு சரியாயிருக்குதென்று சொன்னார்.

அதுவும் ஒரு சமயத்துக்கு நல்லது தானென்றும் யோசனை பண்ணிக்கொண்டேன். யிப்படி யிருக்கச்சே பின்னை ஒரு கப்புருகான் வந்து வந்தவாசியின் பேரிலே 5000 குதிரைகளும்நாலஞ்சு பீரங்கிகளும் சிந்துபேர் யிங்கிறேசுக்காறர்கூட கோட்டை வாங்கத் தக்கதாக போனார்களென்று கபுறு வந்தது. அந்த சேதியும் துரையவர்களுடனே சொன்னேன் யிதிலே சந்தாசாயபு ஒரு காகிதமொன்று பெழுத்து பந்துக்கட்டா யெழுதி வந்ததை அவரண்டையிலிருக்கிற றகுதபத்தி நல்லிகானுக்கு மாத்திரம் தெரியுமென்றுப்போலேயும் ஆனபடியினாலே பந்துக்கட்டா யெழுதியிருந்ததைப் பாரிசிலே செவ்வையாய் பெந்து யெழுதினதொன்றும் கூடப் பிடிச்சுக்கொண்டு சந்தாசாயபு வந்த மேல் யெழுதப்பட்ட பந்துக்கட்டு யெழுத்துக்காகிதத்திலே யெழுதியிருந்த மத்தலப்பு யென்னமென்றால்.—

நாசறுசங்கு யின்றைதினம் வழுதாவூர் ஆத்தங்கரையிலே காலிப்புகான் தோப்பு அண்டையிலே யிறங்கினானென்றும் ஒரு பெரியமனுஷன் உம்முட காரியத்துக்கு நபா நாசறுசங்குடனே பேசுகிறார் அது சுவாமி தயவினாலே அனுகூலப்பட்டு உம்முடைய மனதும் சந்தோஷத்தை அடைஞ்சு நீரும் சுகப்படுவிரென்று எழுதியிருந்தது. அப்பால் சானுவாசுகான் தேவனாம்பட்டணத்துக்குப் போனானென்று நாயத்துக்கிழமை நன்று சண்டை உங்களவர்கள் கொடுத்தது நல்ல சண்டை குடுத்தார்கள். அது நாசறுசங்கு மனத்திலே யெழுத்து யெழுதினப்போலே யிருக்கிறதென்றும உங்களவர்கள் சனிக்கிழமையன்று சண்டையிலே காண்பிச்ச பெலனினாலே நாசறுசங்கு செஞ்சி யெத்தனை தூரம் யென்று கேட்டதுமல்லாமல் சயிதுலக்கர்கானை அழைச்சு முசபர்சங்கு காரியத்துடனே சேந்ததும் சந்தாசாயபுக்கு ஆற்காட்டு வகையிறு கற்றுடகமும் யெழுதிக்கொடுத்துப் பயிசல் பண்ணச்சொல்லி அனுப்பி அப்பால் தானும் காலத்தாலே வாறேனென்றும் யெழுதி அனுப்பி பொழுது விடிஞ்சால் காரியங்களெல்லாம் அனுகூலமாயி நீங்களுமவர்களும் சகல வேடிக்கையுடனே புதுச்சேரிக்குப்போக யிருந்த உங்களுக்கு வெள்ளைக்காறருக்குள்ளே ஒருக்காலும் பேதிக்கத்தக்கதில்லை அப்படி தைரியமுள்ள வெள்ளைக்காரர்கள் தானே உடாயிச்சு பிறப்பட்டது உங்களுடைய பொல்லாப்புனுடைய வேளையென்றும் சுவாமி கிருபையினாலே யினிமேலாகிலும்

சுவாமி திபெழுப்பன்னூவரென்றும் உங்கள் காரியம் சுவஷ்தப்பட வேண்டுமானால் நீங்கள் வொரு பிரேயத்தனம் பண்ணாமலிருக்கிற சாலட்: தூண்பிச்சால் யிவர்கள் முன்னே ஓடிப்போகவேணு மென்று யிந்த நாசறு சங்குக்கு நீங்கள்தானே தைரிம் கொடுத்து அனிச் பெண்சாதியை செஞ்சிக்கி அப்பிறம் அனுப்பிவிட்டவன் மறுபடிபெழுதி அழைப்பிக்க யின்று காலத்தாலே வந்த சோக் தார்கள்: சேர்ந்தவுடனே றவாணு பிறப்பட்டு வந்து வழுதாவூர் ஆத்திக்கரையிலே யிறங்கினான். யிந்த யிம்மாத்திர மாதிரியும் வந்து யிப்பாவித்த யிளக்காம் மனதுக்கு தோத்தி யிந்த சாடை யின்பேரிலே வில்லியநல்லூருக்கும் தேவனாம்பட்டணத்துக்கும் நடுவே ஆத்தோரம் யிறங்கி அங்கேயிருந்து முன்னே டாவுன்சு அனுப்பி சண்டைபண்ண நினைத்துக்கொண்டு மூணு நாளையிலே வில்லியநல்லூர் அண்டையிலே யிறங்கிவிட்டபோறான் யிறங்கினாப் போலே ஒரு ராத்திரியிலே அதுக்குத் தக்கதாயி சமயம் பார்த்து வந்து விழுந்தால் நாசறு சங்குவை கைப்பிடியாப் பிடிச்சு வரலாமென்று சொல்லி அல்லவென்று மதீரியமிருந்தால் வெளியே.—

**1730 ௵ அப்றீல் மீ 12 உ பிறமோதூத ௵ சித்திரை மீ 3 உ ஆதிவாரம்.**

இத்தனுள் காலத்திலே ஆறு மணிக்கி மூசபார்சங்கு வீட்டிலே நேத்து ராத்திரி யேழு மணிக்கு பத்து பேர் சிப்பாயிகளை காவலிருந்தவர்கள் வாங்கிப்போனார்கள் யென்று சொன்னார்கள். அப்புறம் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்குப் போய் பூசை கேட்டு வந்த பிற்பாடு மூசே திலார்சும் துரையவர்களும் நானும் மதனந்த பண்டிதரும் வெகுநேரம் ரெண்டு மூணு நாழிகை மட்டுக்கும் நாசறு சங்கு மூணாம் நாள் வழுதாவூர் கோட்டையிலே தபிலூசுமேத்தருய் போய் விருந்து சாப்பிட்டாரென்றும் லட்சத் திருபதினாயிரம் ரூபாய் திண்ணை மேலே போட்டு அதின்பேரிலே நாசறு சங்குவை உட்காரவைத்து அப்பால் விருந்து சாப்பிட்டாரென்றுடனே லட்சம் ரூபாய் கதிர் வைத்தாரென்றும் அதுவுமல்லாமல் ரெண்டு மூணு பயத்து யென்று நாசறு சங்கு யிதாயித்துபெரகதின்கான் சந்தாசாயபு டாயிலே யிதாயித்து மொகதீன் கானைப் பிடிச்சுக்கொண்டு காவலிலே வைத்து செயங்கொண்டது கனமேப்ச் சொன்னதையும் அதின்பேரிலே மீர் ஷாத்தின்பேரிலே

பிரதியாயிருக்கிறானென்றும் அவுரங்காபாத்து-அயிதிராபாத்து முதலான ருச்சியமெல்லாம் மறுட்டியர் சுட்டும் கொள்ளையிட்டும் நிப்பாத்தம்பண்ணிப் போட்டார்களென்றும் பாலக்கி (Palaki) என்றொரு பட்டணம் அதை மறுட்டியர் கொள்ளையிட்டு வந்தார்கள். அந்த பட்டணம் நாசறு சங்குது. அந்த பட்டணத்திலே யிந்த நாசறு சங்கு மனுஷர் பட்டணம் கொள்ளையிட வாண்டாமென்று அஞ்சு லட்சம் ரூபாய் கபுலானாப் போலேயும் அதையும் வாங்கிக்கொண்டு பட்டணமும் கொள்ளையிட்டு மறுபடியும் பட்டணம் தாங்கள் கட்டிக்கொள்ளுகிற பிறையத்தனம் பண்ணதின்பேரிலே யிருக்கிறார்களென்றும் மீறுதத்து சல்விகான் நசாலிகான் யிவர்கள் ரெண்டுபேரும் வேலூரை விட்டு நசாறுசங்குவை வந்து பேட்டி பண்ணிக்கொண்டார்கள். யென்றும் நாசறு சங்கு நம்முட மனசுப்படிக்கி சுனா சந்தா சாயபுக்கு குடாமல் போனால் யெவன் சுபைக்கு நேமிக்கப்பட்டு உட்காரப்போறார்களோ அவர்களிருக்கமாட்டார்கள் கலகமும் போகத்தக்கதில்லை. ருச்சியமும் சுகப்பட்டு யிருக்கத்தக்கதில்லை யென்று நாசறு சங்கு சொல்லி யென்கிற மொகுலன்முன் மாபூசுகான் சண்டையாயி சமாதானத்தின்போது வந்தவன் நாளையதினம் வருவானென்றும் நேத்து காகிதமெழுதி அனுப்பிவிச்சானென்றும் அதுக்கு பதிலுத்திரவு வரயில்லையென்று சொல்லியெழுதினேனென்றும் முசபர்சங்கைத் தொட்டு ஒரு வஞ்சனையுமில்லை அவனண்டையிலே பக்குசியாயிருக்கிறவன் மீர் மொயிம் சாயபு யென்கிறவன் தகா பண்ணினானென்றும் யிது முதலான பே பேச்சுக்கள் பேசியிருந்தோம் அப்பாலின்னு காலத்தாலே நம்முடைய பவுன்சு பெருமாள் நாய்க்கன் சாவடியிலே போயிருக்கிறார்கள் நாளும் பகலைக்கு மேலாக பவுன்சு பார்க்கப் போகிறேனென்று துரை அவர்கள் சொன்னார். அப்பால் அவுறங்காபாத்திலிருந்து முசபர் சங்கு அண்டையிலிருக்கிற வயித்தனு காசிபாசல் யென்கிறவனுக்கு ஒரு சேவுகன் அவர்கள் விட்டுக் குஞ்சு குழந்தைகள் கபுறு கொண்டு கொண்டு அவர்கள் கொடுத்த கடதாசியளும் வாங்கிக்கொண்டு வந்தான் அவன் அவறங்காபாத்து விட்டு யெத்தனை நாளாச்சுதென்று கேட்டதுக்கு ஒரு மாசம் ஆச்சுது. யிதாயித்து மொகதின்கான் சந்தா சாயபு நம்முடைய பவுன்சு கூட தஞ்சாவூரண்டையிலே யிறங்கியிருக்கச்சே அக்கீம் ஆசிபாசில்கான் யென்கிறவன் அவர்கள்

குஞ்சு குழந்தைகள் அவுறங்கபாத்திலே யிருக்கிறவர்களுக்கு சிலவுக்கு கொடுத்த காகிதமும் கொடுத்துப்போட்டு மறு காகிதமும் வாங்கிக்கொண்டு பிறப்பட்டு ஒரு மாசமாச்சுது மூந்தாம் நாள் வந்து நாசறு சங்கு லசுக்கர் சேர்ந்து அங்கே காசிபாசிலுகான் யில்லாததைத் தொட்டு அங்கேயிருந்து யிங்கே யிப்போ வந்தே னென்று சொன்னார். அதுக்கு துரையவர்கள் ஆசிபாசில்கானை அழைத்துவரச் சொல்லி சேவகனை அனுப்பிப்போட்டு வந்தவனை அவுறங்கபாத்து முதலான வழியிலே சமாசாரமென்ன வென்று துரையவர்கள் கேட்டதுக்கு அவன் சொன்னது அவுறங்கபாத்தண்டையிலே மறாட்டியர் பவுன்சு வந்து சீமையெல்லாம் கொள்ளையிட்டு நிப்பாத்தம் பண்ணிக்கொளுத்தி தீத்துப்போட்டார்கள் பின்னை ஒருபவுன்சு பிறப்பட்டு அயிதறுபாத்து மூதல் கிருஷ்ணை மட்டுக்கும் கொள்ளையிட்டு சுட்டு சத்தியனாசு பண்ணித் தீத்துப்போட்டார்கள் யிதல்லாமல் பாலக்கி யென்கிற பட்டணம் நாசறுசங்குத்து அதுக்கு அஞ்சு லட்சம் ரூபாய் அந்த பட்டணத்தார் கையிலே வாங்கிக்கொண்டு அப்பால் அத்து தப்பி கொள்ளையிட்டு மறுபடியும் கோட்டை வாங்கிக் கொள்ளுகிறவர்களாய் மறாட்டியர் சுத்திக்கொண்டிருக்கிறார்கள் நாசறுசங்கு பவுன்சு அந்த வட்டங்களிலே அவுறங்காபாத்திலே மாத்திரம் ஆயிரம் குதிரை ரெண்டாயிரஞ் சிப்பாய்கள் யிருக்கிறது தவிர மத்தப்படி ஒரு சுவார்களாகிலும் அவுறங்கபாத்திக்கு யிப்பாம் கிருஷ்ணைவரைக்கும் யில்லையென்றும் யிருந்த தட்டுவாணிகள் கூட நாசறுசங்கு அழைத்து வந்தாரென்று சொன்னான்.

அப்பால் நாசறுசங்கு லசுக்கரிலே யென்ன சொல்லுகிறார்களென்று கேட்டதுக்கு நாசறுசங்கு மெத்த அதிருஷ்டவானானபடியினாலே முன் பங்குனி மீ 25 உ சனிவாரம் காலத்தாலே முதல் சாயங்காலம் கொடுத்த சண்டையிலே நாசறுசங்கு அவுதர்மா வட்டியனுக்கு கூட குண்டுபட்டு செஞ்சிக்கி மறுநாள் காலத்தாலே போறதாயும் உங்கள் மனசுப்படிக்கி காகிதங்கள் தீத்து யெழுதிக் கொடுக்கச்சொல்லி சயிது லசுக்கர்கானுக்கு உத்தாரமாய் முசத்தியனுக்கு ஆற்காடு சந்தாசாயபுக்கும் ஆதிவெள்ளை முதலான முன் பழய சீமை யிதாயத்து மொகதின் கானுக்கு பாலியும் யெழுதிக்குடுக்கச்சொல்லி தஸ்க்கத்துபண்ணி குடுத்தது ராத்திரி உங்கள் பவுன்சு நில்லாமல் பிறப்பட்டு வந்து

விட்டபடியினாலே யிப்போ காசருசகத்துக்கு கெறுவம் யிந்த துரும்போரேமென்று யிருந்த புத்திபோயி ஆற்காட்டு காரியமும் முசபர்சங்கினுடைய தாயார் பெண்சாதிகள் காரியமும் ஒரு மார்க்கப்படுத்தி; அழைத்துக்கொண்டு போவோமென்று சொல்லி யிருக்கிறதே அல்லாமல் வடக்கத்து ராச்சக காரியத்தை தொட்டு மழைக்காலத்தை தொட்டும் அரை நாழிகை நேரமாகிலும் போர் சத்து யில்லை. அவனுக்கு யிவ்விடத்திலே யிருக்க வேணுமென்கிறது சத்தே ஆகிலும் யில்லை. ஆனால் வந்த காரியமு மாச்சுது ஆனபடியினாலே பதினஞ்சு நாலுக்கு அதனமிருக்கத் தக்கதில்லை யென்றும் சொன்னான். பாதுசா பவுஞ்சு பிறப்பட்டு தென்று சொன்னார்களே அதென்னமாச்சுதென்று துரையவர்கள் கேட்டதுக்கு மழைகாலம் வந்ததென்று பாதுசா சாசன்பாது (Shahjahanabad) போய் சேர்ந்தார் வைசிருகிய மனசூரல்லிகான் அவன் சீமை, சீமாப்பூரென்கிற சீமையை போயிருந்து மழைக்காலமானவுடனே பிறப்பட்டு சாசன்பாத்துக்குப் போவானென்று சொன்னான் அதிலே ஆசிபாசல்கான் வந்தான் அவனுக்கு வந்த காகித பைபை அவிழ்த்து பதினைந்து காகிதமிருந்தது. அதிலே தனக்கு வந்த நாலு காகித மாத்திரம் படிச்சுப்பார்த்து அதை மதானந்தபண்டிதன் கையிலே கொடுத்துவிட்டு சேதிகள் மாத்திரமே யல்லாமல் ருசு காரியச்சேதி யெழுத யில்லை யென்று சொன்னான். மதானந்தபண்டிதரும் மெய்தானென்று சொன்னார். அப்பால் ஆசிபாசல்கானைப் பார்த்து துரையவர்கள் கேட்டதுக்கு மூந்தானவன் காசருசங்கு அவுதாவின்பேரிலே யிந்த மேட்டுமேலே வந்தபோது முசபர்சங்கு கூட ஆனையின்பேரிலே வந்தானும் அவனை மூடியிருக்கிற படுதாவையும் திறந்துவிடச்சொல்லியும் வெய்யலுக்கு ஒரு விசிறி கொடுத்தாரென்றும் சொன்னார்கள். மெய்தானுமென்றும் அப்பால் பேருவுக்குப் போனபோலே ஒரு நிமா கொடுத்தாரென்றும் சொன்னார்கள் மெய்தானுவென்று கேட்டதுக்கு யிதெல்லாம் பொய் அவன் பல்லக்கிலே வைத்துப் படுதா போட்டு கவத்திலே கட்டி சுத்தி அன்னூறு பேர் சயிக்கிவைத்து ஒருத்தரும் போய் பேசாதபடிக்கி கட்டுகட்டி யிருக்கிறாரென்றும் பெரு சகருத்திகைதாய்ப் பண்ணியிருக்கிற தென்று சொன்னான். சந்தாசாயபு குமாரன் நேத்து வந்தவன் யிப்படி யென்று சொன்னான் யென்று துரை அவர்கள் சொன்னார். அப்பால் போகச்சே யிந்த வஞ்சனை உங்கள் நபாயிதாயித்து

மோகதின்கான் பக்ருசி ஒருத்தன் காசறுசங்குக்கு உள்வாயிருந்து யிப்படி மோசம் பண்ணினானென்று துரைவர்கள் சொன்னதுக்கு காசு பொறுதவனும் அவனைத் தொட்டு யென்ன வஞ்சனை நடக்கப்போகுது காரியம் உங்களவர்கள் வந்துவிட்டதைத் தொட்டு கெட்டுப்போச்சுதென்று சொன்னான். அதின்பேரிலே துரையவர்கள் அவனைப் போகச்சொல்லி தாம் படுத்துக்கொள்ளப் போனார். நானும் பாக்குக்கிடங்குக்கு வந்தேன். பசல்கானும் அவன் வீட்டுக்குப் போனான்.

இத்தனைள் பகலுக்கு மேலாக மூணு மணிக்கி சந்தாசாயபு குமாரன் றசாசாயபும் சுத்பத்திகல்லீக்கானும் வந்து துரையவர்களுடனே சொன்ன சேதி யென்னவென்றால் நேத்து ராத்திரி காசறுசங்கு மிருதசல்லீகானை அழைப்பிச்சு ஆற்காட்டு சுபா கொடுத்து திவானகிரி மீருசத்துக்கு மொகறுபண்ணி மூன் சாதுல்லாக்கான் நிசாமுக்கு வருஷத்துக்கு பனிரெண்டு லட்சம் ரூபா கொடுக்கிறதென்று மோகறுபண்ணிக்கொடுத்து வந்தது. அதின் பிறகு அன்வறுதிக்கான் யிருபத்திரெண்டு லட்சம் ரூபாய் ஷியிதாருவாய் திர்த்துக்கொண்டான். அதே மாபூசுகான் போயி இருபத்தெட்டு லட்சம் ரூபாயாக மோகறுபண்ணிக்கொண்டு வந்தான். அதை யிப்போ மீருசத்துக்கு மீருசத்தல்லீகானும் அன்பது லட்சம் ரூபாயாக தீத்துக்கொண்டார்களென்றும் வந்த வாசியின்பேரிலே குதிரைகள் அனுப்பிவிச்சு அந்த கோட்டையை வாங்கி மீர்சத்துக்கு குடுக்கவும் யிந்தபடிக்கி யெல்லாம் ஒடம்படிக்கையாயி அப்பால் மீர்சத்து சொன்னது புதுச்சேரி கோட்டையிலே யிருக்கிற சிப்பாயிகளை வாங்கிவைக்கிற உபாயம் யெனக்கே தெரியுமென்றும் சுத்திலும் றஸ்த்துப்போகாமல் பண்ணினால் கோட்டையிலே யிருக்கிற சந்தாசாயபுவையும் முசபர் சங்கு தாயாரையும் ஒப்பிச்சுப்போட்டு விடுவார்களென்றும் யிந்தப்படிக்கி மீர்சத்து காசறுசங்குடனே சொல்லியிருக்கிறானென்றும் யெழுதி வெள்ளைக்காறர் பவுன்சு வெளியே வந்தால் காசறுசங்குக்கு பயமுண்டாம் முன்னே அறியாமல் மோசம் போயி யெல்லார் பேச்சும் கேட்டு வந்து யிழிக்கிறோம் யென்று கழிஞ்சுக்கொண்டு யெந்த உபாயத்தை போட்டுக்கொண்டு யெதிருளிகளுக்கு சீமையும் கொடுத்துப்போட்டு சமாதானம்பண்ணிக்கொள்ளலாமென்று யிருந்த காசறுசங்குக்கு உங்கள் பவுன்சு பின்வாங்கிச்சென்றதும் அதைத்தொட்டு தயாபிக்கலாமென்றும்

தோத்தகாலம் வந்தது ஆனாலென்ன யிப்பயம் உங்கள் பவுன்சு வெளியே பிறப்பட்டால் நாசருசங்குக்கு யிருக்கிற பயம் வேறே ஆனபடியினாலே நாசருசங்கு குண்டை கலங்கத்தக்கதாக பவுன்சு வெளியே பிறப்பட்டு ரெண்டு காதிகை வழி வந்தால் போதும் உங்கள் காரியம் யிங்கே பேசி அனுகூலம் பண்ணிப்போடுறே னென்று யெழுதி அல்லவென்று வெள்ளைக்காரர் பவுன்சு யித்த மட்டுக்கும் வந்து சண்டை போடவேணுமென்கிறது சறுவாத்து மனுக்கவையில்லை. ஓடிப்போயி மூலையிலே பதுங்கியிருக்கிறார்க ளென்கிற பேரை போக்கடிச்சு சண்டைக்கி வெளியே பிறப்பட்டார்களென்கிறதாக இவ்விடத்துக்கு சேதி வந்தால் போதும் இவ்விடத்திலே உம்முடைய பேச்சுப் பேசுகிறதுக்கு அனுகூலமாயிருக்கும் பேசினாலும் பலிக்கும் ஆனபடியினாலே சீக்கிரமத்துக்கு பவுன்சு வெளியே பிறப்படப்பார்க்கவும் யென்றும் யிதுவுமல்லாமல் மீர்சத்து சொன்னது பவுன்சை புட்டாயிக்கப்பண்ண யெனக்கு சாமற்த்தியமுண்டு அதுக்கேத்த தந்திரம்பண்ணி அங்கே யிருக்கிற சிப்பாயிகளை பேதிச்சு அழைப்பிச்சுப்போடுகிறேனென்று சொன்னதாகவும் யெழுதியிருந்தது.

அந்த சமுசயம் முசபர்கான் பேரிலேயென்று யிப்படியாகச் சொல்லி யெல்லாத்துக்கும் உங்கள் பவுன்சு ஓடிப்போய் வொளிச்சுக்கொண்டு யிருக்கிறார்கள் யினிமேல் வெளியே பிறப்பட சத்துவமில்லையென்று கொஞ்சப்பேச்சாய்ப்பேசுகிறவர்கள் வாய்மூடத்தக்கதாக உங்கள் பவுன்சு வெளியே பிறப்பட்டால் சகல காரியமும் அனுகூலமாய் நடக்கும்யென்று யெழுதியிருந்த மத்தலப்பை துரைபவர்களுடனே சொன்னதுக்கு துரையவர்கள் பதிலுத்திரம் சொன்னது நல்லது நம்முடைய பவுன்சு யித்தநாள் காலத்தாலே பிறப்பட்டுதே யித்தமட்டுக்கும் சமாதானமாகும் யென்று பார்த்திருந்தோம் சமாதானத்துக்கு மாற்கம் காணாததைத் தொட்டு பின்றைபத்தினம் பவுன்சு பிறப்பட்டுதுயினிமேல் யென்னைத் தொட்டு கொவற்னதோர் சாயபுக்குச் சொல்லி தடைபண்ணக் கூடாதானபடியினாலே பவுன்சு பிறப்பட்டுது யினிமேலென்ன சம்பவிக்குமோ யென்ன அனர்த்தங்கள் நடக்குமோ நாங்களறிபோம் யென்று யினிமேல் பவுன்சு பிறப்பட்டுதே நீரும் அவ்விடத்திலே பேசலாமேயென்று அதுக்கு யெப்படி யெழுதவேணுமோ அந்தப்படிக்கி யெழுதி அனுப்பச்சொல்லிப்போட்டு சந்தா சாயபு குமாரனுக்கும் குத்திபத்தி நல்லிக்காறனுக்கும் சொல்லிப்

போடச்சொல்லி அப்பால் யென்னையும் மதனந்த பண்டிதனையும் அழைச்சு ராசாசங்குக்கு காகிதமெழுதச்சொன்ன வயனம் உபசாரமாய் யெழுதி ஆனபிற்பாடு நான் உங்களுக்கு ரெண்டு காகிதம்யெழுதி யனுப்பிவிச்சேன் அதுக்கு பதிலுத்திரமும் அனுப்பாமல் வந்த சேவுகர்களையும் அனுப்பாமல் வைத்துக் கொண்டிருக்கிறீர். யிதல்லாமல் முன் வியாழக்கிழமை நாள் ரெண்டு அறக்காறகளுடைய யெசமானை அனுப்பிவிக்க அவர்கள் வந்து சொன்னதென்னவென்றால் யெங்கள் யெசமான் சமாதானத்தின் பேரிலே யிருக்கிறார். அவர் வந்த காரியம் அனுகூலமானபடியினாலே யிவ்விடத்துப் பேச்சுக்கும் ஒரு சமாதானம் பண்ணிப் போட்டு அவரும் மழைக்காலம் சமீபிச்சபடியினாலே சீமைக்குப் போவாரென்று சொன்னான். அதுக்கு நாம் பதிலுத்திரம் சொன்னது நம்முடைய மனதும் சமாதானம் மெயிச்சிச்சு காகிதமெழுதினோம் அதுக்கு உத்திரங்கள்கூட வரயில்லை யிப்பவும் உங்களுக்கு சமாதானத்தின் பேரிலே மனசு யிருந்துதா அதுவும் சம்மதிதான். அல்லவென்று சண்டையின் பேரிலே மனதிருந்தால் அதுக்கும் சம்மதிதான். ரெண்டிலே யெந்த காரியம் உமக்கு அபிஷ்டமோ அந்தப்படிக்கி யெழுதினால் அந்தப்படிக்கி நடந்துகொள்ளுகிறோமென்று வந்த அறுக்காறுகள் யெசமான் ரெண்டுபேரும் யென் முகத்துக்கு முன்னேவந்து நிற்கிறதுக்குகூட யோக்கியமில்லாதவர்களானாலும் உம்மைப்பத்தி அவர்களுடனே யிந்த வார்த்தைகள் ரூபுரூபிலே சொன்னோம். அதுக்கு அவர்கள் சொன்னது காகிதம் உடனே யெழுதாததற்கு யாதொரு போக்குச்சொல்லி உங்கள் மனதும் எங்கள் யெசமான் மனதும் சரியாயிருக்குது ஆனபடியினாலே நாங்கள் போனவுடனே பதிலுத்திரம் வாங்கி அனுப்புறோமென்று சொல்லிப்போட்டு வந்தார்கள் அப்படியுமிந்தமட்டுக்கும் பாத்தோம் பிரதி உத்திரம் வாரத்தைத்தொட்டும் உங்கள் சுவார்கள் யெங்கள் கிருமத்தை வந்து கொள்ளையிட்டு மனுஷரை சிலாறுபண்ணிவைக்கிற படியினாலேயும் யின்றையதினம் யெனக்குத் தோணினதென்னவென்றால் நீர் யோசனைபண்ணி யிருக்கிறீரென்று யோசனைபண்ணி உம்முட மனதின்படிக்கித் தானே நாமும் யென்னுடைய பவுன்சும் யின்றையதினம் வெளியே பிறப்படப்பண்ணினேன். யின்றுமுதல் மூசபர்சங்கைத் தொட்டு சந்தாசாயபைத்தொட்டு சண்டை நடக்குது யென்று யெண்ணங்கவேயில்லை. உமக்கும் எனக்கும் சண்டையே அல்லாமல்

அவர்களைத் தொட்டு என்று சறுவாத்துமனாக பெண்ணைக் கவையில்லை. நாமும் பிறப்பட்டுவாறோம் நீரும் பிறப்பட்டு வரவும் என்றும் எழுதச்சொன்னார். அந்தப்படிக்கி யெழுதி மழுது உடனே சோபுதாரன் கையில் கொடுத்து நாசறுசந்துக்கு கொண்டு போய் கொடுக்கச்சொல்லி அனுப்பச்சொன்னார்.

அந்தப்படி யெழுதிக்கொடுத்து அவர் ரூபரூபாய் ஆறுமணி சாயங்காலம் வெளிக்கி கொடுத்துப்போகச்சொன்னோம் அவனும் ரெண்டு சேவகனை அழைத்துக்கொண்டு போனான்.

பேழமணி ராத்திரிவேளை தேவனாம்பட்டணத்து பாப்பான் கோபாலய்யன் என்கிறவன் ஒரு பல்லக்கின் பேரிலே யேறிக் கொண்டு பத்து பத்து சேவகரையும் கூட்டிக்கொண்டு நாசறுசந்து கூடாரமுதலான ஸெகுமானங்கள் படிப்பிச்சுக்கொண்டு போய் லசக்கரிலே நாசறுசந்துக்கு தேவனாம்பட்டணம் கொவற்னதோர் பாருத்தியாய் மூசே லாரென்ச என்கிற மேசற் முதலானபேர் கிரியிருக்கிறவர்களுக்குள்ளே மேஜர் லாரென்சு என்கிறவனுடைய காகிதம் ஒன்று துரையவர்களுக்கும் மூசே தொத்தேலுக்கு ஒரு காகிதமும் கொண்டுவந்து கொடுத்தான். அதை வாங்கிக்கொண்டு கோபாலப்பனை தெருவிலே தானே யிருக்கச் சொல்லி ஆவகன விசற்சனமில்லாமல் போட்டுவைத்து என்னை அழைச்சு துரையவர்கள் சொன்னதென்னவென்றால் நாசறுசந்து லசக்கரிலேயிருக்கிற யிங்கிலீசுக்காறர் நாசறுசந்துக்கும் நமக்கும் தாங்கள் சமாதானம் பண்ணிப்போடுகிறோமென்றும் அதுக்குத் தங்களுக்குச் சம்மதியாயிருந்தால் யெழுதினாலப்படிக்கி பேசுகிறோமென்று வெகு உபசாரமாயி மேஜர் லாரென்ச என்கிறவன் மயோர் (major) நாசறுசந்து லசக்கரிலே யிருக்கிறவனே அவன் பேருக்கு ஒரு காகிதமும் மூசே தொத்தேல் பேருக்கு ஒரு காகிதமும் எழுதி யனுப்பிவிச்சான். யிங்கிலீசுகாறர் மெள்ள யிந்த காரியத்திலே தாங்கள் வந்து பேசவேணும் என்று ஆரம்பிச்ச யெழுதினார்கள். உனக்கேற்க யெப்படி தோணுதென்று கேட்டார் அதுக்கு யெனக்குத் தோணினபடிக்கிச் சொல்லுகிறேன் சரிப்பட்டால் தான் ஒத்துக்கொள்ளுகிறீர்கள். யில்லாவிட்டால் நான் சொன்ன பேச்சை மனம் பொறுக்கிறதானால் சொல்லுகிறேனென்றும் மெதுவாய்ச் சொல்லிக்கொண்டதுக்கு துரையவர்கள் அத்தனை உபசாரஞ்சொல்லக் கவையில்லை சொல்லென்று சொன்னார். அதின் பேரிலே நான்

சொன்னது யிங்கிரேசுகாறர் மாரிபத்தில் சந்தி பேசுகிறதை விட்டு ஒரு மூட்டை யெடுக்கிற கூலிகாரன் மாரிபத்திலே சந்தி பேசுறது மெத்த உத்தமமாய்த் தோணுதென்று சொன்னேன். அப்படியென்று கேட்டார். யிந்த நாசர் சங்கு வயிறு கழிஞ்சுக்கொண்டு அவுரங்கபாத்தை விட்டு பிறப்படச்சே உம்முட பயமென்னப்பட்டது அவன் தலையை திருப்பி பயத்தை அவன் யிருதயத்திலே குடியிருக்கப்பண்ணி அதின்பேரிலே உமக்கு யெழுதின காகிதத்திலே யெல்லாம் அவர்கள் உமக்கு யென்ன செய்தார்களோ அப்படி பின்னையும் அதனமாய்ச் செய்யுறேன் அவர்களை விட்டு விட்டு யென்னுடைய சினேகம் பண்ணவேணுமென்றும் அதுக்கு அடுத்த நியாயமாய் கடிதங்களெழுதினதும் அல்லாமல் சூத்து நவாபைக் கொண்டு மூசெ வெறெருக்குத் தெரியப்படச்சொல்லிவிச்சு அவர் காகிதமும் மச்சிலிபந்தர் மூசே கோக்கேத்து, (M. Coquet) க்குத் தெரியச்சொல்லி அவர் காகிதமும் அவ்விடத்து சுபேதார்கோசா நேமத்துல்லா காகித முதலானதுகளிப்படி அனேகம் பேர்களுடைய காகிதங்கள்கூட உங்களுக்கு வாங்கி அனுப்பி தானும் அவரவர் காகிக்காடாய் உங்களுக்கு யெழுதினவனுக்கு அவனுடைய பயத்தை போகடிக்கிற வேலை வந்தது. நம்முடைய பவுஞ்சிலே யிருந்த ஒபிசியால்கள் பிறப்பட்டு வரவும் அதின்பேரிலே சொலுதாதுகள் யிறர்களை யென்று மூசெதொத்தேல் வரவும் மூசபர் சங்கு அவருடைய பக்குசி பேச்சைக்கேட்டு வராமல் நிற்கவும் அப்பாலும் அவன் பவுஞ்சு கூட யிராமல் போகத்தக்கதாக அந்த பக்குசி யிதாயித்து மொகதின்கான் புதுச்சேரிக்குப்போயி விட்டார் யென்று சொன்ன மாத்திரத்திலே நம்முடைய பவுஞ்சடலே கூட அவர் ஆனைகள் குதிரைகள் முதலானதுகள் சுவார்கள் கூட வந்துவிடவும் அப்பால் மூசபர் சங்கு நாலூறு குதிரையுடனே யிருக்கிற சேதிக்கு சிமீர் மகம்மது யென்கிறவன் தானே நாசறு சங்கு அண்டைக்குப்போயி நம்முடைய பவுஞ்சு சந்தா சாயபு முதலான பேர்கள் போனதும் மூசபர் சங்கு மாத்திரமிருக்கிற சேதி சொன்னதின் பேரிலே மூசபர் சங்கை சாம்நவாசுகானை அனுப்பி அழைச்சுவரச்சொல்லி காவலிலே வைத்த பிற்பாடு அல்லோ நாசறு சங்கு ஓடிப்போகயிருந்த ஓட்டத்தை விட்டு புதுச்சேரி அண்டையிலே யிந்த மட்டுக்கும் யிருக்கத்தக்கதாக தைரியம் வாராதுக்கு அனுக்கூலியாய் யிங்கிரேசுக்காறர்களும் மீர்சத்துப் பாஞ்சுகான் முதலான பேர்கள் முன் நம்முடைய

பவுஸுடைய பீரங்கியின் முன்னாலே அவர்களுக்கு சொல்லக் கூடாமலிருந்தாலும் சாடை சாடையாயிச்சொல்லுவார்கள். சொன்னாலும் நாசறு சங்குக்கு பயம் விடாமல் ஓடிப்போகவேணுமென்று யிருந்தவனுக்கு யிப்போ அவர்கள் சொல்லுகிறது கேழ்க்க வேண்டியிருந்தாலும் மறுபடி நம்முடவர்கள் வரச்சே அவர்கள் அறுணபறுண சக்த்தியும் உள்ள பவுன்செல்லாம் வந்து மறிக்க வந்தும் வெகுபேரை சேதமாக்கி அவர்கள் பவுன்சை முறியடிச்ச நம்முடைய பவுன்சு நம்முடவூர் வந்து சேர்ந்த பயமொன்றும் அவனுக்கு மறுபடி பிடிக்கொண்டு யிருக்கிறதுக்கு சகாவாய் நம்முட பவுன்சு யித்தனை காலும் பிறப்படாமலிருந்து யின்றையத் தினம் பிறப்பட்டவுடனே யிங்கிலீசுக்காறனை அழைப்பிச்சு நீங்களாங் காட்டும் சண்டைபோடவேணும் முன் அரோல் நடக்க வேணுமென்று கேட்டதுக்கு யித்தனை காலும் முசபர்சங்கு பவுன்சுக் சந்தா சாயபு பவுன்சும் கூடயிருந்தபடியினாலே நாங்கள் சண்டைக்கிப் போகிறோம் யிப்போ பிறான்சுக்காற பவுன்சுமேயவர்கள் கோட்டையின்பேரிலேயும் சண்டைக்கிப்போறதினாலே யெங்கள் றாசாவுக்கும் அவர்கள் றாசாவுக்கும் சமாதானமாயிப்போனபடி யிருக்கிறதினாலே சண்டைபோடக் கூடாதென்று திட்டமாய்ச் சொல்லியிருப்பார்கள். அதின்பேரிலே நான் வந்து சும்மாபோறதெப்படியென்று ரொம்பவும் யோசினைகள் நடக்கிறதின்பேரிலே ஆனால் நாங்கள் ஒருசந்தி சமாதானம்பேசி உங்களுக்கும் அவர்களுக்கும் ஒடம்படிக்கைகள் பண்ணிப்போடுறோமென்று அவ்விடத்திலே சொல்லி உங்களுக்கு யிங்கிலீசுக்காறர்கள் உங்களுக்கு யெழுதினார்கள். யென்றும் அந்த ஞாயத்தைக்குறிச்சு யிந்த நாசறு சங்குவுக்கு நடத்துகிறதுக்கு மார்க்கம் காணாததைத் தொட்டு நம் சமாதானமாகிலும் பண்ணாமல் நாசறுசங்குவுக்கு மனசு சமாதானமாகவும் யிருக்கும் பார்த்தவர்களுக்கும் நாசறுசங்குவுக்கும் பிறான்சுக்காறருக்கும் யிருந்த பகை தாங்கள் மத்தியஸ்தமாய் தீத்தபடியினாலே தீந்துது. யில்லாவிட்டால் நாசறுசங்கு புதுச்சேரியை வெளியிலே விட்டுப்போட்டுப் போகத்தக்கதில்லை யென்று யிங்கிலீசுக்காறர்கள் சீமைக்கு ஒரு பிரதிஷ்டையாக எழுதுவார்கள். யிங்கேயும் சொல்லிக்கொள்ளுவார்கள். ஆனபடியினாலே உம்முடைய அதிருஷ்டத்தினாலே சகல செயமும் உமக்கு வந்தது யென்று ராச்சியமெல்லாம் பிறகாசிச்சயிருக்கிறதுக்கு யிந்த சொல் அவர்கள் மாரிபத்தில் நடத்துகிறதல்லவென்று பிள்ளையு.

யெந்த யெந்தவித யெவைக்கு தோத்தினமட்டுக்கும் வயவையாகத் தானே சொல்லதுக்கு மெய்தானென்று ஒத்துக்கொண்டு அப்பால் யென்னைப் பார்த்து நாசறுசங்குக்கு ஒரு காகிதம் எழுதச் சொன்னார். நீங்கள் யிங்கிரேசுக்காறரை யெங்களுக்கு ருசவட்டம்பேசச்சொல்லிச்சொல்ல அவர்கள்யெங்களுக்கு சமாதானம்பண்ணுகிறோமென்றுயெழுதினார்கள் நாங்கள் ஒருக்காலும் ரேசுக்காறர் மாரிபத்திலே பேசத்தக்கதில்லை. ஆனபடியினாலே நீங்கள் பரவசமாய் வந்த மனுஷர்களுக்கு சிந்தையில்லை யென்று யெழுதியனுப்பிவிச்சால் நாங்கள்தானே ரெண்டுபேர் மாத்துபர் களை உங்களண்டைக்கு அனுப்புகிறோமென்று யெழுதச்சொன்னார். அந்தப்படிக்கி சத்து பிருவாய் சொல்லிலத்தி யெழுதி மோகறு பண்ணி துரைசோபுதாரன் கிழவன் மகன் கையில் கொடுத்து ஒன்பது மணிக்கு போகச்சொல்லிச் சொன்னார். அந்தப்படிக்கி காகிதத்தை வாங்கிக்கொண்டு போனான். அப்பால் நான் பாக்கு கிடங்குக்கு வந்தவுடனே அப்புவுடனே துரையவர்கள் சொல்லி அனுப்பிவிச்சது யிங்கிரேசுக்காறர் பாப்பான் வந்தவனை அழைப்பிச்சு ஒரு கூலி ஆள் கொண்டுவார காகிதத்துக்கு நீ வந்ததென்ன வென்று பரியாசம்பண்ண சாடையாய்ச் சொல்லிச் சொல்லி அனுப்பினார் அந்தக் கோபாலப்பனை அழைப்பிச்சு துரையவர்கள் சொன்ன பேச்சுப்படிக்கிச்சொல்லி நானு உபாயமாய் விஸ்தரிச்சு அவன் வந்தவனை கூலிக்காறனையாகிலும் அதனமாய் யென்பிச்சு சொல்லி முசேமேலாரென்சுபேருக்கு குடுத்த காகிதமும் குடுத்து வாசற்படிக்கு ஒரு தினுசும் குடுத்து யிப்போதானே போகச் சொன்னதுக்கு காலத்தாலே போறேனென்று காகிதத்தை வாங்கிக் கொண்டு அனுப்பிவிச்சுக்கொண்டு போனான். அந்த சேதியை துரைக்கிச் சொல்லிப்போட்டு பதினொன்றரை மணிக்கு சின்ன துரையும் முசேபிறியேயும் வீட்டுக்குப் போனார்கள். நானும் வீட்டுக்குவந்தேன்.

**1750 ௵ அவ்றில் மீ 15 உ பிறமோதூத ௵ சித்திரை மீ 6 உ புதவாரம்.**

இத்தனாள் காலத்தாலே துரையவர்களழைச்சனுப்பிவிச்சு நாசறுசங்கு லச்கருக்கு விறகு சத்தை யெப்படி அகப்பட்டது. அவர்களினிமேல் போயிவிடுவார்கள் யென்று சொன்னார் அதுக்கு நாதவழி பதின்காதவழி மட்டுக்கும் போயிகயிட்டம் கொண்டு

வருகிறார்கள். ஒரு சீமை வைக்கல் ஒரு ரூபாயியிவ்விடத்திலே தானே விக்குது அவ்விடத்தில் ஒன்றரை ரூபாய் ரெண்டுரூபாய் விக்குதென்று சொல்லுகிறார்கள். தண்ணிக்கும் வெகு கஷ்டமா யச் சொல்லுகிறார்களென்று சொன்னேன். ஆனாலவர்களுக்கு ஆஜிகாச்சல் வருமென்று சொன்னார். யிதினாலே வூஜிகாச்சலாகி லும் அல்லவென்று யாதொரு பெலகீனமாகிலும் காணும் யென்று சொன்னேன் மெயிதான்யென்று சொல்லி அப்புறமிந்த மழைபெஞ் சதுக்கு அவரவர்களுக்கு செளகரியமாயென்று கேட்டார். யிந்த மழை கம்புக்கு உழுகிறதுக்கு மெத்த செவுகிரியம் ஆனால் ராச்சிய மெல்லாம் நிப்பாக்தமாய் பண்ணிப் போட்டதினாலேயும் காசரு சங்குவந்து யிவ்விடத்திலே யிறங்கியிருந்து அப்பால் பவுன்சும் மருட்டியர்கள். குதிரையள் பிறப்பட்டு ராச்சியத்திலே உண்டான எருதுகள் பசமாடுகள் குடியானவர்கள் ஆஸ்திபாஸ்தி சமஸ்த மும் யிருக்கிற வீட்டுகள் பேரிலே போட்டிருக்கிற செத்தைகள் கழிக்கள் மரங்கள் கொள்ளையிட்டுவந்து போட்டுக்கொண்டு ராச்சியமெல்லாம் குட்டிச்சவராக்கிப் போட்டார்கள். யினிமேல் யென்ன பயிரேற்றப்போகுது. ராச்சியம் பெத்தனை நாள் செல் றது யித்தமட்டுக்கும் பண்டியாக யிப்போ யிப்படி ஆனதுக்கு யினிமேல் பெத்தனை நாள் செல்லும் குதிற்பட யென்று சென்று சொன்னதுக்கு யிந்த பவுன்சு காரியிலே வாங்கிப்போகுது அப் பால் காலமில்லைபாயென்று சொன்னார் காலமிருந்துபோலே யென்ன குடியானவர்களுக்கு உழுகிறதுக்கும் பயிரிடுகிறதுக்கும் சகல சாமானுமிருந்தாப்போலல்லோ பயிரிடவேணுமென்று சொன்னதுக்கு கம்முட குண்டு கிராமங்களுக்கு முசபார்சங்குக்கும் லசுக்கருக்கும் குண்டுசாலைக்குள்ளே யிறங்கினத்தினாலே யிவ்விடத் திலே யிப்போ உழுகிறவர்களுக்கு சகல சாமான் சரசாமினும் உண்டே யிவர்களுக்கு பயிரிட்டால் பயிர் நன்றாய் வருமென்று சொன்னார் யிது மெய்தானென்று சொன்னேன். யிதிலே வடக்கு வாசற்படி கொப்படரால் வந்து யிங்கிலீசுக்காரர்களுடைய துபாசி காசருசங்கு லசுக்கிலேயிருந்து உங்களுக்கு காகிதம் கொண்டு கொண்டு கேத்து சாயங்காலமே வந்து காத்துக்கொண்டிருக்கிறா னென்று வந்து கபுறு சொன்னவுடனே வரச்சொல்லென்று உத் தாரம் கொடுத்தார். அவன் தேவனம்பட்டணம் கோன்சேல் காகிதம் ஒன்று யிந்த வூர் கோன்சேலுக்கு ஒரு காகிதமும் மேஸ்தர் லாரேன்சு யென்கிற மயோர் (Major) காசருசங்கு

லசக்கரிலே யிருக்கிறவனுடைய காகிதம் துரையவர்கள் பேருக்கு
வொரு காகிதமும் கொண்டு கொண்டு கோபாலப்பன் யென்கிற
துபாசி வந்து காகிதம் கொடுத்தான் நானும் மதனாந்தபண்டிதனு
மிருக்கிறபடியினாலே தாம் யிங்கிரேசக்காரர் பைகாம்வாணு
மென்றச்சே தானே அவர்களாய்த்தானே மேல்விழுந்து காகித
மனுப்புறார்களென்று தோத்தவேணுமென்று வரச்சேதானே
கோபாலப்பனே யென்கிறவனை வெளியிலேதானே நிறுத்தினாப்
போலே நிறுத்தி அப்பால் காகித முன்னே வாங்கிவரச்சொல்லி
அவன் யென்ன காரியத்துக்கு கோசரம் ஓடி வாறானென்று
சொல்லி மறுபடி அவனை உள்ளே வரச்சொல்லி நேத்து சாயங்
காலம் வந்தவன் யேன் உள்ளே வராமல் வெளியே யிருந்தா
யென்று கேழ்க்க வாசற்படிக்காறர்கள் சொன்னார்களென்று
சொல்ல நல்லது முன்னே ஊருக்குப் போ று உத்திரம் பிற
காலே யெங்கள் மனுஷர் கையிலே தந்து அனுப்புறேன் நீ.
போவென்று சொன்னார். அதுக்கு தேவனாம்பட்டணத்து துபாசி
சொன்னது நேத்து ராத்திரி சாப்பிடாமல் நேத்தத்துக்கு
வெளியே மழையிலே நனைஞ்சதுமல்லாமல் தூக்கங்கூட யில்லை
யிப்போ சாப்பிடாமல் போவென்றால் யென்னாலே நிறவாகமில்லை
சாப்பிட்டுப்போறேன் சொன்னேன். அதுக்கு நல்லது துரையவர்கள்
சாப்பிட்டுப்போகச்சொல்லி அங்கேயிருந்து அந்த காகிதத்தை
திறுதிககிசிபோம் பண்ணிவரச்சொல்லி குடுத்தனுப்பிவிச்சார்.
அப்பால் அந்தகாகிதத்தைப் படிச்சப்பார்த்துக்கொண்டு
பதிலுத்திரம் தேவனாம்பட்டணம் கோன்சேலுக்கு யிவ்விடத்து
கோன்சேல் காகிதம் ஒன்று மேஸ்தர் லாரென்சு மேசருக்கு ஒரு
காகிதமும் யெழுதி யெக்க அதிசெறசிலே வைத்து மேலே ஈசது
சங்கு லசக்கரிலே யிருக்கிற மேஸ்தர் லாரெனசு யென்கிறவனுக்கு
யென்று யெழுதி அந்த துபாசி கையில் கொடுத்து அனுப்பச்
சொல்லி யென் கையில் கொடுத்தார். அந்த துபாசி பிறமணத்
தெருவிலே யிருக்கிறவனண்டைக்கி கண்டால் குருவப்ப செட்டி
கையில் கொடுத்து அனுப்பிவிச்சேன் யிங்கிரேசுக்காரர் யிந்த
காரியத்துக்கு சமாதானம் பேசுகிறோமென்று முன் மேஸ்தர்
கோப்பு மூசே தொத்தேல் பேருக்கு யெழுதினான். அதுக்கு
பதிலுத்திரம் சத்து சம்மதியா யெழுதின பிற்பாடு கோபாலப்பன்
யென்கிறதுபாசியும் மேஸ்தர் லாரென்சு காகிதமும் வந்தது. யிப்
போ தேவனாம்பட்டணம் கோன்சேல் காகிதம் யிந்த ஊர் கோன்

சேலுக்கு வந்து மறு உத்திரம் போனது நாசறு சங்குக்கும் யிவர்களுக்கும் மத்தியே யிங்கிரேசுக்காறர் சமாதானம் பண்ணு கிறோமென்றும் யெழுதின மாத்திரத்திலே அவசர காண்டிக்கு (ஆக்குலே) பெட்டு நாக்கு செல்லோ பெட்டு யென்கிற சாமித்தி யாயும் குறட்டுக் குதிரைக்கு சறுக்கினது சாக்கு யென்கிற நியாயமாய் அதை பிடிச்சுக்கொண்டு சமாதானம் பேசச்சொல்லி ஓட்டிக்கொண்டார். அப்பால் நடக்கவேண்டிய வயவங்கள் யெழுதி வாறதாயும் அதுக்குப் பதிலுத்தாம் போறதாயும் யெண்ணினேன். ஆனால்யிவர்கள் மாரிபத்திலே சமாதானம் பேசுறதை விட ஒரு காசுதாரி அலால்கோற் மாரிபத்தில் பேசினாலும் பசுந்க்கு உண்டாயிருக்கும் யென்று தோத்துது. யெனக்கு தோத்துறபடிக்கே துரைகளுக்கும் மத்துமுள்ள பேருக்கும் தோத்தினாலும் காலம் ஒருத்தராலே தள்ளப்போகாதே ஆனபடியி னாலே யெந்த யெந்த வேளைக்கு யெப்படி நடக்கவேணுமோ அதுக்குத்தக்கதாப்போலே அல்லோதோத்தும் பெரியவர்க ளறிந்த பலா விதி விகிதம் புத்தி அனுசாதி யென்கிற வசனம் சொன்னார்களானபடியினாலே நடக்கவேண்டிய காரியம்படியே நடக்குது விசனப்படக் கவையில்லை யென்று யெண்ணிக்கொண் டேன். இத்தனுள் பகலேச்சு மேலாக ஒரு மணிக்கு சந்தாசாயபு மகன் மகம்மது றசாசாயபு காகிதமொன்று கொண்டு கொண்டு வந்து துரையவர்களுக்கு படிச்சு சொன்ன வயனம் உங்கள் பவுஞ்சு வெளியே பிறப்பட்டவுடனே நாசறுசங்குக்கு பயமுண் டாயி றாத்திரியிலே மோசம்பண்ணி வந்து விழவேணுமென்று யோசனை பண்ணியிருக்கிறார்கள் நாசறுசங்கையாகிலும் அல்லது முசபர்சங்கையாகிலும் யெடுத்துப்போகப் போறார்களென்று றாத்திரி முப்பதும் நித்திரை யில்லை. தன் கூடாரம் சுத்திலும் துப்பாக்கிக்காரர்களும் அச்சால் துப்பாக்கிக்காரர்களும் பீரங்கி களும் யிப்படி அடுக்காய் அடுக்காய் வைத்து அப்பால் குதிரை சுவார்கள் 10000 பதினாயிரம் குதிரை சுவார்கள் பிரம்பை யிந்த வட்டங்களிலே சுத்தினாப்போலே றாத்திரி முப்பதும் திரிஞ்சு கொண்டேயிருக்கிறார்களென்றும் யிப்பவும் சான் வாசுகானுக்கு உத்தாரமாய் அவனைக்கொண்டு உமக்கும் மரியாதையாய் காகிதம் யில்லையென்றும்போலேயும் யெழுதி அனுப்ப அதின்பேரிலேயும் நீங்கள் சக்குத்தி சவாபுதானே யெழுதினால்அப்பால் ஆற்காடு உங் கள் மனதின்படியே குடுத்துப்போட்டு நடந்துவிட போனே

பண்ணி நித்துயிருக்கிறீர்களென்றும் யிதுக்கு சான்வாசகனுடை காகிதத்துக்கு பதில் காகிதமெழுதுகிறப்போலே ஆச்சுதே அத்துடனே நாசறுசங்குக்கு ஒரு காகிதமெழுதுகிற மத்தலபு நம்முட பவுஞ்சு வெளியே பிறப்பட்டுதுயிப்போ பெத்தனம்பண்ணி நடத்துறதுதான் பென்றுப்போலேயும் நீர் சமாதானம் வேணுமென்றுப்போலேயும்-அதுக்கும் சம்மதிதானென்று யெழுதியனுப்பவேணுமென்றும் மூசபர்சங்கை பெரும்பகாவலிலே சந்துத்தியாக நடத்துகிறீர்களென்று மீர்சத்து முதலானபேர்கள் புதுச்சேரியை கலகல்லாப்பிடுக்கி பெத்தஞ்சபோடுகிறோமென்று சொல்லுகிறார்களென்றும் வடக்கத்துபேச்சும் மராட்டியர் அவுரங்காபாத்து அயிதராபாத்து சூச்சியமெல்லாம் நிப்பாத்தம் பண்ணுகிறபடியினாலேயும் மழைக்காலம் சமீபிச்சபடியினாலேயும் வடக்கே யாத்திரையின் பேரிலே அதிதீவிரமாய் சாதுறதாயிருக்குறுமென்றும் யிது முதலான சேதி யெழுதியிருந்த மத்தலபு அவர்கள் படிச்சுச் சொல்ல துரையவர்களுந்து அந்த பெனணம்படியே சொன்னதுக்கு அவர் சொன்னது நாசறுசங்குக்கு உபசாரமாய் யெப்போதும் யெழுதுகிறபடிக்கி யெழுதி மூன்றுமேலே ஆறு காகித மட்டுக்கும் அனுப்பினோம் அதுக்கு உத்தாரம் வரயில்லை. யிப்பவும் நம்முடைய பவுஞ்சு வெளியே பிறப்பட்டுது உம்முடைய அபிப்பிராயம் சண்டையின் பேரிலே யிருந்தா அதுக்கும் சம்மதி சமாதானத்தின் பேரிலேயிருந்தா அதுக்கும் சம்மதியென்று யெழுதியனுப்பச்சொன்னார். சந்தாசாயபு மகனை நீங்கள் போங்கள் நாசறுசங்குக்குத்தான் யிப்போ காகிதம் யெழுதச்சொன்னாப்போலே ஆச்சுதே அந்தப்படிக்கி யெழுதி அனுப்பிவிக்கிறோம் சான்வாசகான் காகிதம் வந்தால் அதுக்கும் பதிலுத்தாம் யெழுதி அனுப்பிவிக்கிறோமென்று சொல்லிப்போகச் சொன்னார். அவர்களும் அனுப்பிவிச்சுக்கொண்டு போனார்கள். அப்பால் நாங்கள் நாசறுசங்குக்கு காகிதம் யெழுதி முத்திரை போட்டோம் யிதிலே சான்வாசகான் காகிதம் கொண்டுவந்து நம்முடைய சோபுதாரன் கொண்டுவந்து குடுத்தான். அவனுடனே கூட மணியன் முதலான ரெண்டுபேர் கும்பினீர் சேவுகர்கள் கூடவந்தார்கள். சான்வாசகான் காகிதம் படிச்சுப்பார்த்துச் சொன்னவயனம் வசீர் நாசறுசங்குக்கு யெழுதின காகிதம் மரியாதையுடனே யெழுதயில்லை. குமிபாச்சாகூட அகம்மது பீர்திசா கூட நாசறுசங்குக்கு பெத்தன மரியாதையாய் எழுதுகிறார்கள்

நாதருசா வந்து மகம்மது சாபாதுசாவை பிடிச்சு டில்லி கொள்ளைபிட்டபோது மகம்மது சாபாதுசாவை நாதருசா மரியாதையுடனே வைத்து யெப்போது யிவர்களுக்கும் அவர்களுக்கும் மரியாதை யெப்படியோ அந்த மரியாதையிலே கொண்டு வந்தானே அல்லாமல் வித்தியாசமாய் நடப்பிச்சதில்லை நீர் ஒரு பந்தரிலே யிருக்கிற உமக்கு நாசறு சங்கு ரெண்டாம் பாதுசாவாயி யிந்த தக்கான் (Deccan) ராச்சியத்துக்கெல்லாம் பாதுசாவாய் கப்பட்டவருக்கும் யெத்தனை வித்தியாசம் அந்த தாரதம்மியம் மரியாதையாம்படியே நீர் நடப்பிச்சுக் கொள்ளத்தேவையில்லையா? உங்கள் பாதுசாவிலே கூட மரியாதைகளாம்படியே நடக்கிறது நீர் அறியார். ஆனால் உம்மை யிப்படி துறப்புத்தியிலே கொண்டு வந்து விட்டது மனிஷர்கள் வேறே யிப்பவும் யெங்கள் வீட்டுப்பிள்ளையாண்டான் முசபர் சங்கு துடுக்காய் திரிஞ்சு எங்கள் கையிலே அகப்பட்டுக் கொண்ட மட்டுக்கும் அவர்கள் குஞ்சு குழந்தைகளும் கூட அனுப்பிவிச்சு யிருந்தால் நீர் அவர்களை மானபங்கமில்லாமல் நடப்பிச்சயிருந்தால் வெகு மேன் பாடாயிருக்கும் யிப்பவும் முன் யெழுதின காகிதமெல்லாம் மரியாதையுடனே யெழுதாதபடியினாலே நாசறுசங்கு அவர்களுக்கு சொல்லுகிறது உத்தமல்லாதபடியினாலே நிறுத்தினோம். கடசியிலே யெழுதின காகிதம் ஒரு மார்க்கமாயிருந்தபடியினாலே அதை பிடிச்சு காண்பிச்சு உத்தாரம் வாங்கி அனுப்பிவிக்குறேன் யென்று யெழுதியிருந்தது. அந்தப்படிக்கி துரையவர்களுக்குச் சொல்லினதும் அவர் பதிலுத்தாரம் யெழுதச் சொன்னது நாம் ரெண்டு பாதுசாவை அறிவோம் ஒரு பாதுசா பிறான்சு றாசாவென்று ஒரு பாதுசா டில்லியிலே றாச்சியம் பண்ணுகிற அகம்மதுசா வென்னும் பிறான்சு றாச்சியம் ஆளுகிற பாதுஷாச் சானவவென்று யென்னத் தேவையில்லை. யேரோப்புறாச்சியத்துக்குள்ளே யெல்லாம் யிவர் பெரிய றாசாவென்று உம்முடைய மனதிலே கெட்டியாய் யெண்ணவும். ஆனால் அகம்மது சாபாதுசாவினுடைய யிடத்திலே நாசறு சங்கு அவர்களை யிந்த வட்டம றாச்சிய அதிகாரியாயிருந்து அதிகாரம் பண்ணுகிறானென்று அறிவோம். ஆனால் நாமும யெங்கள் பாதுசாவினிடத்திலே யிந்த றாச்சியங்களுக்கு நாம் அதிகாரியாய் வெகு பிறதாபத்துடனே யிருக்கிறவரென்றும் யென் மரியாதைக்கும் அவர் மரியாதையும் அவரவர் பாதுசாவினிடத்திலே தெரியுமென்றும் ஆகிலும் நாமப்படி மரியாதை தப்பித

ரங்கப்பிள்ளை (Ránga Pilly) ராசராசனுக்கு உளவாயிருந்து கொண்டு இப்படி தாறுமாறுமாய் பண்ணுகிறான் அவனைகுத்திப் போடுகிறேன் நான் தானே பிடிச்சுவந்து, அடிக்கிறேன். பின் புருஷனுக்கு ஒன்றுந்தெரியாது அவனுக்கு நாலுகாசைக்காட்டி அவனைக் கண்ணைமூடப்பண்ணி இவன் ஊரிலே சரிப்போனப் போலே யெல்லாம் கொள்ளை யிடுகிறேன் யென்று யெப்போதும் துன்துபாதுபேச்சாப் சொல்லிக்கொண்டு வாறபடிக்கி சோடுதார் ருடனேயும் மணியன் வகைபறு கும்பினீர் சேவுகர்களுடனேயும் பெருசுறாக்கிலே சொன்னதாப் கேழ்விப்பட்டேன். அப்படியே துரை அவர்களை பட்டணத்திலே கும்பினியாருக்கும் பட்டணத் துக்கும் துரோகம் பண்ணி அழிக்கறது ஞாயமாம்படியே விசா ரித்தால் அப்போ சகல சாதகங்களும் சொல்லிவிப்பேன். ஆனால் கேழ்க்கிறவர்களில்லாதத்தை தொட்டு சுவாமி ஒருவேளையில்லா விட்டால் வொரு வேளையாகிலும் விசாரிப்பாரென்று சுவாமியைப் பார்த்து பிரார்த்திக்கிறேன் யென்னமாய் நடத்துகிறாரோ நானறி வேன்.

1750 ௵ அவ்றீல் மீ 16 உ பிறமோதூத ௵ சித்திரை மீ 7 உ வியாழக்கிழமை

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி சயிதுல்சுக்ர்கான் சயிது செரிபுகான்கானேட்சிம்பளக்கர் யென்று பெரிய மனுஷர்களிருக் கிறவர்கள் நாசருசங்குக்கு தெரியப்படச்சொன்னவயணம் நீர் சந்தா சாயபுக்கும் சுபா குடாமல் பிறான்சுக்காறருக்கு மனதாகி பண்ணாமல் முசபர்சங்கு கையிலே அகப்பட்டானே அவனைக் கொண்டு கொண்டு போவோமென்று யோசனை பண்ணினீரே ஆனாலிதிலே உமக்கு சாதகமானதும் சாதகமாகாமல் போன துக்கும் சரி அதெப்படியென்றால் பிறான்சுக்காரர் அன்பது அறுபது கப்பலை கொண்டு வந்து கடலைக்கட்டிக்கொண்டு வருஷ காலம் பிடிச்சு ஒரு ரஸ்து கடலின் பேரிலே வராமல் பண்ணிக் கொண்டு அப்பால் கடல் பாரிசத்திலேயும் நூறு கப்பலைக் கொண்டு வந்து வைச்சுக்கொண்டு பிடிச்சுக் கொண்டு கரையிலே லோகத்திலே வெள்ளைக்காறர்குள்ளே தானே ஆச்சரியப்படும்படி யாப் தோப்பு கனவாய் ரொப்பிக்கொண்டு இருபதினாயிரம் ஸ்த்ரோதாம்த்துடனே (Men) ரெண்டு மீ காலம் யிங்கிரேசுக் காரன் நெருப்பு மழையுமாய் புதுச்சேரி பட்டணத்திலே பெஞ்சு

போது சட்டைபண்ணுமவர்களை தொத்தி அடிச்சசெயங்கொண்டவனுக்கு நம்முட பவுன்சு குதிரைபளும் சிப்பாயிகளும் குண்டுகளைக்கண்டால் ஓடுகிறவர்களை அவர்களைத் தொட்டு யென்ன ஆகப்போகுது யிங்கிரேசுக்காறராலுல் தங்களுக்கும் பிறுன்சுக்காறர்களுக்கும் ருசிபாயிருக்கிறபடியிஞலே அவர்கள் பேரிலே சண்டைபண்ணக்கூடாதென்று சொல்லிப்போட்டு போனுர்கள். ஆரு மீ ஏழு மீ காவணியிருந்து முத்திக்கைப்போட்டால்கடல் வழியே வேணும்மென்றவன்துவெல்லாம் அழைப்பிச்சுக்கொண்டு வருஷம் 24 யிருபத்திநாலுமிருக்கப்போருன். அல்லவென்று ஒரு வருஷம் ரெண்டு வருஷம் போருடி செயம் பண்ணுகிறதுக்கு நமக்குயிது ஒரு பொருட்டா நம்முடைய பிள்ளையாண்டான் சந்தா சாயபு தலையை திருப்பி யிழுத்துக்கொண்டு போய் அங்கே வெள்ளைக்காறரையும் தலையை திருப்பி அன்வறதிகாரனை வெட்டிவிச்சு ருச்சியத்தை கட்டிக்கொண்டு யிருந்ததுக்குநீர் வந்து அவர்களுக்கு சிக்ஷிக்கவேண்டிய நியாயபடிக்கி நீரும் வந்தீர். அவர்களுடனே சண்டையும் போட்டீர். அவர்களும் ஓடிப்போய்விட்டார்கள். சத்துருவென்றுயெசமானுக யிருந்தவன்தானே உம்முடைய கையில் கைப்பிடியாக அகப்பட்டான் நீரும் சயங்கொண்டீர். டில்லி பரியத்திரம் பேருமாச்சுது. யிதைத்தானே கெம்பீரம் பண்ணிக்கொண்டு சந்தாசாயபுவுக்கு நீரும் சுபா குடாமல் நீர் உம்முடைய பிள்ளை கோம் பண்ணினுல் நீர் பொறுக்கவேண்டிய கடனெப்படியோ அப்படித்தான் உம்முடைய உடப்பிறந்தான் பிள்ளையுட தப்பும் பொறுக்கவேண்டியதான் ஆனபடியினுலே அவனுக்கு யெப்போதும் சீமைதான் பகலி பண்ணுகிறீரே ஆற்காட்டு சுபா கூட முசபர்சங்குக்குத்தானே பகலி பண்ணி பிறுன்சுக்காறருடனேயும் சிநேகம் போலே நடத்தி முசபர்சங்கை ஒப்பிச்சுப்போட்டு போறதுக்கு சம்மதியானுல் அப்படி செய்யுறது யில்லாவிட்டால் வெள்ளைக்காறர் பேச்சுக்கே போகக்கவையில்லே முசபர்சங்குக்கு சீமைக்கு சிறைப்பாவை குடுத்து அசலிலே ஒருத்தர் ஒப்புறப்பண்ணப்படிக்கி யிவர் கையிலே பணத்தை வாங்கிக்கொள்ள ஒடம்படிக்கைகள் பண்ணிக்கொண்டும் நாம் நடந்தால் பார்த்தவர்களும் டில்லியிலே பாதுசா முதலான பேர்கள் வசீர்கள் குடிகள் வரைக்கும் கேட்டவர்கள் யெப்பத்தே பண்ணி மறுபடி அவர்கள் காலிலே விழுந்தால் அவர்களுக்கே பகலி பண்ணி வந்தானென்கிற தநிசகந்த விசாரந்நியாயிருக்கும்படி

செய்யுதது நேத்தியில்லாவிட்டால் புதுச்சேரி கூட வாங்கி முசபர் சங்கு குழந்தை குஞ்சுகள் தாயார் வகையறாயிருக்கிறவர்களைகூட அழைத்துக்கொண்டு சந்தாசாயபையும் பிடிச்சுக்கொண்டு போனால் அது மெத்த கீற்த்தி அப்படி கூடவாமல் போறபக்ஷத்துக்கு நீர் அவுறங்காபாத் அயிதராபாத்து முதலான தக்கன் (Deccan) ஆறுசுபாவையும் விட்டுப்போட்டு யிந்த ஆற்காட்டு நிமித்தியம் யிந்த பவுன்சுடனே யிருந்தால் யிருக்கலாம் அல்லவென்று ஒருத்தராலே பார்க்கப்போவோமொன்று சொல்லி யிருக்கிறவர்கள் சமாளிச்சுக்கொண்டு போறார்களென்று யோசனை பண்ணி கிஷ்ணை ஆறு கடந்தால் சந்தாசாயபு மறுபடி வெள்ளைக்காறர்களை கூட்டிக்கொண்டு வந்து மறுபடி ஆற்காட்டு சுபா பண்ணுகிறவனுடனே சண்டைபோட்டு ராச்சியத்தை அவன் வசம் பண்ணாமலிருக்கிற காரியமும் அவனைச்சரிக்கட்டுகிற காரியத்திலே யிருப்பார்கள். நீ திரும்பியும் அந்தச்சீமையை விட்டு யிவ்விடத்துக்கு வர வேண்டியிருக்கிறதுமல்லாமல் நிசாம் குமாரத்தியை வெள்ளைக்காறன் வசத்திலே ஒப்பிச்சுப்போட்டு வந்தாரென்கிற அபகீர்த்தி டில்லி முதலான யிவடங்களிலே யெல்லாம் பொஸ்தகத்திலே கூட யெழுதி படிப்பார்கள் யிப்படியெல்லாம் அபகீர்த்திக்கு யிடமே அல்லாமல் உமக்கு கீர்த்தியில்லை அப்படி முசபர் சங்குவும் பண்ணாமல் சயிச்சு அவர்கள் காலிலே விழ அவர்கள் வசம் தானே பண்ணிப்போட்டு வந்தாரென்கிற கீர்த்தி சூரியப்பிரகாசம் போலே யிருக்குமென்று சயிது லசுக்கர்கான் முதலான பேர்கள் பின்னையும் அனேக விதமாய் ஞாயங்கள் தெரியப்படச்சொன்னதின் பேரிலே நாளை வெள்ளிக்கிழமை ராத்திரி சனிக்கிழமை ஆவது முசபர் சங்கு தானே சீறுப்பாய்க் கொடுக்கிறதாய் யோசனை பண்ணித்தீத்து முசபர் சங்குவினுட பவுன்சுகளையும் கடைகள் வற்த்தகர் வந்திருந்தவர்களெல்லாரையும் மூணு நாள் கவில் கொடி போட்டதின் பேரில் யிவ்விடத்திலிருந்தவர்கள் யெல்லாம் அவ்விடம் போயி சேர்ந்தார்கள். மறுபடி தண்டோறா பிறசிச்சது பிதாயித்து மொகிதின்கான் பவுன்சு அவர் சொந்தம் காற்காணு கடைக்காறர்கள் வகையறாயெல்லாரும் பிறப்பட்டுப் போகச்சொல்லி தமுக்குப்போட்டு அதின்பேரிலே சிறிதுபேர்கள் போனவர்களும் போறவர்களுமாக யிருக்கச்சே நேத்தயதினம் அவர்கள் ஆரும் போகவேண்டாமென்றும் அவரவருக்கு சம்பளம் தாம் கொடுக்கிறோமென்றும் தமுக்கு போடுவிச்சு பிதாயித்து மொகதீன்

கானுடைய கெட்டியும் நிறத்தி அந்தப்பவுன்சும் அந்தச்சண்டாவின் அண்டையிலே யெப்போதும் யிருக்கிறபடிக்கி யிருக்கச் சொல்லி திட்டம் பண்ணினுரென்றும் சேதி கேழ்க்கப்பட்டது அதின்பேரிலே மூசபர்சங்கு அவர்களை விட்டுக்காயம் பாத்துக் கொண்டிருக்கிற ஆசிபாசில்கானை மெய்தானுவென்று கேட்டனுப்பினதுக்கு மெய்தான் யெங்களுக்கும் சேதி வந்ததென்று சொல்லி அனுப்பினுன். யிதல்லாமல் ஆற்காடு சுபா மூசபர்சங்குக்கு வந்தால் அவருக்கு சம்மதியான பேருக்கு குடுப்பாரே அல்லாமல் சந்தாசாயபு தனக்கு குடுத்தால் ஆச்சுது யில்லாவிட்டால் மூசே துப்ளேயிக்சு கோவர்னதோர் அவர்களைக் கொண்டு மூசபர்சங்கின் பேரிலே சண்டை பண்ணிவிச்சு பலவந்தமாய் வாங்கிக்கொள்ளுகிறேனென்றும் சொல்லுகிருனும் கோவற்னதோரும் எனக்குப்பிள்ளை மூசபர்சங்கு பெனக்குப்பிள்ளை சந்தாசாயபு அவர்களுக்கு யெப்படி தெரியப் படச்சொல்லவேணுமோ அப்படி தெரியப்படச் சொல்லவேணுமென்று சொல்லி அனுப்பினுனென்று யிது முதலான சேதிகள் துரைபவர்களுடனே யெச்சரிச்சேன். அதின்பேரிலே தோல்து மகம்மது யென்கிற சோனகப்பய்யனையும் யென்ன யென்று கேட்டார் நானுமிப்பாதான் கேழ்விப்பட்டேன் யென்று முன்னே தானே சொல்லல்லியா வென்று சொன்னுன் அதின்பேரிலே சுவாமி அப்படியானே சீக்கிரமாய் ரட்சிக்கவேணுமென்று பிரார்த்திக்கிறேன் யென்று சொன்னுர் அப்பால் முகத்தை சுளித்துக் கொண்டு காரியம் சீக்கிரமாய் தேறுகடையாகாமல் போனதைத் தொட்டு விசாரமாய் வேறே போசனையாயிருந்தார். நாங்களும் பாக்குகிடங்குக்கு பத்துமணி வேளைக்கி வந்தோம். சாயங்காலம் துரையவர்கள் அழைப்பிச்சு கேட்டதுக்கு யிதுவேசேதியாயிச் சொல்லிப்போட்டு விசேஷம் சமாசாரம் வரயில்லை யென்று சொல்லிப்போட்டு பாக்குகிடங்குக்கு வந்தேன். நாசறசங்கு அபிப்பிறாயம் சந்தாசாயபுக்கு பரிச்சேதம் ஆர்க்காடு சுபாகுடுக்கப்போகாது மூசபர்சங்குக்கு தான் குடுக்கிறதாய் நிச்சயம் பண்ணினதாய் மறுபடியும் லசுக்கரிலேயிருந்து வந்தவர்களும் சொன்னுர்கள்.

1750ஞு அப்றீல் மீ 17 உ பிறமோதூத ஞு சித்திரை மீ 8 உ சுக்கிறவாரம்.

இத்தனைநாள் காலத்தாலே துரையவர்களழைப்பிச்சு முத்து

மல்லாரெட்டி பொதையல் சம்மதி பலகலவன் வராகனும் பொன்
நகைகளும் டங்காசாலையிலே விட்டு யெத்தனை னாளாச்சுது யேன்
கொண்டுவந்து கொடுக்கயில்லை யென்று கேட்டார். முன்னே டங்
காசாலையிலே போட்டவராகனை மூசெமோர். கும்பினிருக்குவேணு
மென்று யெடுத்துக்கொண்டு அதின் பிற்பாடு போட்டவராகனைக்
கொடுத்தான். அந்த வராகன் யிப்போ யெடுத்துவாரேன் யென்று
சொல்லி அதுக்கு முன்னே பாக்கு கிடங்கியிலே கொண்டுவந்து
வைத்திருந்தபடியினாலே யெங்கடாசலத்தை யெடுத்து வரச்
சொல்லி துரைபவர்கள் முன்னே கொண்டு சரக்குவைச்சு அவிழ்த்து
அதிலே சாப்பு முத்திரைப்படிக்கு வைத்து யிருந்த நாலாயிரம்
வராகனுக்கு நாலு பையும் முத்திரைபடிக்கு வைத்து அப்பால்
நானூத்தி எழுபத்தாறு வராகனும் மூணு பணமும் நாற்பது கா
சும் யெண்ணிவைத்தேன் அதின் பிற்பாடு கணக்கிலே என்னைக்
கட்டவைத்துக்கொண்டு நாலாயிரத்தி நானூத்தி யெழுபத்
தாறு வராகனும் மூணு பணமாத்திரம் கணக்கெழுதிக்கொண்டு
காசுகூட சில்லரையாயிலே போட்டு அதுக்கு யெதிரே தென்
னண்டை காம்பிறாவிலே கொண்டுபோய் வைத்துப்போட்டு வந்து
முத்துமல்லாரெட்டி தம்பி யெங்கே இருக்கிறானென்று கேட்டார்.
பெருமுக்கலிலே யிருக்கிறான். நாசறுசங்கு யெப்போ உங்கள் வச
மாம் திண்டிவனம் சீமை யெப்போ தன் கைக்கு வருமென்று
சுவாமியைப் பார்த்து பிறார்த்தித்துக்கொண்டு யிருக்கிறானென்று
சொன்னேன். முத்துமல்லாரெட்டி யெங்கே யிருக்கிறானென்று
கேட்டார் ஓரத்துப்பாளையத்திலே யிருக்கிறான் அங்கேயிருந்து
முன்னே ஒருத்தரும் நம்முடைய மனுஷர்கள் திண்டிவனம் சீமை
அமுல்பண்ணச்சே வந்துவிழுந்த சேதியும் கிறமத்திலே
யிந்த செல்லெல்லாம் கட்டிக்கொண்டு போனதும் அதிற்பிற்
பாடு சிப்பாயிகளும் சட்டைக்காரர்களும் தயித்துயிருந்தவங்கள்
போய்விழுந்து பத்துவெடி சுட்டால்போலே ஓடிப்போய் விட்டார்
கள் யென்று சொன்னேன். அதின் பிற்பாடு முன் பங்குனி மீ
27 உ. ஞாயத்துக்கிழமையன்று நம்முடைய ப்வுன்சுகள் வழுதாவூர்
விட்டு ஆரே வந்ததினம் நீங்கள் அமுல்தாறரையும் சட்டைக்காறர்
கள் சிப்பாயிகளையும் வரச்சொல்லி யெழுதி அனுப்பச்சொன்ன பிற்
பாடு அவர்கள் வந்துவிட்டார்களே அதின் பிற்பாடு முத்துப்பா
லம் ரெட்டி யென்கிறவன் அவன் தம்பி பெருமுக்கலிலே யிருக்கி
றானே அவனைப் பிடிக்கவேணுமென்று சேனை யெத்தனம் பண்

ணினன் கூடவாமல் போச்சுது. கில்லேதாரன் மியாசாயபும் ரொம்பக் கோபிச்சுக்கொண்டு சாவல் மலையின் பேரிலேயிருந்து பெறங்கி துப்பாக்கிகளும் முஸ்தித்து பண்ணமாத்திரத்திலே முத்து மல்லாரெட்டியார் வாங்கிப்போய் உரத்திரியிலே யிருந்துக்கொண்டு திண்டிவனம் சீமைப்பும் அச்சரப்பாக்கம் சீமையும் ரெண்டும் அமுல் பண்ணிக்கொண்டு சுகமாய்ப்பணம் அறவிட்டுக்கொண்டு போறானென்று சொன்னேன். நல்லது சுவாமி அவனுக்குத்தக்க தாப்புத்தி சொல்லுவாரென்று சொல்லிப்போட்டு நாசறசங்கு லசக்ஷ் சமாச்சாரம் யேதாகிலும் வந்துதாவென்று கேட்டார். நாசறசங்கு உங்களுக்கு காகிதம் உங்கள் ஸ்தானபதிகள் அனுப்பிவிக்கச்சொல்லி யெழுதியனுப்பிவிக்கச் சொல்லி சான்த வாசுகானுக்கும் தம்முட காகிதமாய் யெழுதியனுப்பிவிக்கச் சொல்லி உத்தாரம் கொடுத்து முன்சிக்கும் (Munshi) மொகற் மதானுக்கு கூட உத்திரவாச்சுதென்றும் ஆனபடியினாலே நாசறு சங்கு காகிதமும் சான்வாசுகான் காகிதமும் தங்களுக்கு நாளைய் தினம் வந்து சேருமென்று சொல்லி சந்தாசாயபுக்கு சேதி வந்து தென்று சொல்லி அனுப்பினாரென்று சொனனேன். யின்றைய தினம் வரலாகாதாவென்று கேட்டார் அவர்களுக்கு வெள்ளிக் கிழமை ஆனபடியினாலே யின்றையதினம் தற்பாதில்லையாகையால் ரூத்திரிக் காகிதம் நடுப்பார்கள். நாளையதினம் வருமென்று சொல்லேனேன். அப்பால் உன் நெல்லு யெப்படி விற்ப்பிச்சாய் யென்று கேட்டார். எலேருக்கால் பதாக விக்கப்பிச்சேனே னென்று சொன்னதுக்கு காரைக்காலிலிருந்து கலபத்தின் மேபரி லே ஆறு கரிசை நெல் வந்தது. அதை அஞ்சபடி விக்கச் சொல்லு கிறேனென்று சொல்லி கரிசை யென்ன விலை ஆச்சு என்று கெட் டார். அன்பது வராகனுச்சுது யென்று சொன்னேன். அந்த க்ஷணம் முசே கோர்னேயைச் அழைத்து அஞ்சபடி விழுக்காடு செவ்வண்டு பணத்துக்கு பேழைகளுக்கு அளக்கச்சொல்லி சொன் னார். நல்லதென்று போனான். அப்பால் மயே சிப்பாயிகள் ஒழு கரையிலே பயிர்வழிகளெல்லாம் பூந்து அறுத்து குதிரைகளுக்கு போடுகிறார்களென்று வந்து சொல்லி முசே தொர்த்தேல் காகித மும் கொண்டுவந்து ஒழுகரை குடியானவர்கள் வந்து பிருது பண்ணினார்கள். அதுக்கு யென்னை அழைத்து குடியானவர் களுக்குச்சொல்லி சேதம் பார்த்து யெழுதிவரச்சொன்னார் அந்தப் படிக்கு குடிகளுக்குச் சொல்லிப் போகச்சொன்னேன். அப்பால்

பதினேருமணிக்கு மூசபர்சங்கு பேச்சு யென்ன என்று கேட்டார். யின்று ராத்திரிக்கு ஆகிலும் நாளைக்காவது கில்லத்து கொடுக்கப் போருர்கள் யென்று சகலமானபேரும் சொல்லுகிருர்கள். அவர்கள் வீட்டுக்கும் அப்படியே கபுறு வந்தது. அவர்களுக்கு திடவாய் வராவிட்டால் அவர்களுடைய சாடையேயிக்கேயின்னேரம் அவர்களிருக்கிற சாடைக்கும் மறைச்சுச் சொல்லிக்கொண்டு வாருர்கள் அவர்கள், உறைச்சு சொல்லுகிற மட்டுக்கும் மெய்யயாயிராமல் வெளியே தாராளமாய்ச் சொல்லார்களென்றும் தோத்துதென்றும் சொன்னேன் மெய்தானென்று ஒத்துக்கொண்டார். அப்பால் படுத்துக்கொள்ளப்போற சாடையாய் நடந்து யெனக்கு உத்தாரம் குடுத்து போகச்சொன்னர், நான் பாக்கு கிடங்குக்கு வந்தேன். அப்பால் ஆறுமணி வேளைக்கி யென்னை அழைப்பிச்சு யேதாகிலும் சேதி வந்ததாவென்று கேட்டார். முறாரிறுயன் தனக்குச் சொன்னபடிக்குகூடாமல் இருபத்தையாயிரம் ரூபாயெல்லாம் குடுத்தார்களென்று அவன் கோபிச்சுககொண்டு ஊருக்குப்போருமென்று அகாடியிலே யிறங்கியிருந்தவன் பச்சாடியிலே யிறங்கினன் யென்று ஒரு கபுறு முசாசந்திரசேனன் யென்கிற மறாட்டியன் சருதாருடைய குமாரன் தன்றுச்சியம் நாறுயனப்பேட்டை..........................பேர் உடய சீமையெல்லாம் மறாட்டியர் ரகோசி பூசாலா (Ragoji-Bhonsalai) பவுன்சு வந்து கொள்ளையிட்டு தீத்துப்போட்டார்களென்று உத்தாரம் கொடுத்தாலும் குடாவிட்டாலும் போறதாயியவன் பிரயாணம் பிறப்படுகிறுனென்று ஒரு கபுறு சொன்னேன். தோஸ்தி யென்கிறவன் அப்துல்றயிமான துபாசியாயிருக்கிறவன் வந்து அவர்கள் பயணம் போனர்கள்யென்று தஙகள் சிப்பாயி தண்டுக்குப் போனவன் கபுறுவந்து சொன்னுன். அதின் பேரிலே லோகாம்பிரமமாய் மழைக்காலத்தை தொட்டும் மறாட்டியர் கொள்ளையிடுகிறதை தொட்டும் நாசறுசங்கும் பிறகே வந்த மன் சுபேதார்கள் வகையறு பெரிய மனுஷர்கள் தங்கள் தங்கள் சாகீர்களுக்குப் போகவேணுமென்று ரெம்ப துறை பண்ணுகிறபடியினுலே யினிமேல் நாசறுசங்குக்கு விசேஷிச்ச நாளிருக்கக்கூடாது யென்று யிதுமுதலான பேச்சுக்கள் பேசியிருந்து அனுப்பிவிக்க பாக்கு கிடங்குக்கு வந்தேன். அப்பால் யெட்டுமணி வேளைக்கி அழைச்சனுப்பிவிச்சு காரைக்கால் படைவையும் யெனத்துப்

பிடவையும் கொஞ்சமிருக்கிறதே சலவை பண்ணி தீத்து ஒப்பிச்சுப் போடாமல் போனதென்னவென்று தளம் வந்து யிறங்கியிருந்த படியினாலே தண்ணீர் கெட்டிப்போய் சேறாய் கிடந்தது அப்படியிருந்து ஒரு நாள் கஞ்சிகூடப் போட்டு பார்த்தால் சலவை துப்பரவாய்க் காணாத படியினாலே நிறுத்திப்போட்டேன். யிப்போ அங்கே யிருந்த தண்டு மனுஷர்களும் வாங்கிப் போனார்கள். நம்முடைய பவுன்ச் வண்ணாந்துறையிலே யிறங்கி யிருந்தவர்களும் பெருமாள் நாய்க்கன் சாவடியிலே போயிறங்கினார்களே மழையும் பெஞ்சு வருதே யினி ரெண்டுநாள் போனவுடனே அப்படியே முஸ்தீத்துப் பண்ணிவிச்சுப் போடுகிறேன் யென்று சொன்னதுக்கு அதுகட்டிப்போட்டாகாமல் ரெண்டுதேவு கணக்கு தீத்து அனுப்புறதுக்கு யில்லையென்று சொல்லி சீக்கிரம் முஸ்தீத்துப் போடுவையென்று சொன்னார் நல்லதென்று சொன்னேன் அதிலே சின்னதுரையும் தண்ணீர் தெளிஞ்சவுடனே முஸ்தீத்துப் பண்ணலாம் கிழிசல்பிடவை யிருக்கிறதைப் பார்த்து யிஸ்பித்தாலுக்கு (Hospital) குடுக்கச்சொன்னார். அதுக்கு நான் யின்றையதினம் மூசே கோர்னே உத்தாரம் யென்று கோட்டைக் கிடங்கு கணக்குப் பிள்ளைகள் சிறிது பிடவைகள் வந்து யெடுத்துப் போனார்கள். யென்று சொல்லிப்போட்டு பாக்கு கிடங்குக்கு வந்தேன். ராத்திரி மழை பெஞ்சுது.

**1750 ஹு அவ்றில் மீ 18 உ பிறமோதூத ஹு சித்திரை மீ 9 உ சனிவாரம்.**

இத்தனுவ் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்குப் போனவுடனே துரையவர்கள் யென்ன சமாசாரமென்று கேட்டார்: முறாறுயர் சானேசி நெய்பவக்கர் ராசசந்திரசேனன் முதலான பேர்கள் மருட்டியர் சருதாருகள் அவரவர் பவுன்சுகளை கூட்டிக்கொண்டு அவரவர் சீமைகளுக்கு பயணம்சாகிப்போனார்களென்று சொன்னேன். அது மெய்தான். முறாறுயன் மாத்திரம் தனக்குச் சொன்னபடிக்கு நடப்பிக்கயில்லை. யிருபது யிருபத்தையாயிரம் ரூபா சொன்னது மத்ததொன்றும் சொல்லாமல் போச்சுதென்று அவன் மாத்திரம் சிகாபத்தின் பேரிலே (Shaikhabad) போறான் மத்தபேர் மருட்டியர் சருதாருகள் தங்கள் ராச்சியம் கொள்ளையிலே வெகு சேதமாச்சென்றும் மழைக்காலமென்றும் அனுப்பிவிச்சுக் கொண்டு போனார்களென்றும் சேதி கேட்டேன்.

யின்னமொரு சாடை யெனக்கு தோத்துது அவன் பயணத்துக்கு யிவர்கள் முனனே அனுப்பினதாய் தோத்துது மெய்யோ பொய்யோ தெரியவருதென்று சொன்னதுக்கு பெரிய பவுன்சு பிடிப்படுகிறதுக்கு முன்னே பவுன்சு நடக்கிற வாடிக்கைதான் அப்பாலும் யிவர் வரச்சே முன்னே பதினைஞ்சு நாளைக்கு முன்னேதானே மரூட்டியர் பவுன்சுகள் வரயில்லையா. அப்படியும் யெண்ணலாமென்று சொல்லியிப்போ பேயுரமழை நாசறாசங்கு லசுக்கரிலே யிருக்கிறவர்கள் வெகு சங்கடப்பட்டுப் போவார்களென்று பேசியிருந்தோம். அப்பால் நான் பாக்கு கிடங்குக்கு வந்தேன்.



இத்தனாவ் பகலைக்கு மேலாக ஒன்பது மணிக்கு மகம்மது உசேன் கோட்டார் போனவன் நாசறாசங்குவினுட பதில் காகிதமும் சான்வாசுகான் காகிதமும் கொண்டுவந்து குடுத்து உடனே துரையவர்கள் என்னை அழைப்பிச்சு காகிதங்களைக் குடுத்து படிச்சுப் பார்த்துச் சொல்லென்று சொன்னார். மதனாந்த பண்டிதன் கையில் கொடுக்க அவன் நாசறாசங்கு காகிதம் படிச்சு சொன்ன வயணம்.



நாசறாசங்கு காகிதம் மத்தலப்பு

கையிலே பராக்கிரமமாகிய பிறசாதத்தைப் பிடிச்சு யிருக்கிற புதுச்சேரி பந்தர் கோவர்ணதோர் செனறால் சாயபு அறியுறது தாம் அனுப்பின காகிதங்கள் பார்த்துக்கொண்டு தம்முடைய கீர்த்தி·விசுவாசத்துக்கு மிகுதியும் சந்தோஷப்பட்டோம்.

அந்த காகிதத்திலே தம்முடைய பக்கத்திலிருந்தும் ரெண்டு பெரிய மனுஷர் நம்முடைய மற்சி அறிந்து உத்திரம் சொல்லத் தக்கவர்களாய் புத்திசாலிகளாய் யோக்கியராயனுப்புகிறோமென்றும் யிதல்லாமல் மத்தபேர் ஒருத்தருடனேயும் பேசுறதுமில்லை அறியவும் அறியோம் உம்மை அறிஞ்சிருக்கிறோம் உம்முடனே பேசுகிறதே அல்லாமல் மத்தப்பேரைத்தொட்டு அக்கரையில்லை யென்று எழுதினீரே மிகுதியுஞ் சந்தோஷம் ஆச்சுது அப்படியே பரிச்சேதமாய் அந்த விசுவாசம் மனதிலே வையாமல் யிந்த காகிதத்தை பாவசமாயி நம்பி உம்முடைய ஸ்தானாபதிகள் பெரிய மனுஷர்கள் முன் யெழுதின படிக்கி சம்மாத்தார்களை அனுப்பிவிக்கிறோமென்று யெழுதின படிக்கு நாம் பாதுசாவான படியினாலே

நம்முடைய மரியாதை அறிந்து நடந்துக்கொள்ளச் சொல்லி திட்டம் பண்ணி அதுக்கேத்த யோக்கியராய் நம்மண்டைக்கு வரத்தக்கவர்களாய் சானவாசகான் (Shah Nawazkhan) மாரிபத்திலே அனுப்பிக்கவும் யெழுதியிருந்தது அது படிச்சு சொன்ன உடனே சாநவாசுகான் காகிதம் படிச்சு சொன்ன வயனம் சானவாசகான் காகித உபசாரத்துக்கு அப்பால் மத்தலபு எழுதின வயனம் தாம் அனுப்பின காகிதம் பார்த்துக்கொண்டு அசரத்து நிசாமுத்தவுலா (Nizam-ud-daulah) அவர்களுக்கு அரசுபண்ணி அவா பேருக்கு நீர் அனுப்பின அறிசியும் படிச்சு காண்பிச்சோம் அவர்களும் உம்முடபேருக்கு பினுயித்துனமா. தயவு பண்ணி அனுப்பினர் அது அனுப்பினேன். அது பார்த்துக்கொண்டு அந்தப்படிக்கு நம்பிக்கையாய் யெண்ணிக்கொண்டு உங்கள் ஸ்தானுபதிகளை அனுப்புறவர்களை அனுப்பவேண்டியதென்றும் அப்பால் பாதசாவினுடைய பவுன்சு தமாமும் வந்தாலும் முசபர்சங்கு குஞ்சு குழந்தைகளிருக்கிறவர்களை திருஷ்டிச்சுப் பார்க்கக் கூடாதென்ற யெழுதினீரே அவர்களைத் தொட்டு யெங்களுக்கு ஆகவேண்டிய காரியமென்ன. ஆரைத்தொட்டு காரியமோ அவர்கள் யெங்கள் கையில் அகப்பட்டால் போலே ஆச்சுதே அப்பால் வேறே நாங்கள் யெண்ணவேண்டியதேயில்லை யென்றும் உங்கள் சம்மதியில்லாமல் ஆற்காட்டு சுபாவுக்கு ஒருத்தரை ஒருக்காலும் நாட்டக் கூடாதென்ற யெழுதினது உம்முடைய புத்தி பொருமையினாலே யெழுதினீரே யல்லாமல் நீர் புத்தியுடனே யெழுதினதல்ல அது யெப்படி யென்றால் யெங்கள் சிமைக்கு உமக்கு கவையென்ன யென்றாப்போலேயும் நல்லது உம்முடைய ஆரோக்கிய அதிசெயத்துக்கு யெழுதியனுப்பவும் நாசறுசங்கு தக்கன் பாதுஷா அவர்களுடைய அதப்பு அறிந்துக்கொள்ள வேண்டுமென்று யிப்படியாக யெழுதியிருந்த மத்தலப்புபடிச்சுச் சொன்னவுடனே நல்லது அதுகள் யெல்லாம் அப்படி யிருக்கட்டும் நாசறுசங்கு காகிதம் மாத்திரம் மூசே திலார்சு மூசே பொசேத்து வந்தால் படிச்சு காண்பியென்று சொல்லி மூசே திலார்ஷையும் மூசே பொசேத்தையும் அழைச்சனுப்பிவிச்சார். அவர்களும் வருகிறதுக்கு முன்னே நாசறுசங்குக்கு ஒரு காகிதம் சானவாசுகானுக்கு ஒரு காகிதமும் யெழுதச் சொன்ன வயனம் நாசறுசங்குக்கு யெழுதின காகித வயனம். தாங்களெழுதின பினுயித்துனமா பார்த்துக்கொண்டு அதிலே யிருந்தபடிக்கி பின்னை ஒன்றும் அவிசுமாய்

என்றால் உம்முடைய பரவசத்தை நம்பி உம்முடைய ஸ்தானபதி களை அனுப்புவியுமென்று யெழுதினபடிக்கு முசே பொசேத்து (M. Bausset) முன் நவாபு ஆசபுசாசனுக்கு (Navab Asaf shah) வந்தபோது உங்கள் தெரிசனமும் பண்ணிக்கொண்டு உங்களை வெகுனளாய் அறிந்தனென்று மெத்த புத்திசாலி யிதல்லாமல் உங்கள் தகப்பனார் மறிசி அறிந்து நடந்து கொள்ளுகிற பேர் பிறபஞ்சத்திலே வெகு கொஞ்சம் அப்படிபட்டவருடைய தயவுக்கு பாத்திரவானாயிருந்தவரான படியினாலே அவரையும்பாரிச பேச்சு உங்கள் சமூகத்துக்கு யோக்கியமாய் பேசி உங்கள் மனதை திருப்திப் பண்ணப்பட்ட வசனவேடிக்கை உள்ளவரையும் உங்கள் அஸ்தாட்சி பரவசத்தை நம்பி உங்கள் சமூகத்துக்கு நீங்களெழுதின படிக்கி சாநவாசுகான் மாரிபத்திலே அனுப்பிவிச்சேன். அவர்கள் சொல்ல உங்கள் சித்தத்துக்கு சகலமும் தெரிய வருமென்று யெழுதச்சொன்னார். அந்தப்படிக்கு யெழுதி தயாரான உடனே சானவாசுகானுக்கு யெழுதச் சொன்ன வயனம் படிக்கு யெழுதினது. தாம் யெழுதின காகிதம் பார்த்துக் கொண்டதினாலே அசாத்து சிசாமுத்தவுலா அவர்கள் யினாயித்துமாவிலே பின்னையும் படிச்சுக்கொண்டும் சகலமும் தெரிய வந்தது.

யினாயித்துனுமாவிலே பின்னையொன்றும் அவிசுவாசமாயென்றால் நம்மை பரவசமாய் நம்பி உம்முடைய ஸ்தானபதிகளை அனுப்பச்சொல்லி யெழுதினபடியினாலேயும் நீர் யெழுதினபடியினாலேயும் மனதிலே அவிசுவாசமாய் யெண்ணாமல் பரவசமாய் யெண்ணி நம்பி உங்கள் ஸ்தானபதிகளை அனுப்பிவிக்கச் சொல்லி யெழுதி அனுப்பின படிக்கு உம்முட மாரிபத்தில் முசே பொசேத்து முசே திலார்கையும் அனுப்பி அவர்கள் வெகு யோக்கியர் சமர்த்தர் பெரிய மனுஷர் அவர்கள் அசறத்து அவர்கள் மறிசி அறிஞ்சு அவருக்கு யெந்த் மரியாதையுடனே நடக்கவேணுமோ அந்த மரியாதையுடனே நடப்பார்கள். அவர்களுக்கும் வெகு மரியாதையாய் நடப்பிச்சு அவர்களையும் அசாத்து அவர்களுக்கு பேட்டியும் பண்ணிவிச்சு வந்த காரியமும் அனுகூலம் பண்ணிக்கொடுத்து அனுப்பச்சொல்லி யெழுதச்சொன்னார் அந்தப்படிக்கி யெழுதி தானவுடனே அப்பால் சயிதுலசுக்கர்கானுக்கு ஒன்றும் சானேகிநிம்பளக்கர் யென்கிற மாராட்டியர் நாலாயிரம் குதிரை சமேதார

னுக்கு ஒரு காகிதமும் யெழுதச்சொன்னார். யிவர்கள் மூணு பேர்களுக்கும் யெழுதச்சொன்ன வயணம் உங்கள் மனது. யெசமான் சகம் சோறுகிறவர்கள் யென்றும் சனங்கள் சுகப்பட வேணுமென்றும் யிப்போதும் நல்ல மனதையுடைய பெரிய மனுஷர்களென்று உங்கள் தாரிபு வெகுசாய்க் கேழ்விப்பட்டோம் ஆனால் யெங்கள் மனதும் உங்கள் மனதைப்போலே யெங்கள் மனதுமானபடியினாலே உங்கள் மாரிபத்திலே யிந்த மொகத்துமா பேசவேணுமா மென்று யிருக்கோம் அசரத்து நிசாமுத்தவுலா யினாயித்துனாமாவிலே சானவசுகான் மாரிபத்தில் உங்கள் மனுஷர்கள் வந்து அனுப்பவும் யென்று எழுதின படியினாலே அவர் மாரிபத்தில் அனுப்பிவிச்சோம் யிந்த சமாசாரமெல்லாம் ஆகி அப்துல்லா துறக்கி வந்து சொல்லச்சே உங்கள் மனசுக்கு நன்றாய்த் தெரியவரும் யென்றும் யிப்பவும் மூசே பொசேத்து மூசே திலார்ஷையும் அனுப்பிவிச்சோம் அவர்கள் பெரிய மனுஷர்கள் உங்களைக் கண்டு வார்த்தைச் சொல்லச்சே தெரியவருமென்று யெழுதச்சொன்னார் அந்தப் படிக்கி யிந்த காகிதங்களும் மூன ரெண்டு காகிதங்கலும் ஆக அஞ்சு காகிதங்களும் யெழுத வேண்டிய உபசாரப் படிக்கு யெழுதினோமென்று சொல்ல எழுதின மத்தலப்பை படிச்சுச் சொல்லச் சொல்லி அந்தப்படிக்கி யெழுதினகாகிதங்கள் அஞ்சும் படிச்சு சொல்ல சந்தோஷமாய்க் கேட்டு முத்திரைபோட்டு நக்கலுவை மூசே திலார்ஷவுக்குப் படிச்சுக் காண்பிக்கச் சொன்னார் அதிலே மூசே திலார்ஷும் மூசே பொசேத்தும் வந்தார்கள். படித்துக்காண்பிச்சோம். நன்றாயிருக்குதென்று சொல்லி அதின் பேரிலே துரையவர்கள் மூசே பொசேத்து மூசே திலார்ஷையும் பார்த்து நாசறுசங்கு காகிதம் உங்களை அனுப்பிவிக்கச்சொல்லி யெழுதிவந்ததென்றும் சொல்லி அந்தப்படிக்குப் போறோமென்று சொன்னார்கள்.

அதன் பேரிலே நாசறுசங்கு காகிதமெங்கே யென்று கேட்டார் கையிலே குடுத்தேன். அதை மூசே திலார்ஷ் கையில் குடுத்து படிக்கச் சொன்னார். யெனக்குப் படிக்கத் தெரியாது பேசமாத்திரம் தெரியும் யென்று சொன்னதின்பேரில் அப்படியாவென்று சொல்லி மதனாந்த பண்டிதரைப் பார்த்து நீர் படிச்சு சொல்லுமென்று சொன்னார். அந்தப்படிக்கி மதனாந்த பண்டிதர் படிச்சுச் சொன்னார். நன்றாய் யெழுதியிருக்குதென்று துரை

யவர்களுக்குச் சொல்லி நாசருசங்கு அனுப்பினகாகிதமும் நம்முடைய கையில் குடுக்கவேணுமென்று வாங்கிக்கொண்டான்.

நாசருசங்கு முதலான பேருக்கு உங்களை அனுப்பிவிச்சோமென்று யெழுதின காகிதமிப்படி யிருக்கிறது நன்றாயிருக்கிறதாவென்று கேட்டார். மூசே திலார்சு நன்றாய் யெழுதியிருக்குதென்று சொன்னேன். ஆனால் முத்திரைப்போட்டு பையிலே போட்டு முஸ்திது பண்ணிவை யென்று யென்னுடனே சொல்லி மூசே பொசேத்து திலார்ஷையும் ரெண்டு பேரையும் நாளை பொழுது விடிய ஒரு நாழிகை பூசைக்கேட்டுப் போங்களென்று யிதுக்கென்ன சரஞ்சாமி பண்ணிக்கொள்ளவேணுமோ அதுகளெல்லாம் முஸ்தீது பண்ணிக்கொண்டு சாயங்காலம் வந்தால் நடக்கவேண்டியகாரியங்களுக்கெல்லாம் உங்களுக்குசொல்லவேண்டிய வயணம் சொல்லுகிறேமென்று சொல்லி போகச்சொல்லி

அப்பால் சயிதுலசக்கர் கானுடைய மனுஷனை போக்குவரத்து யிருந்த கடசியிலே சரீரம் ஆரோக்கியமில்லாமல் சரீரம் அவஸ்தைப் படுத்திக் கொள்ளுகிற நிமித்தியமாக வந்த துறக்கி ஆஜி அப்துல்லா (HajiAbdullah) யென்கிற பலவித பாஷைக்காரன் வந்து துரையவர்கள் உத்தாரப்படிக்கி துரையவர்கள் வீட்டுக்குதினியிலே ஒரு காம்பிறாவிலே யிருந்துகொண்டு ஆரோக்கியம் பண்ணிக்கொண்ட துறக்கியை துரையவர்கள் அழைப்பிச்சு அவனைக்கண்டு பேசி அவனையும் மூசே பொசேத்து திலார்ஷூடனே கூடப்போகச் சொல்லி அவனுக்கு ஒரு பல்லக்கும் போயண்டரையும் முஸ்தீத்துப் பண்ணிக் குடுக்கச்சொல்லி யெனக்குச் சொல்லி அப்பாலிவர்கள் பிறகே போறதுக்கு அவ்பது துப்பாக்கி காறர் சிப்பாய்களும் குதிரை சுவார்களும் தமைநீச்சிகன் (Horsemen) பத்துபேரும் ஒரு கூடாரம் அதுவும் பின்னையும் யிவர்கள் சாமான் யெடுக்க ஒட்டகங்களும் யிதுகளெல்லாம் முஸ்திது பண்ணி மூசே பொசேத்து வசம் பண்ணச்சொல்லி சொல்ல அந்தப்படிக்கி சரஞ்சாமி பண்ணி அனுப்புறேன் யென்று சொன்னேன். அப்பால் உபதேசி செகுனியாப்பிள்ளை கிழவனையும் கூடப்போகச் சொல்லென்று சொன்னார். அப்பால் அவனையும் அழைச்சுவரச்சொல்லி ஆள் அனுப்புறேன் யென்று சொன்னேன். வக்கில் சுப்பய்யனையும் பாரிசு படிக்கிறதுக்கு ஒருத்தனையும் கூட அனுப்புவோமென்று சொன்னேன் அப்படியே செய்யென்று சொன்னார். முன் சென்னப்பட்டணம் மூசே பெடுத்தலமி

யோடே கூட யிருந்த காயித்தவனைக் கூட சேக்குயிபிராம் அண்டையிலே யிருந்தவனை அழைச்சுவரச்சொல்லி ஆளனுப்பி யிதுகளெல்லாம் சான்சாமி பண்ணி மூசே பொசேத்து-மூசே திலார்ஷ-அவர்கள் வசம் பண்ணிப்போடச் சொல்லி வக்கில் சுப்பய்யன் கூட சிப்பாயிகளுடைய அலபேர் (Havildar of sepoy) சயிது புட்டனையும் (Saiyid Budan) அழைச்சு சொல்லி போகச் சொன்னேன். அப்பால் துரையவர்கள் சவாரிப்போனார்கள். நானும் மதனந்தபண்டிதரும் பாக்கு கிடக்கியே வந்தோம் இத்தனன் ஆறுமணி அஸ்தமான வேளைக்கு துரையவர்கள் வீட்டுக்கு வந்தவுடனே மூசே தெலார்ஷூ மூசே பொசேத்து ரெண்டு பேர்களும் வந்தார்கள். யென்னையும் அழைப்பிச்சு சகல சாமான் யிவ களுக்கு போகவேண்டியதெல்லாம் முஸ்தீதுபண்ணி நடுத்தாயாவென்று கேட்டார். குதிரை சுவார்களும் பத்தும் சிப்பாயிகள் அன்பதுக்கும் அதுக்கு கபேசாய் சயிது புட்டனையும் சாப்பிட்டு ராத்திரி பத்துமணிக்குவழுதாவூர் வாசற்படியிலே போயிருக்கச் சொன்னேன். அரும்பாத்தை மனுஷனையும் சிலவுகள் போட்டுக்கொண்டு யிவர்கள் பிறகே கூடப்போகச்சொல்லி பரசராமபிள்ளைக்கிச் சொன்னேன் மூசே பொசேத்துவை போய் கண்டு பேசி நான் மைத்தப்படி கூடாரம் ஒட்டகம் சமஸ்தமும் அவர்கள் பாரிசமாய் ஒப்பிச்சுப்போட்டேன்.

பாரிசுபடிக்கிற காயித்தனும் சுப்பய்யனும் செகுனியும் யிவர்களையும் மூசே பொசேத்து அண்டையிலே கூடக்கூட்டி அனுப்பிச்சேன். ஆசி அப்துல்லாவுக்கு பல்லக்குகூட போயண்டர்களும் முஸ்தீது பண்ணி அவன் வசம் பண்ணிப்போட்டேன். யினி நாசறுசங்குக்கு யெழுதின காகிதமொன்றும் சாநவாசகானுக்கு யெழுதின காகிதமும் ஒன்றும் காமேனுசிநிம்பளக்கருக்குயெழுதின காகிதமொன்று ஆக அஞ்சு காகிதமும் யிருக்குது யிதிலே நாசறுசங்குக்கு காகிதத்துக்கு மாத்திரம் பை போட்டு யிருக்குது. மைத்த நாலு காகிதத்துக்கு பையில்லை யென்று சொன்னேன். அதுக்கு மூசே திலார்ஷ வசமாய் ஒப்பிச்சுப்போடச்சொன்னார். அந்தப்படிக்கு ஒப்பிச்சுப்போட்டேன். அதின் பிற்பாடு நடக்கவேண்டியவயவங்கலெல்லாம் சொல்லி துரையவர்கள் யிருபத்தோரு அசாப்பியும் (Mohurs) நாசறு சங்குக்குக் கொடுத்தார். அவர்கள் யிருபத்திரெண்டாய் குடுத்தால்பேருக்கு பதினொன்றாய்

வைக்கிறேனென்று சொன்னார்கள். அதுக்கு துரையவர்கள் றங்கப்பன் யிருபத்தொன்று போதுமென்று சொன்னானென்று சொன்னானென்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது பொதுவிலே வைத்தால் யிருபத்தொன்று போதும் ரெண்டு பேர் பேருக்கு பதினொரு ரூபாயாக குடுக்கவேணுமானால் யின்னம் ஒன்று வேண்டியதாகுமென்று சொன்னேன். அப்பால் பின்னை ஒரு மோகனாவும் குடுத்தார். யேகத்துக்கு யிருபத்தி ரெண்டுமே வாங்கிக்கொண்டார்கள் அப்பால் சந்தாசாயபுவைப்போய் அவர் அபிப்பிராயம் கேட்டு வரச்சொல்லி அனுப்ப அவரைப்போய் முசே பொசேத்தும் முசே திலார்சும் போய் கண்டு பேசி வந்து துரையவர்களுக்கும் கபுறு சொல்லி அப்பால் பயணம் போகச்சே மீர்ஷம் வந்து குத்புத்தி அலிகானை (Qutbudin-Ali-Khan) க்கூட நவாபு சாயபு அனுப்புறது உத்தமாய் காணுதென்று சொல்லச்சொன்னாரென்று சொன்னதுக்கு நல்லது சந்தா சாயபு மனுஷனென்று பெண்பிக்க கவையில்லை யெங்கள் மனுஷர்கள் யென்று சொல்லிக்கொண்டு போகவேணுமென்று சொன்னதுக்கு அப்படியே தான் போகவேண்டியது அந்தரங்கத்திலே ஆறார் அநுகூலமோ ரூசத்திலே அவர்களுக்கெல்லாம் சொல்லி அந்தரங்கத்திலே யிவர்களுக்கு அநுகூலமாய்ப்பேசுறதுக்கு ஆக யெத்தனம் பண்ணினேனென்று சொல்ல ஆனால் போகச்சொல்லென்று சம்மதிச்சும் சம்மதியாமலும் சொல்லி நல்லது முஸ்தீத்தாய் வரச்சொல்லு காலமே மணிக்கு யிருட்டோடே போவார்களென்று அவரையும் முஸ்தித்தாய் வரச்சொல்லி மீர்ஷத்துக்கு சொல்லிப் போகச்சொன்னார். அந்தப்படிக்கி முசே பொசேத்து முதலான பேர்களனுப்பிவிச்சுக்கொண்டு அவரவர் வீட்டே போனார்கள். நானும் மதனாந்த பண்டிதனும் பாக்கு கிடங்குக்கு வந்தோம்.

**1750 ஷூ அவ்றில் மீ 19 உ பிறமோதூத ஷூ சித்திரை மீ 10 உ ஆதிவாரம்.**

இத்தனாள் அஞ்சுமணிக்கி முசே பொசேத்து முசே திலார்சும் ஆசி அப்துல்லா யென்கிறவன் ஆக மூணுபேரும் வந்து மிசியோனேர் கோயிலிலே பூசைகேட்டு அஞ்சரை மணி அடிச்ச பிற்பாடு யிங்கேயிருந்து பயணம் பிறப்பட்டு போகச்சே நான் தெருவிலே யிருந்தேன் அப்போ முசே பொசேத்து சலாம் சொல்லி அனுப்பினார் நானும் போய் நல்ல யாத்திரை யுண்டாகவேணு

மென்று ஆசாரஞ் சொன்னேன். ஆசி அப்துல்லாவும் ஆசாரஞ் சொல்லி உபசாரஞ் சொன்னான். நானும் ஆசாரமும் பண்ணி ரொம்பவும் உபசாரமும் சொல்லி யிப்பறம் நிர்க்கச்சே முசே திலார்ஷ. மாத்திரம் தொப்பி கழட்டி ஆசாரம் பண்ணினான் நானும் ஆசாரம் பண்ணினேன் அப்பால் அவர்கள் பயணம் நடந்தார்கள். பேர்கள் வபணம் முசே பொசேத்த முசே திலார்ஷு ஆசி அப்துல்லா யிவர்கள் மூணு பேர்களும் மூணு பல்லக்கு வக்கில் சுப்பய்யன் செருனிபாப்பிள்ளை காகிதவான் பாரிசு எழுதுகிறவன் சபிது பட்டன் சமேதார சிப்பாய்கள் அன் பது பேர் பத்து சுவார்கள் கூடப்போனார்கள்.

இத்தனன் காலத்தாலே எட்டு மணி வேளைக்கி துரையவர் கள் கோவில் பூசைக்குப்போய் வந்த பிற்பாடு என்னை அழைத்து முசே பொசேத்த முதலான பேர்கள் யென்னேரம் பயணம் போனார்களென்று கேட்டார். ஆறு மணி வேளைக்கி மிசியோனர் கோவிலிலே போயி அஞ்சு மணிக்கி பூசை கேட்டு அவ்விடத்தி லிருந்து பிறப்படச்சே ஆறு மணிக்கி வுண்டு மென்று சொன்னேன். ஆரார் போனார்களென்று கேட்டார். போனவர்கள் பேர் சொன்ன வபணம்.

முசேபொசேத்த - முசேதிலார்ஷு சபிதுலசக்கர்கான் தாயில் வியாதி பாத்துக்கொள்ள வந்த ஞேஸ்தாந்திநோப்பில் (Constantinople), துற்க்கி ஆசி அப்துல்லா யென்கிறவன் சந்தா சாயபு திவான் குத்தபுத்த கல்லிகான் சபிதுபட்டன் அலபோ அன்பது சிப்பாயிகளுக்கும் பத்துபேர் சுவார்களுக்கும் அவர்களுட கூடப்போறவன் அப்பால் வக்கீல் சுப்பையனும் அவன் சேவுகர் இருபத்தைதுபேர்களும் பாரிசு யெழுதுகிற காயித்தவானும் செருனியாப்பிள்ளை யிவர்கள் கும்பினீர்தானுக் காமென்று சோபுதார்கள் கூடப்போனார்கள். அப்பால் முசேபொ சேத்து துபாசி பெரியண்ணமுதலி யென்கிறவன் முசேதிலார்சு துபாசி ஒரு பள்ளிப்பயல் அரம்பாத்தை மனுஷன் ஒருத்தன் யிவர்கள் கிலவுக்குப் போடுகிறவனிவர்கள்யெல்லாரும் பயணம்சாகி நடந்து பெருமாள் நாயக்கன் சாவடி யிமித்தண்டையிலே போயி நங்கி அங்கேயெல்லோரையும் சுமைபண்ணிக்கொண்டு அப்பாலே போறதாய் சேதிசொன்னார்கள், யென்று சொன்னேன் நல்லது யிந்த காரியம் யென்னமாய் நடக்குமென்று தோணுதென்று

கேட்டார், கடசி நடக்கிறகாரியம் சொல்லுகிறேன் சுவாமியினு டைய கடாட்சம் உமக்கு நன்றாய் யிருக்கிறபடியினாலேயும் நாளது வரைக்கும் உங்களுக்கு நடக்கிறது ஒரு விசாரத்தை வருத்திவிச்சு அப்பால் முன் யிருந்த யோகாதி செயத்துக்கு பத்து பங்கு உசந்து நடக்கிற சாடையாய் ஆனபடியினாலே யிந்த விசனங் கொடுத்த மட்டுக்கும் உம்முட மனோரதப்படிக்கி சீமையும் சந் தாசாயபுக்குத்தானே ஆகியிப்போ உம்முட கும்பினிருக்கு விசே ஷிச்சுவிட்டிருக்கிறதைப் போலே காலத்தனசீமை அதனமாய் சாகீர்விட்டு நாசறுசங்குக்கும் உமக்கும் அதிக சினேகமாயி ஆற்காட்டு சீமைகூட கிருஷ்ணாநதிக்கிப்பறம் பெல்லாம் உம்முட ஒடுதிக்கு ஒபேதிசேரிட்டு (கீழ்ப்படிந்து) நடக்கும்படியாய் சுவாமி தயவு பண்ணுவாரென்று தோத்திருக்குதேயல்லாமல் மைத்தப் படி அல்லவென்று யிதுக்கு முன்னே யிங்கிரேசுக்காறர்கள் நடப் பிச்சதும் அப்பால் சென்னபட்டணம் வந்ததும் அப்பால் அன் வறுதிகான் நடப்பிச்சதும் அப்பால் அவனைக்கொன்றதும் ஆற் காடு முதலான சீமைக்கு மத்தியிலே வந்தது முதலான அநேகங் காரியங்கள் உள்ளபடி கூடச்சொல்லி கெட்டியாயிப்படி நடக்கு மென்று சொன்னேன். யிப்படி நாசறு சங்கு சினேகம்பண்ணாமல் போனால் நாசறுசங்குக்கு ஒரு மோசயிக்கட்டு வந்தாலும் உமக்கு உம்முட அபீஷ்டப்பிறகாரம் ஆற்காடு சுபா உம்முட மாரிபத் திலே நடக்கவும் யின்னம் கும்பினிருக்கு சாகீர்வரவும் யிப்படி யாகிலும் உமக்கு நன்மையாய் நடக்குமே அல்லாமல் வேறே விதமாய் நடக்கதக்கதில்லை கெட்டியாய் மனதிலே வையுமென்று சொல்லி உமக்கு நாசறுசங்குசத்துருவானபடியினாலே தப்பாமல் அவனுக்கு யிவ்விடத்திலே சமாதானமாய் பிறப்பட்டுவிட்டாலும் அப்பிறம் பெந்தவிதமோ ஒருவிதத்திலேயும் யிக்கட்டு சம்பவிக்குது அது கெட்டியாயிருக்கட்டும். உங்கள் முசபர் சங்கு யெப்படியும் சுகப்படுகிறானென்று சொன்னதுக்கு உங்கள் சோசியர் யிப்படி சொல்லுகிறார்களோவென்று கேட்டார் அதெப்படியாகிலும் நீங்க ளெண்ணிக்கொள்ளுங்கோள் ஆக்கீர் முடிவு பார்த்தால் நான் சொன்னது தப்புகிறதில்லை யிதுவரையிலே நான் சொன்னத் திலே யேதாவது தப்பிதம் வந்ததென்று சொன்னேன். நகைச் சுக்கொண்டு அப்பால் போய் முசேபுரியை அழைச்சு முசே புமோரேனுக்கு (M. Puymorain) முன் துரை அவர்களுக்கு முத்திரை வந்தபோது கூட வந்துதே அப்போ முசே லத்துசு

தான்சிக்கு (M. Dancy) குடுத்தபோது யிவன் காரைக்காலிலே யிருந்தபடியினலே யிவனை அழைப்பிச்சு யின்றைபதினம் குடுக்கிறதுக்கு மொகற்று தீந்தபடியினலே யிவனை அழைப்பிச்சு யின்றைபதினம் கொடுக்கிறதுக்கு மொகற்று தீந்து முசேபுரி யுடனே அந்த முத்திரை துரை வீட்டிலே யிருந்ததை யெடுத்து வந்து இராசா எழுதின காகித முதலானதுகளையெல்லாம் கொண்டு வந்து வைக்கச்சொல்லி கோன்சேலியோகள் கப்பித்தாமார்கள் ஒபிசியால்மார்களெல்லாரும் கூடியிருந்து குடுக்கச்சொல்லி துரை திட்டம் பண்ணினர். அந்தப்படிக்கி முசேபுரிக்கு ஒரு காற்காலி போட்டு உட்காரச்சொல்லி அவனுக்கெதிரே மூசே புமொரேனை முழங்கால்படியாய் உட்காரவைத்து கைக்குப்பிக்கொண்டியிருக்க மயாருசா அனுப்பின அந்த முத்திரையினுடைய பத்தேந்தைப் படிக்க யெல்லாரும் கேட்டவுடனே யிவனை முசேபுரி யெழுந்து கட்டி முத்தமிட்டுக்கொண்டு அப்பால் தன் கத்தியை வாங்கிக் கொண்டு புசத்தின் பேரிலேயும் ரெண்டு அடிச்சு முகத்தின் பேரிலே ஒரு அடி அடிச்சு ஆனவுடனே மூசேபுரி தொப்பியைக்கழட்டி ஆசாரம் பண்ணி சேம் லூயி (St. Louis) யென்கிற முத்திரையைக்கொடுத்தான். அதை அவன் சட்டையிலே சிகப்பு பெத்தையிலே கோத்திருக்கிறதை கட்டிக்கொண்டபிற்பாடு முசேபுரி கட்டி முத்தமிட்டுக்கொண்டு ஆனவுடனே துரை அவர்களுக்கு ஆசாரம் பண்ணினன். அவர் கட்டி முத்தமிட்டுக்கொண்டு ஆன பிறகு அப்பாலவரவர் வரிசையாய் கட்டி முத்தமிட்டுக்கொண்டு ஆன பிற்பாடு ஒருத்தருக்கொருத்தர் உபசாரம் பண்ணிக்கொண்டு ஆன பிற்பாடு நாசறு சங்கு செக்கரிலேயிருந்தும் சானவாசுகான் ஒரு காகிதமெழுதி நாலு அறக்காறர்களையும் கூட அனுப்பினன். அந்தக் காகிதச்சேதி யென்னயென்றல் உங்கள் ஸ்தானபதிகள் வாறவர்களுக்கு வழிகளிலே சவுக்கிகளிலே தடையில்லாமல் கூட்டி வரத்தக்கதாக நாலு அறக்காறுக்களை அனுப்பினேன். யிந்த அறக்காறுக்கள் உங்கள் ஸ்தானபதிகள் வாறவர்கள் பிறகே அனுப்பிக்கவும் அப்படி செய்யவும் யென்று உபசாரமாயெழுதியிருந்தப்படிக்கி சானவாசுகான் உங்களுக்கெழுதின காகிதச் சேதியென்று துரையவர்களுக்கு யெச்சரித்ததற்கு பதில்க்காகிதம் யெழுதி அறக்காறர்களுக்கு நாலு ரூபாய்கள் கொடுத்து அனுப்பச் சொன்னர். அந்தபபடிக்கி அனுப்பிவிச்சேன்.

இத்தனுள் சாயங்காலம் ஆறுமணிக்கி, துரையவர்களழைச்சனுப்பிவிச்சு உஷ்டேரிகரையிலே பசுக்கள் பெருதுக்கள் நாலு ஒட்டகங்கூட அறுநூறு எழுநூறு உருப்படி உண்டாம் அதுங்காசறு சங்குதாம் அதை நம்முடைய சிப்பாயிகள் போயி வோட்டிவந்தார்களென்று சொன்னார்கள். யிப்போ முசே-தொத்தேல் அந்தப்படிக்கி காகிதமெழுதி அனுப்பிவிச்சான் யென்று சொன்னார். நம்முடவர்கள் அவ்விடத்துக்கு ஸ்தானபத்தியம் சமாதானத்தின் பேரிலே போயிருக்கிறபடியினாலே யிங்கே யிப்படி நடத்தலாகாது. ஆனாலும் அந்தபெருதுக்களையும் பசுக்களையும் அலாயிதாயி வைத்து முசேதிலார்சு முசேபோசேத்து யெழுதியனுப்பினால் அந்தப்படிக்கே அவர்களண்டைக்கி அனுப்பிவிட்டால் மெத்த நல்லதாய்த் தோணுதென்று சொன்னேன். மெய்தான் அந்தப் பசுக்கள் பெருதுக்கள் காலத்தாலே வருது அந்த பசு பெருதுகளிலே நம்முது முசபார்சங்குது பின்னை ஆருருது யிருக்குதோ அதுகளைப் பிரிச்சுவைக்கச் சொல்லுமென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பால் நம் மடவர்கள் போனார்களாவென்னசெதியென்று கேட்டார். போயிசேர்ந்தசெதி வரயில்லை. தண்டுக்குச் சமீபமாய்ப் போகச்சே கண்டவர்கள் வந்துசொன்னார்களென்று சொன்னேன். அதுக்கு அவ ரென்ன ரெண்டுமணி திட்டத்தில் பீரங்கி சத்தம்கேட்டதுயென்று நியோகுசொன்னான். உனக்கேதாகிலும் கேட்டுதாவென்று கேட்டார். மெய்தான் முன்னேயேழு பீரங்கியும் அப்பால் பேழு பீரங்கியும் கேட்டது. அது யிப்போ ரெண்டு நாழிகைக்கு முன்னே புந்திக்கிசுக்காறன் (Portuguese) கப்பல் யிந்தத் துறையில் வைததுப் பிடித்து பீரங்கி போட்டான் யிங்கேயும் பதில் போட்டவிடத்திலே முன் உம்முடனே சொன்ன அலுவலில்லை. ஆனபடியினாலே நீர் பாய் விரித்துப் போகலாமென்று சீட்டுப் போனவுடனே யிப்போதான் பாயெடுத்து ஓடுகிறான். ஆனபடியினாலே யிந்த புந்திக்கிசு கப்பல் தேவனாம்பட்டணம் துறைவிட்டு பிறப்படச்சே பீரங்கியவன் போட்டதும் அப்பால் கோட்டையார் பதில் போட்டதுமாய்த் தோத்துதென்று சொன்னேன். மெய்தானென்று ஒத்துக்கொண்டார். அப்பால் சந்தாசாயபுக்கு யேதாகிலும் சேதி வந்ததாவென்று கேட்டார். விசேஷிச்ச ஒரு சமாசாரமும் வரயில்லை யென்று சொன்னேன். யிதிலே முசேமேர் முதலானபேர்கள் வந்தார்கள் என் அனுப்பிவிச்சுக்கொண்டு பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

அப்பால் பெட்டு மணி வேளைக்கு மறுபடி துரையவர்கள்
அழைச்சனுப்பி யிச்ச நம்முடையவர்கள் போனவர்கள் காகித
மனுப்பவில்லை. ஒருத்தனையவிசேஷமாகிலும் வந்து சொல்ல
யில்லையாவென்று கேட்டார் ஆரும் வரயில்லை யென்று சொன்
னேன். யிது உனக்கேர்க்க ஆக்கீர்யென்னமாகும் யென்று கேட்
டார். உம்முடைய அதிருஷ்ட்டம் வெகு சோறு ஆன படியினாலே
அவன் உம்முடைய ஸ்தானுபதிகள் போனவர்கள் வந்ததே
போதும்யென்று வெகு மரியாதையுடனே றெசெபேரிட்டு உம்
முட வசம்பண்ணி சாகீர்களும் முன் சந்தாசாயபு விட்டதுமல்
லாமல் பின்னையும் அதனையப் சிறித்து சாகீரும் கொடுத்து சகல
வெகுமானமும் உமக்குக் கொடுத்து அவனுக்கு சகல மரியாதை
யும் பொந்தப் போகப்போறான். ஆக்கிரிப்படி நடந்து யிதிலே
நாசறசங்கை செயிச்சுக் கீர்த்திவாத்தானிந்த கெட்டமிப்படி
வந்து நாளது வரைக்குஞ் சொல்லிக்கொண்டே வருகிறேன்
அப்படித்தான் யிப்பவும் நடக்கப்போகுது அதுக்குச் சந்தேக
மில்லை நான் யிதுவரையில் சொன்னது யெது தப்பிதமாய் வந்து
தென்று சொன்னதுக்கு மெயிரானென்று ஒத்துக்கொண்டார்.
நல்லது நாசறசங்கு யிவ்விடத்துக்கு வந்தாலும் வருவான்
அல்லது ஒரு வேளை அவ்விடத்துக்கு வந்தாலும் யேதாகிலும்
வெகுமானமாகிலும் அனுப்பவேணுமே. அதுக்கு யிப்போதேனே
யோசனை பண்ணிவைத்தால் நுணம்போலே தோத்துமென்று
சொன்னேன் மெய்தான் கோட்டையிலே ஆறேழு சிப்பம் சக
லாத்தும் ரெண்டுவற்ண சகலாத்து சிப்பங்கள் சிறிது மாத்திரமே
அல்லாமல் ஒரு சிப்பமாகிலும் யேதோப்புதோர் (gold brocade)
மோகமல் மைத்துமுண்டான வெகுமானம் குடுக்கிற பெரிய
மனுஷாலாய்க்கான் தினிசுகளொன்றும் யில்லை யென்று சொல்லி
சினத்து மந்தரேனுக்கு கொண்டுபோறதுக்கு ஒரு நாழிகை
வட்டம் கொண்டுபோனார்கள். அந்தக் கப்பல் யாத்திரை தப்பி
யிங்கே வந்து மொக்காவுக்கு (Mocha) ப்போனபடியினாலே
சினத்துக்கொண்டுவந்த தினிசுகளெல்லாம் யிங்கே அல்லோ
யெறக்கிப் போட்டுப்போனான். ஆனபடியினாலே அந்த தொளா
ஷம் சிறிது சகலாத்தும் சிறிது கமலோத்து சட்டம் நீபாத்து
விலைபிட்டியே அதுவுமிருக்கிறது. அந்த ஓர்லோசு மூவாயிரம்
ரூபா விலை யெழுதி வந்தது வெகு கேத்தியிந்த யிந்தியா விலே
யெங்கும் அப்படிப்பட்ட ஓர்லோசு யிந்த மட்டுக்கும் வந்ததில்லை

அதிலே ரெண்டு மனுஷர் உட்கார்ந்துகொண்டு அந்த சூஸ்திரங்கள் பெல்லாம் ஒட்டுகிற பாவனையாயி பண்ணி யிருக்குது யென்று ரொம்பவும் தாரிப்பு பண்ணினர் அதின் பேரிலே நானும் அப்படிப்பட்டது நாசரசங்குத்து லாபக்குதான் பின்னையும் வூரிலே சினத்து தோபாதினிசுகள் சிமை கனுதுகள் யிருக்கிற சகலாத்து கனையும் சினத்துவிருந்துவந்த சகலாத்துகளையும் கூட்டிக்கொண்டு நடத்துகிறதுதாமென்று சொன்னேன். யேதாகிலும் வூருகளிலே சகலாத்து ஒசந்த சிப்பங்களாய் அகப்பட்டுமோ விசாரியென்று சொன்னர் நல்லதென்று பின்னையும் பல பேச்சுகளாய் யிங்கிரேசுக்காறர்களுக்கு தலைபெறக்கலாய் வந்து விழுந்ததென்று பேசியிருந்து அனுப்பிவிச்சக்கொண்டு பாக்குகிடங்கிபே வந்தேன்.

**1750ஷு அப்றீல் மீ 20 உ பிறமோதூத ஷு சித்திரை மீ 11 உ சோமவாரம்.**

இத்தனை காலத்தாலே துரையவர்களழைச்சனுப்பிவிச்சு நேத்து நம்முடவர்கள் போனவர்கள் சமாசாரங்கள் ஒன்றும் தெரியவில்லையே யென்னயென்று நேத்து ரெண்டு மணிக்கிப் போய் நாசறுசங்கு கூடாரத்து அண்டையிலே நாசறுசங்கு பாளையம் போய் சேர்ந்தார்கள். முசபர்சங்கு கூடாரமாம் அதுக்கு யிப்பறம் சானவாசகான் கூடாரமாம் அதிக்கடுத்தாப்போலே நாசறுசங்கு நவப்பத்துகானவாம் அதுக்கும் சானவாசகான் கூடாரத்துக்கு யிப்பறம் யிவர்களுக்கு கூடாரம் போடுகிறதுக்கு யிடம் கொடுத்தார்களாம். அங்கே முசே பொசேத்து முசே திலார்ஷூ யிவர்கள் கூடாரம் போட்டுக்கொண்டு யிருக்கிறார்கள் ராத்திரி சானவாசகான் பேட்டி ஆகிறதாய் நாளைய தினம் நாசறுசங்கு பேட்டி ஆகிறதாய்ச் சொன்னார்களென்று சொன்னேன். அவருக்கு போனவர்கள் சேதி நேத்தய தினம் சாயங்காலம் பிறப்பட்டாலும் வழுதாவூர் காத வழிதானே ராத்திரி வரலாமே ராத்திரி பெழுதிக்கொடுத்தாலும் யேழுமணிக்குபெல்லாம் வரலாமே யென்று பெருபிக்கரின் பேரிலே இருந்தார் அந்த பாறுமறந்து நானிருந்துக்கொண்டு நாசறுசங்கு லசுக்கர் பெரிய லசுக்கர் சுத்திலும் சவுக்கைகளிருந்து ருமார் பெரு கட்டு காவலும் பேரிலே யிருக்கிறதானபடியாலே அவர்கள் போயிறங்கவும் அவரவரிடம் திட்டப்படுத்திக்கொள்ளச் சாயங்கால மட்டுக்கும் செல்லும் ருத்திரி உத்திரவுயில்லாமல் சவுக்கைகாறர்கள் போக்கு

வரத்துக்காறர்களையே விடுகிறதில்லையே ஆனால் காகிதங்களை யென்னமாய்விடப்போறார்கள் ஆனபடியினாலே ராத்திரி சானவாசுக் காளையும் கண்டு பேசி காலத்தாலே காகிதங்கள் யெழுதி காகிதங்கள் போறதுக்கு சவுக்கைகாறர்களுக்கு உத்திரவு வாங்காமல் சவுக்கைகாறர்கள் விட்டார்கள் யில்லாவிட்டால் காகிதங்கள் யெப்போதும் கொண்டு போற வாற அரக்காருக்கள் காசிதுக்களுக்கு தவுசித்து யிருக்கும் ஆனபடியினாலே அவர் களுக்கு தடையில்லாமல் போக்குவரத்து நடக்கும் ஆனபடியி னாலே அவர்களை யாருகிலும் நாலு ஆறு பேர்கள் குடுப்பார்கள். யில்லாவிட்டால் தஸ்துக்கு ஆகிலும் குடுப்பார்கள் அதையாகிலும் வாங்கிக்கொண்டு அனுப்புற நிமித்தியமாய் அட்டிபட்டுயிருக்கும் யின்று காலத்தாலே அதுக்கு யெல்லாம் உத்திரவு பண்ணிக் கொண்டு ராத்திரி சானவாசுகான் பேட்டி முதலானதுகள் பண்ணிக்கொண்டதும் நடந்த சேதியும் யெழுதி யனுப்ப யேழு யெட்டு மணி யடிக்கும் அங்கே யிருந்து பிறப்பட்டு யிங்கே பனிரெண்டு மணிக்கு வந்து சேருவார்களென்று சொன்னேன். அதுக்கு நாசறுசங்கு நம்முடவர்களை பிள்ளை ஒரு பொல்லாப்பு பண்ணாமல் நடப்பானென்று கேட்டார். அப்படி நம்பிக்கையாய் சுவாமி தான் காகிதமெழுதி அவனப்பால் மோசம் பண்ணுவானா. ராச்சியலக்ஷிமி அவனிடத்திலே பூரணமாயிருக் கச்சேத்தானே சுவாமி அவனுக்கு சகல பாக்கியமும் கொடுத்து யிருக்கிறவனுக்கு ஸ்தானுபதிகளை வைச்சொல்லி மோசம் பண்ணு வானா அப்படி கொடுக்கோலாய் தன் சத்தியம் விட்டு நடத்திறதுக்கு யிந்தபேளைத்தொட்டு அவனுக்கு வந்த ஆபத்தை யெல்லாம நீங்குகிறதானாலப்படி சத்தியம் தப்பிதான் மோசம் பண்ணினாலும் பண்ணுவானென்று யெண்ணவேண்டியது ரெண்டு பேர் போனால் பகை சாதிக்கிறதுக்கு அப்படி பதினாயிரம் பேர் வெள்ளைக்காறர்களும் உம்மைப்போலே ஒத்த சிங்கமிருக் கிறதினாலே அவனெப்படி நடத்துவான். ஆனபடியினாலே அப் படி நடத்துகிறது சின்ன மனுஷர் சாடையே அல்லாமல் பெரிய மனுஷர் நடவார்கள் ஆனபடியினாலே அவனிடத்தில் சுவாமி கடாசம் இல்லாமல் யிந்த யோகம் வராது. அது யிருக்கிறமட்டுக்கும் யிப் படிப்பட்ட சின்ன ஆலோசனை தீவரண்டையிலே யிருக்கிறவர் களுக்குக்கூட தோத்தாதென்று சொன்னேன். மெய்தானென்று ஒத்துக்கொண்டு மனத்துக்கு சந்தோஷமாய்ப் பண்ணிககொண்டு

யிருந்தாலும் அடுத்தது காட்டும் பளிங்கதுபோல் நெஞ்சுகடுத்தது காட்டும் முகம் யென்றாப்போலே முகத்திலே தோத்திக்கொண்டே யின்றாது. அப்பால் சந்தா சாயபுக்கு ஆருமனுஷரில்லையாமென்று கேட்டார் அவர்களுக்கும யின்னம் வரயில்லையென்று சொல்லிப் போட்டு நான் பாக்கு கிடங்குக்கு வந்தேன். வந்த சாடையிலே யின்று....................

1750 ஷு அப்றீல் மீ 23 உ பிறமோதூத ஷு சித்திரை மீ 14 உ குருவாரம்.

இத்தானாள் காலத்தாலே துரையவர்கள ளழைச்சனுப்பிவிச்சு சொன்ன வயணம் முசேபோசேத்து முசேதிலார்ஷூம் சேத்து ருத்திரி யெழுதின காகிதத்தில் முசபார்சங்கை விடுகிறதில்லையென்றும் சந்தாசாயபை ஒப்பிக்கச்சொல்லியும் ஆந்கரட்டுசுபா கொடுக்கிறதில்லையென்றும் சாயபு நாசருசங்கு நவாபு துடுத்துப் போகச் சொன்னாராம் அதின்பேரிலே அவருடைய தீவான் நவாசுகான் நம்முடவர்களுக்குஉள்ளாயிருக்கிறபடியினாலேஅவன் சொன்னது நீங்கள் யிந்த பிருதியினபேரிலேதானே அனுப்பிச்சுக்கொண்டுபோனால் யிதிலே உங்களை பலவந்தமாய் நாசறு சங்குத்தானே அழைப்பிவித்து உங்கள் மனதின்படிக்கி நடப்பிச்சு அனுப்பத்தக்கதாக பண்ணுவிக்குறேன் யென்று நம்முடவர்களுக்கு அந்தரங்கமாய்ச் சொல்லியிருக்கிறபடியினாலே நம்மடவர்கள் வந்துவிட்டாலும் மறுபடி நாசறுசங்குத்தானே அழைப்பிப்பாரென்று சொன்னார். அதுக்கு ஆலோசனைபண்ணி யென்ன யெக்கா யெக்கிடமாய்ச் சம்மதிச்சால் பலாச்சணைகாணுமென்று யின்னமொருதரம் போக்குவரத்துக்கு யிடமுண்டாக்கிவைச்சது நியாயந்தானே யென்று சொன்னேன். அதுயெதுநிமித்தியமாய் யென்றால் யிருக்கிறவர்களெல்லாம் யினிமேலும் யிப்படி நடப்பியாதபடிக்கி பிறயாசத்தை வருவிச்சு அதின்பேரிலே வெகு மனம்சனுவின்பேரிலேகுடுத்ததாய் தோத்தப்பண்ண வேணுமென்ற கருத்தைக் குறிச்சு நடத்தினாமென்று சொன்னதுக்கு ஆருக்குந்தோத்தியிருக்குதுயிப்படிப் பட்ட காரியம் நடத்தினாப்போலே நடத்துகிறதுக்கு யென்று சொன்னார் சந்தாசாயபுதான் யிப்போ ஒருத்தன் தோணி நடத்தினானேயில்லையோ அப்படி யினிமேலும் ஒருத்தன் நடத்தாமல் படிக்குத்தான் யென்று சொன்னதுக்கு நாமகச்சே துணிந்து நடத்தினோம் ஒரு இங்கிரேசக்காறன் - ஒரு ஒலாந்தாக்காரன் ஆர்யிப்படி நடத்தப்போறார்கள், அவர்களுக்கு தாதுயிருக்கிறதா நடத்துகிற

துக்கு யென்றுசொல்லி நாழும்யிந்த துலுக்கநாய்கள் பேச்சை
நம்பி யினிமேலொருக்காலும்யிப்படிப்பட்ட காரியங்கள் நடக்கத்
தக்கதில்லையென்று சொன்னார் உங்கள் தைரியத்தைப்போலேயும்
உங்கள் அதிருஷ்ட்டத்தைப் போலேயும் ஒருத்தனுண்டாலல்லோ
அப்படி நடத்தப்போறான். சுவாமி தபவு உமக்குப்பரிபூரணமாயி
ருக்கிறபடியினாலே நாசறுசங்குவைப்போலே ஒத்தவன் தக்கன்
Deccan) பாதுசாயென்பிச்சுக்கொண்டான். அறுபதினாயிரம்
குதிரையுடனேயும் அதுக்குத்தக்க கால் பலத்துடனேயும் வந்
தவன் உமக்கு நடுநடுங்கி உம்முடபவுன்சின்னைகையில் அதிக குதி
ரையுடனே பவுசுவந்து யெதுத்து வெகுசனங்களைக் கொல்விச்
சுக்கொண்டு முறிஞ்சு ஓடினது உம்முடைய அதிருஷ்ட்டபலமே
அல்லாமல் பின்றைய்ச் சொல்லப்போமோ சொன்னதுக்கு மெய்தா
னென்று ஒத்துக்கொண்டு பின்னையும் பேசிக்கொண்டிருக்கச்சே
சல்லாது சிச்சோறை சிகப்பு முள்ளங்கி கோவிசு முதலானது
வெள்ளைக்காறர் சாப்பிடுகிறதுகள் அஞ்சாறு கூடை நிரம்பவந்தது.
அதையும் வந்த மீனையும் நாசறுசங்கண்டைக்கு அனுப்பச்சொன்
னார். அந்தப்பாக்கி மனுஷர்களைக்கூட்டி நாசறுசங்குக்கு அனுப்
பிவிச்சோம், அப்பால் சருபம் நாலுபொட்டி நாசறுசங்குக்கு
அனுப்பவேணுமென்று முஸ்தித்துப்பண்ணச் சொல்லிப்போட்டு
யினிமேல் யென்ன நடக்கும் யென்று கேட்டார். நன்றாய் நடக்
கும் அதுக்கு. அனுமானப்படக்கவையில்லை. யென்று சொன்ன
துக்கு யெந்தவிதமாய் நடக்கவேணுமென்று உனக்குத் தோத்து
தென்று கேட்டார் யென் புத்தி யெம்மாத்திரம் உமக்கு
ஆலோசனை சொல்லத்தக்க புத்தியாவென்று பரிகசிச்சுக்
கொண்டு சொன்னேன். உபசாரஞ் சொல்லுகிறதிருக்கட்டும்
உன் புத்திக்குத் தோணினது சொல்லென்று சொன்னார்.
யினிமேல் மார்க்கமாய்ச் சொன்னால் கோபம் வருமென்று நாழும்
பிருகுவின்பேரிலே யிருந்து பவுன்சை சத்தே யின்னம் ஒழுகரை
பாதிரி கோவிலை ஓடிப்போனதைப்போலே கொண்டுபோயி
றக்கி சத்தே ஒரு ராத்திரியிலே யிருக்கிற சாடை பார்த்து
ஒரு விடத்தில் போயி விழுந்து சாத்தினால் உடனே காபிறுப்பட்டு
சமாதானத்துக்கு வந்து யிறங்கிப் போமென்று சொல்லி நம்முட
வர்கள் நில்லாமல் அதி சீக்கிரமாய் வந்துவிடச் சொல்லி யெழுதி
னாலே அதுவே அவர்களுக்கு வெகு பயம் பிடிக்கும் உள்ளடியிலே
யெத்தனை பெலனில்லாமல் யித்தனை பிருகுவின் பேரிலே போறாக

ளென்று பயந்தோத்தி உடனே அழைப்பிச்சு பைசல் பண்ணிப் போவார்களென்று சொன்னதுக்கு மெத்தான் நேத்து ராத்திரி பெழுதினத்திலே சாவகாசகாரனைக் கூட அழைச்சு வர பார்க்கச் சொல்லி யெழுதினேன். அந்த சாடையின் பேரிலே அப்படியாய் நின்றாலும் நிற்பார்கள். அவனை அழைக்கத் தேவையில்லை நீங்கள் மாத்திரம் உத்திரவு வாங்கிக்கொண்டு ருத்திரி ஆகிலும் யிவ்விடம் வந்து சேரவும் யென்று யெழுதுகிறேனென்று சொல்லி உள்ளே போயி காகித மெழுதி சீக்கிரமத்துக்கு சேவுகன் கையில் கொடுத்து—கொண்டுபோயிக் கொடுக்கச் சொல்லி முசே பொசேத்து அண்டைக்கு நாசநுசந்து லசக்கருக்கு அனுப்பிவிட்டு யென்னுடனே பரசுராமனுக்கு கட்டளையிட்டு முசே பொசேத்து திலாஷ் தட்டு முட்டு எடுத்து வாறதுக்கு கூலிக்காறர்களை அனுப்பச்சொன்னர் அந்தப்படிக்கிப் பரசுராமபிள்ளையை அழைச்சு யிவ்விடத்துக்கு முசே பொசேத்து முதலான பேர் வரப்போறார்கள். அவர்கள் தட்டு முட்டுயெடுத்து வாறதுகது கூலிக்காரர்களை அனுப்பச் சொல்லி சொல்லிப்போட்டு பாக்கு கிடங்கிலே வந்தேன்.

இத்தனுள் பகலைக்கு மேலாக நாலரை மணிக்கு கோட்டையிலே புதுசாய் கட்டுகிற வீட்டின் பேரிலே யிருந்து அழைச்சனுப்பிவிக்கப் போனவிடத்திலே ரூசோ பண்டிதர் அங்கே வந்திருந்தவனைப் பார்த்து யென்னத்துக்கு வந்தான் கேளென்று சொன்னர். கேட்டவிடத்திலே முந்தாம்னாள் முசாசாயபும் சிறிது சமேதாரர்களும் கோட்டையிலே புதுசாய்க் கட்டுகிற கோவத்தனமும் பார்க்க கோட்டைக்குள்ளே வாறதுக்கு முசேபுரிக்கு உத்தாரம் குடுக்கவேணுமென்று கேட்டிருந்ததுக்கு அப்படியே உத்தாரம் குடுக்கிறோமென்று சொல்லியிருந்தீர்களே யின்றைக்கு முசே புரியை கேட்டதுக்கு உத்தாரமில்லை யென்று சொன்னர். ஆனபடியினாலே உத்தாரங் கேற்க்க வந்தேனென்று சொன்னான் அந்தப்படிக்கி துரைபட்டனே சொன்னதுக்கு முசேபுரியுடனே அவர்களெப்போ உள்ளே வந்து பார்க்கிறார்களோ அப்போ வெல்லாம் தடையில்லாமல் படிக்கு விட்டுவிடச்சொல்லுயென்று சொல்லச் சொல்லி நம்முட முசே பொசேத்து திலார்ஷு முதலான பேர்கள் வந்தார்களாவென்று கேட்டார். வரயில்லை

யென்று சொன்னேன் நல்லது முசே புரியுடனே சொல்லிப்போட்டு நீ போவென்று சொன்னார். நல்லதென்று அனுப்பிவிச்சுக்கொண்டு தாழ முசேபுரியும் பிறியேலும் உலாத்திக்கொண்டிருக்கிறார்கள் அவ்விடத்துக்கு வந்து முசே புரியுடனே துரையவர்களுக்குத் தாரப்படிக்கிச் சொல்லிப்போட்டு அப்பால் நடக்கப் போகச்சே முசிய பிறியேல் யென்ன சேதி யென்று கேட்டார் நான் மப்பமாயுங்களுக்குத் தெரியாத சேதி யெனக்கு யென்ன தெரியப்போகுதென்று சொன்னேன் அப்படி யெங்களுக்கு யேதாகிலும் சேதி யறிவிப்பண்ணுகிறீர்களா வென்று சொன்னான். வேசடையாய்ச் சொல்லுகிறப்போலே காணாது யிங்கே யிருப்பானேன் அவனொன்றைச் சொல்லுவானென்று யோசனைபண்ணச்சே துரையவர்கள் மேலே யிருந்தவர் அங்கே வந்துவிட்டார். அவரைக் கண்டவுடனே அவருக்கு ஆசாரம் பண்ணிக்கொண்டு அவருடனே பேசிக்கொண்டு முசேபுரி கூட முசே புரியிருக்கிற விட்டண்டையிலே போய் உட்கார்ந்தார்கள். நான் பாக்கு கிடங்கியே வரச்சே முசே பொசேத்தும் திலார்ஷும் நாசறுசங்கு அண்டைக்குப் போயி ஸ்தானுபதியாய் பேசப் போயிருந்தப்பேர் யிருந்தவர்கள் மறுபடி வந்துவிட்டார்கள் யென்றும் துரையவர்கள் வீட்டில் போனார்களென்றும் சந்தா சாயபு உடைய திவான் குத்தபுத்தி நல்லிகான் வந்து—

சந்தாசாயபு வீட்டுக்கு போனானென்றும் யிவ்விடத்திலிருந்து பகல் நாசறுசங்கு அனுப்பின சாருயப் பெட்டிகளை முசே பொசேத்து திலார்ஷு பூத்துறை யண்டையிலே கண்டவர்கள் அவடத்துக்கு கொண்டுபோக கவையில்லை யென்றும் மறுபடி திரும்பிக் கொண்டு வந்தார்களென்றும் யிது முதலான சேதிகள் வைக்கிலே சப்பப்பன் யென்னைக் கண்டவுடனே சொன்னான். அப்படியா வென்று சேதி கேட்டுக்கொண்டு பாக்கு கிடங்கியே வந்தவுடனே துரையவர்களும் வீட்டே வந்து சேர்ந்தாரென்று கபுறு வந்தது சொன்னார்கள். அதிலே துரை வீட்டுக்குப் போகவேணுமென்று பிறப்படச்சே துரை அழைக்கிறாரென்று சேவுகன் அழைக்க வந்தான். மதனந்த பண்டிதனையும் அழைச்சுக் கொண்டு போனேன். அப்போ துரையவர்களும் முசே பொசேத்தும் திலார்ஷும் மூணுபேரும் துரையவர்கள் யெழுதுகுற கம்மேத்திலே பேசிக்கொண்டிருக்கிறார்கள் யிதிலே மதனந்தபண்டிதன் கையில் சானவாசுக்கான் துரையவர்களுக்கு யெழுதியனுப்பின

காகிதத்தைக் கொடுத்துப் படிக்கச் சொல்லச் சொன்னார்கள்
அதிலே யெழுதியிருந்தது மூசே பொசேத்தும் திலார்ஷூம்
பெரிய மனுஷருடைய சபையிலே பேசுகிறதுக்கும் வருகிறதுக்
கும் லாயக்கானவர்கள் ஆனால் நீர் சொல்லியனுப்பின காரியங்
கள் வொருக்காலும் நடக்கமாட்டாது ஆனபடியினாலே மூசே
பொசேத்தையும் திலார்ஷையும் அனுப்பிவிட்டோம் அவர்கள்
வந்து யிவ்விடத்திலே நடந்த காரியங்களெல்லாம் சொல்லச்சே
தெரியவருமென்றும் தூரத்து ஆலோசனை நீங்கள் பண்ணாமல்
நடப்பிக்கிறது யுக்தத்தமல்லவென்று யெழுதியிருந்தது.
யிதைப் படிச்ச மூசே திலார்ஷுடனே பாரிசிலே மதனந்தபண்டி
தன் சொல்ல மூசே திலார்ஷ் துரையுடனே சொன்னதுக்கு
துரையவர்கள் பதிலுத்தரம் எழுதச்சொன்னார்.

அது யென்னவென்றால் மூசே பொசேத்து முதலானபேர்
அவ்விடத்தில் நடந்த சமாசாரங்களெல்லாம் பபறவாருப்ச்சொன்ன
தினாலேயும் தங்கள் காகிதம் மத்தலப்பைப் பார்த்துக்கொண்டு
சகலமும் தெரியவந்தது. அசரத்து நவாபு நாசர்சங்கு அவர்
களுக்கு யெங்கள்பேரிலே தெய்வுயிருந்தால் யிப்படி நடக்கத்தக்
கதில்லை யென்றும் ஆனால் அவருக்கு தபவு வரந்தனிலும் காத்
துக்கொண்டிருந்தோமென்றும் யிதிலே யாதொரு வேளை சமா
தானக்ஷிப்பில்லாத மட்டுக்கும் சண்டையல்லோ நிஷ்கருஷை
யாச்சுது. ஆனபடியினாலே யாதொரு காரியங்கள் சம்பவிக்கிறது
மனம் பொறுத்துக்கொண்டு சிநேகித தர்மம் நடத்திவரவேண்டிய
தென்றும் யினிமேல் சம்பவிக்கப்போற காரியங்களுக்கு யெங்கள்
பேரில் தக்கு சிறேபண்ணக்கவையில்லை. செய்பார்செயம் ஒருத்தர்
பங்கிலேயென்று சறுவாத்துமனுக யென்னத் தேவையில்லை
சுவாமியினுடைய சித்தத்தின்படியே நடக்கப்போகுதென்று மனதிலே.
கெட்டியாய் எண்ணவேண்டியது சரி. நாசர்சங்கு அவர்களுக்கும்
காங்கலெழுதின காகிதம் மத்தலப்பெல்லாம் வபனமாய்ச் சொல்ல
வேண்டியதென்று மூசே திலார்சு பாரிசிபேச்சிலே தானே மதனந்த
பண்டிதனுடனே சொன்னான். அந்தப்படிக்கி சான்வாசுக்காரனுக்கு
காகிதமெழுதி மோகரு பண்ணி வக்கீல் சுப்பையன் சேவு
கன்கையில் கொடுத்து அவர்கள் அறக்காருக்கள் வந்தார்
களே அவர்கள் கையில் குடுத்துவந்த பெரிய அறக்காருக்க
ளுக்கு பத்து ரூபாயும் பேருக்கொரு அறக்காரர்களுக்கு சில்லரை
அறக்காருக்களுக்கு ஒவ்வொரு ரூபா விழுக்காடு பத்து பேருக்கு

பத்து ரூபாயும் குடுத்தனுப்பச்சொன்னார் அந்தப்படிக்கு குடுத்துப் போகச் சொன்னேன். அப்பால் துரையவர்களுடனே முசேபிரசேத்தும் முசேதிலார்ஷு சென்னப்பட்டணம் நாங்கள் ஞாயிற்றுக்கிழமையிங்கேயிருந்து புறப்பட்டுப் போய் மூனுமணிக்கு வழுதாவூர் கோட்டையிருக்கிற சாவிபுகான் தோட்டம் விடும் மருதிபண்டையிலே நாசறசங்கு யிறங்கியிருக்கிறான் ஆத்தங்கரையோரத்திலே கூடாரம் அதிலே குலகாசறாங்கு அவர் சமுசாரத்துடனே யிறங்கியிருக்கிறான் அதுக்கு தூரபாக முண்டு அங்கே யிதாயித்து மொகிதின்கான் கூடாரத்தில் காவலிலே யிருக்கிறான் அதுக்கு அடுத்தாப்போலே சான்வாசகான் கூடாரம் ! அதுக்கடுத்தாப்போலே நம்முடைய கூடாரம் போன நாள் ராத்திரி சான்வாசகான் பேட்டி ஆனதும் மறுநாள் ரெண்டு சாமத்துக்கு நாசறசங்கு பேட்டியானது மாத்திரம்தான் அப்பால் நாசறசங்கு பேட்டியில்லை நாலஞ்சு நாளும் சான்வாசகான் தன்னண்டையிலே பேசுகிறதும் அவன்போய் நாசறசங்கு அண்டையிலே போய்ப்பேசி வாறதே அல்லாமல் நாங்கள் அதின் பிற்பாடு பேசினதில்லை. நாங்களவர்களை கேட்டது முசபர்சங்குவை காவல் விட்டுவிடுகிறது அவர் சீமை அவருக்கு கொடுக்கிறது ஆற்காடு சந்தா சாயபுக்கு குடுக்கிறது யெங்கள் பீரங்கியை அன்றைய தினம் விட்டுவிட்டு வந்தோமே அந்தப்பெரிய பீரங்கிரெண்டும் குடுத்து விடுகிறதுயென்று பேசினதுக்கு அவர்கள் முசபர்சங்கு சீமை அவர் குமாரனுக்கு புகலி பண்ணுகிறோமே அல்லாமல் முசபர்சங்கை விடத்தக்கதில்லை யென்று சொன்னார்கள் யென்றும் அப்பால் சந்தாசாயபுக்கு ஆற்காடு சுபா கொடுக்கத்தக்கதில்லை யென்று சொன்னார்கள் யென்றும் அவருக்கு எவ்வளவாகிலும் சாகிர் கொடுக்கிறோம் அதை வாங்கிக் கொண்டு யினிமேலிப்படிப் படிப்பட்ட சில் விஷமங்கள்—பண்ணுகிறதில்லையென்று அதுக்கேத்தப் பிணைச்சொன்னால் அந்த சாகீரானாலும் குடுக்கிறது. யில்லாவிட்டால் அவனை ஒப்பிவிபாமல் நாங்கள் புதுச்சேரியை விட்டு போகத் தக்கதில்லையென்று சொன்னார்கள். யென்றும் பீரங்கிகள் கொடுக்கிறதில்லை யென்று சொன்னார்களென்றும் முசபர்சங்கு குஞ்சுகுழந்தைகள் கூட விடாவிட்டால் உங்களுக்கும் யெங்களுக்கும் சண்டையே அல்லாமல் சமாதானமில்லை. யென்று சாபு உத்திரம் சொன்னார்கள் யிது கடசி உத்திரம் அப்பிறம் நாங்கள் அனுப்பிவிச்சுக்கொண்டு வந்தோம் கேத்து மந்தியானம்

அந்த சேதி உங்களுக்கு யெழுதி அனுப்பிவிச்சோம் நீங்கள் ருத்திரி வந்து விடச்சொல்லி யெழுதினீர்கள் யின்று காலத்தாலேயும் யெழுதினீர்கள் அப்பால் நாங்கள் வரச்சே சான்ஸவாசகானும் அவருடைய பேஷ்காறு ருமதாச பண்டிதனும் ரெண்டு பேர்களும். நமக்கு அந்தரங்கள் அவர்கள் சொன்னது. நீங்கள் யிந்த பிருவின் பேரிலே தானே போயி உங்கள் பவுன்சை ரெண்டு மூணு நாழிகை வழி வெளிப்படுத்தி ஒரு நாள் ருத்திரி அரோபிலே யிருக்கிற பாளையத்தின் பேரிலே வந்து விழுந்து சண்டை பண்ணிப் போட்டுப்போனால் அதின் பேரிலே நான் உங்கள் மனதின் படிக்கி ஆற்காடு சந்தாசாயபுக்கு குடிக்கப் பண்ணி முசபர்பங்கு சிமையும் அவருக்கு பகலி ஆகதக்கதாக பண்ணிவிக்கிறோம் முசபர்சங்கை விடுகிற பேச்சு மாத்திரம் யென்னாலே யில்லை யென்று சொன்னான் யென்று அந்தரங்கம் சொல்லி அப்பால் வேடிக்கை பேச்சுகள் பதினாயிரம் போனதும் பேசினதும் அவனவன் யிருக்கிறதும் யிங்கிரேசுக் காரர்கள் மூந்தாம் நாள் வரிசை வைச்சு பழக்கி காண்பிச்சதும் அதன் பேரிலே மூணு நாலு பேர் அவர்கள் மனுஷர்களும் லசுக்கர் மனுஷர்களும் செத்தவர்களும் காயப்பட்டவர்களுமான சேதியும் அந்த வேடிக்கை சானவங்களை பாத்ததே அல்லாமல் நாசறு சங்கு வந்து பாத்து வந்ததில்லை யென்று யிது முதலான சேதிகள் சொல்லி அப்பால் பனிரெண்டு பாஷைக்காற ஆசி அப்துல்லா என்கிற துற்க்கியே கொண்டுபோயி காவல் வைத்ததும் அவனை விடச்சொல்லி தாங்கள் கேட்டதின் பேரிலே யித்துவக்கோறு (Unimportant) மனுஷனானபடியினால் உங்கள் நிமித்தியம் அவனை காவல் விட்டு கட்டத்தின் பேரிலே கொண்டுபோயி விட்டுவிடச் சொன்னோமென்று சொல்லி நாலுபேர் அறக்காருக்களைக் கட்டிக்கொண்டு அவன் கட்டத்துமேல் போகத் தக்கதாக போனோமென்கிற கபுறு சொல்லி கடசியிலே வீட்டுக்குப் போக அனுப்பிவிச்சுக்கொண்டு மூசே பொசேத்து திலார்ஷாம் டந்தவர்சன் மூசே திலார்க மாத்திரம் மறுபடி துரை அவர்களை கையைக் காண்பிச்சு உள்ளே அழைத்துக்கொண்டுபோயி யென்னமோ சொன்னான். அந்தப் பேச்சைக்கேட்டுக்கொண்டு துரை வெளிச்சாலையே வந்தார் திலார்ஷா வீட்டே போய்விட்டான். அப்பால் நானும் மதனந்த பண்டிதனும் சேகுனியாப்பிள்ளை மூணுபேரும் யிருந்தோம் அங்கே துரையவர்வந்து யெல்லா

அப்பாலே அழைத்து யிந்த ஊரிலேயிருக்கிற பிறமணன் ஆரோ ஒருத்தன் யிந்த ஊரிலே நடக்கிற சமாசாரங்களெல்லாம் நாசரு சங்குக்கு யெல்லாம் யெழுதி அனுப்புகிறார்களென்று சொன்னார் அதுக்கு அப்படி ஒருத்தரும் சொல்லத்தக்கதில்லை யிங்கே யிருந்து யெழுதத்தக்கவருமில்லை. ஆறுபட்டணத்துக்குள்ளே சந்தாசாயபும் அவர்கள் காரியக்காறர்கள் மூதத த்திகள்மார் மூலம் அமுல் பண்ணாவர்கள்கூட வெகுபேர்கள் பிறாமணாள் திலுக்கர்கள் யென்னோடும் வந்து யிருக்கிறார்கள். முசேபர்சங்கு தாலுக்கு. மனுஷர்களும் அப்படித்தான் வந்திருக்கிறவர்கள் யிவர்கள் மனுஷர்கள் யெவனோமும நாசராசங்கு வெச்சந்துக்கும் யிவ்விடத்துக்கும் போக்குவரத்தாயிருக்கிறார்கள். ஆயிரக்கணக் கிலே யிருக்கிறது ஆனபடியினாலே அந்தை ஆராலே கண்டுபிடிக் கக்கூடும் அதுவே. அல்லாமல் மேற்படி யிந்தப்பட்டணத்திலே குடியிருக்கிறவன் உங்கள் தற்பரிலே வரப்போகயிருக்கிறபேர் களும் உம்முடைய கிறேயசு கோறின பேர்களை அல்லாமல் உமக்கு அதிகம் நினைக்க தாங்கள் கெட்டுப்போகத்தக்கவ பேர்கள் ஒருத் தருமில்லை. பொய்யும் மெய்யும் நினைத்தருமென்றும் யினிமேல் விசதப்படுமென்று சொன்னேன்.

சான்வாசுகான் அவன்வாயினாலே முசேதிலார்சவுடனே சொன்னனென்று சொன்னார் அவர் தன் மாயிபத்திலே சால் வாபு நடக்கவேணுமென்று அதுக்கு யேதாகிலும் பிடிக்கச் சொல்லு கிறதே அல்லாமல் மெய்பாய்ச் சாவகவாசுகான் சொல்லிறான் இது இனிமேல் விசாரித்தால் தெரியுமென்று சொன்னேன் அதுக்கு ஒரு உத்திரமும் சொல்லாமல் அப்பால போய் அங்கே செருனியாப் பிள்ளையை அழைச்சு யிவ்விடத்திலே யாதொரு பிறம்மணன் கபுறு யெழுதி கொண்டும் அங்கே போறுகிறும் பேசிக் கொண்ட பேதாகிலும் யிங்கேயாகிலும் கேழ்விபட்டதுண்டா யென்று கேட்டார். அங்கே கேட்டதில்லை யிங்கே கேட்டது மில்லை யிது என் மனதுக்கேற்க பொய்யாய்க்காணுதே அல்லா மல் மெய்யாக காணயில்லையென்று பிறஞ்சு வார்த்தையிலே சொன்னேன். அப்பால் லசுக்கர் சேதியும் குதிரைகள் ஆனைகள் பவுஞ்சு யெறக்காசிற சட்டமும் கேட்டார். கேட்டதுக்கு அறுப தினாயிரம் 60 000, யெழுபதினாயிரம் 70.000, குதிரையுண்டு ஆயிரம் ஆனைகளுண்டு காலாள் லட்சம் உண்டு யெருதுகள் பசுக்கள் யெருமை முதலானதுகள் பத்துலட்சமுண்டு யிப்படி

அவரவர் சகல சம்பிறமும் பிள்ளை பேறு முதலானதுகளெல்லாம் தண்டுலே நடக்கிறதே அல்லாமல் வேறேயில்லை யேன்றிதுமுத லானதும் வில்லியநல்லூருக்கு அப்பிறம் மங்கலம்மென்றுயிருக் குது அது முதல் திருவக்கரைமட்டுக்கும் அகாடியும் பிச்சாடியு மாகயிருக்குதென்றும் அவரவர் மழைக்காலம் சமீபிச்சது போக வேணுமென்று துவறைப்பண்ணுகிறதும் அவர்களுக்குப் பதினஞ்சுநாள் மட்டுக்கும் கெடுவுகுடுத்து யிதிலே சமாதான மாய்ப்போம் போமென்று தவணை சொல்லிக்கொண்டு யிருக்கிற தாக கேழ்விப்பட்டேன் யென்று யிதுமுதலான சேதிகள் சொல் லிக்கொண்டிருக்கச்சே மூசே தொத்தேல் அவர்களை அழைக்க ஆள்போனான் பென்னைப்பார்த்து சந்தாசாயபுடைய குத்தபுத்தி நல்லிக்கான் வந்தானே அவனை அழைச்சுவரச்சொல்லுமென்று சொன்னார் சந்தாசாயபு யென்னுடனே சொல்லி மனுஷர்களை அனுப்பிவிச்சது தானும் குத்தபுத்தி நல்லிகானும் சந்தாசாயபும் கூடவாறமென்று சொல்லி அனுப்பினரென்று சொன்னேன். ஆனால் வரச்சொல்லு யென்று சொன்னார் அந்தப்படிக்கிச்சொல்லி அனுப்பிவிச்சேன்.

**1750 ௵ அப்றில் ௴ 26 ௳ பிறமோதூத ௵ சித் திரை ௴ 17 ௳ ஆதிவாரம்.**

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் கோவிலுக்குப்போய் வந்தவுடனே பென்னை அழைச்சு நம்முடவர்கள் வந்துவிட்ட பிற்பாடு யேதாகிலும் சேதிகள் நடந்தது தெரியவில்லை யென்று சொன்னார். மெயிதானவர்கள் மனுஷர்கள் அறக்காறர்கள் வாற வர்கள் நம்முடைய மனுஷர்களைப் பிடிச்சு வாறார்கள் யென்று புதுச்சேரி மனுஷராகிலும் வேத்து மனுஷராகிலும் ஆரையா கிலும் கண்டால் அறக்காறர்கள் தங்கள் வகுப்பு அறக்காறுக் களைப் பிடிச்சுப்போறார்களென்கிற வகுத்தெரிச்சலின் பேரிலே கண்டவர்களைப் பிடிச்சு ஒரு மூலையிலே போட்டு வைக்கிறார்கள் அல்லவென்று போனாலும் தப்புந்தானும் பொய்யைச் சொல்லுகிறார் களென்று சொன்னேன். ஆனாலும் பாசார் கபுறு யென்ன சொல் லிக்கொள்ளுகிறார்கள் யென்று கேட்டார்.

நம்முடவர்கள் வந்தபோது நாசறுசங்கு அம்பகமில்லாமல் வந்தார்களை மறுபடி அழைக்க மனுஷா வரப்போகிறார்களென்றும் நேத்தய தினம் ஊரிலேயிருந்து நாசறுசங்குக்கு வெகுமானமும்

காகிதமும் வந்தாப்போலேயும் அந்த வெகுமானம் வாங்கிக் கொள்ளச்சே சேத்து மத்தியானம் ரெண்டு மணிக்கு வாங்கிக் கொண்டதாயும் வெகுசம்பிரமமாக நடப்பிச்சாரென்றும் அப்பால் காகிதம் பார்த்த பிற்பாடு அவ்விடத்திலே வேறே சில காரியங்களிருக்குது அந்த காரியங்களைத் தொட்டு ஆசாரக்குப் போகவேணுமென்று யெந்தக்காரியத்துக்குப் போகவேணுமோ அந்தக்காரியம் பத்தே ஆச்சுது முசபர்சங்கு கையிலே அகப் பட்டாப்போலே ஆச்சுது ஆற்காடு சுபாவுக்கு பதினாயிரம் குதிரை சவார்களையும் சானவாசுகளையும் வைத்துப்போட்டுப் போகிறோமென்று வெள்ளிக்கிழமை மத்தியானம் கொதுப்பா தொழுது சாயங்காலம் பிறயாணம் போறதாப் நிச்சயம் பண்ணினாரென்று கபுறு பிறக்குதென்று சொன்னேன் இது மெய்யா வென்று கேட்டார். மெய்யென்று வந்து சொல்லுகிறதை கேழ்க்கிறதே அல்லாமல் அங்கேயிருந்து யெழுதிவந்ததாவேறு சொன்னேன். சந்தாசாயபு அவர்களுக்கும் யேதாகிலுஞ்சேதி வந்ததாவென்று கேட்டார். அவர்கள குத்த பத்திநல்லிகான் நாலாம் நாள் ருத்திரி நாசறுசங்கு சக்கரிலிருந்து வந்தவுடனே உங்களுக்கு சொன்னது மூணுநாள் நின்னொரு கபுறும் அனுப்ப வேண்டாம் நாங்களும் அனுப்பத்தேவையில்லை.

நாலாம்நாள் சமாச்சாரம் கிருகையாய்த்தாமே நாங்கள் யெழுதி அனுப்பிவிக்கிறோம் அதின் பேரில் உத்திரப்பிரதி உத்திரம் நடக்கிறதே அல்லாமல் அதுக்கு முன்பாக நீங்கள் மனுஷர்களை அனுப்பவேண்டாம் சவுக்கிகளிலே வெகு கட்டா யிருக்கும் யென்று சொன்னபடியினாலே யிந்த யட்டுக்கும் வரயில்லை. ஒருவேளை யின்று சாயங்கலாம் வரவேணும் அல்ல வென்றால் நாளைபதினம் வரவேணும் யென்று சொல்லுகிறார்க ளென்று சொன்னேன். ஆனால் முந்தாளுள் நம்முடைய பவுன்சு பெருமாள்நாய்க்கன் சாவடியிலேயிருந்தது. ஒழுகரை போட்டத் திலே சேத்தயதினம் போயிறங்கின சேதி. கேட்டார்களென்று அதின்பேரிலே பயந்து நாசறுசங்கு பயணம் போகத்தக்கதாக யெத்தனம் பண்ணினார். ஒரு பதனு வேணுமே அதுக்கு ஆசூரிலிருந்து காகிதம் வந்து தெண்பிச்சுப் பயணம் போறோமென்று சொன்னார் யிப்படிதானென்று சொன்ன பிற்பாடு யிந்த ஊரிலே ஒரு பிறமணனிருந்து யிங்கே நடக்கிற சமாசாரமெல்லாம் மாபூசு கானுக்கும் மமுதல்லிகானுக்கும் யெழுதியனுப்புகிறான் யென்றும்

சாவைாசக்கான் மூசே திலார்சுடனே சொன்னான் அந்தப் பிராமணனைப் பிடிக்கவேணுமென்று சொன்னார் யிங்கிரேசு கலாபத்தில் வெளி மனுஷர் ஒருத்தரில்லை யிப்போ வூரெல்லாம் வெளி மனுஷாளாய் ரொம்பியிருக்கிறார்கள். அதெப்படியென்றால் சந்தாசாயபைச் சேர்ந்த பிராமணாள் உத்தியோகஸ்தரிலே நூறு பேருக்குண்டு அவர்கள் சமேதாராயிக்கிறபேர்களிலே ஒவ்வொருத்தரிடத்தில் ரெண்டுபேர் பிராமணாளானாலும் நூறு பேர்களுக்குண்டு முசபர்சங்கு தாலுக்கிலே அவ்வளவு வுண்டு யிதல்லாமல் போக்குவரத்தார் நாசருசங்கு லசுக்கருக்கும் யிதுக்கும் திருநாளுக்கு நடக்கிறப்போலே பிறைசை நடக்குது. ஆரையென்னமாய்ச் சோதிக்கிறதுயேதாய் பார்க்கிறது யிதல்லாமல் துலுக்கர்களும் வடுகர்களுமாக முப்பதினாயிரம் பேருக்குண்டு அப்படியிருக்கறுசேதெப்படி கண்டுபிடிக்கிறது. யிதல்லாமல் முசேதிலார்சு சால்சவாபு தன் மாரிபத்திலே நடக்கவேணுமென்று யிந்த செட்டம் போட்டதாய் தோணுதே அல்லாமல் வேறே தோத்தயில்லை ஆனாலிதுக்கொரு திருஷ்டாந்தரம் சொல்லுகிறேன் கோபமில்லாமல் கேழ்கிறதானால் சொல்லுகிறேனென்று சொன்னேன் சொல்லென்று சொன்னார். யிதிலே நடக்கிறதும் நடந்ததும் உண்மையாய் யெழுதினது மெய்யானால் அவன் நம்முடைய பவுன்சுக்கும் நமக்கும் பயப்படக்கவையில்லையே ஆனபடியினாலே அவரவர் தங்கள் காரியத்துக்கு ஆக சொல்லுகிறதே அல்லாமல் உங்களிடத்தில் நடக்கிறத யெழுதுகிறதுக்கு நானாகிலும் மதனாந்தபண்டிதனாகிலும் அல்லோ யெழுத வேணுமானபடியினாலே அது பொய்யாய்க்காணுது. நாங்களா உங்களுடைய கீர்த்தியைத் தேடும் உம்முடைய சவுரிய பராக்கிரமத்தைத் தொட்டும் நாங்களுங்களை சேர்ந்து யிருக்கிறபடியினாலே யெனக்கு சந்தாசாயபுவைப்போலே ஒத்தவன் நல்லப்பேச்சு சொல்லக்கிடைச்சது யென்னுடைய கீர்த்தி டெல்லிமட்டுக்கும் அளாவிச்சது. ஆனபடியினாலே யிதுக்கு வியத்திருத்தம் நினைக்கிறவன் யென் கெட்டுப்போகவேணும் கூலிக்காரனாக ஒருத்தனுக்கு யெச்சல் பிங்கான் யெடுத்து கைகட்டிக்கொள்ளவேணும் என்று நினைப்பான். உம்முடைய ஆகிருவை சேர்ந்தபடியினாலே ஆற்காட்டு நவா பெனக்குக் கைக்கட்டி நிற்கலாச்சுதே யிதுபோக வேணுமென்று யெப்படிப்பட்ட விவேகமில்லாதவனும் நினைப்பான் கெட்டியாயிருக்கட்டும் யென்றுபின்னையும் ரெண்டொரு

திருஷ்ட்டாந்திரம் கருக்காய்த் தோத்த வெகுக்குத் தோவின மட்டுக்கும் சொன்னேன். அப்பால் மெயிநான் நீ யறியாதது யில்லை. உனக்கு வராத சமாச்சாரம் ஒன்றுமில்லை. பிறமவன் கெட்டுப்போகப் போறான்யென்று மனம் பொறுத்து புத்தி அல்ல வென்று சொல்லியிருப்பார் யென்று தோத்துதென்று சொன்னார். என்தகப்பனானாலும் பொறுகிறகாரியம் பொறுப்பாரே அல்லாமல் பொறுதகாரியம் ஒருக்காலும் பொறுக்கிறது நாயல்லவென்று சொன்னதிவ்பேரிலே நல்லது போய் உட்காரென்று சொன்னார். யிப்பறம் சாவியிலேயிருந்து அப்பால் பாக்கு கிடங்கிலேவந்தேன். பனிரெண்டுமணி வேளைக்கி முசபர்சங்கு குமாரன் சாதுதின் கான் ஒரு பல்லக்குமேலே வைத்துக்கொண்டு ஆசிபாசல் யென் கிற வயித்தியனும் பின்னையொரு சமேதாரன் பேர்விளக்கன் தடியன் மொகுலனும்கூட மதாம் துப்ளேபிக்சு அழைச்சனுப்பி அவள் சோபுதாரன் மமுது உசேன் போய் அழைக்கவந்தார்கள் நானும் மதனுந்தபண்டிதனும் கூடப்போனோம் அப்பால் மதாம் துப்ளேயிக்ச பிள்ளையாண்டானை சத்துகோம் மடியில் வைத்தி ருந்து ஆசிபாசல் வகையறுக்களுடனே சோபுதாரா துபாசித் தனம் பண்ணச்சொல்லி குசலபிறசனங்கள் நடப்பிச்சாள் யிதிலே துரையவர்கள் வந்து என்னைப்பார்த்து ஆசிபாசலை அழைத்துக் கொண்டு யென்காம்பிறாவைவா — யென்று சொன்னார். அந்தப் படிக்கி ஆசிபாசலை மாத்திரம் அழைத்துக்கொண்டு மதனுந்த பண்டிதனையும் கூட்டிக்கொண்டு அவரிருக்கிற காம்பிறாவிலே போனவுடனே ஆசிபாசலை துரை கேட்டவயனம் மூசேபோ சேத்து—திலார்ஷ் வந்தவுடனே அங்கே யேதாகிலும் நடந்ததுக்கு உங்களுக்கேதாகிலும் சேதி வந்ததாயென்று கேட்டார். அதுக்கு பாசில் சொன்னது சேதி வந்தது நாசறுசங்கு அவர்கள் வியாழக் கிழமை நாளல்லோ அனுப்புவிச்சுக் கொண்டுவந்து அன்று ராத் திரி வந்த பிரான்சுக்காறர்கள் ரெண்டு ரெண்டு பேர்களையும் நானனுப்பிவிச்சதுமில்லை. அவர்கள் யென்கையில் அனுப்பி விச்சுக்கொண்டு போனதுமில்லை, மறுபடி வருவார்களென்று சொன்னாரென்றும் நாசறுசங்கு மனதிலே பிறான்சுக்காறர்கள் சிப்பாயிகள் பாதர்கள் ஒருத்தரை கைப்பிடிச்சால் யெந்தமட் டுக்கும் திறுவாகம் பண்ணவேணுமோ அந்தமட்டுக்கும் திறு வாகம் பண்ணத்தக்கவர்கள் யென்று கெட்டியாய் அவன் மனதிலே னட்டியிருக்குறது, அதைத் தொட்டு

அவனுக்கு பாதுசாவாயிருக்கப்பட்ட யெசமான்தானே
யிவனைச் சரிக்கட்டவேணுமென்று வெகு விதமாய் யெத்தனம்
பண்ணுறான். அவ்விடத்தில் மந்திரியாய் சகலமும் காரியமெல்
லாம் பார்க்கிற வைசிறுப் பாதுசாவினுடைய நாக்கு மகுமா
யிருக்கப்பட்ட மன்சூரல்லிகான் தன் தகப்பனை நாதறுசா டில்லி
யிலே வந்து மகம்மதுசாபாதுசாவைப் பிடிச்சபோது நீசாய்விழும்
கொடுத்து கொன்றுபோட்ட பழிதீத்துக் கொள்ளுகிறதுக்கு
நாசறு சங்கு முதலான நீசாம் வழுசத்தை யெல்லாம் நிறுவாசம்
பண்ணினாலல்லோ நான் யென்தகப்பன் கெற்பத்திலுற்பவிச்ச
துக்கு சபலம் யில்லாவிட்டால் பிறந்தும் பிறவாதத்துக்கு சமா
னம் யென்று சொல்லி பத்துபண்ணிக்கொண்டு யிருக்கிறபடியி
னாலே ஒரு நாளுசறுசங்கு காசுததின்கான் (Gyzi--ud·din-Khan)
முதலான நிசாம் வழுசத்தார் தப்பிச்சுக் கொள்ளக்கூடாதென்று
சொல்லி முசபர்சங்கு வழுசம் தகப்பன்கால்வழி வேறே ஆன
படியினாலே முசபர்சங்குக்கு தக்கன் (Deccan) சுபாவெல்லாம்
குடுத்தான் யிவன் அதிருஷ்டனானபடியினாலே வாறதும் ஒரு
விபத்து வாறதும் தட்டிப் போகுது. முன் நிசாமும் யிப்படியே
மோயாசீன சாதுல்லாகான் பாதூர் யென்கிறபேரும் குடுத்து
முசபர்சங்கு யென்கிற கித்தாபுமாய் பாத்து சமஸ்த்த விருது
கள் தனக்கு நடக்கிறதெல்லாம் குடுத்து ஆசூர் பறவானா
கூட அழைப்பிச்சானப்போ நாசறுசங்கு பக்கத்துப்போகப்
பயணமாயிருந்தார் அதுவும் யிவன் துர் அதிருஷ்டம்
அதுவும் தட்டிப்போச்சுது யிப்படி யெந்தவிதம் பார்த்தாலும்
துர்அதிருஷ்டனாக யிருக்கிறான். ஆனபடியினாலே யென்ன
பிறயத்தனம் பண்ணியும் கண்ணூடிமுடிப்புபோலே ஆய்ப்போ
குதுயென்று சொன்னார்.

அதுக்கு துரை அவர்கள் நாசறுசங்கு தாயார் ஒரு
வண்ணாத்தியாம் அவளை வைத்துக்கொண்ட விடத்தில் அவள்
வகுத்தில் பிறந்தவனும் மெய்தானோவென்று கேட்டார். அதுக்கு
ஆசீபாசல் (Haji Fazil) யென்கிறவன் சொன்னது ஆர்சொன்னார்
களோ அபத்தம் நான் இருபத்து நான்கு வருஷம நிசாமுடனே
கூடவும் நாசறுசங்குடனே கூடவும் யிருந்தேன் யெனக்குத்
தெரியாதது யில்லை. அவர்கள் வீட்டுக்கு வழித்தியங்கூட பண்ணி
னேன். நிசாமுக்கு முதல் பெண்சாதி வந்து ஒரு பட்டாணிடன்
பாதுசா மன்சுபா (Mansabadar) குடுத்து அமீராயிருந்து

அவன்பேர் சொன்னான் அது ஞாபகமில்லை. அவன் குமாரத்திக்குப் பிறந்தவள் யிந்த முசபாசங்கு தாயார் அப்பால் பின்னை யொரு கலியாணம் பண்ணினார் சபிதுலாகான் யென்ற ஒரு அமீர் அவன் பாராடம் (Berar) சபாவும் பண்ணினான். அவன் குமாரத்தியைக் கலியாணம் பண்ணினான். அந்த அம்மை வசத்தில் பிறந்தது காசுத்தின்கான்—நாசறுசங்கு யிவர்கள் ரெண்டு ஆண் பிள்ளைகளும் யிவர்களுடனே கூட ரெண்டு பெண் பிள்ளைகளும் பிறந்தார்கள். அதில் வொரு பெண்ணை பின்னை ஒரு அமீர் கலியாணம் பண்ணினான். அப்படி அசல்பெண் பெண்சாதி வகுத்தில் பிறந்த பிள்ளைகளென்று சொல்லி அப்படி சேர்ந்த வண்ணமாய் பிறந்த பிள்ளைகளும் சிறிதுபேரிருக்கிறார்கள். அவர்களுக்கு யிந்த தவுலத்தைப் பார்க்க குதிரத்தியிருக்குதாவென்று சொன்னான். அதுக்குத் துரை சொன்னது, நிசாம் குமாரத்தி முசபர்சங்கு தாயார் யிங்கே வந்திருக்கிற பேகம் சாயபுதானே யென் பெண்சாதியுடனே யிவன் வண்ணாத்தி மகனென்று பத்து தரம் கேட்டதுக்கும் சொன்னான் யென்று சொன்னதுக்கு யிந்த அம்மாள் நாசறுசங்கு பேரிலே யிருக்கிற கோபத்தினாலே சொன்னதேயல்லாமல் வண்ணாத்தி மகன் யென்கிறது பெரிய பொய் யிப்போ டில்லியில் பாதுசாவண்டையிலே தோடக்காணவுக் கெல்லாம் சறுதாறுப் யிருக்கிற காசுத்தின்கான் (Gaz uddin khan) சாக்ஷாத் நாசறுசங்கு தமையன் ஒரு தாயின் வசத்தில் பிறந்தவர்கள் யென்று சொல்லி அப்பால் முசபர்சங்கு பெரிய தகப்பன் பிள்ளைகள் சித்தப்பன் பிள்ளைகள் பாதுசாவினிடத்திலே மூவாயிரம் குதிரைக்கும் மனசு பாதற்றாய் யிருக்கிறம்பர் சிறிது. அய்பாயிரம் குதிரைக்கு மனசபாவாயிருக்கிறம்பர் சிறிது வசிருக்கு வெகு ஆப்த்தமாயிருக்கிறவர்கள். அந்த சாடையின் பேரிலேதான் தெரியசொல்லி பாதுசா சன்னது வாங்கி யனுப்பி விசார்கள். யிப்பவும் யிந்த ச்சதி போனபிறபாடு கடக்கிற சேதி அறியப் போறீர்கள் நாசறுசங்கு சூத்து கிழிஞ்சு போகப் போகுது. அந்தப் பயத்தைத் தொட்டுதான யிந்த மட்டுக்கும் முசபர்சங்கை சீவனுடனே வைத்திருக்கிறான். இல்லாவிட்டால் சீவனை வாங்கிப் போடுவான். அப்படிப்பட்ட கோத்ரன் யென்று யிது முதலான சமாசாரங்கள் நாலு நாழிகை பேசி இப்பவும் அவனுக்கு வடக்கத்து பயமேது அதிப்பிடிச்சு உங்கள சிநேகம் பண்ணிக் கொண்டு உங்கள் பெணை அழைத்துக்கொண்டு போய் யிங்கே

யிருக்கிற சத்துருக்களை செயிக்க வேணுமென்று நீங்கள் பராக்கிரமசாலிகளென்று பிடிச்ச காரியம் யென்னவாகட்டும் யென்ன போகட்டும் நிறுவாகம் பண்ணால் விடுகிறவர்களல்லவென்றும் சிப்பாயிகளென்றும் தோணியிருக்கிற படியினாலே யெப்படியும் உங்கள் சினேகம் பண்ணி உங்களால் ஆனபண்ணிக்கொண்டு யிங்கே வந்து ஒரு நாழிகையிலே யிருக்கிறவர்கள் யெல்லாம் யிவனைப் போலே சினேகமாத்திரம் யில்லை யென்றத் தக்கதாக யென்பிச்சுப் போடத்தக்க சமர்த்தனென்றும் பாதுசாவைக்கூட ஒருநகை பார்க்க வேணுமென்று யிப்போ நினைத்து யிருக்கிறான் என்றும் யிது முதலாகிய பேச்சுக்கள் விஸ்தாரமாய் ரெண்டு நாழிகை நேரம் சொல்லி ஆக்கிர் ரெங்கப்பிள்ளை உம்புடத்தில் திவானாயிருக்கிறவனை அழைப்பிச்சு கிறிது அந்தரங்கம் சொல்லி அவன் மாரிபத்திலே சமாசாரம் பண்ணிக்கொண்டு போகவேணும் யென்று— காரியம் தான் கோரியிருக்கிறதும் அனுகூலம் பண்ணிப் போகவேணுமென்று யிருக்கிறானென்றும் நீர் வெகு அதிர்ஷ்டசாலியானபடியினாலே யிப்படி அவனைப்போலே ஒத்த—பாதுஷாவாய் இருக்கப்பட்டவன் பயந்து பலவந்தமாய் சமாதானம் பண்ணிக்கொள்ள வேணுமென்கிற புத்தி வருமாவென்று சொல்லி யிப்பவும் நீங்கள் முசபர்சங்கை விட்டாலே அல்லாமல் நான் ஆற்காடு சுபாவிலே ஒருத்தரை யிருக்கவொட்டுகிறது யில்லை.

யிந்த ருச்சிபத்தை சுகப்பட வொட்டுகிறது யில்லை. யென்று யிப்படி கெட்டியாய் பேசினால் முசபர்சங்கை விட்டு விட்டு ஆற்காடும் உங்கள் வசம் பண்ணுவானென்று சொல்லி சந்தாசாயபு பொல்லாதவனென்றும் கிறிது பேச்சு சொன்னான் அதுக்கு துரையவர்கள் முசபர்சங்கு பேச்சு விடுதலையாகிறதுக்குப் பேசினமே அல்லாமல் பின்னை வேறே பேச்சு பேசினதில்லை யென்று சொல்லி முசபர்சங்குக்கு வந்தபோது சாபர்வானு பொய்யென்று நாசறுசங்கு நம்முடவர்கள் போயிருந்தவர்களுடனே சொன்னாரும். யென்று துரை சொன்னார். அதுக்கு முசபர்சங்கு கையிலே அகப்பட்டுக் கொண்டபடியினாலே இப்போ அவனெப்படி சொன்னாலும் பாதுசாபவானையில்லாதது சுலபமாய்ச் சொல்லுகிறதுக்குத் தாத்து யிருக்குதாமென்று வென்று சொல்லி முன்னாலே கோல்கொண்டை சுபேதாரன் சாமத்துக்கான் (Jamat Khan) யென்று யிருக்கிறான் அவனுக்கு பாதுசா முபார்சகான் (Mubariz-Khan) யென்று பேர் குடுத்து அவனை நீசாமை

வெட்டிப் போடச்சொல்லி தக்கன் (Deccan) ஆறு சுபாவுக்கும் பெசமானத்துவம் பண்ணி பாதுஷா பர்வானு அனுப்பி ருக்கிறபடியினாலே உண்டான சுபேதாரர் கில்லேதாரர்கள் சமஸ்தமான பேர்களையும் அவரவர் பவுன்சுடனே மொபார்சுகானண்டைக்குப் போய் அவர் சொற்படிக்கு நிசாமுடனே சண்டை பண்ணி அவனைப் பிடிக்கிறதாகிலும் அல்லவென்று வெட்டியாகிலும் போடச்சொல்லி யெழுதி அனுப்பினபோது அந்தப்படிக்கி சாமத்துகான் சமஸ்தான பேர்களையும் அவரவர் பவுன்சுடனே கூட்டிக்கொண்டு சண்டைக்குப்போனபோது நிசாம் அதிருஷ்டம் பெலத்திருந்த படியினாலே சாமத்துகான் (Jama-at Khan) முதலான பேர்களை—மருந்துகள் பரப்பி அங்கே முறிஞ்சு ஓடி வாறாப்போலே யிவர்கள் பவுன்சு அந்த ஆத்துக்கு யிப்பறம் நிற்கவும் அவர்கள் துர் அதிருஷ்டம் சாமத்துகான் முதலான பேர்கள் அந்த மருந்து கொதையின் மேலே வந்து சண்டை கொடுக்க நிற்கச்சே மருந்துகளை கொளுத்திவிட்டாப்போலே அதிலே யெல்லாரும் வெந்து சாம்பலாய் போயி நிசாம் செயங் கொண்டபோது நிசாமருக்குச் சொன்னது. பாதுசா பர்வானு யில்லாமல் வந்தபடியினாலே நாம் அவர்களை அத்தம் பண்ணினோம் பாதுசா பர்வானு வந்தால் நாம் அவர்களுடனே யெதுக்கிறதுக்கு குதரத்து யிருக்குதாவென்று சொல்லிக்கொண்டு வந்தார். அந்த சாடையாய் யிவருக்கும் சொல்லுகிறாரென்று சொல்ல அப்பால் துரையிருந்துக்கொண்டு நாசறுசங்கு நம்முடவர்கள் போன போது உடமைகள் ரொம்ப போட்டுக்கொண்டு யிருந்தானும். பூல் ஆரக்கையிலேயும் கழுத்திலேயும் தலைப்பாகையிலேயும் கட்டிக்கொண்டு கண்ணாடியை அழைப்பிச்சு பார்த்துக்கொண்டானும் அது மெத்த துலுக்கர் நிசாம் அப்படி செய்யுறது யில்லையே யென்று கேட்டார். அது மெய்தான் நிசாம் பெரிய மனுஷன் அதினாலே கொறுவும் கையுமாயிருந்தான். ஒரு வெள்ளை சாமாவும் பாகையுடனேயிருந்தான் யிவன் வபதானபடியினாலேயும் பெரிய தனம் பிடிபடயில்லை. நிசாம் சட்டம் சரியாய் முசபர் சங்கு நடந்து வருகிறான்யென்று தான் யிவனை தன் யிடத்து தவுலத்துக்கு போக்கியென்று அவர் நினைத்து நடப்பிச்சதில் தாக்ஷியில்லை யிவன் துர் அதிருஷ்டனானபடியினாலே கைக்கெட்டினது வாய்க்கெட்டாமல் போக்கடிச்சுக்கொண்டு யிந்த ஆள்

நரியென்று சொல்லி யிதல்லாமல் நாசறு சங்கு போட்டுக்கொள்ளு
கிற உடமை மூக்குத்தி தவிர மற்ற உடமையெல்லாம் சிங்காரிச்
சுக்கொள்ளுவாரென்றும் யிவன் அதிருஷ்டசாலி ஆனபடியினாலே
தகப்பன் வெகு நாள் கஷ்டப்பட்டு சம்பாதிக்க யிருக்கிற பிள்ளைக
ளிருக்க யிவனை ஆஸ்தியெல்லாம் அடைஞ்சது எப்படிப்பட்ட
நகைகளிருக்குது ஒவ்வொரு நகைகள் ஆமூலியமான ரத்தினங்கள்
யிழைச்சது ரெண்டு மூணு கோடி திரவியத்துக்கு உண்டு யிதல்
லாமல் ரொக்கம் பத்து பதினைந்து கோடி திர்வியத்துக்குண்டு
ஆனை மாத்திரம் ஆயிரம் ஆனைகளுண்டு குதிரைகள் அய்யாயிரம்
யிப்படி தவுலத்துக்கு அடுத்த பாக்கியங்களென்னவென்ன
உண்டோ அதுகளும் கிடைச்சுதக்கன் (Deccan) சுபா ஆறும்
வசமாச்சுதென்றும் யிது முதலான பேச்சுகள் பேசியிருக்கச்சே
அரை மணி அடிச்சு கைக்கு தண்ணி கொண்டு வந்தபடியினாலே
துரையவர்கள் ஆசிபாசில்கரனை பார்த்து நீங்கள் முசபர் சங்கு
குமாரனைக் கூட்டிக்கொண்டு கோட்டையைக் காண்பியுங்கள்
என்று சொல்லி உத்தாரம் கொடுத்து யென்னையும் போய்
கோட்டை வாசற்படிக்கு யிவர்கள் உள்ளே போய் பார்த்து வாற
துக்கும் கோட்டையெல்லாம் காண்பிக்கச்சொல்லி கோட்டையிலே
யிருக்கிற காவல் கப்பித்தானுடனே சொல்லச்சொல்லி போகச்
சொன்னார். அப்பால் மதாம் அண்டையிலே யிருந்த முசபர்சங்கு
குமாரனைக் கூட்டிக்கொண்டு போய் கோட்டையெல்லாம் காண்
பிச்சு அவர்களை வீட்டுக்குப் போகச்சொல்லி நானும் பாக்கு
கிடங்குக்கு வந்தேன்.

சென்னப்பட்டணக் கோட்டையிலே வெள்ளைக்காறர் கும்
பல் கூடுகிறார்கள் அது யென்னத்துக்காக வென்றால் சீரங்கப்பட்
டணம் சண்டை நடக்குதே அதுக்காகவோ பின்னை யெதுக்கோ தெரி
யாது. அது சேதியை விசாரித்து யெழுதவேணும் யித்தனாள்
கோட்டைக்குப் போனவிடத்திலே கேழ்விப்பட்ட சேதியாவது
யிங்கிரேசுக்காறர் படையெடுத்து மயிசூர் அப்துல் றயிமான்
பேரிலே போய் எதித்து பெலத்த சண்டை செய்கிறதாகவும்
வெள்ளைக்காறரில் அதிக காயமும் உயிர்ச்சேதமும் வந்த
தாகவும் அது சேதிகள் சென்னப்பட்டணத்துக்கு வந்து யிவ்
விடத்திலிருந்து வெகு ராணுவங்கள் அனுப்பியிருக்கிறதாகவும்
கேழ்வியாச்சுது.

**1750 ௵ அவ்றீல் ௴ 28 ௳ பிறமோதூத ௵ சித்திரை ௴ 19 ௳ செவ்வாய்கிழமை.**

இத்தனாள் சூரிய உதயமாக நாலு நாழிகையென்றச்சே துப்பாக்கிகள் சபுத்தம் கேட்டபடியினாலே நேத்தயதினம் சமயம்பார்த்து அரோலிலேபோயி விழச்சொல்லி சொல்லியிருந்த படியினாலே சமயம் வாச்சுதாங்காட்டும் போய் விழுந்தார்களோ யென்னமோவென்று யோசனைப் பண்ணிக்கொண்டிருக்கச்சே யேழெட்டுப் பத்துபேர் வந்தவர்கள் சமஸ்தமானபேரும் துப்பாக்கிகள் சபுத்தமும் இராத்திரி நாலுமணிதுவக்கி விஸ்தாரமாய்க் கேழ்க்கப்பட்டுதென்று சொன்னார்கள். யிதல்லாமல் வழுதாவூர் வாசற்படிகாறனுஞ்சொல்லி அனுப்பினானிப்படியிருக்கச்சே ஆறுமணி வேளைக்கு துரையவர்களழைக்கிறாரென்று சேவகன்வந்து அழைச்சான். நான் போய் துரையவர்களைக்கண்டவுடனே பிரங்கி சபுத்தமும் துப்பாக்கிகள் சபுத்தமும் கேழ்க்கப்பட்டுதென்று வழுதாவூர் வாசற்படியிலே யிருக்கிறவர்கள் வந்து கபுறு சொன்னார்கள். அதின்பேரிலே நான் மேலே யேறிப்பார்த்தேன் அது முதல்கொண்டு நான் முழிச்சுக்கொண்டிருக்கிறேன். சபுத்தம் கேழ்க்கப்படவில்லையென்று சொன்னார், அதுக்குநான் சொன்னது மூணரைமணி அடிச்சு காலடிக்கிற வேளையுண்டு நானெழுந்து அல்ப்பசமானத்துக்கு வெளியே வந்தேன் அப்போட்டியென்று சபுதம் கேட்டுது. யேதாகிலும் நம்முடையவர்கள்போய் நேத்து ராத்திரி திறமோமாத்திரம் போனார்களே இன்றைக்கு அவர்களேதாகிலும் போய் விழுந்தார்களாங்காட்டும் அதுதானிந்த சபதம்யென்று தெருவேவந்து விசாரித்தேன். தெருவிலேயிருந்த சேவகர்களும் அப்படியேசொன்னார்கள் அப்போ சம்பாவலு கோவிலிலே நாலுமணி யடிச்சது அது முதல்கொண்டு அஞ்சுமணிமட்டுக்கும் கேழ்க்கப்பட்டது. அப்பால் கேழ்க்கப்படவில்லை. சின்ன சின்னபிரங்கிகள் சபுத்தமும் கேழ்க்குறாப்போலேயிருந்தது யென்று சொன்னதுக்கு யெனக்கேற்க்க பொய்யாய்க்காணுது நாலுமூலையும் மப்பும் யிறக்கி மின்னலுமிடியுமிருக்குது அந்த சப்தம் கேட்டிதோ என்னமோ அப்படியேதாகிலும் ஆனால் ஆறே முக்கால் மணியாகுது இதுக்குள்ளேவாறார்களா யேதாகிலும் ஒரு கபுறு வாறதாயென்று சொல்லி நாளென்னமோவென்று இவனேரம் நித்திரையில்லாமலிருந்தேன் யிப்போ நித்திரை பண்ணவேணும் நீ போவென்று சொல்லி கட்டில்மேலே போய்

படுத்துக்கொண்டார் நானும் பாக்கு கிடங்கியே வந்தேன் நான் பாக்குகிடங்கியே வந்தவுடனே காத்துருத்தியி லம்முட பிறுஞ்சுக் காறர் பேரயி நாசறுசங்கு பாளையத்திலேவிழுந்து ஆயிரம்பேரு மட்டுக்கும் கொன்றுபோட்டு பதினஞ்சு குதிரையும் நாலு ஒட்டகையும் நாற்பது அஞ்சதும் சாலும் செம்பு பாளைகள் சட்டிகள் பெருசாயி கொள்ளையிட்டுக்கொண்டு வந்தார்களென்று கவுறு சொன்னன் அதைப்போய் துரையுடனே படுத்துக்கொண்டிருந்த வருடனே சொன்னேன். அவர் கேட்டுககொண்டிருக்கச்சே தன் டிலேயிருந்து முசியேலத்துசுயென்கிறவன் சொலுதாது கப்பித் தான்வந்து துரையுடனே சொன்னன் தானும் முசியேலாசும் முசியே புமோரேனும் முசியே விகுறேயென்ற ஒபிசியால் காரைக்காலிலிருந்து வந்தவனும் இறநூறு சொலுதாதுகளும் நாங்கள் போயி வில்லியநெல்லூர் ஆத்துக்கு அப்பிறம் நாசறு சங்கு பவுன்சு யிறங்கியிருந்ததே அதிலேபோய் விழுந்து மிதமில்லாமல் கொன்னுபோட்டு லசுக்கரிலே ரெண்டுநாழிகை வழிமட்டுக்கும் போயி திரும்பிவரச்சே குதிரைகள் மாடுகள் விஸ்தாரமாய் கட்டியிருந்தபடியினுலே சொலுதாது போயேத்தினுலே தானே பெருசாய் குத்தி தித்துப்போட்டார்கள் மனுஷர்களும் வெகுபேர் படுத்துக்கொண்டிருந்தபடியினுலே கிடையிலேதானே வெகுபேர் பயநேத்துனுலே குத்தப்பட்டுச் செத்தவர்களும் காயக் காறர்களும் ஆயிரம்பேர்களுக்குண்டு பென்று சொன்னதின் பேரிலே துரைபவர்களென்னைப்பார்த்து யிந்த சின்யோர் எப்போதும் சண்டையிலே செயங்கொண்டவனுனபடியினுலே யிப்போ யிவர் போனபடியினுலே இத்தனை பெரிய சம்பவம் வந்தது. போன சொலுதாதுகள் கொள்ளையிடாமல் சண்டையின் பேரிலேதானே நின்றூர்கள். பெகுதூரம்போய் நாசறு சங்கு கூடாரம் கூட புகுந்து ஒரு கை பார்ப்பார்கள் யென்று சொல்லி துரையவர்களுடைய சந்தோஷம் முசியே லத்துசு தலையைத் தடவினர்.

உம்முடை அதிருஷ்ட்டம் வந்து பிறுஞ்சு ருசாலுயிகத் தோர்சு யிருந்தாரே அவருடைய அதிருஷ்ட்டத்துக்கு சரி முசியே லத்துசு மெரெஷால் தெ. துரென் யென்றிருந்தாரே அவரும் சரி யென்று சொன்னேன். நகைச்சு உனக்கு அந்த சமாசாரமெல்லாம் நன்றுய்க் கேழ்விப்பட்டு யிருக்கிற படியினுலே தாக்கலாய் நன்றுய் சொன்னுயென்று சொன்னர். யிதிலே முசியே

கொற்னே வந்து ஆயிரம் ரூபா ஒரு பையிலே குடுத்தான் தம் முட்டகனக்குப் பிள்ளைபை அன்னூறு ரூபாய் கொண்டுவரச் சொல்லி ஆக ஆயிரத்தன்னூறு ரூபாய் சேத்து குத்திரிபோய் வந்த சொலுதாதுகளுக்கும் ஒபிசியால் மார்களுக்கும் பெகுமானம் குடுத்து உபசாரமாய்ச் சொல்லி போகச்சொன்னார். அப்பால் முசியே கொற்னேயுடனேயும் யிந்த சமாசாரம் சொன்னார் யிதன் பேரிலே முசியே செம்பாலும்-முசியே கிலியாரும் வந்தார்கள். அவர்களுடனேயும் யிந்த சமாசாரஞ்சொல்லி தாம் படுத்துக்கொள்ள வேணுமென்று போகச்சே சந்தாசாய்புக்கு இந்தச் சேதி சொல்லச்சொன்னார். வக்கீல் சுப்பய்யனுடனே சொல்லியனுப்பினதுக்கு அவர் துரைக்கு ருசோபண்டிதரை அனுப்பி மொபருகுபாதி சொல்லச் சொன்னார்.—ருசோ பண்டிதன்வந்து துரைக்கு மொபருகுபாதி. (Congratulation) சொன்ன பிற்பாடு அவருடனே முன்னேயிருந்த கூடாரம் ஆறது. யென்று கேட்டார்.—ராசாசந்திரசேனனுடைய கூடாரமென்றுசொன்னான்.

அதுக்கு துரையிருந்துகொண்டு அந்த கூடாரத்திலே ஒரு பெரியமனுஷர் யிருந்துகொண்டு ஓடிதி கொடுத்தானும் அவனார்— பீரங்கி யார் எழுந்திருந்து சுடுங்கோள் வெட்டுங்கோள் என்று சொன்னானும் அவன் நல்ல உடுபாவனை உடுத்திக்கொண்டு யிருந்தானென்று முசியே லத்துசு சொன்னான். ஒரு வேளை—ராசாசந்திரசேனன் யென்கிறவன் தானுங்காட்டும்என்று சொன்னார் அதுக்கு ருசோ பண்டிதன் சொன்னது சந்திரசேனன் செத்துப்போய் ஒன்றரை வருஷமாச்சுது அவர் குமாரன் ருமச்சந்திரறாவு யென்கிறவன் நாற்பது வயதுண்டு நல்ல அந்தகாறன்தான் யிதல்லாமல் அவன் பவுஞ்சு யெல்லாம் நல்ல பெலத்த நெஞ்சழுத்தமுடையவர்கள் பத்து யிருபது சண்டைகளிலே யிருந்து செயங்கொண்டவர்கள். சம்பளம் மாசம்மாசம் றொக்கமாய் கொடுத்துவிடுகுறது அவனைச் சேவிச்சு யிருக்கிற நாலாயிரம் அய்யாயிரம் குதிரை சுவார்களும் மனசுண்டானவர்கள் பெகுநாளாய் அவனிடத்தில் யிருக்கிறவர்கள் பெசமானும் மகாதைரிய சவுரிய பராக்கிரம முண்டானவனை படியிலே தான் பாத்துசா— (Pa isha) ராசாசந்திரசேனன் யென்று இவன் தகப்பனுக்குப் பேருக்கொடுத்து—அஞ்சு ஆயிரம் சுவாரிகளும்மனசுபாவும் கொடுத்து—யிதுக்கு கிருஷ்ணா நதிக்கு அப்பிறமிருக்கிற நாராயணப்பேட்டை குடுமட்டுக்காலி யென்கிற

பட்டணம் வர்த்தகர்கள் மிகுதியுண்டாயிருக்கிறதுமல்லாமல் லாலாபேட்டைக்குப் போற சரக்குகள் எல்லாம்—

வர்த்தகர்கள் பத்துலட்சம் அஞ்சுலட்சமுள்ளவர்கள் யிவர்கள் சரக்கு யெல்லாம் கன்னடி—பலிஞ்சவாா—லிங்கங்கட்டிதுகளுடைய்து யிவர்கள் தாலூக்கள் தான்வந்துகொண்டு சான தேசங்களுக்கும் அனுப்புறது யிந்த வட்டங்களிலே முப்பது நாற்பது லட்சம் ரூபாய் சின்மசாகிர் நடத்துறது நிசாமிவருக்கு மாத்திரம் தாசீம் கொடுக்கிறது யென்றும் யிவர் மாரிபத்தில் கவுல்கார் குடுத்தால் ஒருக்காலும் தப்புகிறதில்லை யென்றும் அவருக்குப் பிறபாடு ரெண்டு வருஷ காலமாய் அவர் குமாரனுக்கு நிசாம் குமாரன் நாசற்சங்குமப்படித்தான் நடத்துகிறானென்றும் அவன் அமேரல் நடத்துறது ருமச்சந்திரராவுதாமென்றும் யெங்கே பாளயம் யிறங்கினாலும் முகாமிலே அவன் பவுன்சும் அவனும் யிறங்குகிறதென்றும் இருக்குமுன் மராட்டியரண்டையிலே அறுபதினாயிரங்குதிரையுடனே சேவிச்சானென்றும் அப்போ சிவாஜி குமாரன் சாம்பாஜிக்கும் அபுரங்கசெயபு—(Aurangazib) பாச்சாவுக்கும் சண்டை வந்தபோது யிவன் மொகலாய பவுன்சை சுத்திக்கொண்டு ரஸ்து போகவொட்டாமல் அவனைச் சுத்திக்கொண்டபோது ரஸ்து விடச்சொல்லி சொன்னபோது ரஸ்துவிட்டால் மோசம் வரும் யென்று சொன்னதின்பேரிலே தன் பேச்சுக்கு வித்தியாசம் சொல்லலாமாவென்று யிவனை நாய்யென்று பேரிட்டு வாய்கொள்ளாத விசேஷஞ் சொன்னானென்று யினிமேல் மராட்டியரை சேவிக்கிறதில்லை யென்று அப்போபோய் அவுரங்கசீபு பாதுஷாவைக்கண்டு அப்போ அவர் கையில் பஞ்ச அசர்மன்சுபாவும் ராசாசந்திரசேனன் யென்கிறபேரும் சாகீரும் வாங்கிக்கொண்டு அன்று முதல் தக்கன் (Deccan) சுபாவாயிருக்கிறாகளோ அவர்கள் தயிருத்தாயிருக்கிறேன் யென்றும் அவன் கூடாரம் வெள்ளைப்பட்டையும் கறுப்புபட்டையுமாயிருக்கும் அவன் கூடாரத்துக்கு அடையாளம் அவன் விழுந்து போனானேயானால் ஒரு மராட்டியர் குதிரைகள் நிக்காது முன் சிறப்பி அண்டையிலே யிருந்து நாசற்சங்கு பிறப்பட்டு வரச்சே மராட்டியர் பவுன்சு பரிச்சேதம் வரமாட்டோமென்று சொன்னபோது அவர்களுக்கு வெகு தைரியம் சொல்லி யெல்லாரையும் கூட்டிவந்தவன் யிப்போ யிவன் செத்தது மெய்யேயானால் நாசருசங்கு வலது புசம் போனதாய் யென்னவேணுமோ அல்லாமல் சாமானியமாய்

யென்னைத் தேவையில்லையென்று சொன்னான். ஆனால் நன்றாய் விசாரித்து வரச்சொல்லி ஆள் அனுப்பச்சொல்லியும் இந்தச் சந்தோஷம் சந்தாசாயபு தென்று சொல்லி சலாம் சொல்லச் சொல்லியும் சொன்னார். அந்தப்படிக்கி ராசோபண்டிதன் கேட்டு அனுப்பிவிச்சுக்கொண்டு போனான். அப்பால் சந்தாசாயபு மனம் தன் நாசறசங்கு லசக்கருக்குப்போய் வந்தவன் வந்து சொன்ன கபுறு. சூரத்திலிருந்து முகிபே வெறியேர் உடைய காகிதம் கொண்டுகொண்டு காசிதுகள் செவ்வாய் நாசறுசங்கு லசுக்கர் வந்து சேர்ந்து கடப்பையாருடைய கூடாரத்தண்டையிலேயிருக்கிற காசிதுகளண்டையிலே வந்திருக்கிறார்கள் யிப்பால் வருகிறதுக்கு சவுக்கிகள் வெகு பத்திரமாய் சோதனையாய் யிருக்கிறபடியினாலேயும் மேற்கே பிறப்பட்டு வாறதுக்கும் மாட்டியர் குதிரைகள் யெங்கும் பரவியிருக்கிறபடியினாலே மோசம் வரப்போகுதென்று யிங்கே யிருக்கிறோம் யென்று கபுறு பண்ணச் சொன்னார்களென்றும் சொன்னதுக்கு துரையிருந்துகொண்டு அங்கேதானே யிருக்கச்சொல்லவும் நாங்கள் சமயம்பார்த்து அழைப்பிச்சுக்கொள்ளுகிறோம் யென்று சொல்லச்சொன்னார். அதுக்கு அவன் சொன்னது நானும் உபாயமாய் காகதக்கடக்கிக் கொண்டுவாறேன்யென்று சொன்னார். கொண்டுவந்தாலிருபது ரூபாய் கொடுக்கிறோமென்று சொல்லிச்சொன்னார் அப்பால் நான் பாக்கு கிடங்கியே வந்தேன்.

இத்தனாள் சாயங்காலம் ஆறுமணிவேளைக்கி சந்தாசாயபும் சந்தாசாயபு குமாரனும் குத்புத்தி நல்லிகானும் வந்து ருமதாசு பண்டிதன் யெழுதினதாய் ஒரு கடதாசி கொண்டுவந்து படிச்சுக் காண்பிச்சு சொன்னசேதி யென்னவென்றால் திருச்சிராப்பள்ளி யிசாராகுடுக்கிறோம் தஞ்சாவூர் ராச்சியமும் நீங்கள் கட்டிக் கொள்ளுகிறதானால் சோறுபமி பண்ணி கட்டிக்கொள்ளுங்கோள் யென்று பஞ்சஅசாரி மனசுபானும் ஆற்காட்டிலேகொஞ்ச சாகீரும் குடுக்கிறோம் இது சம்மதியானால் பேசச்சொல்லி நாசறுசங்கு அவர்கள் கட்டளையிட்டார். இது உங்களுக்கு யெது சம்மதி யென்று யெழுதினால் நான் வருகிறேன் இல்லாவிட்டால் நான் வந்து பிறயோசனம் யென்றால் ருமதாசுபண்டிதன் எழுதினான் [illegible]லேமேல் மகம்மது ருசாசாயபு யென்று ஒரு துலுக்கன் சந்தாசாயபு வக்கீல் வக்காலத்தாய் ருமதாசு பண்டிதன் அண்டையிலே யிருந்து சால்சவாபு நடத்துகிறவன் அவனெழுதினவன்

பந்துக்கட்டு எழுத்துக் காகிதத்திலே எழுதியிருந்தது. ஆற்காட்டு
சுபா-மருதல்லிகானுக்கு கொடுக்கிறதாக யோசனைபண்ணியிருக்
றார்கள் யிப்போ எழுதின திருச்சிறுப்பள்ளி தஞ்சாவூர்சாகீர் இது
மூணும் வாங்கிக்கொள்ளுகிறதுக்கு சம்மதியானால் வாங்கிக்கொள்
ளவும் அல்லவென்று ஆற்காடுவாங்கவேணுமென்ற நினைப்புயிருந்
தால்கெட்டியாய் சம்மதியாமலிருந்தால் பீ நின்னுப்போலேகொடுத்
துப்போட்டுப்போறான் அதுக்கு சந்தேகமில்லை. நாசறுசங்கை
அழைக்க ஆகுரிலிருந்து காகிதங்கள் வெகுசுறுக்கிலே வரச்சொல்லி
வந்திருக்கிறதினாலேயும் மறாட்டியராந்தராச்சியமெல்லாம் நிப்பாந்
தம் பண்ணிப்போட்டபடியினாலேயும் மழைக்காலம் வந்தபடியி
னாலேயும் பவுன்சிலே சாவுகள் மிச்சத்தினாலேடம் வைக்கல்
விறகு அகப்படாமல் குதிரை பெருதுகள் முதலான சீவன்
கள் ஆயிரக்கணக்காயி அதனாலுஞ் செத்துவாரபடியினாலே
அவரொரு நாழிகை யிருக்கத்தக்கதில்லை ஆரையாகிலும் ஒருத்
தரை நேமித்துப்போகப்போறான் அப்பால் உங்கள் பெலத்தினாலே
ஆர்காடு கூட திருச்சிறுப்பள்ளி வகையறா கட்டிக்கொள்ளலாம்
எதுக்கும் உங்களுக்கு தைரியமிருந்தால் உங்கள் மனதின்படியே
நடக்கு தைரியமில்லாவிட்டால் யிப்போ எழுதினவுடன்படிக்கைக்
குச் சம்மதிச்சு பெறுகினால் ராமதாசு பண்டிதன் வருகிறானென்
றும் தீத்துப்போடுகிறானென்றும் யெழுதச்சொன்னார் உங்கள்
காரியத்தில் ராமதாசபண்டிதர்வெகுப் பிறயாசைப்படுகிறார் யென்
றும் எழுதி அப்பால் ஒரு சின்ன துணுக்கையிலே யெழுதின
தென்னவென்றால் சேத்து ராத்திரி நடப்பிச்சபடிக்கு இன்ன
மொருதரம் நடப்பிச்சாலுங்கள் மனதின்படிக்கு காரியங்கைக்கு
வந்ததாய் யெண்ணிக்கொள்ளவும் என்று யெழுதியிருந்தது.
வந்தவன் வாய் விசேஷஞ்சொன்னதாய் சொன்னது ராத்திரி
அரேல்ராம் சந்திரசேனன் குமாரன் ராமச்சந்திரராவும் முராரி
ராயனுமல்லவோ யிருந்தார்கள். அவர்கள் பயந்து ஓடிவந்து தண்டு
வைபெல்லால் காபிறுபண்ணிப்போட்டார்கள் யென்றும் வெகு
பேரைச் சாகக்கொடுத்தார்களென்றும் யிதல்லாமல் அவர்கள்
அரேணிலே யிருந்தவர்களை யெச்சரிக்கைத்தப்பி யிருந்ததைத்
தொட்டு அல்லோ வந்ததுயென்று அவர்கள் ராமச்சந்திர
ராவையும் முராரிராயனையும் காவல்வைத்து அரேல் அவர்
களை வாங்கிப்போட்டு கந்தனூராளையும் கடப்பைப்பின்னையுமி நக்
கச் சொன்னதாகவும் யிவர்களையும் யிவர்கள் பவுன்சும்

பிச்சவாடியிலே போயிருக்கச் சொன்னதுமல்லாமல் காவல்கூட
வைத்தாய்ச் சொன்னர்கள் யிதல்லாமல் துரைபவர்கள் கேட்டு
யிதுக்கு உத்திரம் யென்ன யெழுதலாப் பிப்பாயென்னமாய்
நடத்தலாமென்று கேட்டார். அதுக்கு சந்தாசாயபு சொன்னது.

**1750 ௵ அவ்றில் ௴ 30 உ பிறமோதூத ௵ சித்
திரை ௴ 21 உ குருவாரம்.**

இத்தனெள் காலத்தாலே ஆரரை மணிக்கு அழைக்கனுப்பி
விச்ச துரைபவர்கள் சொன்னது சந்தாசாயபுக்குச் சேதி வர
யில்லையாவென்று கேட்டார். இன்னம் வரயில்லையென்று சொன்ன
துக்கு நாசருசங்குப் பயணமென்ன சொல்லுகிறார்களென்று
கேட்டார் அதுக்கு நான் சொன்னது இன்றைபதினம் ரெண்டு
சாமத்துக்கு பயணமாய் சாகிப்போருமென்று மூணு நாளாய்ச்
சொல்லுகிறார்கள் நேத்தபதினம் இருணுவும் சிறிது குதிரைகளும்
சாகிப்போச்சுது. யென்று சேதி வந்தது. நாசருசங்குப் பயண
மாயி யின்றைக்குப் போறுமென்று சொன்னர்கள் இன்றைபத்
தினம் வருகிற சேதியைப் பார்க்கவேணுமென்று சொன்னேன்.
அப்பால் லோகாபிறமமாய் பேசியிருந்து பாக்கு கிடங்கியே
வந்தேன் பகலுக்கு மேலாக நான் ஒரு மணிக்கு சாப்பிட உள்
கார்ந்தவுடனே துரைபவர்கள் சேவுகன் வந்து சந்தாசாயபு மகன்
றசாசாயபும் மீர்ஷம் வந்தார்கள் குத்தபுத்தி கல்லிகானும் வந்தான்.
துரைபவர்கள் சாப்பிட்டு எழுந்து உங்களை அழைக்கச்சொன்னர்
யென்று வந்து சொன்னன் சாப்பாட்டை நிறுத்திப்போட்டு போ
னேன். அவர்கள் துரைக்கிச் சொல்லி சொன்ன சேதி ராமதாச
பண்டிதனும் மகம்மதுறசாசாயபும் யெழுதி வந்த காகிதச்சேதியென்ன
வென்றால் மமுதல்லிகானுக்கு ஆற்காடு சுபாவாச்சுதென்றும் யிங்கி
ரேசுக்காறர்களுக்கு பூந்தமல்லியும் தேவனாம்பட்டணம் சீமை
யிலே பதினாயிரம் ரூபாயிக்கி சீமையும் யினாம் குடுத்து மமுதல்லி
கானுக்கு மத்தத்து பண்ணச்சொல்லி திட்டம் பண்ணி தீத்ததென்
றும் அவர்களும் கபுலானார்களென்றும். யெழுதி இருச்சிறுப்பள்
ளியும் தஞ்சாவூர் மனசுபா சாகேர்யிது வாங்கிக் கொள்ளுகிறதுக்கு
உமக்குச் சம்மதியானல் ராமதாச பண்டிதரும் நாமும் வருகிறோம்
சானவாசுகானுக்கு மாத்திரம் வரக்கூடாது யெதினலே யென்றால்
நாசருசங்கு சாமத்துக்குப் பயணம் சாகி அப்பால் அஞ்சு நாழி
கை வழி போயிறக்கிற படியினாலே யினிமேல் வரக்கூடாது

இதுக்கு உங்களுக்கு சம்மதியானால் எழுதி அனுப்பவும் யில்லா விட்டால் உங்களுக்குச் சம்மதியானபடி யென்றும் அப்பால் ஒரு துணுக்கையில் எழுதியிருந்தது. எழுதியனுப்பினால் அவர் சாகிர் வில்லியகெல்லூர் முதலானதுக்கு பேசி எழுதியனுப்பிவிக்குறோ மென்று யெழுதி யிருந்தது. அந்தக் காகிதச் சேதியாம்படியே கேட்ட பிற்பாடு உங்களுக்கென்னமாய்த்தோத்துதென்று கேட்டதுக்கு இப்படி நடந்தது இப்பவும் திருச்சிறுப்பள்ளியும் தஞ்சாவூரும் சாகிரும் லாங்கிக்கொண்டு சமாதானமானால் அப்பால் நாசறுசக்கு போனபிற்பாடு ஆற்காடு சுபாதாரனை முன் செய்தாப்போலே செய்துபோட்டு ஆற்காட்டைக் கட்டிக்கொண்டால் மறுபடி நாசறுசங்கு வந்தபோது பார்த்துக்கொள்ளலாம் யென்று சொன்னார்கள். அப்படி உங்கள் புத்திபிருந்தால் ஒருக்காலும் யென்னாலே சமாதானம் பண்ணிக்கொண்டு அப்பால் மறுபடி கலாபம் பண்ணுகிறது எனக்கு மரியாதையல்ல உங்களுக்கு யெப்படி சம்மதியோ அப்படி நடப்பிச்சுக்கொள்ள வேண்டியதென்று சொன்னார் அதிலே றசாசாயபு யெழுதிவந்த சேதியை உங்களுடனே சொன்னேன். அப்பாலுங்கள் யோசனைபடிக்கு நடக்குறதெயல்லாமல் யெங்கள் யோசனை யென்னத்தைக்கு வருந்தென்று சொன்னதுக்கு துரையவர்கள் சொன்னது. உங்களுக்குச் சம்மதியானாப்போலே யெழுதி அனுப்புயென்று சொல்ல நீங்கள் சொன்னபடிக்கு எழுதி அனுப்புறோமென்று சொல்ல தீர்மானம் துரையவர்கள் சொல்லி யெழுதச்சொன்னது நீங்க ளெழுதின காகிதம் பார்த்துக்கொண்டு கோவற்னதோர் சாயபுடனே யெச்சரிச்சத்துக்கு அவர் சொன்ன உத்தரம் ஆற்காடு வகையறு யெப்போதும் உள்ள படிக்கு கம்முடைய வசம் குடுக்கிறது பணத்துடனே சேர்ந்ததுக்கு யெப்படி கற்றுதாம் பண்ணிக் கொள்ளவேணுமோ அந்தப்படிக்கை உடன்படிக்கை குடுப்பிக்குறோம் இதுக்குச் சம்மதியில்லாமல் போனால் இச்சிறேசுக் காற நுடைய மத்தத்துதானிருக்கட்டும் மழுதல்லிகானுக்கு பின்னை ஒரு யெத்தனை பெரிய மத்தத்து தானிருக்கட்டும் நாசறுசங்கு தான் அனேகம் பவுன்சமைத்தது வைத்துப்போனால்தானென்ன அது ஒரு பிறயோசனமாயவர்கள் மனதுக்கு தோத்துகிறதே அல்லாமல் என் திருஷ்டிக்கி ஒரு மயக்கமாய் யெண்ணி நடக்கிற காரியத்திலே தெரியவருமென்று அப்பால் மழுதல்லிகான்

முதலானபேர்களுக்கு என்னசம்பவிக்குதோ அதுவுமந்தப்போ
றுர்கள் அப்பால் சீமை சுதப்பாட்டு பிருக்கத்தக்கது மில்லையென்று
மிதல்லாமல் நாங்கள் பிறன்சுக்காறர் சுபாபண்ணுகிற மமுதல்லி
கான் பேரிலே சண்டைபண்ணப்போறோமென்று சண்டை திக்கி
லேயிட்டால் அப்பால் இங்கிலீசுக்காறர் அரைநாழிகை ஒருத்தன்
இங்கிரேசுக்காற ரென்னப்பட்டவர்க ளொருத்தருமிருக்கப் போ
காது அது வெங்கள் வழக்கம். அந்து அத்துதப்பி நடக்க ஒருத்
தருலேயுங் கூடாது இப்போ உங்களுக்குச் சொன்னாப்போலேயும்
நாசறுசங்குக்கு பெசமன்தான் தானே வந்தாப்போலே ஆச்சுதே
இவருக்குச் சொன்னபடிக்கு நிறுவாகம் பண்ணிப்போட்டார்களே
இனிமேல் மமுதல்லிகானுக்கு நிறுவாகம் பண்ணப்போறது அப்
பாலுமவர்களை நக்கருக்கள் அவர்களைத் தொட்டு ஆகவேண்டிய
தென்னவென்று சாபு உத்திரமாய் சொவறணதோர் சாயபு ஆனால்
சொன்னார். ஆனால் வெங்களுக்கு சாகீர்களெழுதினபடிக்கி திருச்சி
றுப்பள்ளி தஞ்சாவூர் மனசுபாவுக்கு கற்னடகத்தில் சாகீரும்
எங்களுக்கு வாங்கிக் கொள்ளுகிறதுக்கு சம்மதியானால் நாங்கள்
அவர் கைக்குள்ளே யிருக்கிற படியினாலே அவரை தட்டி செய்கி
றது எங்களாலே நிறுவாகமில்லை. ஆனால் மமுதல்லிகானுக்குக்கு
மாத்திரம் திருச்சிறாப்பள்ளி விசாறவாய் தீத்துக்கொடுத்து அதை
வாங்காமல் படிக்கும் அந்தச்சோலிக்குப் போகாமலும் கொரு
தோர் சுபபுக்குத் தெரியப்படச் சொல்லி நடப்பிச்சுக் கொள்ளுகி
றோமென்றும் எழுதச்சொன்னார் நல்லதென்று மெழுதியனுப்பி
விக்கிறோம் மென்று அவர்களனுப்பிவிச்சுக்கொண்டு போன
வுடனே யென்னைப் பார்த்து யிங்கிரேசுக்காறருக்கு பூந்தமல்லி
வகையிறா கொடுக்கிறதேது முராரிராயனுக்கு சவுத்தாய் கொடுத்து
மமுதல்லிகானுக்கு மத்தத்து யிருக்கச் சொல்லுகிறதும் மமுதல்லி
கானுக்கும் சுபா கொடுத்து நாசறுசங்கு பயணம் பிறப்பட்டது.
உன் மனது கேற்க வெப்படியிருக்கிறது. வென்னமாய் தோத்துது.
வென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது மமுதல்லிகானுக்கு
சுபாவுக்கு சிரேப்பா கொடுத்ததும் போய் முறாரிறாயனுக்கு
சவுத்தாய் முகற்று பண்ணிக்கூட பிருக்கச் சொன்னதும்போய்
இங்கிரேசுக்காறர்களுக்கு பூந்தமல்லி கொடுத்ததும்போய் மத்தப்
படி வெனக்குத் தோணினது நான் சொல்லுகிறேன் நாசறுசங்கு
பயணம் போறது நிச்சயம் மருட்டியர் அபரங்காபாத்து முதல்
கிஷ்ணா நதி யிந்தமட்டுக்கும் நிப்பாத்தம் பண்ணுகிறதினாலே

அவை நாழிகை யிருந்தால் மோசம் வருமென்று வுரச்சொல்லி அடிக்கடி யெழுதிவருகிறதும் அதைத்தொட்டு யிவனில்லாமல் பயணம்போனது மெய் யிங்கிரேசுக்காறர் தேவனும்பட்டணத்துக்குச் சமீபமாயிருக்கிற தேவனாம்பட்டணம் சீமை திருவந்திபுரம் முதலானதுகள் கொடுப்பார்கள். அதுவும் மெய் மயிலாப்பூரில் புடுதீக்சு (Portuguese) பாதிரியை சந்தாசாயபு வைத்தான் நாங்களுங்களோடுதியென்று அவனை ஓட்டி யெங்கள் கொடி போட்டபடியினாலே அதை குடுத்து தீரவேணுமில்லாவிட்டால் யெங்களுக்கு அப்பிறதிஷ்டை பறங்கிக்காறர் கட்டிக்கொண்டு போனதை நாங்கள் பெகும்பலை சாக்குடுத்து கட்டிக்கொண்டால் அல்லது கொடுக்கப்போகாதோ யென்று—ஞாயத்துடனே பெரு சம்மதி சொல்லிக்கொடுப்பார்கள் ஆனபடியினாலே ஒருவேளை மயிலாப்பூர் குடுப்பார்களென்றும் தோத்துது. பூந்தமல்லியிவர்கள் சென்னபட்டணத்துக்கு சமீபம்மாயிருக்குது அது கொடுக்கவேணும் சும்மா உம்முட உத்திரவு யில்லாமல் சோராவாரியாய் அவர் பை முழுக்கடித்த சந்தாசாயபு புதுச்சேரியாருக்கு லட்சம் ரூபா லட்சத்தன்பதினாயிரம் ரூபா சாகிர் கொடுத்தாலும் உங்கள் ஆசிரா பிடிச்சு உங்களுத்ரவுப்படிக்கு திருச்சிராப்பள்ளி முதலான யிடங்களுக்கு குமக்கு அனுப்பிக்கொண்டு நீங்களெப்போ வருவீர்களென்று காத்துக்கொண்டு யிருந்து நீங்கள் கேட்டது அண்டையிலே வந்தவுடனே நாங்கள் ஆயிரத்தன்னூறு பேருடனே வந்து உங்களை முனு மாசம் காத்துக்கொண்டிருந்த உங்களூழியஞ் செய்த எங்களுக்கு இவ்வளவு தயவுபண்ணவேணுமென்று கேழ்ப்பார்கள் கேட்டாலும் கொடுக்கமாட்டார்கள் யென்றும் தோத்துது என் யென்றால் இவர்களைத் தொட்டு யிப்போ சவரியம் உண்டாயிருந்தாலும்முன்னுக்கு உண்டாயிருந்தாலும் கொடுப்பார்கள். அது யில்லாத்தைத்தொட்டு மிவர்களை மெத்த பறவாயாய் யவன் புத்திக்குப் பிடிபட்டு யிருதத்தைத் தொட்டும் கொடுக்கமாட்டான் யென்று சொல்லி மமுதல்லிகானுக்கு கொடுத்தால் ராச்சியம் சுகப்படட்டு யிருக்கமாட்டாது. என்கிறதினாலேயும் அவர்களை சேர்த்ததுக்கு யிந்தக் கலாபம் வந்ததைத் தொட்டு மிவர்கள் வெகு பணம் வரவேண்டி யிருக்கிறபடியினாலேயும் சுடாயிவர்களுக்கு உண்டான முறாரிராயனுக்கு சவுத்தாய்க் குடுத்து வைக்கிறதுக்கு இந்த சவுத்தாய்க்கு சாவுராசா யெசமான் யிப்போ அவரிடத்துக்கு ராசாவாய் வந்திருக்கிறாராம்.

ராசாவென்கிறவர் உத்தாரப்படிக்கி நடத்தவேணும் அதினாலே
யும் தன்னைப்போலே கொடுத்தவன் வந்து நிறுவாகம் பண்ணிப்
போட்டது தான் தனக்குத் தெரிஞ்சிருக்கிறதே. நான் போன
பிற்பாடு யிப்போ யிவன் நிறுவாகம்பண்ணிப் போடுவானென்று
தோத்தப்போகுது ஆனபடியினாலே யுதவும் பொய் யென்று
தோத்துது யென்று சொன்னேன். பிருமணனுக்கு யென்னத்
தோத்துது யென்று மதனாந்தபண்டிதரைக் கேட்டார் அதுக்கு
அவரும் எனக்கு அப்படித்தான் தோத்துதென்று சொன்னார்.
துரையும் எனக்கும் அப்படித்தான் தோத்துதென்று சொல்லி
பின்னையும் அனேக அடைமானம் சொன்னார். அப்பால் நான்
வரச்சே ஆற்காட்டிலே பத்து நாளிருந்தாகிலும் மூபர்சங்கு
தாயார் பெண்சாதி பிள்ளைகளைக் கூட்டி வருகிறதுக்கு உபாயம்
பண்ணி உமக்கு கொடுக்கவேண்டிய பணமாவது சீர்மையாவது
கொடுத்து உமக்கு ரசாவத்திப் பண்ணிப்போட்டு போவார்போலே
யிருக்குமேயல்லாமல் சும்மாப் போகத்தக்கதில்லை யென்று
கெட்டியாய் யெனக்கு தோத்துது அப்பால் அப்படி மூசபர்சங்கு
குஞ்சு குழந்தைகளைக் கூட்டிக்கொண்டு போகாமல்போனால்
வெள்ளைக்காறன் கையில் தன் உடப் பிறந்தானை ஒப்பிச்சுப்
போட்டு வந்தானென்று பாதுசாவினிடத்தில்கூட பதிலாமை
யெல்லாரும் பேசுவார்கள் இவன் வமுசத்துக்கெல்லாம் அபகீர்த்தி
கொண்டுவந்து வைச்சான் யென்கிறது சூரிய சந்திரனாதிகளுள்ள
ளவுமிருக்குமே ஆனபடியினாலே ஒருக்காலும் போகானென்று
தோத்துதென்று சொன்னேன். அதுவும் மெய்தானென்று
சொன்னார். இப்படி யனேகம் பேச்சுகள் உண்டு நடந்தது. அப்
பால். துரையவர்கள் சுவாரி போனாகள். நான் பாக்கு கிடங்
கிலேயே வந்தேன்.

இத்தனாள் சாயங்காலம் ஆறுமணிவேளைக்கு முறாரிறாயன்
வக்கில் றங்கோபண்டிதன் யென்று ஒருத்தன் வந்தான் அவன்
சந்தா சாயபு பேருக்கு ஒரு துனுக்கை காகிதம் மறுஷ்ட்டத்தில்
எழுதி உமக்கும் நமக்கும் முன்பூருவமாய் நடந்துவருகிற உடன்
படிக்கையைத்தொட்டு நாசறுசங்கு கூச்சாய்ப் பயணம் போனா
லும் எங்களை யெல்லாரையும் அகாடியிலே போகச்சொல்லி உத்
தாரக்குடுத்தாலும் எங்கள் சாமான்கள் யெடுக்கிற எருதுகள்
கபடங்கொண்டு வரப்போனது யின்னம் வந்து சேரயில்லை
யென்று ஒரு பனாப்போட்டுக்கொண்டு நான்மாத்திரமிருந்தால்

சந்தேகமிருக்குமென்று சானேசி நிம்பளக்கர் பென்னும் பாதுஷா மனசபாதாரனு யிருக்கப்பட்டவர் அவரைக்கூட் ருத்திரிமட்டுக்கு மிருக்கத்தக்கதாக தங்களுத்திரவுக்கு எதிர்பார்த்துக்கொண்டிருக் கிறேன். நீங்கள் பரவசமாய் யெழுதி அனுப்பிவிச்சால் அதை மனதிலே வைத்துக்கொண்டு யாது பண்ணப்போது வருகிறே னென்று எழுதினதுமல்லாமல் உபய பிரஷ்டத்துவம் வருமல் நடப்பிக்கிறதானால் கம்பிவரச்சொல்லும் யில்லாவிட்டால் அது வும் சாபு உத்திரமாய்ச்சொல்லி அனுப்பவும் யென்றும் மத்தப் படி றங்கோபண்டிதனை அனுப்பிவிச்சேன். காகிதத்தில் எழுதக் கூடாதபடியினாலே வாய்விஷேசமாய்ச் சொல்லி அனுப்பிவிச்சேன் அவன் வாயினாலே யென்ன உங்களுடனே சொல்லுகிறானோ நான் ரூபுரூபப்ச் சொன்னதாய் யெண்ணிக்கொள்ளவும், யென் றெழுதி அனுப்பினான். அந்தக் காகிதங்கொண்டு கொண்டு றங்கோ பண்டிதனும் வந்து சந்தாசாயபுடனே சொல்ல அவர்கனுக்கோயி திருமலைரூவையும் கூட்டி மீர்ஷத்தையும் கூட்டி அனுப்பினார். அவர் கள் வந்து என்னுடனே வந்து மேலே எழுதப்பட்டக் காகி தச்சேதியும் அவன் முகவார்த்தையினாலே சொல்லப்பட்ட சேதி களையும் கேட்டு அப்பால் துரையவர்களண்டைக்கு அழைச்சப் போய் மேலே எழுதினபடிக்கி காகிதச்சேதியும் சொல்லி றங்கோ பண்டிதன் மூகவார்த்தையாய்ச் சொன்ன சேதிவயனம் மமுதல் லிகானுக்கு ஆற்காடு சுபா குடுக்கிறதாய் திஷ்கருஷை பண்ணி சிறுப்பாவும் வெள்ளியாலே பண்ணின டங்காவொன்றும் கொண்டுவந்து வைத்து நேத்து ராத்திரி மசாவிசுக்கூடி நாசறு சங்கு அந்த மிசிலிசுவிலே யிருக்கிற சயிது சரிபுகான் சயித்துல்லிக் கான் சானவாச்க்கான் முதலான அமீர் உமறு முதலான பேர்க ளிருக்கச்சே மமுதல்லிக்கானுக்கு சிறுப்பா குடுக்கிறோம். ஆற்காட்டு சுபாவுக்கென்று சொல்லி உங்களெல்லாருக்கும் சம்மதி தாயென்று கேட்டாப்போலேயும் அதுக்கு சயிது லசுக்கர்கான் சொன்னது சம்மதிதானென்று சொல்லுவோமானால் பிறன்சுக் காறருக்கு சத்துருவாய் உட்கார்ந்துக்கொண்டு யிருக்கிறபடியி னாலே மமுதல்லிகான்கானுக்கு குடுக்கிறதுசம்மதியாய்க்காணவில்லை யென்கிறது மாத்திரம் அல்லாமல் யில்லாமல்ப் போனால் குடுத் ததினாலே தாசுபென்ன வென்று சொன்னாப்போலேயும் அதின் மேலே சாதத்துல்லாகான் வமுசமும் அல்லிதோஸ்துகான் முதலானபேர்கள் மூணுவமுசமும் வெட்டுப்பட்டு செத்தார்களான

படியினலே சந்தாசாயபுக்கு குடுக்கலாம் அவனுமுங்களுடைய நயவுக்கு யோக்கியமென்ற சானவாசுகான் சொன்னதுபோலே யும் அதுக்கு மமுதல்லிக்கான் சயிது லசக்கர்கானைப் பார்த்து சொன்னது நீங்கள் வயது சென்றபடியினலே புத்தியுஞ் சத்து மட்டமாயிருக்கிறபடியினலே காரியம் துர்விசாரணையின்பேரிலே பாத்து சொல்லத்தெரியவருதென்று மனதுக்கு தோத்தினப் போலே சத்தாகிலும் யோசனைதேவையில்லையாமென்று கேட்ட தாகவும் அதின்பேரிலே நீ யிந்தப்பேச்சு யென்னைப்பார்த்து பேசலாமா உங்கள் பாதிரி அரிஞ்சதுதானல்லோ உன்னது வென்று கத்தியின்பேரிலே கையைவைத்து ஆனல் ஆண்டவன் சபையிலே யிருந்து வார்த்தை சொன்னதிஞலே தப்பிப்போ னியே யல்லாமல் யில்லாவிட்டால் நீ தப்பிப்போகத் தக்கதில்லை யென்றும் பந்த கானு ஆகி அவர்தானே விசாரிப்பாரென்று சொன்னதின்பேரிலே அவரவர் தங்கள் தங்கள் மத்தலபு அறிந்து பேசத்தக்கபேர் யிந்தசபைக்கு மத்தப்பேர் அவர் யோக்கியமில்லை யென்று சொல்லிப்போட்டு சிறெப்பா குடுக்கிறதை நிறுத்திப் போட்டு உள்ளே எழுந்துப் போய்விட்டு சிறெப்பா யினிமேல் மமுதல்லிகானுக்கு மொகப்பு ஆச்சுது தொசெதாக்கல் பண் ணச்சொல்லி கிசுமுத்துக்காறருக்கு உத்திரவு ஆச்சுது யென்றும் அப்பால் சயிது லசக்கர் முதலான பேர் பெரிய மனுஷர்களிருந்த பேர்கள் சமஸ்தமான பேர்களும் கலைஞ்சு போய்விட்டார்கள் னாசறுசங்கு வாயினலேயெப்போ தொசேகாவிலே சிறெப்பாவைக் கொண்டுபோய் குடுத்துவிடச் சொன்னபடியினலே யினிமேல் மமுதல்லிகானுக்கு ஆகமாட்டாதென்றும் போலே மூறு மூயர் சொல்லச்சொல்லி மத்தப்பேர் ஆரும் சம்மதிக்கிறதில்லையென்று சொன்னபடியினலேயும் சந்தாசாயபுக்குத்தானே ஆற்காட்டு சுபா எற்படும் யென்று தோத்துது. அப்பால் சுவாமிக்குத் தெரியு மிதுக்கெல்லாம் புஷ்டியென்ன னாசறுசங்கு மனதிலே பிருவ்சுக் காறர் பயம் பிடிச்சிக்கொண்டு அவனை அலைச்சுப்போடுகிறபடியி னலே பின்னை ஒருத்தர் ஆரும் எத்துக்கொள்ளப்போறதில்லை. சந்தா சாயபுக்கே வருமென்று சொல்லச்சொன்னர் என்று கொவற்னதோர் சாயபு ஸ்னேகம் வேணுமென்றும் தமக்கு ஒரு வீடு புதுச்சேரியிலிருக்கவும் குஞ்சு குழந்தைகளை அங்கே வைக்க வும் தானெப்போதும் உங்கள் காரியங்களிலே திரியவேணுமென் கிற உபசார மனேகமெல்லாம் சொல்லதுரையவர்கள் மிகுதியும்

சந்தோஷப்பட்டு எந்த விதமும் ஆற்காட்டு சுபாமமுதல்லிகா னுக்கு கூடாமல் நின்று போச்சுதே அது நல்ல அடையாளம் மென்று முறுரிருபனுக்கு பரவசமாய் தம்முடை காகிதமொன்று மெழுதிக்கொடுக்கச் சொல்லி மறுபடி நல்லது சந்தாசாயபை வரச் சொல்லி பேசிக்கொள்ளுவோமென்று வரச்சொன்னார் அந்தச் சேதி சந்தாசாயபுக்கு சொல்லியனுப்பினவுடனே அவரும் அவர் குமாரனும் குத்தபுத்தி நல்லிகானும் மீர்ஷம் சாயபும் வந் தார்கள். சந்தாசாயபைப் பார்த்து துரையவர்கள் சொன்னது மத் தியானம் மமுதல்லிகானுக்கு ஆற்காட்டு சுபாவுக்கு சிமேருப்பா வாச்சுதென்று எழுதி வந்தது மென்று சொன்னதுக்கு அது அபத்தமென்று சொன்னேன். அது சரிப்பட்டுதாவெனறு கேட் டார். ரெண்டாவது முறுரிருபனுக்கு சவுத்தாய் மோகரூப் பண்ணி மமுதல்லிகானுடனே கூட வைத்தார்களெனறு மெழுதின பேச்சு பொய்பாச்சா—மூணாவது இங்கிரேசுக்காறர்களுக்கு பூந்தமல்லி கொடுத்தது பொய்யென்று சொன்னது மெய்பாச்சாவென்று கேட்டார்.

மெய்தான் நீ சொன்னபடிக்குத்தானே ஆச்சுதென்று பதி லுத்திரம் சொன்னார். அப்பால் முறுரிருபன் பேச்சுக்கு பதில் பென்ன சொல்லி அனுப்பவேணுமென்று கேட்டார். நாங்கள் சொல்லுகிறது மென்ன கவைக்கு வருகிறது நீங்கள் சொன்ன படிக்கே மெய்யாகுது. நீர் சொல்லுமென்று சொன்னார். அப் படியல்ல முன்னும் பின்னும் அவருக்கும் உமக்கும் பேச்சு வார்த்தைகள் நடந்து வழக்கமாயிருக்கிறபடி யினாலே அதுக்கு நடக்கவேண்டியதும் நீர் தான் சொல்லவேணுமென்று துரை யவர்கள் சொல்ல அதுக்கு சந்தாசாயபு சொன்னது யிப்போ யிருக்கச்சொன்னால் நாசறுசங்கும் பிறகே போறதை நிறுத்திப் போட்டு வரவேண்டியிருந்தாலும் அவன் போறவன் போறே னென்று போகிவிடுவான்.

1750 ஹூ மே மீ 1 உ பிறமோதூத ஹூ சித்திரை மீ 22 உ சுக்கிரவாரம்.

இத்தனுள் நாசறுசங்கு மொக்காம் என்று கபுறு வந் தது முசபர்சங்கு நாசறுசங்கு அறுக்காறர் கையிலே துரை யவர்களுக்கு ஒரு காகிதமும் ஆசில்பாசில்கானுக்கு ஒரு காகிதமும் அவர் தாயாருக்கு ஒரு காகிதமும் வந்தது.

அந்தக் காகிதத்தில் முசபர்சங்கு துரைக்கு எழுதின காகிதத்திலே உம்முட நாசறசங்த கையில் வாங்கியனுப்பி வக்கிறேன். யென் தாயார் பெண்சாதி பிள்ளைகள் தடையில்லாமல் அனுப்பிவிடவேணுமென்றும் அனுப்பாவிட்டால் நாசறசங்குக்கு தற்கூச்சாய்ப் போறபடியினாலே யெனக்கு வேறே யெனக்கு வேறே ஆஸ்தியில்லாதபடியினாலே உங்களுக்குப் பணம் வந்து சேராமல் போகும். நானும் விறுதாவிலே கிலேசப்பட்டுபபோவேன். எங்கள் தாயார் முதலான பேர்கள் வந்தால் நானும் விடுதலையாய் சுகப்பட்டுப்போவேன். இதுக்கு உத்தாரம் பணம் அனுப்பச்சொல்லி உடனே அனுபபிவிட்டு குஞ்சு குழந்தைகளை அழைப்பிச்சுக் கொள்ளுகிறேனென்று உபசாரமாயெழுதினான். அதுக்கு துரையவர்கள் பணங்காசுகவையில்லை யென்று சொல்லி சீட்டை கொடுத்து துரை போகச்சொன்னார். நாங்களாயி உம்முடைய பணத்தை சம்மதி பண்ணாமல் நாங்கள் போறது எங்களுக்கு அழகாயிருதபடியினாலே நாங்கள் பணமழைப்பிச்சுக் குடுத்துப்போறோமென்றும் முன்னே விடுதலைபண்ணவிட்டால் யிடம் விட்டு வாறதில்லை யென்றுமிப்படியாக யெழுதி முசபர் சங்கு தாயாரை அனுப்பச்சொல்லியும் தாம் முசபர் சங்கு காகிதத்துக்கு பதிலுத்தரம் யெழுதுகிறது நமக்குப் பணமும் கவையில்லை யென்று சீட்டைக்குடுத்து உங்கள் தாயாரைப் போகச் சொன்னதுக்கு போறதில்லை யென்று உட்கார்ந்துகொண்டு உம்முடபேருக்கு எழுதினார். அது பார்த்துக்கொள்ளச்சே தெரிய வருமென்று எழுதுகிறோமென்று முசியே தொர்ஷை அழைப்பிச்சு அவனை முசபர் சங்கு தாயாருக்குச் சொல்லச் சொல்லி அனுப்ப அவன் போய்ச்சொன்னவிடத்திலே அப்படி யெழுதினால் இவர்கள் மகளுடைய பேரிலே யிருக்கிறார்கள் கிடைக்கட்டுப் போய்விட்டால் உங்களுக்குப்பணம் அடையாமல் எங்களுக்கும் விடுதலையில்லாமல் அவன் அங்கே காவலிலேயும் நாங்களிங்கேயும் அகப்பட்டுக் கொண்டு போக வேண்டியிருக்கும் பணம் வந்து உங்களுக்குச் சேர்ந்து நாங்கள் அங்கே போனால் என் முலாயிசாவைத்தொட்டு ஆனாலும் முசபர்சங்கை விட்டுவிடுவான் அவன் தக்கன் பாதுசா அவனோடே எதுக்கிறவன் யொருத்தனிருக்கிறானோவென்று சொல்லி அனுப்ப அதின் பேரிலே ஆசிபாசலே துரை தம்மண்டைக்கு

அழைச்சனுப்பிவிச்சு சொல்ல நல்ல்து. தெளிவப்படச்சொல்லி காலத்தாலே உத்தாரஞ்சொல்லுகிறேன் பென்று சொல்லிப் போனன்.

சயிது லஸ்க்கர்கான் தரு ாறுக்நப் போனவிடத்திலே மீருஸத்து தாசிமை குடாமதே போனுமென்று சயிது லசுக்கர் கான் தன்பாருசுக்கீவிட்டு அடிப்பிச்சு அத சேதி ஞர் சந்து க்குச்சொல்லி நாசறு சங்கு மித்தனை மகனூறமென்று கோபம் பண்ணி சபுதரல்லிகான் அளுகளுக்கு மோசுயி கொடுக்கச்சொல்லி யும் அந்தப்பணம் காசுகளைக்கொண்டு வந்து கொடுக்கச்சொல்லியும் காவல் வைத்து சேத்துபேட்டுக்கோட்டையும் வழுதாவூர் கோட் டையும் சப்த்தி பண்ணி பேர் விளங்கன் வசம் பண்ணினுரென் கிற கபுறு வழுதாவூர் கில்லேக்கு வாறவன் வாசில்கான் என்கிற சமேதாரன் அன்றூறு குதிரைக்கு

1750 ஸு மே மீ 2 உ பிறமோதூத ஸு சித்திரை மீ 23 உ சனிவாரம்.

இத்தனுள் காலத்தாலே முசபர்சங்குக்கு முசே திலார்சை யும் அழைப்பிச்சு காகிதமெழுதிவிச்சு அனுப்பினதும் ஆசியா சில்கானே என்ன ஆலோசனை யென்று கேட்டதுக்கு சேத்தைக்கு நீங்கள் சொன்னபடிக்கிந்தாலே யெழுதி யனுப்புகிறோமென்று சொல்ல அந்தப்படிக்கு யெழுதி யனுப்பச்சொன்னது.

புடுகிசுக்காரர் (Portuguese) கப்பல்கள் வருகுதென்று இங்கிலீசுக்காறர் கோப்பு (Mr. Cope) முதலான பேர்கள் நாசறு சங்கு கையிலே அனுப்பிவிச்சுக்கொண்டு காலையதினம் ஆதிவா ரம் தேவனும்பட்டணம் போகுரார்களென்ற கபுறு வந்தது நாசறு சங்கு மித்தனுள் கூச்சாய் குப்பமாத்தூருக்கு யெதிராக முன் நாசறுசங்கு யிறங்கியிருந்தவிடத்தில் போயிறங்கினுனென்கிற கபுறு.

1750 ஸு மே மீ 3 உ பிறமோதூத ஸு சித்திரை மீ 24 உ ஆதிவாரம்.

இத்தனுள் நாசறுசகு தண்டுகூச்சாயி பாதிருப்புலியூர் ரெட்டை ஆக்கிரமம போயிறங்கினுனென்கிற கபுறு யிங்கிலே சுக்காறர் மேஸ்தர் கோபு (Mr. Cope) முதலானவர்கள் அனுப்பி விச்சுக்கொண்டு தேவனும்பட்டணம் போய் சேர்க்தார்களென்று

கபுறு. குமரப்பபாரதி பதினஞ்சு நாழிகைக்கு கைலாசப்பிருப்தி ஆனுன் பென்கிற கபுறு வந்தது. நாமும் அடக்கிற சிலவுக்கு பத்துப் பொன் கொடுத்தேன்.

மீருசத்துசல்லிகான் (Mr. Murtaza Alikhan) முதலான கில்லேதாரன் சமஸ்தமான பேர்களும் காவல் வைத்தாரென்கிற கபுறும் மயிலேயிலிருந்து பதினஞ்சு நாழிகைக்கு காகிதம் வந்தது. அந்த பிறுமணன் சொன்னது புடுசேக்காரன் கப்பல் பெட்டுக் கப்பல்கள் மயிலேக்கு வந்து யிருக்குது. நம்முட கப்பல்களிலே யும் சிப்பாயிகள் முதலான பேர்கள் யேறுகிறுர்கள் இன்ன மேழெட்டு நாளையிலே கப்பல் வந்து சேருமென்று சொன்னுர் கள். மீர்ஷம் வந்து யிங்கிரேசுக்காரர் புடுதிசுக்காரர் கப்பல்கள் வருகுதென்று நாசருசங்கு கையில் அனுப்பிவிச்ச தேவனும்பட் டணம் போன சேதியும் வழுதாவூர் கோட்டை வாங்கவேணு மென்றும் ருவுத்தநல்லூர் கோட்டைக்கு நாலு பீரங்கி சுடுகிறவர் கள் வேணுமென்று கேட்டது முசபர்சங்குக்கு. அற்காட்டுக்குப் போனவுடனே சிரெருப்பா கொடுத்து அனுப்புறோமென்று நாசருசங்கு சொன்னுனென்றும் இந்தச் சேதியைச் சொல்ல நாலு சட்டைக்காறரையும் ராவுத்தநல்லூருக்கு அனுப்புகிறதுக்குத் தாறேன் யென்று பதிலுத்தரஞ் சொல்லி சந்தாசாயபு வீட்டிலே அந்தரங்கமாய் யிங்கே பேசிப்போற பேச்செல்லாம் கூலிக்காறன் கூட பேசுகிறுன். ஆனபடியினுலே அந்தரங்கமில்லாமல் உங்கள் காரியம் கெட்டுப்போகுதென்றும் மீர்ஷத்துடனே சொன்னது மல்லாமல் புடுதிசுக் கப்பல்கள் வாறதாகவும் சொன்னுர். யிங்கி ரேசுக்காறர் கப்பல் பங்காளத்துக்குப் போறது வெறுமை கப்பல் வந்தது.

பீரங்கிப் போட்டு கரையிலேயு மிறக்கினுன். சென்னப்பட்ட ணம் வலசை வாங்குது மராட்டியர் குதிரை கட்டணம் யிறக்கிவந்த தென்று போஸ்தி பென்கிறவன் சொன்னுனென்று துரைசொன் னுர். பாகூர் வில்லியநல்லூருக்கு பவ்வத்து முழத்தில் இரண்டு கொடியும் கட்டபெரிய ரெண்டு வாரையும் மூக்கிலேயும் என்னை வாங்கிக்கொடுக்கச் சொல்லி சந்தா சாயபுதம்பிருக்க அவருக்குச் சொல்லிவாங்கிக்கொடுக்க அதைக்கொண்டு அனுப்பி ஆனைப்பிள்ளை குமாரன் றங்கப்பிள்ளை யென்கிறவன் வில்லிய நல்லூருக்கு கொடி போட்டப் போனுன், வில்லியநல்லூர் பாகூருக்கு இத்தனுள்குதிரை திராகோம்கள் போனுர்கள் (dragooms).

**1750 ௵ மே ௴ 4 ௳ பிறமோதூத ௵ சித்திரை ௴ 25 ௳ சோமவாரம்.**

இத்தனுள் காலத்தாலே பிரபுவினிடத்தில் முசபர்சங்கு விற்கு அஞ்சாறு நாளைக்குள்ளே பெருமானமாகிறதாயி கபுறு கேழ்க்கப்படுதென்றும் மூணு நாலு நாளாய் ஆற்காட்டிலிருக்கிற துக்கு பெரிய கூடாரம் கூட குடுத்து மரியாதையாய் நடப்பிச்சு வருகிறுனென்று வருகிற பேர்கள் எல்லாரும் சொல்லிக்கொள்ளு கிறுர்கள் என்று சொன்னதின் பேரிலே அதைத்தொட்டுதான் சந்தா சாயபுஉத்திரப் பிரதிஉத்திரமொன்றும் நடக்கத்தக்க தில்லையென்று துரை சொன்னுர். அப்பால் திருவாங்கோடு வால மார்த்தாண்ட ராசாவுக்கு காகிதம் தமிழிலேயெழுதச்சொல்லி பிறுன்சுயெழுத்திலே தாம் சவாது யெழுதிக்கொண்டு வந்து முசியே லெபோமை (Mon. Le Beaume) அழைப்பிச்சு அவர் கையிலே கொடுத்து யென்னுடனே சொன்னது அவர் புந்திசுலே சொல்லுவார் அந்தப்படிக்கி தமிழிலே வாலமார்த்தாண்ட ராசா வுக்கு யெழுதுகிறவக்கனை வைத்து காகிதமெப்படி யெழுத வேணுமோ அப்படி யெழுதி முஸ்தீது பண்ணிவைக்கச்சொல்லி சொன்னுர். அந்தப்படிக்கி அவர் கபினெத்திலே போய் முசியே லெபோமை சொல்ல நான் தமிழிலே யெழுதியானவுடனே வந்து கட்டுறு சொன்னேன். நல்லது ரெண்டுபேரை முஸ்தீது பண்ணிவை யென்று சொன்னுர். அப்பால் பகலேக்குமேலாக நாலு மணிக்கு ஆசிபாசல் கான் வந்தான் வந்து யென்னுடனே முசபர்சங்குடனே நாசறுசங்குபேசினதும் டோர்கொடுத்ததும் ஒரு அல்லி அசாபி தம்முடைய கையினுலே சுனுபிச்சுக்கொடுத்து அனுப்பிப்போட்டுக்கொள்ளச்சொல்லிசொன்னதும் மச்சிலிபந்தர் சீட்டித்தான் அஞ்சும் வெள்ளைப் பிடவைதான் அஞ்சும் கொடுத் ததும் யிங்கே யிருந்துக் காகிதம் போனவுடனே நாசறுசங் தானே அவிழ்த்துப்பார்த்து கண்ணீர்விட்டழுதும் சமில்பெக்கு கான் (Jamil beg khan) முதலான பெரிய மனுஷர்கள் அழைத்து கேட்டதும் அவர் சொன்னதும் விஸ்தாரமாய்ச் சொன்னுன் அந்தப்படிக்குத்தானே துரையவர்களுடனேயும் வந்து சொன்னதுக்கு துரை முபாறகுபாதி சொல்லியனுப்பினுர்.

இத்தனுல் காலத்தாலே பிறபுவிடனத்துக் போனவிட்த் திலே சந்தாசாயபுக்கு மகம்மது றசாசாயபு யென்கிற

வன் ஒரு கபுருஞ் சொல்லியாகிலும் அனுப்பவில்லையா—ஒருக்கா
விலேயாகிலும் யெழுதியனுப்பவில்லையாவென்று கேட்டார். வர
யில்லை நாசறுசங்கும் சலதற் சலாப்ப் போறபடியினலே பேசகிற
துக்கு யிடம்பாடில்லை அதைத்தொட்டு வராயி லையென்ற சொன்
னேன். ஆனுல் முசபர்சங்கு வீட்டுக்கு ஒரு சேதியும் வரயில்லை
யாவென்று கேட்டார். அவர்களும் வரயில்லையென்று எதிர்பார்த்
துக்கொண்டிருக்கிறர்கள். வூரிலே லசுக்கருக்குப்போய் வந்தவர்
களுமிங்கே யிருக்கிற சமேதாரனைத் தேடியும் யிவர்களிங்கே
யிருந்து அனுப்பினவர்கள் வந்து சொல்லுகிற கபுருனலேயும்
முசபர்சங்கின்பேரிலேயும் நாசறுசங்கு தபவு பண்ணி முன் சக்
குதிகவிதை பரிசுசிச்சு ஒரு டேரு ஒன்று பெரியது பந்தர்
சீமையிலே தைச்சதும் சின்ன சகலாத்துக் கூடாரம் ஒன்றும்
அங்கி முதலான பிடவைகளும் கொடுத்து ஆற்காட்டுக்குப்
போனவுடனே சிறுப்பா குடுத்து அனுப்புகிறேமென்று சொன்
னுனென்று யிது புதலான முசபர்சங்கு பேச்சுப் பேசினவுடனே
எனனை திருவிதாங்கோட்டு ருசாவுக்கு தமிழிலேயல்லோ யெழுது
றது வாடிக்கை யென்று கேட்டார். ஆமென்று சொன்னேன்
அதின்பேரிலே முசியே லெபோமை அழைப்பிச்சு தாம் பிறன்சு
வாற்த்தையிலே யெழுதினதை முசியே லெபோம் கையிலே கொடு
த்து எனக்குப்பரகசிப் பேச்சிலே சொல்லி தமிழிலே அந்தப்
படிக்கி காகிதம் யெழுதி மூஸ்தீப்பு பண்ணச்சொல்லி உத்தாரங்
கொடுத்தார். அந்தப்படிக்கி அவர் சொல்ல சவாது எழுதிதிர பதி
னெரு மணி அடிச்சுது அப்பால் பிறபுவினுடனே பெர்சலிச்சு
யெழுத்தெழுதி முஸ்தீது பண்ணுகிறேன் என்று சொல்லி பாக்கு
கிடங்கியே வந்து இரண்டு பிறதி எழுதி முஸ்தீது பண்ணி
விச்சேன்.

அப்பால் பகலைக்கு மேலாக ஆசில்பாசில் வந்து முசபர்
சங்கைண்டைக்கு துரைப்புவினுட காகிதமும் முசபர்சங்கு
வினுட காகிதமும் நாசறுசங்கு அறக்காருகள் கொண்டு போன
காகிதங்களுடைய சேதியும் நாசறுசங்கு அண்டையிலே நடந்த
பூர்வோத்திரமும் பறூ (Berar) தேச சுபேதாரன் சுபில்பேக்து
கான் தனக்கு முசபர்சங்கு தாயாருக்கும் சொல்லியனுப்பின
சேதியும் சொன்னுன். அதின்பேரிலே அந்தச்சேதியை பிறபுவி
னிடத்திலே பெச்சரிச்சத்துக்கு ஆசில்பாசில்கானை அழைப்பிக்
கச் சொல்லி அவர் சுவாமிபோய் ஆறுமணிக்கு வந்தார். வந்த

வுடமே ஆசில்பாசில்கானை ரூபுநூபாக முன்னே கொண்டுபோய் விட அவர் உளுக்காறச்சொல்லி பிறபு சமாசாரம் கேழ்க்க ஆசில் பாசில்கான் சொன்னது முந்நாம்நாள் பகலைக்கு மேலாக காகிதம் கொண்டுபோன ஆறு அறக்காறுகளும் ராத்திரி அஞ்சாறு நாழிகைக்கு மேல்போய் சேர்து நாசறுசக்கு அவர்கள் கையில் தானே குடுத்தார்கள் பெகம்சாயபு தனக்கெழுதின காகிதத்தை முன்னே படிச்சுப்பார்த்து கண்ணீர்விட்டு சத்து இலேசப் பட்டார்களாம்.

முசபர் சங்கெழுதின காகிதத்தையும் படிச்சுப்பார்த்து அப் பால் மூசபர் சங்கு காகிதங்களை அவர்ண்டைக்கு குடுத்தனுப்பி விச்சாளும் அப்பால் ராத்திரி தறுபாறுகலைஞ்ச போன பிற்பாடு போனபடிபினாலே மறு நாள் சூரிய உதய வேளைபாய் எழுந்திருந்து சாப்பிட்டுப் பயணம் பிறப்படுகிற வேளையிலே சயிது லசக்கர்கான் சமீல் பேக்குகான் சானவாசகான் சயிது செரீபுகான் கடப்பை அப்துல் நபிகான் கந்தனூர் இம்மத்து பாதர்கான் முதலிய பெரிய மனுஷர்களை அழைப்பிச்சு முசபர்கான் தாயார் தனக்கெழுதின காகிதத்தை அவர்கள் கையிலே கொடுத்து படிக்கச்சொல்லி பேகம் சாயபு சயிது லசக்கர்கான் சமீல் பேக்குகான் சயித் செரீகான் சானவாசுகான் மூலான பேருக்குத் தனித்தனியே யெழுதின காகிதங்களை அவரவருக்கு குடுத்து படிக்கச்சொல்ல அவர்களுபசாரத்திறது பிவரண்டையிலே வெச்சு படிக்கச்சொல்லி தசிலமாத்து பண்ண அதின் பேரிலே கவையில்லை அவரவருக்கு வந்த காதகிம் அவரவா படிக்கவேணுமென்று சொல்லி மறுபடி அவரவர் காகிதத்தைக் குடுத்துவிட அவரவர் படிச்ச யெழுதி மத்தலபுவைச்சொல்லி முசபர் சங்குக்கு துரை அனுப்பின காகித மும் அவருக்குக் கொடுத்து படிக்கச்சொல்லி இப்போ என் தங்கச்சி பெகம் சாயபு புதுசேரியிலிருந்து எழுதின காகிதமும் முன்னே தானே யிந்தப்படி யெழுதினல் நான் இரண்டு கோடி திரவியம் சிலவழிச்சுக்கொண்டு அவரங்காபாத்திலிருந்து நூத்துக் காத வழி யேன் வருகிறேன் மென்று யிது முதலான தம்முட்கஷ் டங்களை யெல்லாம் சொல்லி முன்னுன் யெழுதின காகிதத்துக்கு பதிலுத்தாரங்கூட யெழுதாமலிருந்தார்கள் அந்த கோபத்தைத் தொட்டு இத்தனை காரியம் சம்பவிக்கவேண்டியதாச்சுது இந்தப் படி முன் எழுதினல் நானித்தனை தூரம் வரக்கவைபில்லை யிந்தசீமைமைப் பிவர் வசம் பண்ணிப் போட்டு நான் யிவ்விடத்துக்கு

அடுத்தக்காரியங்களைப் பார்த்துக்கொண்டு யிருக்கிறதுமல்லாமல்
டில்லிக்குப் போகவேண்டியிருக்கிறது. அப்போ அவுரங்காபாத்து
அயிதராபாத்து சுபா காரியங்களுக்கு நையபுவாய் வைச்சுட்டுப்
போட்டுப் போகவேணுமென்று யிருக்கச்சே யிவனிப்படி யெத்
தினம் பண்ணச்சேதியை கேட்டு முற்றிலும் பார்ப்போமென்றும்
முற்றிலும் அப்படியே நடத்தினுமென்றும் யிது முதலான குறை
களை அநேகங்களாய்ச் சொல்லி அதுக்கு யிவர்களும் மெய்தான்
செய்தது பிள்ளை குத்தஞ்செய்தால் தகப்பன் பொறுக்கக்கட
வனே அல்லவோ ஆனபடியினாலே உம்முட உடப்பிறந்தாள்
பிள்ளையானாலுத்தானென்ன உம்முடைய பிள்ளையானால்த்தானென்ன
செய்த குத்தம் மனம் பொருத்து அவனை றட்சிக்குறது உமக்
குக்கடனென்று அவரவர் தோத்தினபடி உபகாரமாகத்தானே
சொன்னார்கள். அதிலே சமீல் பேக்குகான் யென்குற பருடு சுபே
தாரன் யிப்படி கும்பலிலே யென்னமாய்ச் சொல்லப்போறார்
கள் தனிச்சு தனிச்சு அவரவரைக் கேட்டால் அப்போ
யேக தேசத்திலே அவனவன் அபிப்பிராயத்தைச் சொல்லு
வார்கள் யென்று சொன்னதுக்கு உள்ளே யெழுந்திருந்து
போய் சமீல் பேக்குக்குகானை மாத்திரம் அழைத்து. கேட்ட
விடத்திலே பிறன்சுக்காரர் உம்முட உடப்பிறந்தாள் பிள்ளை
யென்றும் தானே யித்தமட்டுக்கும் பவுன்சும் கட்டி திரவிய
மும் கொடுத்தமட்டும் அப்பால் நீர்தானே எதிராய் வந்து நின்றீர்.
பிடிச்சப்பத்து விடப்போமோ யென்று உம்முடனேகூட சண்டை
குடுத்தமட்டுக்கும் பிறன்சுகாறருடைய பாதரித்தனமும் ஒருத்
தர் காரியத்தில் நுழைஞ்சால் யென்ன அழைத்தொட்டு சம்ப
விச்சாலும் ஆக்கிர மட்டுக்கும் தங்கள் அறணபறண சக்தியும்
நிறுவாகம் பண்ணின மட்டுக்கும் அதுக்கு அவர்கள்பேரிலே
சந்தோஷப்பட்டு அவர்கள் மனதின்படிக்கி காரியங்களும் சேகரப்
படுத்திசகல பெருமானங்களும்கொடுக்கவேண்டியது அவர்களெந்த
காரியத்திலும் யிப்படி நடக்கத்தக்கனவர்கள் யென்று அவர்களை
நம்பிக்கையா யெண்ணி கைக்குள்ளே வைத்துக்கொள்ளவேண்டி
யது யென்று டில்லி பாதுசாவுக்கும் யிரானி பாதுசா நாதுருஷா
யென்று பேரு போட்டுக்கொண்டுவந்த பாதுசாவுக்கு யெத்தனை
தவாபது. டில்லி மகம்மது பாதுசாவுடைய செமெதாருக்குச்
சமனாகச் சொல்லப்போகாது அப்படிப்பட்டவன் டில்லி கொள்ளை
யிட்டு மகம்மதுசா பாதுசாவை கைப்பிடியாய்ப் பிடிச்சவன். கூட

ஆக்கிருக்கு யிராச்சியம் அவர் வசம்பண்ணிப்போட்டு சகல மெய் வரிசையும் செய்து போய்விட்டான் உங்கள் தகப்பனர் யிம்மத்து பாதுர்கான். கந்தனூர் சுபேதாரன் யிங்கே உம்முட சமஷுத் திலே யிருக்கிறவன் உம்முட அம்மான் யிம்மத்தியாக்கானைக் கொன்று போட்டவனுக்கு சகல வெகுமானமும்பண்ணி சந்தோஷப்படயில்லேயா வென்று யிப்படி நூறுயிற நூறு திருஷ்டாந்திரங்கள் சொல்லி அவர்கள் அன்னியருயிருந்தும் அப்படி நடப்பிச்சயிருக்க உம்முட ரெத்தம் உம்முட உடப்பிறந்தாள் பிள்ளைக்கு நடப்பிக்குறதென்ன ஆச்சரியமென்று முசபர்சங்குக்கு இந்த ராச்சியம் குடுத்து சிறெப்பாவும் கொடுத்து பெருமதி பண்ணி அனுப்புறதுக்கு சமான மொன்றுமில்லே. அதைத் தொட்டு பெரு கீர்த்தி சூரியப்பிறகாசம்போலே பிறகாசிக்கும் மென்றும் பெதுமட்டும் சண்டைபண்ணி செயிச்ச கைப்பிடியாய்ப் பிடிச்சுக்கொண்டு மறுபடி காலிலே விழுந்து பிறத்திச்சுக் கேட்டாப்போலே சகல அபராத க்ஷணம்பண்றதுமல்லாமல் சீமை மறுபடி கொடுத்தாரென்கிற கீர்த்தி பூமியிலுள்ள மட்டுக்கும் நிற்கும் மென்று பின்னேயும் சொல்லத்தக்கன சாடையாய்ச் சொன்னுப்போலேயும் அதின் பேரிலே மத்த சயிதுலசுக்கர்கான் முதலான முன் சொல்லப்பட்ட பெரிய மனுஷர்களிருக்தார்களே அவரவர்களைத் தனித்தனி கேழ்க்க அவரவர் சொன்ன சாடையெல்லாம் முசபர்சங்குக்கு சீமை கொடுத்து பெருமதி பண்ணிப்போட்டு நிற்ப்பிறம்—சாகப் போறதே கீர்த்தி யென்று அவரவர்கள் சொல்ல நவறோசு பண்டிகை வந்திருக்குதே இது போனவுடனே அப்படியே நடப்பிப்போம் யிதுக்கு ஆலோசனை மாத்திரிக்குப் பேசுவோம் யிசுவார் கூச்சு ஆகிற வேளையானபடியினாலே அவரவர்கள் போயி சுவாரியாய்ப் பயணம் நடவுங்களென்று சொல்லி தாமும் ஆனையின்பேரிலே சுவாரியாய்ப் பயணம் நடந்தாரென்றும் நவறோசு பண்டிகை யின்றைக்கு அஞ்சுநாளாச்சுது இனி நாலு நாளிருக்குது அது ஆனபிற்பாடு சிறெப்பாகுடுத்து சுபாவும் அவர் பாரிசம்பண்ணிப் போட்டு புதுச்சேரிக்கு அனுப்பிவிட்டு அவரும் அயிதராபாத்திலே போய்ச் சாவணி பண்ணிவாரென்று சயிதுலசுக்கர்கான் தன் மனுஷனுடனே நடந்த பூறுவோத்திரமுஞ் சொல்லி என் மனுஷன் அவருக்கொரு கண்ணாடி கொண்டுபோயிருந்தான் அவனுடனே யும் சொல்லியனுப்பினன். சயிதுலசுக்கர்கான் சானவாசுகானு

யிங்கேயிருந்து அவனுடனேயு மிந்த சேதிதான் சொல்லி அனுப்
பினார்களிதல்லாமல் யிந்தக் காயிதங்கள் போறதுக்கு முன்னமே
மத்தியானமும் காலமேயும் நடந்தது. முசபர்சங்குதலை அழைப்
பிச்சு அஞ்சு வெள்ளைத்தாளும் அஞ்சு பந்தர் சீட்டியும் குடுத்து
அனுப்பிவிச்சதுமல்லாமல் பெரிய கூடாரம் மச்சிலிபந்தர் சீட்டியி
னாலே தைச்சது ஒன்றும் முன்னே முசபர்சங்குயிருக்க சகலாத்து
னாலே தைச்ச சின்ன கூடாரமொன்றும் தாம் போட்டுக்கொள்ளு
கிற கட்டிலொன்றும் யிதினுடைய மெத்தை தலைகாணி வகையிரு
சாமானுகளும் குடுத்து அனுப்பிவிச்சார். அதுவுமல்லாமல்
அங்கிதாம்தானே களுபிச்ச முசபர்சசுக்கு அனுப்பிவிச்ச
பாகை நடுக்கட்டு விசார் முதலாக அனுப்பவேண்டிய சாமானெல்
லாம் அனுப்பிவிச்சாரென்றும் அதுக்கு முசபர்சங்கு கூடாரங்கள்
வகையறு சாமான்களும் அங்கி வகையறாவும் வைத்துக்கொண்டு
பந்தா சீட்டி அஞ்சுதானும் இதிலொன்று அதிலொன்று மாத்தி
ரம் எடுத்துக்கொண்டு மத்தது மறுபடி அனுப்பிவிட்டதுக்கு
அவ்விபர் குடுத்தால் வாங்கி காட்டுப்படியாய் அனுப்பவேண்டி
யது நான் குடுத்ததுக்கு அனுப்பவேண்டிய காவலில்லையென்று
சொல்லி யின்னங்கொஞ்சம் கெருவமிருக்கிறப்போலே யிருக்கு
தென்று சொன்னதுக்கு அதெல்லாமல்ல மரியாதைககாக அப்படி
நடப்பிச்சதேயல்லாமல் மத்தப்படி பின்னை ஒன்றைக் குறைச்ச
அல்லவென்று சொன்னப்போலேயும் மறுபடி கொடுத்து அனுப்
பச்சொல்லி தசிலி மாத்துசொல்லி அனுப்பினதுக்கு இனி அதை
தானே கொடுக்கத்தக்கதில்லையென்று சொன்னாரென்றும் காசறு
சங்கு கலியாணம் பண்ணியிப்போ பதினெட்டு வருஷமாச்சுது.
அப்போ கலியாணத்தும்போது அம்மான் குடுத்த அங்கி பாகை
நடுக்கட்டு வகையறு யென்னென்ன சாமான்களுண்டோ அதுக
ளெல்லாம்—எடுத்து வைத்து இதெல்லாம் ஒசந்த ரத்தின
மிழைத்த கல் ஒன்றும் செம்பெஞ்சு ஒன்றும் கையிலே கட்டுகிற
பொன்சிரெண்டு மிரெண்டு பதக்கமும் யிதல்லாமல் சிறேப்பா
வோடே கூட்டுநக்கள எடுத்து தயாரபண்ணி வைத்து யின்றைக்கு
அஞ்சாம் நாள் குடுத்து அவரும் சகல சம்பிறமத்துடனே வரு
கிறார். அந்த சந்தோஷமும் நீர் அனுபவிக்கப்போகிறீர்
இதல்லாமல் முசபர்சங்கு ஆனை அறுபத்து நாலு குதிரைகள்
ஒட்டகங்கள் முதலானதுகளெல்லாம் வேறே வைத்து முசபர்
சங்கு மனுஷர்களைத்தானே விசாரிக்கச் சொன்னாரென்றும் கிஷ்

ணைக்கிப்புறம் யிருக்கப்பட்ட சீர்மையும் குடுத்து சீறெப்பா கலக்கி வகையிறு ரத்தினமிழைத்த நகைகளிதுகளெல்லாம் குடுக்கவந்தது. உம்முட பட்சம் யிருக்கிறதைத்தொட்டு நீரும் முசபர்சங்கும் ஏக சரீரமென்று நாசறுசங்கு மனதிலேயும் கெட்டியாய் விழுந்தது. டில்லிபாதுசா மனதிலேகூட யெண்ணப்பட்டது. சுவாமி யெல்லாக் காரியமும் காலஞ்சு நாளையிலே அனுகூலம்பண்ணி வைப்பாரென்று சொன்னவுடனே இதெல்லாந் துரை கேட்டு மறுபடியா வருகிற சேதி யென்னவென்று கேட்டதுக்கு அபரங்காபாத்து சுபேதாரன் அங்கே வந்த மறாட்டியனை அடிச்சான். அபிதாராபாத்திலேயும் அப்படித்தான் அதின் பேரிலே ரகோசிபூசிலா சமீபெக்குநானுக்கு சிநேகிதனானபடியினாலே அவன் பேருக்கும் நாசறுசங்குக்கும் சமாதானம்பண்ணச் சொல்லி யெழுதி யனுப்பினான். அதின்பேரிலே நாசறுசங்குக்கு தெரியப்படச்சொல்லி கோபததை தணிச்சு பரவச காகிதம் வாங்கி அனுப்பிவிச்சான் மறாட்டியர் படாபஞ்சமாய் பறந்து போனதாய்ச் சொன்னான். நல்லது யென்னுட அபிப்பிறாயமும் தங்கள் ஸ்தானாபதிகளை அனுப்பி நாசறுசங்கு கேட்டதும் முசபர்சங்கை விடச்சொல்லியே அல்லாமல் பின்னை யொன்று கேழ்க்கவில்லை சுவாமி. அப்படியே தயவுபண்ணி முசபர்சங்கு வந்தால் அன்றையதினம் கோட்டையெல்லாம் பீரங்கி சுட்டு வேடிக்கைபண்ணி வெகு பெரிய பண்டிகை கொண்டாடி அந்த மகத்தாகிய சந்தோஷத்தை அன்றைக்கல்லவோ அடைவேனென்று சொன்னார் அதுக்கு நான் சொன்னது சுவாமி உம்முட மனதின்படிக்கி நடப்பிக்கிறோமென்று சங்கல்பிச்சுக்கொண்டுகாத்துக்கொண்டிருக்கிறபடியினாலே அப்படித்தானே நடக்கும். முசபர்சங்குவினுடைய அதிருஷ்டம் திரும்பி துர் அதிருஷ்டமாயி அகப்பட்டுக்கொண்டு சத்துருவின் கையிலே யிழிக்குறான் சந்தாசாயபு ஓடிவந்து உங்களுடைய ஆசிறாவிலே சீவனைக் காப்பாத்திக்கொண்டு உளுக்கார்ந்தார் ஆனபடியினாலே ரெண்டு பேருடைய துர் அதிருஷ்ட பெலனிலே நாசறுசங்கு லட்சம் குதிரை நாலு லட்சம் கால் பிலனுடனே வந்தவன் அபசெயப்பட்டு ஓடிப் போய்விட்டதும் முசபர்சங்குக்கு இந்தமட்டுக்குமாகிலும் மத்தியாய் நடத்தி காவலும் விட்டு இன்னம் சீமையும் கொடுத்து அவனை உங்களண்டைக்குத்தானே அனுப்புகிறோம் யென்கிற கபுறு அடிக்கடி வருகிறது. ராச்சியமெல்லாம் பிறான்சுக்காறர்

பெகு பராக்கிறமசாலி நசறுசங்கு வந்து பாத்து சாவுக்கு சமானந்தாமென்று கெருவம் அடைஞ்சு யிருக்கிறவனை செயிச்சு மறுபடி அவனை நினைக்காமல் ஓடிப்போகப்பண்ணின அதிருஷ்டம் யிந்த லோகத்துக்குள்ளே நான் கண்டதில்லை யென்று ராச்சியமெல்லாம் உம்முட பேர் சொன்னால் அழுதவர்கள்கூட வாய்மூடத் தக்கதாக கீர்த்தி சூரியப் பிறகாசம்போலே பிறகாசிக்குது நான் முகட்ட போதாவாய்ச் சொல்லுகிறேனென்று ஒருக்காலும் எண்ணத் தேவையில்லை. இராச்சியத்திலே யிப்போ வழக்குகிற வழக்கம் யிப்படி நாறு பங்கு அதனமாயிருக்குது. நீங்கள் விசாரித்தால் தெரியுமென்று சொன்னேன். அப்பால் நல்லது யென்று ஆசில்பாசில்கானுக்கு போகச்சொல்லி உத்தாரமுங் குடுத்து யென்னையும் பிறுமணிக்கச்சொல்லி முசபர்சங்கு தாயாருக்கும் பெண்சாதிக்கும் துரையவர்கள் தங்கள் தறபில் மூபறாக்குப் போய் சொல்லி சொல்லச் சொன்னார்கள் அந்தப்படிக்கு மதனாந்தபண்டிதனையும் சொல்லிப் போகச்சொன்னதுக்கு பெகு சந்தோஷப்பட்டு அவர்களும் பதிலுக்கு முபாரக்கு சொல்லி அனுப்பினார்கள். இத்தனாள் ஒழுகரையிலிருந்து வெள்ளைக்காற பவுன்சு வில்லியநெல்லூருக்குப் போய் கொடி போட்டார்கள். அதின்பேரிலே துப்பாக்கிகள் பீரங்கிகள் விஸ்தாரமாய் சுட்டார்கள். நாளைய தினம் பாகூரிலே போய் கொடி போட்டு அங்கேயும் பீரங்கிகள் சுடப்போனார்களென்றும் சொன்னார்கள்.

இத்தனாள் அருணாசலசெட்டி அழகப்பசெட்டி முத்தய்யசெட்டி ராமகிருஷ்ணசெட்டி யிவர்கள்வந்து சொன்ன சேதி ஆற்காட்டிலே யிருக்கிற மாபூசுக்கான் தம்பி அபுதுலாகான் ஆற்காட்டிலே உங்கள் குமாஸ்தாவாயிருந்த பச்சுப்புல்லு மன்னாருசெட்டி றவ்வா வெங்கண்ணசெட்டி சின்னராயலு யிவர்களைப் பிடிக்க மனுஷர்களை அனுப்பினவிடத்தில் பச்சிப்புல்லு மன்னாருசெட்டி மாத்திரம் தப்பிப் போனானென்றும் மத்த இரண்டு பேர்களும் அகப்பட்டார்களென்றும் அவர்களைப் பிடிச்சு புதுச்சேரி பிறுன்சுக்காறர் பணங் காசுகளெங்கே யிருக்குது ஆனந்தறங்கப்பனுது யெங்கே யிருக்குது யென்று கேட்டதுக்கு ஒரு காசு விசமில்லை. நாங்களவர்களிடத்தில் முன்னிலுவை நாலு யிரண்டு வரவேண்டியதைத் தண்டிக்கொண்டு இங்கிரேசுக்காறர் கலாபத்துக்குப் பிறபாடு வியாபாரமில்லையானதினாலே இப்போ கலாபம் தீந்த

மட்டுக்கும் யினிமேல் கப்பல் காடிகள் வந்து வியாபாரம் வந்தால்
இவன் உபாயம் பண்ணலாமென்று மெதுவாயிருக்கிறதேயல்லா
மல் மத்தபடியல்லவென்று சொல்ல அதுக்கு எனம் அவர்கள்
மனுஷர்கள் யெங்கே யிருக்கிறார்கள் சொல்லச்சொல்லி கேழ்க்க
லாலாப்பேட்டையிலும் ஒருத்தனிருக்கானிந்த சாடைதானங்கே
யும் அவனும் பார்த்து வெபசாறி பிறப்பட்டுப் போய்விட்டா
னென்று சொல்ல அது பொய்ப் பேச்சு என்று அவர்களைக்
காவல் பண்ணி வீடு வாசல்களும் முத்திரை பண்ணினார்களாம்
மன்னாருசெட்டி தப்பிப் போயும் அவன் பெண்சாதி பிள்ளை
களையும் வீட்டையும் காவல் கட்டுப் பண்ணினார்களென்றும் லாலா
பேட்டையிலேயும் தாணிசெட்டியார் மளிகையும் கச்சாலிசெட்டி
வீராகவசெட்டி ராமகிஷ்ணசெட்டி அருணாசலசெட்டி குண்டுச்
வெங்கடாசலசெட்டி மளிகையும் காவல்பண்ணி அங்கேயும்
புதுச்சேரி பிறான்சுக்கும்பினீர் பணமாவது றங்கப்பன் பண
மாவது யிருக்குதாவென்று கேழ்க்கயில்லை யென்று முச்சிலுக்கா
கூட யெழுதிக்கொடுத்து அதிலே றங்கப்ப மனுஷன் மூத்த
பிள்ளையே நாலு மூட்டை பட்டு தாலும் கொஞ்சம் கண்டா
குண்டியும் காவேரிப்பாக்கத்தில் வைத்துப் போட்டுப் போனான்.
அதுவேயல்லாமல் வேறே யில்லை. முச்சிலிக்கா யெழுதிக்
கொடுத்ததாகவும் அதின்பேரிலே மனுஷர்களை மாத்திரம் காவல்
விட்டு அந்த லாலாபேட்டை அமுல்தாரன் வற்த்தகர்களுக்குப்
பயமென்ன யிருக்குது ஒரு சிந்தனையும் பண்ணக் கவையில்லை,
நான் போய் வயணமாய் ஆற்காட்டு நபாபுடனே சொல்லிவிடுகுறே
னென்று சொன்னதாகவும் அதின்பேரிலே லாலாபேட்டையிலே
யிருக்கிற கன்னடி பலிஞ்சவார் முதலான பேர்கள் யெல்லா
ருடைய மளிகைகள் கட்டிப் பேசுவோம் வற்த்தகர்கள் யெங்கே
யும் வியாபாரம் பண்ணுவார்கள் துரைகளுக்குத் துரைகளுக்கும்
கலாபமானால் யிவர்கள் சோலிக்கு வரக் காரியமென்ன யிருக்குது
என்று லாலாபேட்டை அமுல்தாரனுடனே பேச அதுக்கு
அவனப்படி ஞாயம் தப்பிதமாய் நடக்குறது ஒருக்காலுமில்லை,
நீங்கள் மளிகைகள் கட்டவேண்டாம் நான் மார்க்கமாய்ச்
சொல்லி விடுதலைபண்ணிப் போடுறேன் யென்று சொன்ன
தாகவும் யிந்தப்படிக்கி - லாலாபேட்டையிலிருந்து யெழுதி
வந்தது. இனிமேலென்ன நடக்குமோ தெரியாதென்று சொல்ல
நல்லது அப்படி ஒருக்காலும் வித்தியாசமாய் நடக்கத்தக்க

தில்லை. எசமான்கள் அறிஞ்சு வந்தது அல்ல அப்துல்லாகான் ஆற்காட்டிலே யிருக்கிறவன் சிறு பிள்ளை புத்தியினாலே யென்ன யென்னமாய்ச் சொன்னானோ. நடுவே யிருக்கிற பேர்கள் யென்ன யென்னமாய் நடத்தினார்களோ இன்னேரமட்டுக்கும் ஒரு வித்தியாசமுமில்லையே. வீடு வாசல் முத்திரிச்சதும் மாத்திரமே யல்லாமல் பின்னை யொன்றுமில்லையே இன்னமொரு ஓலை சேதி பார்த்துக்கொண்டு பிறபுவுக்கு யெச்சரிப்போமென்று பார்த்தா லிவர்கள் வேறே விதமாய் யெண்ணப்போறார்களென்று நாளை சூரிய உதயத்துக்கு வரச்சொல்லி சொல்லியனுப்போட்டு பிறபுவினுடனே யெச்சரித்தேன் இதென்ன சேதி யென்று வந்து சொல்ல வந்தாயென்று சத்து அசுவாரிசமாய்ச் சொன்னார் அந்தமட்டிலே பிரசங்கம் பண்ணாமல் நிறுத்திப்போட்டேன்.

**1750-ஸூ மாயு மீ 5-உ பிறமோதுத ஸூ சித்திரை மீ 26-உ அங்காரகவாரம்.**

இத்தனை காலத்தாலே பிறபு அழைப்பிச்சு நாசறுசங்கு நேத்தய தினம் யெங்கே யிருந்தானென்று கேட்டார். பெருமுக்கலண்டையிலே உலக்கூர் சாரமென்று யிருக்கிறது அங்கே போயிறங்கினார் பெருமுக்கலான் கோட்டையிலே பீரங்கி போடுவிச்சு சாப்பாடும் ஆக்கிக்கொண்டுவந்து கொடுத்து நசரும் வைத்ததாய் கபுறு வந்தது யென்று சொல்லி யிங்கிறேசுக்காறர் மேஸ்தர் கோப்பும் லோரேன்சும் தங்கள் பவுன்சை திருவக்கரை அண்டையிலே யிறங்கி யிருந்த பிச்சுவாடியண்டையிலே யிருந்த யிங்கிறேசுக்காரர்கள் தங்கள் பவுன்சை அங்கேதானே நிறுத்திப்போட்டு மேஸ்தர் கோப்பு லோரேன்சு யென்கிற மேசர் பின்னையும் யிரண்டொரு ஒபிசியால்மார்களும் போய் நாசறுசங்குப் பயணம் கூச்சாயி நடக்குறவேளையிலே தங்கள் கைத்துகள் யெழுதி தங்களுக்கு பூந்தமல்லியும் மயிலாப்பூரும் தேவனாம்பட்டணம் சீமையும்இனாம் குடுக்கவேணுமென்று யெழுதிக் கொடுத்ததுக்கு அந்த அறசியைக் கிழச்சுப்போட்டு நீங்களென்ன மேனத்துப்பண்ணினீர்கள். பிறான்சுக்காறராகிலும் முபாசங்குக்கு திரவியம் மனுஷர்கள் முதலான சாம்சாமி பண்ணிக்கொடுத்ததுமல்லாமல் யென்னைப்போலே கொத்தவன் லட்சம் குதிரையுடனே வந்தும் நாமென்ன குடுக்குறோம் என்று எழுதினாலும் அவர்களை கைவிடாமல் யென்னுடனே சண்டை

பண்ணின தைரியத்துக்கும் பிடிச்ச காரியம் விடாமல் நிறுவாகம் பண்ணத்தக்கனவர்கள் நல்ல சூரர்களும் பிரான்சுக்காரர்களையல்லாமல் நீங்கள் வற்த்தகம் பண்ணுகிறவர்கள் வற்த்தகருங்களுக்கு அந்தப் பவுருஷம் யேன் வரும் மெத்த வுத்திரிச்சீர்கள் போகச் சொல்லென்று சொல்லி ஆனையின்பேரிலே யேறிக்கொண்டு அவர் நடந்துவிட்டாப்போலேயும் யிவர்கள் ஆனைக்குமுன்னே போக வேணுமென்று நடந்தாப்போலேயும் அதின்பேரிலே நாசறுசங்கு சோபுதாரர்களுக்கு தாக்கீது பண்ணித் தள்ளிவிடச்சொன்னாப் போலேயும் அதின்பேரிலே சோபுதார்கள் வந்து தள்ளிவிட்டார்கள் யென்று நிசாம் லசுக்கரிலேயிருந்த முறாரிறாயன் வக்கீல் கூடயிருந்தவன் வந்து சொன்னதாகவும் சேதி சொல்லி அதின் பேரிலே நேத்து மேஸ்தர்கோப்பு மேஸ்தர்லோரென்சு ஆசி ஆதி (Haji-Hadi) முதலான பேர்கள் தூக்கணும்பாக்கத்திலிருந்து சாயங்காலம் தேவனும்பட்டணம் போய்ச் சேர்ந்தார்கள். அவர்கள் பாகூர் வழியாய்ப் போகச்சே நேத்து சாயங்காலம் நம்முட தாராகோம்கள் (Drgoons) பாகூரிலே யிறங்கி யிருந்தவர்களும் கண்டு பேசினார்களென்றும் திருவீதிக்குப் போய்ச்சேர்ந்து அவ்விடத்து சமாசாரமறிஞ்சுக்கொண்டு வந்த சேவுகர்கள் வந்து கபுறு சொன்னார்கள் யென்று சொன்னதுமல்லாமல் தேவனும்பட்டணம் கோவற்ணதோர் மேஸ்தர்பிளோயர் (Mr. Floyer) சரீரம் லகுவில்லாமல தப்பி வருத்தமாய் யிருக்குதென்றும் சொன்னார்களென்றும் சொன்னேன். யிதிலே முசியே லத்தூசயென்கிற சொல்தாது கப்பித்தான் நம்முடைய லசுக்கர் வில்லியநல்லூரிலே யிறங்கியிருக்கிற பவுன்சண்டையிலிருந்து வந்து துரையவர்களுக்கு நேத்தைக்கு வில்லியநல்லூரிலே கொடி போட்டதும் பாகூருக்கு நேத்து பகலுக்கு மேலாகக் கொடிபோட்டு திராகோம்களும் பிரங்கிகள் முதலான சாமான்கள் போனதும் யிங்கிலீசுக்காறர்கள் மேஸ்தர் கோப்பு முதலானவர்களும் அவர்கள் பவுன்சும் தேவனும்பட்டணத்துக்குப் போனதும் திராகோம்கள் போய்க்கண்டு பேசிவந்தது மின்னையதினம் பாகூரிலே கொடி போடுவார்களென்று யிது முதலான சேதிசொல்லி துரையவர்கள் மேஸ்தர் கோப்பு முதலான பேர்களுக்கு அம்பக்கம் கூடயில்லாமல் கைப்பிடித்து யிழுத்துவிட்டு போகச் சொன்னார்களென்றுமவர்கள் வெகு அவமரியாதையை அடைஞ்சுபோறார்களென்று பிற்பு சொல்ல அதுக்கு முசியே லத்தூசம் நாங்களும் போறவர்

கள் கின்னாறுப்ப்போறார்கள் யென்றுதான் கபுறு கேட்டோமென்று சொன்னோம் அப்படி பேசிக்கொண்டிருக்கச்சே பிரங்கிச்புதம் கேட்டது பாகூரிலே நம்முடவர்கள் கொடிபோட்டு பிரங்கிப்போடுகிறார்களென்று சொன்னார் இன்றையதினம் பாகூரிலே கொடி போட்டார்களே அந்தவூர்சேதியொன்றுங் கொள்ளை போகவில்லை. தோட்டக்துரைகள் பயிர்வழி தானியங்கள் குழி போட்டிருந்ததும் அப்படியே யிருக்குதாம் முள்ளு முறியவில்லையாமென்று சொன்னார். சயந்தல்லிகான் தன் சாகிர்யென்றும் மனுஷரை வைத்துக் காப்பாத்தினான் யென்றும் சொன்னேன். அதினாலேதான் ஒரு செத்தைகூட சேதமில்லாமல் தப்பிச்சது யென்றும் சொன்னார். அப்பால் லோகாப்பிறமமாய் நாசறுசங்கு முதலானபேர் பேச்சு பேசிக்கொண்டிருந்தார். விசேஷிச்சு எழுதத்தக்க சேதியில்லை.

இத்தனாள் சாயங்காலம் ஆறுமணிக்கி அழைச்சனுப்பிவிச்சு சொன்ன சேதியென்னவென்றால் துத்தனாக சம்மதி ரூபாயி யிந்த மீத்துக் கடசியிலே முசியே கிலியாருக்கு செலுத்தச் சொல்லி துத்தனாகங்கொண்ட வற்த்தகருக்குச் சொல்லென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பால் லசுக்கர்சேதி யென்ன வென்று கேட்டார், மசல்தறமசலல்லவா விசேஷிச்சு சால்சவரபு நடவாது மொக்கரமாய் ரெண்டு மூணுநாள் நின்றால் குவிஞ்சசேதி வருமில்லாவிட்டால் ஆற்காடுக்குப் போயிஉடனே குவிஞ்சசேதி வருமென்று சந்தாசாயபு சொன்னார்யென்று சொன்னேன். அப்பால் சயிது லசுக்கர்கான் முதலானவர்கள் பேச்சாக லோகாப்பிறமமாய்ப் பேசி யிருந்துவந்தேன்.

**1750-௵ மாயு ௴ 6 ௳ பிறமோதூத ௵ சித்திரை ௴ 27-௳ புதவாரம்.**

இத்தனாள் காலத்தாலே துரையவர்களழைச்சனுப்புவிச்சு யென்னசேதியென்று கேட்டார், மேஸ்தர் பிளேயருக்கு சரீரம் ரொம்ப லகுவு தப்பியிருக்குதாம் மேஸ்தர் கோப்பு வந்தவுடனே இங்கிலீசுக்காருக்கு தேவனாம்பட்டணம் சீமைக்கு பர்வானா யிவர்கள் கேட்டதுக்கு வாய்க்காமல்ப்போச்சுது யிந்த சாடை வெளிக்கு வந்து பிறான்சுக்காறறாகிலும் மத்தப்பேறாகிலும் வந்து தோறணங்கட்டப் போறார்களென்று அச்சத்தினாலே கிறாம பிரதாக்கருமத்துக்கு இங்கிலீசுக்காறர் கொடி கட்டினார்களாம் அப்

தல் சனில் கையில் தீர்த்தகசி முத்துக்கிருஷ்ணபிள்ளை குத்தகை யாக வாங்கி அந்ததுபாசியும் இங்கிலீசுகொடி கட்டினனும். பிந்தப்படிக்கி சேதிவந்தது. இங்கிலீசுக்காறர் பட்டணத்திலே யிருக்கப்பட்ட பெரிய பெரிய மனுஷர் வர்த்தகர் கும்பினீர் உத்தி யோகஸ்தர்களா யிருக்கப்பட்டவர்களைக்கூட இந்த துலுக்கர் களுக்கு கோடாலி முகிமே துப்ளேயிக்சபாதருக்குச் செல்லுமே யல்லாமல் மத்தபேருக்கு பேன்செல்லும் அவரவர் பிறந்தயோக அதிசெயப்படிக்கு நடக்கும் துலுக்கர் ஜாதியை கொல்லுகிறதற்கு முகிமே துப்பிளேயிக்சு பெமன்போலே பிறந்து அவர்களையெல் லாம் சம்வரிக்குறான். தன்காலிலே விழப்பண்ணிக்கொண்டு அவர்களை சகல வூழியஞ் செய்யச்சொல்லி அரசு செலுத்து கிறான். இவர்களும் அவனைப்போலே ஆகவேணுமென்று நினைத்து செய்யப்போய் பெருதிரவியம் மருந்து குண்டுகள் மனுஷர்களிப் படி யெந்தந்த விதத்தில் அவர்கள் மனதுவர நடக்கவேணுமோ அப்படி யெல்லாம் நடந்தும் கடசியிலே ஒன்றும் பிறயோசனத் துக்கு அவகாசமில்லாமல் போனலும் மரியாதையுடனே வருகி றதுக்கும்யில்லாமல் அவமானம் பெத்துகடசியிலே அம்பகமு மில்லாமல் சோபுதாார் வந்து கைதூக்கிவிடவந்து அதைப்பார்க் கப் போனல் பின்னையும் புலிச்சாரலைக்கண்டல்லோ சனங்களும் மத்தமுறுகங்களும் பயப்படுகிறார்கள் யென்றும் யோசனைப் பண்ணிப்பண்ணி காியானது தனக்கும்சாரல் உண்டாக்கிக்கொள் ளுகிறதுக்கு வேறே விதமாய் பிறப்பிச்சுக்கொள்ளக்கூடாது ஆனபடியினலே சாரல் சாரலாய் சூடுபோட்டுக்கொண்டுதாம் அதின்பேரிலே வலியயெடுத்து பிருணனுக்கு வந்த கதையாய் பிறான்சுக்காரருக்கு வந்தாப்போலே நமக்கும் வாராதெவென்றும் நாசருசங்கு அண்டைக்குத்தானே போய் பண்ணுத பிறயத்தினம் பண்ணி பெருதிரவியம் காசுபண்ணி சரீரங்கள் கஷ்டப்பட்டு ஆக்கிருக்கு அவமானம் வந்தது. முன்னுக்கு சந்தா சாயபுக்கு சிமையானுல் தேவனும்பட்டணம் சென்னப்பட்டணம் குடியிருக் கிற விடாமே பிதுகள் போக்கடிச்சுக்கொள்ளுகிற காள் வந்து தாங்காட்டும் அதினலே சும்மாயிருக்கிறவர்களுக்கு பித்த புத்தி வந்து நேரிட்டு இப்படி நடத்தினதுவென்று கூடலூர் தேவனும் பட்டணத்திலே யிருக்கிறவர்களெல்லாம் பேசிக்கொள்ளுகிறார் கள் முன்னலே தேவனும்பட்டணம் கூடலூரார் புதுச்சேரிபோ

குதென்று யினி யேது நாசறுசங்கு வந்தவுடனே கூட பிங்கிலிசுக்காறர்களும் கூடியிருக்கிறார்கள்.

நாசறுசங்கு லட்சம் குதிரை நாலு அஞ்சு லட்சமாய் தளமிறங்கினதும் பிங்கிலிசுக்காறர்களும் தோப்புக்காறுவும் கூடியிருக்கச்சே புதுச்சேரியை கலகலவாய்ப்பிடுங்கிப் போடுவார்களென்று உச்சாகமாய்ப்பேசினவர்களும் அவர்கள் தானே யிப்போ புதுச்சேரியானுக்கு சுபாவை முழுகடிக்கவும் நாசறுசங்குவைப் போலேக்கொத்தவனை தெரத்தி அடிக்கவும செல்லும் காரியம் பெந்தமட்டுக்கும் சேகரிச்சுக்கொள்ளவேணுமோ அந்த மட்டுக்கும் நடத்திக்கொள்ளச் சொல்லிச் சொல்லும் அந்தப்படிக்கி மத்தப் பேர் நடக்கவேணுமென்றால் யேன் நடக்கும் கடசியிலே சிவன் மட்டுக்கும் வருமென்று யோகசாமித்தை சொல்லுகிறபடிக்கு புதுச்சேரியிலேயுமிங்கேயும் நடக்கப்பிறத்தியக்ஷமாய்க் கண்டோமென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள் ஆனபடியினாலே அவர்களுக்குத்தானே வெற்க்கம் தோத்திருக்குது. அவர்கள் பட்டணத்திலிருக்கிறவர்கள்தானே அவர்கள் பெகத்தாளி பண்ணுகிறதுமல்லாமல் பட்டணத்திற்கு யிசைகேடு தப்பாமல் வருமென்று நிதானிச்சுயிருக்கிறார்கள். யிப்போ பதினஞ்சு இருபது நாளைக்கு முன்னே சென்னப்பட்டணத்திலேயே யேகாம்பரீஸ்வரன் கோயில் திருநாள் நடத்தினபோது தேர் ஓடச்சே தேர் விழுந்ததென்றும் கோட்டையிலே ஒரு பெரிய நக்ஷத்திரம் எரிஞ்சுக்கொண்டு விழுந்ததென்று யிதினாலே செனத்துக்கு இசை கேடு வரும் தப்பாதென்று முன் அக்ஷய ஞு ஆவணி மீ 1746 ஞு ஆகஸ்டு செப்தர் மீ பிள்ளையார் சவுத்திக்குச் சரியாய் அன்றைய தினமே சித்தாதிரிப்பிள்ளையார் தேர் உற்சவத்துக்கு அப்படிதான் ரதம் விழுந்ததென்றும் உடனே அக்ஷய ஞு புரட்டாசி மீ 6 உ 1746 ஞு செப்தம்பர் மீ 21 உ பிறான்சுக்கொடி விழுந்ததென்றும் ஆனபடியினாலே அந்த பொல்லாத குறிப்பைத் தாட்டு சென்னப்பட்டணம் போமென்றும் அதுக்கடுத்த பேஷியம் புதுச்சேரியாருக்குத்தான் பகைச்சுக்கொண்டிருக்கிறார்கள் அவர்கள் தாங்களாய் வெளியே புறப்படாமல் போனாலும் மயிலாப்பூரிலே பாதிரியைப் பிடிச்சதும் புடுகிசுக்காறர் கொடி போட்டிருந்ததிலேதானே அந்தக்கொடியை வாங்கிப்போட்டு பிறாஞ்சுக் கொடி போட்டதினாலே விசுறுப் கோவேர (Viceroy of Goa) யிலிருந்து சிறிது கப்பல்களை அனுப்பி சென்னப்பட்டணம்

மயிலாப்பூர்களை வாங்கச்சொல்லி அனுப்பினதாகவும் அதுவும் பத்து பனிரெண்டு நாளையிலே வந்து சேருகிறதாகவும் சொல்லிக் கொள்ளுகிறபேச்சுக்கும் திஷ்டாந்திரம் சரியாய் இருக்குதென்றும் யிது மூதலான சேதிகளெல்லாம் கூடலூரிலிருந்து அந்த வூர் கும்பினீர் வர்த்தகன் தானே யிருந்தவூருக்கு வந்தவன் சொன்னு னென்று சொன்னேன். நாசறுசங்கு யின்றைய தினம் வந்தவாசி பண்டையிலே போயிறங்குறதாம் சேதி கேழ்க்கப்பட்டது ஆற்காடு போய் சேர்ந்த உடனே மூசபர்சங்குக்கு பிடவை சிலே குடுத்து ஆற்காடு சுபா கூட யிவருக்குத்தானே மெர்கறு பண்ணி அனுப்புகிறதாய் கேழ்விப்பட்டுது.

சுவாமியுடைய சித்தமெப்படியோ அப்படி நடக்கப்போகுது யென்று சொன்னேன். மெய்தானென்று ஒத்துக்கொண்டார் மத்தப்படி லோகாப்பிரமமாய் நடந்தது.

இத்தனாள் சாயங்காலம் துரையவர்கள் வண்ணாந்துரைக்குப் போய் வந்து என்னை அழைப்பிச்சு அனுப்பிவிச்சு குண்டுகிறாமங்கள் புதுச்சேரி முருங்கைபாக்கம் அரியாங்குப்பம் ஒழுகரை வகையறுக் கிறாமங் குத்தகைப்பணம் இரண்டு வருஷத்துப்பணம் குத்தகைக்காறர் குடுக்கவில்லையாம். அவர்களை நீ யேன் கண்டிச்சு செலுத்தச்சொல்லவில்லை யென்று கேட்டார். இங்கிரீசுக்காறர் வந்த வருஷம் பயிர் யேறாமல் போனதைத்தொட்டு அந்த வருஷத்துப்பணம் யிந்த யேழு வருஷத்திலேயும் சரிசுக்கு குடுக்கச்சொன்னபடியினாலே அந்தப்படிக்கி ஒருவருஷம் பணம்போக மற்ற ஒரு வருஷத்துப்பணத்துக்கு ஆனிவரைக்குமல்லோ செலுத்தவேண்டியது. இப்போ பாதிபணம் நாளையதினம் செலுத்துவார்கள். மத்தப்பாதி பணமும் ஒருவருஷத்துப் பங்குடுவிதம்மும் ஆனிவரையிலே சாடாவாய் செலுத்திப்போடுவார்களென்று சொன்னேன். அந்த ஒருவருஷத்துப்பணமும் யேழுவருஷத்திலேயும் கிரவினுப்போலேயும் வாங்கச்சொன்னமுமில்லை. முசியே பிறியேலை அழைப்பிச்சு கேட்டார் முருங்கைபாக்கத்துதும் புதுச்சேரியிதும் சிறிது பாக்கியிருக்குது. மத்தக் கிறாமங்களும் புதுச்சேரி முருங்கைப்பாக்கம் உள்பட ரெண்டு வருஷத்தை யிது வரவேணுமென்று சொன்னார். அதுக்கு நான் அந்த பாக்கி செலுத்திப் போட்டதாய்ச் சொன்னார்களென்னுடனே பின்னாலனுப்பினால் அது யின்னம் நன்றாய் விசாரித்துச் சொல்லுகிறேன் யென்று சொன்னேன். அதுக்கு

துரையவர்கள் முசியே பிறியேலைப் பார்த்து ஒரு வருஷத்துப் பணம் யேழு வருஷத்துக்குள்ளே நிரவினுப்போல் செலுத்தச் சொல்லி சொன்னேமா யென்று கேட்டார் அவர் நானிருக்கிறே னென்று உத்தாரஞ் சொல்லாமலிருந்தார்கள். நல்லது கணக்குப் பார்த்து நாளை யெழுதி வாருமென்று முசியே பிறியேலை உத்தாரங் குடுத்து யென்னைப் போகச்சொல்லி அவரைக் கேட்ட துக்கு அவருண்டென்று சொன்னர்.

**1750-௟ மாயு மீ 7-உ பிறமோதூத ௟ சித்திரை மீ 28-உ வியாழக்கிழமை.**

இத்தனுள் காலத்தாலே துரையவர்கள் யென்னை அழைச் சனுப்பிவிச்சு நாசறுசங்கு லசுக்கர் சேதி யேதாகிலும் வந்ததா யென்று கேட்டார் வந்தவாசியண்டையிலே யிறங்கிச்சுதென்கிற கபுறு போக்குவரத்து மனுஷர்கள் வருகுறார்களென்று சொன்ன துக்கு சந்தாசாயபு வீட்டுக்காவது முசபர்சங்கு வீட்டுக்காவது வரவில்லையா யென்று கேட்டார். வரயில்லை யென்று சொல்லி சந்தாசாயபு அவர்களுக்கு இரண்டு மூனு நாளைக்கு முன்பாக வந்த கபுறிலே சேக்கு மகம்மது சரீபு வென்கிறவன் முன் சென்னப்பட்டணம் வாங்கின நாளையிலே முசியே புரி (Mr. Bury) மகனைப் பிடிச்சுக்கொண்டு போக யில்லையா அந்த மகம்மது சரீபு யென்கிறவன் அதின் பிற்பாடு மயிலாப்பூரிலே யிருந்தான் யிப்போ சந்தாசாயபு வரச்சே கூட வந்தான். அன்னூறு குதிரைக்கு சமேதாரனுக குடுத்து யிருந்தான். நேத்து சேஷறுயன் முன் சுக்கில ௟ மாசி மீ 26 உ சிதம்பரத்தண்டையிலே பழங்கொள்ளிடத்தண்டையிலே முறாரி றுயன் மோறோபண்டிதன் காகிதாயும் முதலாக பதினுயிரம் குதிரையுடனே வந்து சண்டைபண்ணயில்லையா. அந்தச் சண்டையிலே சேஷறுபன் விழுந்துப்போனுன், யிந்த மகம்மது சிரீப்பு அவர்கள் கையிலே பிடிபட்டுப்போனுனென்றும் முதற் காவலிலேதானே நாசறுசங்கு லசுக்கரிலே யிருக்கிறான் அவ னுடனே மோறோபண்டிதன் காகிதாயிம் திருச்சிறுப்பள்ளி தஞ்சாவூர் மனசுபாசாகீர் முதலானது சந்தாசாயபுக்கு கொடுக் கிறேமென்றால் சம்மதியில்லை. ஆற்காடு கூட குடுக்கவேணு மென்று கேழ்க்கிறானும் நாசறுசங்கு தூற்று முப்பதிங்காத வழி வந்து கீர் சோறுவாரியாய் சுபா முழுக்கடிச்சு றாச்சியத்தை கட்டிக்

கொண்டதற்கு ஒன்றுமில்லாமல் சகிச்சுக்கொண்டு ஆற்காடு சுபா வும் யிவருக்குத்தானே குடுத்து முசபர்சங்கையும் விட்டு அவராச்சியமுங் கொடுத்து கிஷ்ணைக்கிப்பிறம் யிருக்கிற சீமையும் கொடுத்துப் போறதுக்கு ஆகத்தானே இரண்டு கோடி திரவியம் செலவழிச்சுக்கொண்டு அந்த ராச்சியம் யிந்த ராச்சியத்துக்கு நூற்றுப்பதினாத வழி வந்து சண்டை பண்ணி ஆக்கிருக்கு முசபர்சங்கையும் பிடிச்சுக்கொண்டுதும் விட்டுவிட்டு சும்மாய்ப் போற நிமித்தியம் தானே வந்தது. யென்று யிப்படி நடப்பிச்சுப் போட்டுபோனால் அவருக்கு வெகு கீர்த்தியல்லோ வரும் யிந்த அபகீர்த்தி சம்பாதிக்கிறதுக்காக வந்தார் அவர் தக்கண (Deccan) பாதுசா யென்று பேரிட்டு லட்சம் சுவாருடனே வந்தவர் ஆக்கிருக் குப் பிறுன்சுக்காறர் சந்தாசாயபும் மனசி அப்படிக்கு நடப்பிக்கா விட்டால் யிவர் தப்பி வரப்போறதில்லை. ஆனபடியினாலே அவர் கள் மனசுப்படிக்கு நடப்பிச்சுப்போட்டு யிவர் தப்பிச்சுக்கொண் டாரென்கிற அபகீர்த்தியை மேலே போட்டுக்கொண்டு போகச் சொன்னலிது ஆருக்காகிலும் சம்மதிப்படுமா ஒரு பயித்தியக்கார னும் சம்மதியாதென்று சொன்னார்களாம் அதுக்கு அந்த சேக்கு மகம்மதுசரீப்பு யிருந்து நாசறுசங்கு அவர்கள் திருச்சிறுப் பள்ளி தஞ்சாவூர் பஞ்சகஸ்தி (5000) மனசுபாசாகிர் அது குடுக் குறோமென்று சொன்னால் சந்தாசாயபு ஒருக்காலும் வாங்க மாட்டோமென்று சொல்லான். பந்தானு ஆலி அவர்கள் அவன் செய்த தப்பும் க்ஷமிச்சு யிந்தப்படிக்கி தயவுபண்ணுகிறோம் யென்று சொன்னால் இதுக்கு சம்மதிக்கமாட்டோமென்று ஒருக் காலும் சொல்லான். நானல்லோ சம்மதிக்கபண்ணுகிறனெ னென்று சொல்ல நாசறுசங்கு அவர்களுக்கு காகிதாயிம் மோறோபண்டிதனும் போய்ச் சொல்ல அதின்பேரிலே மகம்மது செரீப்பை அவராழைப்பிச்சு நீ சொன்னபடிக்கி சம்மதி பண்ணி விச்சயேயானால் உன்னுட முசுறுவிருக்கும் நீயும் சுகப்படுவா யென்றும் சொன்னாரும். அந்தச் சேதியெல்லாம் மகம்மது செரீப்பு சந்தாசாயபுக்கு யெழுதி நீர் அல்லது என்றால் நாசறு சங்கு பர்வானா வாங்கிக்கொண்டு காரியமெல்லாம் செகாப்படுத் திக்கொண்டுவிட்டால் கிஷ்ணை கடந்து நாசறுசங்குவிடம் விட்டு அப்பிறம் போனால் அப்பிறம் ஆற்காடு கட்டிக்கொள்ளலாம் இன் னேரத்தைக்கு சம்மதிக்குறது நல்லதென்று யிகுதியும் தெரியப் பட யெழுதி அனுப்பிவிச்சான். இங்கே ஸ்ரீ. கோவர்ணதோர்

சொல்லி அனுப்பிவிச்சேன். அப்பால் நாலரை மணி வேளைக்கு மச்சிலிபந்தரிலேயிருந்து மூசியே கொக்கேத்துக் காகிதம் துரையவர்களுக்கு கொண்டுவந்து கொடுத்து சொன்ன சேதியென்னவென்றால் தாங்கள் பிறப்பட்டு பதினஞ்சு நாளாச்சுது என்று மூசியே கொக்கேத்து லா சேல் (M. de la Selle) துபாசி நாரசுவையும் வர்த்தகரையும் நாசருசங்கு மிதாயித்து மொக தின்னானை சண்டையிலே பிடிச்சுக்கொண்டு பத்தே ஆனேமென்று யெழுதி பிறான்சுக் கொட்டடிக்காறரையும் காவல் வைக்கச்சொல்லி பெத்திரி மத்தயிடங்களெல்லாம் முத்திரிக்கச் சொல்லி யெழுதினபடிக்கி மச்சிலிபந்தர் (Masulipatam) சுபேதாரன் தன் மகனை பெத்திரி (Fort) பார்க்கவாருமென்றெம்பிச்சு உள்ளே பவுன்சுடனே பனிரெண்டு மணி மத்தியானம் வேளையிலேயே மறியிருக்க மோசம்பண்ணி வந்து பிடிச்சுக்கொண்டு போய் பேட்டையிலே காவல் வைத்தான் அந்தச் சேதிக்கு மூசியே கொக்கேத்து காகிதம் கொடுத்தான். கொண்டுவந்தேனென்று சொன்னான். இதல்லாமல் ஆனையின்பேரிலேயும் குதிரையும் ராணுவும் வந்து மிறங்கிச்சுது. அங்கேயவர்கள் பிடிக்கமாட்டார்களென்று கபுறு அறிஞ்சத்தினாலேயும் அறுபது யெழுபது சோலுதாதுகளிருக்கிறதினாலேயும் அவர்கள் சண்டை குடுக்கிறார்களென்றும் சேதி சொன்னான்.

1750-ஹூ மாயு-மீ 9-பிறமோதூத ஹூ சித்திரை மீ 30 உ சனிவாரம்.

இத்தனான் காலத்தாலே துரையவர்கள் மார்ச்சளி பிடிச்சுக்கொண்டு சரீரம் சத்து லகுவில்லாமலிருந்தபடியினாலே ஒன்பது மணி நேரம் மட்டுக்கும் நித்திரை போய் எழுந்திருந்து உடுத்திக்கொண்டு சாலேயே வந்தார். நானும் போய் சலாம் பண்ணினேன் அப்போதான் கபே குடிச்சு யெழுந்திருந்தார். சேக்கு அசேன் வந்து தோட்டம் போட்டுக் கொள்ளத் தக்கதாக இரண்டு காணி நிலம் கேட்டு சீட்டெழுதிவிச்சு ஒடுதினதிலே கையெழுத்து வாங்கிக் கொண்டு போறவன் என்னைப் பார்த்து பிறம்மணத்தெருவிலே—வடவண்டையிலே வடசாருமுன் வீடாகிய சீனப்பப்பன் கட்டியிருந்தது ருபோநொரோசி (Roy-Naroji) அவர்கள் வாங்கியிருந்ததை மிங்கிலீசுக்காற கலகத்தும்போது யேலம் போடுகையிலே பீப்பாக்காற வெள்ளைக்காரன் தொளா

யிரத்து அறுபது ரூபாய்க்கு வாங்கியிருந்த வீட்டை நான் ஆயிரத்து நூத்துச் சில்லரை ரூபாய் வாங்கியிருக்கேன். அந்த வீட்டுக்கு இன்றைக்கு குடிபோறேன்,

உங்கள் வீட்டுப் பிறகே நானும் சமுசாரத்துடனே குடி வந்தேன். நாங்கள் வேலைக்காறனென்றும் மனதிலே வைத்து விசாரித்துக்கொள்ள வேணுமென்றும் இது நடுவே சிறிது குறைகளாய் நடந்ததுண்டு. அது மனம் பொறுக்க வேணுமென்றும் தான் தானே விஸ்தரிச்சு ரொம்பவும் உபசாரஞ் சொன்னான். நானுமதுக் கடுத்தாப்போலே அவன் வாய் மூடி போதுமென்று சொல்லி உபசாரமாய்ச் சொல்லி ஆனவுடனே துரையவர்கள் வந்து யென்ன சமாச்சாரம் யென்று கேட்டார், தேவனாம்பட்டணம் மேஸ்தர் பிளேயருக்கு அரையாப்புகள் கட்டிகள் கிரந்திகள் முதலான வியாதி வந்து அதின்பேரிலே ரொம்ப வருத்தமாயிருக்குதென்றும் றணங்கள் சில ஓடுது யென்றும் அதினாலே பிழைக்கிறது ரொம்ப வருத்தமாயிருக்குதென்றும் சொல்லிக் கொள்ளுகிறார்கள் சென்னப்பட்டணம் துரைத்தனம் பண்ணுகிற மேஸ்தர் பிரேன்ஸ் (Mr Prince) ன் பேரிலே அவ்விடத்துக்கும் படைகள் வர்த்தகர்கள் பெருசாய் அன்னியாயம் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள் யென்றுமிப்படியானால் நாங்கள் பட்டணம் விட்டுப் போறோமென்றும் தேவனாம்பட்டணம் சீமைக்குப் பித்திரமெழுதிக் கொண்டாப்போலே அதின் பேரிலே வேறே துறைத்தனம் அனுப்புகிறார்களென்று ஒரு சேதி நாகப்பட்டணம் துரையில் சிறிது. பீரங்கிகள் குண்டுகள் முதலானதுகள் ஏத்தி சதுரங்கப்பட்டணத்துக்கு அனுப்புகிறது. அந்த கப்பல் நேத்து தேவனாம்பட்டணம் துறை பிடிச்சு சிறிது செம்புடுபட்டிகளிறக்கிப்போட்டுப் போகத் தக்கதாக துறை பிடிச்சாரென்றும் அதுதான் நேத்து கேட்டப் பீரங்கி நேத்துதானே சரக்குகளை யிறக்கிப்போட்டு போனார்களென்றும் அந்தக் கப்பலின்றைக்குப் பாயெடுத்து ஓடிப்போவானென்று சொன்னார்கள் என்று கபுறு வந்து சொன்னதாய்ச் சொன்னேன். இதல்லாமல் நாசறுசங்கு லசுக்கர் பாப்பந்தரங்களிலே போயிறங்கினதென்றும் இன்றைக்கு முன்னுவாடி ரொம்ப மொண்டுயிருக்குதாம் அதிலே யிறங்குவானென்று சொன்னார்கள். ஆனாலிதை மெய்யென்று நம்பப்போகாது. அங்கே யிருந்து வந்தேனென்று ஒருத்தரும் சொல்லவில்லை. அங்கே சொன்னார்கள் இங்கே சொன்னார்கள்

யென்று சொல்லுகிறார்கள் யிதல்லாமல் பின்னை ஒருத்தன் வந்த வாசிக்கு யிப்பறம் நல்லூரென்று நாலு நாழிகை வழிக்கிப் பிற மிருக்கிறது அங்கே லசுக்கர் யிறங்கின வாக்கிலே யிருக்குமென்றும் சொல்லுகிறார்கள் அல்லீ நக்கீம் சாயபு வந்தவாசி கோட்டையிலிருந்தும் மோறே பண்டிதன் மாரிபத்திலே வந்து பேட்டி வாங்கிக் கொண்டு மொகத்துமாவும் ரெண்டு லக்ஷத்து அன்பதினாயிரம் ரூபா யாதீத்துக்கொண்டார்களென்றும் சொன்னான். இனிமேல் அங்கேயிருந்து உத்த மனுஷராய் வந்தார்களானால் அதின் பேரிலே மெய்யாய் யெண்ண வேண்டியதென்று சொன்னேன்.

**1750-ஸ்டு மாயு மீ 10 உ பிறமோதூத ஸ்டு சித்திரை மீ 31 உ ஆதிவாரம்.**

இந்நாள் பகலைக்கு மேலாக ஒரு மணிக்கு சேக்கு அசேன் காகிதம் வந்தது வந்தவுடனே துரை அழைச்சாரென்று ரெண்டு சேவுகன் வந்து அழைக்கச் சாப்பிட்டு அங்கி போட்டுக்கொண்டு மதனாந்தபண்டிதரையும் அழைத்து வரச்சொல்லி கூட்டிக்கொண்டு போனவுடனே சேக்கு அசேன் அனுப்பின காகிதத்தை யென் கையில் கொடுத்துப் படிச்சச் சொல்லுயென்று சொன்னார். நல்லதென்று மதனாந்தபண்டிதன் கையிலே குடுத்து படிக்கச் சொல்ல அவர் படிச்சு சொன்ன வயணம் தங்கள் கையில் உத்தாரம் பெத்து நான் வந்து ராத்திரி யிருபத்து நாலரை நாழிகைக்கு வழுதாவூர் கோட்டை அண்டையிலே போயி நின்று நாங்களும் பத்து வேட்டு கோட்டையைப் பார்த்து சுட்டோம் அவர்களும் பத்து வேட்டு யெங்களைப் பார்த்து சுட்டார்கள் அதின் பேரிலே பேட்டை அண்டை கட்டிக்கொண்டு யிருக்கிறோம் கோட்டையிலே அனால் சண்டை சாமானு மாத்திரம் மஸ்தும் விஸ்தாரமாய்ச் சேர்த்துக்கொண்டு கோட்டையிலே அவனும் பெலத்துதானே யிருக்கிறான். கோட்டை வாங்கவேணுமென்றால் அதுக்குத்தக்க சரன்சாமியும் அனுப்பி கோட்டை வாங்கச் சொல்லி உத்தாரங் குடுத்தால் அந்தப்படிக்கு கோட்டையை வாங்குறேன்-என்றும் யெழுதி அப்பால் நாசறுசங்கு லசுக்கரிலேயிருந்து ரெண்டுபேர் அறக்காறுகளும் ஒரு பிறுமணன் அறக்காறர் சிதம்பரம் முதாமியாவுக்கும் மசூசுகான் முதலான பேர் அனுப்பின காகிதங்களும் பறங்கிப்

பேட்டை அமீல் சேக்குஅமீது தம்பி அமுல் பண்ணுறவருக்கு சம்புதிராயன் ஷெ வக்கீல் காகிதங்களும் கொண்டு கொண்டு வந்தார்கள் அவர்களுடனே சிறிது பேர்கள் சேவுகர்களும் வந்தார்கள். அவர்களையெல்லாம் பிடிச்சு உங்களண்டைக்கு அனுப்பிவிச்சோம். அவர்கள் கையில் யிருந்த காகிதங்களையெல்லாம் வாங்கி அனுப்பிவிச்சேன் அந்த காகிதங்கள் பார்த்துக் கொள்ளச்சே நாசறுசங்கு லசுக்கர் கபுறெல்லாம் உங்களுக்கு விசிதப்படுமே யென்றும் யிப்பால் யெனக்கு நடக்கவேண்டியதுக்கு வயணமும் யெழுதி அனுப்பிவிச்சால் அந்த காகிதப்படிக்கி நடந்துகொள்ளுகிறேனென்று யெழுதியிருந்தது. அந்தச் சேதியாம்படியே பிறபுவுக்கு அறிக்கை பண்ணினவுடனே சிதம்பரம் அமீல்மமுதுகான் பேருக்கு மமுதல்லிகான் மபூசுகான் சம்பதிறுபன் மூணு பேர்களும் யெழுதின காகிதத்தைப் படிச்சுச் சொல்லச்சொன்னார். மபூசகான் சம்பதிறுபன் ரெண்டுபேர் காகிதத்திலேயும் யெழுதியிருந்த வயணம் துரையவர்களுக்குப் படிச்சுச் சொன்னது நீர் யெழுதின காகிதம் வந்து சேர்ந்தது வாசித்துக்கொண்டு அதிலுள்ள சமாச்சாரம் தெரியவந்தது. ஆனால் மாராட்டியருடைய சருதாறுகளுக்கெல்லாம் சீமைகளை ஆட்டிகள் பண்ணுகிறது வாண்டாமென்று தாக்கீது யாச்சுது.

இனிமேல் அந்த வட்டங்களிலே மறாட்டியர்கள். குதிரைகளென்று ஒரு குதிரையாகிலும் வரத்தக்கதில்லை. நபாபு நாசறுசங்கு அவர்களும் கூச்சுபண்ணி வந்தவாசி அண்டையிலே வந்து யிறங்கினது யிவ்விடத்து மொகத்துமாவும் வைசல் பண்ணியாபி யினிமேல் யிங்கேயிருந்து கூச்சுமேல் கூச்சாய் ஆற்காடு போய் சேர்ந்து அங்கே நவுறோசுபண்டிதரைக் கொண்டாடி பனிரெண்டு மொக்காம்பண்ணி அங்கேயிருந்து மசலதருமசலாய் அபிதராபாத்துக்குப் போனார். ஆனபடியினாலே அரண்மனைக்குப் பணம் விஸ்தாரமாய் பெகு சறூற ஆனபடியினாலே சிதம்பரம் புவனகிரி பற்காணுக்களுட பணம் பெகு சுருக்கிலே வந்து சேர அனுப்பவும் யென்று மறாட்டியர் குதிரைகள் கலாபங்களில்லாததை தொட்டு தானியங்களை பெகு சுருக்கிலே வித்துப் பணம் பெகு சுருக்கிலே அனுப்பவும் யென்று யெழுதியிருந்தது. மமுதல்லிகான் காகிதத்தில் உபசாரம் மாத்திரம் நீர் அனுப்பின காகிதம் பார்த்துக்கொண்டோம் உம்முட சந்தோஷ அதிசேயங்களுக்கு அப்போதைக்கப்போது எழுதியனுப்பவுமென்று யெழுதியிருந்தது.

இந்த மூனு காகிதங்களுட சேதி சொன்னவுடனே சம்பதிராயன்
பறங்கிப்பேட்டை அமீல்சேக்குஅமீது தம்பி சேக்குஅமீது
பேருக்கு எழுதின காகிதத்தைப் படித்துச் சொல்லச்சொல்லி
அதிலே யெழுதியிருந்தது நீ யனுப்பின காகிதம் வந்து சேந்து
வாசித்துக்கொள்ள அதினுடைய அபிப்பிறாயமெல்லாம் தெரிய
வந்தது. மிப்பவும் பந்தகானு ஆலிஆச அவர்கள் வழுதாவூர்
விட்டுப் பயணமாய் கூச்சின்பேரிலே கூச்சாயி வந்தவாசி அன்
டையிலே வந்து சேர்ந்தார்கள் இங்கே யிருந்த கூச்சின்மேல் கூச்
சாயி ஆற்காடு சேர்ந்து ஆற்காட்டிலே நவறோசு பண்டிகை
கொண்டாடி அங்கேயிருந்தும் பயணம் சாகிப்போறார் ஆனபடியி
னாலே பிறான்சுக்காறர் மெத்தப் பொல்லாதவர்களானபடியினாலே
நீ பறங்கிப்பேட்டையிலே யிருக்கவேண்டாம் இந்தக் காகிதங்
கண்டவுடனே அரை நாழிகையாகிலும் அங்கே யிறாமல்படிக்கு
பிறப்பட்டு லசுக்கர் வந்து சேரவும் லசுக்கர் வந்து சேருகிறதுக்கு
வழிகளிலே கலாபமானால் கூடலூர் தேவனாம்பட்டணமதிலே
போயிரு. அப்பிறம் சமயம்பார்த்து யிப்பால் பிறப்பட்டு வரவும்
யென்று யெழுதியிருந்தது. அந்தச் சேதி துரையவர்களுடனே
சொன்னவுடனே சேக்குஅமீது தம்பியினுட வைக்கீல்
அந்தாசிபண்டிதன் யென்கிறவன் சேக்குஅமீது தம்பி
பேருக்கு யெழுதின பாரீசுக் காகிதத்துச் சேதியைப் படிச்சு
சொல்லச்சொன்னார். அந்தக் காகிதம் படிச்சு துரையவர்
களுக்கு சேதி சொன்னதாவது முன்னாலே நவாபு நாசறு
சங்கு அவர்களிருந்தாப்போலே யிருந்து பயணமான சேதி
யின்ன காரியநிமித்தியம் யென்று முன்னெழுதின
காகிதத்தினாலேயும் உமக்கு விகிதமாய் தெரிஞ்சயிருக்குமே
யிப்பவும் அவ்விடத்திலே நடக்கிற சேதி நாசறுசங்கு
அவர்கள் வழுதாவூரிலிருந்து பயணம் பிறப்பட்டு கூச்சுதற் கூச்
சாயி வந்து வந்தவாசிக்கி யிப்பிறம் நாலுகோசிலே மலுவாயி—
(Mulavai) அண்டையிலே யிறங்கி யிருக்குது. தக்காசாயபு குமா
ரன் அல்லிநக்கிம்சாயபு வந்து நாசறுசங்கு அவர்கள் பேட்டி
வாங்கிக்கொண்டு அவர்கள் மொகத்துமா ரெண்டு லக்ஷத்து அன்
பதினாயிரம் ரூபாயாக தீந்துது. யென்றும் யினிமேல் கூச்சுதற்
கூச்சாய் ஆற்காடு போய் சேர்ந்து அங்கே நவறோசு பண்டி
கொண்டாடி ஆற்காட்டிலே பனிரெண்டு நாள் மெக்காம் பண்ணி
அங்கேயிருந்து கூச்சுதற் கூச்சாய் பிறப்பட்டு அயிதாராபாத்து

போய்ச் சேர்ந்தவுடனே பேய்ச்சிரவணி பண்ணுகிறார். ஆற்காட்டு சுபாவுடனே சேர்ந்தது யிந்த மட்டுக்கும் ஒருத்தருக்கும் நிஷ்கருஷை பண்ணவில்லை முன்னாலே மேஸ்த்தர் கோப்பு ரெண்டாயிரம் சொலுதாதுகளுக்குச் சம்பளம் மாசம் 1-க்கு பன்னீராயிரம் ரூபாயாக திட்டம் பண்ணி வருஷம் ஒன்றுக்கு லக்ஷத்து நாற்பத்தினாலாயிரம் ரூ-144000 ஆச்சுது இதுக்கு பூந்தமல்லி சீமையும் மயிலாப்பூரும் தேவனாம்பட்டணம் சீமையும் சாகீராய் விட்டால் நாங்கள் சுபாவுக்கு மத்தத்தாயிருக்க பிறான்சுக்காறர்கள் குண்டுவிட்டு வெளியே பிறப்படாமல் யெப்படி நடக்கவேணுமோ அந்தப்படிக்கி அடக்கிறோமென்றும் நவாபோத்து முதலானது தங்களுக்கு குடுக்கவேணுமென்று யிதை புஷ்டிகட்டி யெப்படி விஸ்தரிச்சு எழுதிக் குடுக்க வேணுமோ அந்தப்படிக்கு அறசி யெழுதிக் கொடுத்தது அதன்பேரிலே அந்த அரசியைக் கிழிச்சுப்போட்டு போகச் சொல்லிக்கொண்டதின் பேரிலே மேஸ்தர் கோப்பு முதலான பேர் பிறப்பட்டு தேவனாம்பட்டணத்துக்கு அவமானப்பட்டுப் போய்விட்டார்களே யிப்போ மறுகல்லிதான் தெரியப்படச் சொல்லி யெழுதிப்போயிருக்குது மறுப்படியும் யெழுதிப்போயிருக்குது யிதுவும் ஆற்காட்டுக்குப்போய் அங்கே நடக்குமோ தெரியாது. பிறான்சுக்காறர்களுக்கே பிறப்பட்டு டாணாவுகளிலே யிருந்தார்கள் தொத்திவிட்டு தங்கள் டாணா போடுகிறார்களானபடியினாலே தாங்கள் பறங்கிப் பேட்டையிலே யிருக்கத் தேவையில்லை. தேவனாம்பட்டணம் போயி சேரவும் என்றும் சயிதுல்லாக்கானையும் சயிதுசரிப்புக் கானையும் முப்பதினாயிரம் குதிரையுடனே முன்னே போகச் சொல்லி உத்தாரம் குடுத்து அவர்களுக்கு சிரொப்பாவும் ஆயி அவர்களும் பயணம் போறதாயிருக்கிறார்கள் மருட்டியர்களும் அவரவர்கள் தங்கள் சனாவுக்கு பயணமனுப்பி விச்சுக்கொண்டு தங்கள் தங்கள் பவுஞ்சுடனே போறதாயிருக்கிறார்களென்றும் லசுக்கரிலே யெருதுகள் குதிரைகள் முதலான சீவ சந்துக்கள் சாகிறது மிதமில்லை. நாத்தம் மனுஷர்கள் தலைவைத்துப் படுத்துக் கொள்ளக்கூடாது அத்தனை நாற்றமென்றும் யிது முதலான சேதி யெழுதி யிருந்தது. யிதல்லாமல் பின்னை ஒரு தாணாக்கையிலே நீர் பரங்கிப்பேட்டையிலே சறுவாத்துமனாக யிருக்கவேண்டாம் தேவனாம்பட்டணத்தையும் நம்பியும் அங்கேயும் போகவேண்டாம். செல்வையாய் பிறப்பட்டு லசுக்கர் வந்து

சேர்ந்தால் சுகப்படுவீர். சம்பதிருயனெழுதின காகிதப்படிக்கு
அரை நாழிகையாகிலும் நில்லாமல்ல் பிறப்பட்டு வந்து விடவும்
யென்று யிருந்தது. பின்னை ஒரு துணுக்கையிலே தேவனாம்பட்ட
ணம் கப்பித்தானுக்கு ஒரு ஆனையும் மூணு குதிரையும் சீறுப்பா
வும் மழுதல்லிகான் தெரியப்படச்சொல்லி அனுப்பத் தக்கதாக
பேர் விளங்கன் சமேதார் வசம் பண்ணி தேவனாம்பட்டணத்
துக்கு கொண்டுபோகச் சொல்லி உத்தாரமச்சுது யென்று
எழுதி யிருந்தது இந்த சேதிகள் யெல்லாம் துரையவர்களுடனே
சொன்னதுக்கு அவர்கள் சொன்ன உத்தாரமென்னவென்றால்
சிதம்பரம் மழுதுகான் பேருக்கு மாபூசுகான் மழுதல்லிகான்
சம்பதிராயன் அனுப்பின மூணு அசல் காகிதமும் யிங்கே வைத்
துக்கொண்டு அதுக்கு சவாதுயெழுதி நீயும் ஒரு காகிதமும்
மழுதுகான் பேருக்கு எழுதிஅசல் வைத்துக்கொண்டு அதன்
சவாது அனுப்பிவிச்சோம் சிதம்பரம் தணக்கா சம்மதி பணமும்
புவனகிரி பட்டணம் சீமை குத்தகைப் பணமும் சீக்கிறமத்துக்கு
அனுப்பச்சொல்லி யெழுதி யனுப்பச்சொல்லி பறங்கிப்
பேட்டை அமீல்சேக்கு அமீது தம்பிக்கு சம்பதிருயன்
யெழுதின காகிதம் வை வக்கீல் அந்தாசி பண்டிதன் அனுப்
பின காகிதத்தில் நீ தேவனாம்பட்டணத்தாரையும்
நம்பாதே சீக்கிறமத்துக்கு சம்பதிருயனெழுதினபடிக்கி லசுக்கர்
வந்துசேரச்சொல்லி யெழுதினபடிக்கி எந்தவிதமாகிலும் லசுக்கர்
வந்து சேரவுமென்று யெழுதியிருந்தது. அந்தச்சிட்டு அசலுமி
துக்கு சவாதுயெழுதிக்கொண்டு அசலைக்கொடுத்து அனுப்பச்
சொல்லியும்சொன்னார் அந்தப்படிக்கு யெழுதிக்கொண்டு அனுப்புவி
ரேமென்றுசொல்லி ஆனபிற்பாடு அங்கேயிருந்து வந்த அறக்கா
ருக்களையும் சிதம்பரம் மழுதுகானுக்கும் மாபூசுக்கான் காகிதம்
கொண்டுபோன அறக்காறர் ராமப்பனையும் அழைச்சு துரையவர்
கள் நீங்கள் அறக்காருக்கள் ஆருடைய மனுஷரென்று கேட்டார்.
முசபர்சங்குவினுடைய சருபு—மனசுக்ருவுடைய மனுஷர்கள் மனசுக்
ருபர், நாசறுசங்கு கலகம் வருமென்று இரண்டாயிரம் வருகள்
மட்டுக்கும் தேவனாம்பட்டணம் கோவர்னதோர் துபாசி பின்னை
யும் அவரவருக்கு செலவுபண்ணி அங்கேயிருக்கவும் ஒருவேளை
யிம்முதப்பி நாசர்சங்கு மனுஷர்வந்து ஒப்பிவிக்கச் சொன்னாலும்
ஒப்புவிக்கமாட்டோம் யென்று நீங்களென்னை காப்பாத்துவீர்களா
வென்று கேழ்க்க ஒரு உபத்திரவமும் யில்லாமல் காக்கிறோ

மென்று பரவசமாய் கேழ்க்க கோவற்னதோரும் துபாசியும் பா
வசங்குடுத்திருக்கச்சொல்லி அதன்பேரிலே யிருந்தயிடத்தில்
அப்படியே பசுகள் குஞ்சுகள் மாத்திரம் வைத்துப்போட்டுயிவர்
முசபர்சங்கு லசுக்கருந்தும் கூட அநேகமாய் போக்குவரத்துமா
யிருந்தார் முசபர்சங்கு அங்கே கின்றப்போலே இவன் செவ்வை
யாய் வந்து தேவனாம்பட்டணம் சேர்ந்து குஞ்சு குழந்தை
களுடனே கூடயிருந்தான் நாசறுசங்கு மனுஷர் சானவாசுகான்
காகிதம் கொண்டுவந்து துரைக்கு குடுத்து அவர் அதை கும்பி
னீர் சேவுகரையிட்டு அழைப்பிச்சவுடனே பயமில்லையென்றவன்
தான் வந்தவனைப்பிடிச்சு நாசறுசங்கு அறக்காறுகள் பிறகே
தங்கள் கும்பினீர் சேவுகன் கையில் ஒப்பிச்சு அனுப்பிவிச்சான்.
அவன் கொண்டுபோய் சானவாசுகான்கையில் ஒப்பிவிச்சுப்
போட்டுவந்தான் அவன் முசபர்சங்கு கசானா கணக்கு ஒப்பிவிக்
கச் சொல்லி கேட்டார். அறுபதுலக்ஷம் ரூபாயிந்து சமுகனுசு
பண்ணி ஒப்பிச்சார். யிது பாதுசா பற்வானா வக்கயிற்பாடு அது
முதல் யிதுவரைக்கும் கணக்கு சரியாய் ஒப்பிச்சும் கணக்கு
வித்தியாசமிருக்குதென்றும் யிருக்கிற பணத்தைக்கொண்டுவந்து
குடுக்கச்சொல்லியும் கையைதூக்கி அடி அடியென்று அடிக்கக்
கொல்லுகிறார்களென்று இரண்டுபேரிலே ஒருத்தன் அழுதுக்
கொண்டு சொன்னான். யேன் அழுதாயென்று கேட்டான்
அவன் சொத்து சாப்பிட்டு பவனண்டையிலே வேலைசெய்த
மட்டுக்கும் அவன் பெண்ணோடும் இந்தப்படி அவர்கள் யெம்
பாதையாய் நடத்துகிறது பார்க்கச் சகிக்கக்கூடாது. ஆனபடியி
னாலே யாங்காட்டும் அவர்கள் தாயாருக்கு கபுறு சொல்லிப்போ
றோம் அவர்கள் தாயாரும் மகனுக்கு யிப்படிப்பட்ட அவஸ்தை
வரலாமா வென்று அவளழுது செத்துப்போனாள் யெனக்கு
இரண்டு துக்கமும் பார்க்க யில்லையென்று அழுதுகொண்டு
சொன்னாள்.

அதுக்கு துரையவர்கள் யென்னைப்பார்த்து இந்த யிரண்டு
பேர்களும் அவன் வேலைக்காறர்களாமே இவர்களிலே ஒருத்த
னுக்கு மாத்திரம் எசமான் படுகிற கஸ்தி பார்க்கமாட்டாமல் அழு
கிறதென்ன ஒருத்தனுக்கு துக்கமில்லாமல் சந்தோஷமாய் நகை
முகமாய் பேசுகிறதென்னவென்று கேட்டார். அதுக்கு நான்
சொன்னது எல்லாருமப்படியே எசமான் சொத்து சாப்பிடுகிற
வர்களுக்கெல்லாம் அந்தப்படி ஊருக்குமிருக்குமா பதினயிரத்

திலே ஒருத்தன் சுவாமி காரிய துரந்தரனாயிருக்கப்போறதும் யிகத்திலிருக்கிற மட்டுக்கும் சுகமாய் அவன் மனதுக்கு தக்கினப்போலே அன்னவஸ்திரங்களுக்கும் உபத்திரவங்களில்லாமல் சுகமாய் நடக்கிறதுக்கு தாக்ஷயில்லாமலிருப்பான் செத்தாலும் மோக்ஷமும் கிடைக்கும் லோகத்துக்குள்ளே வேலைக்காரன் தன் எசமானனிடத்தில் அத்தனை பட்சத்துடனேதானிருக்கவேண்டியது ஞாயம் அப்படியிராதவர்கள் யிம்மையிலேயும் அடிக்கடி கிலேசப்படும் மறுமையிலேயும் மோக்ஷத்தையடையாமல் நரகத்தை அடைவார்களென்று சொன்னேன். மெய்தானென்று ஒத்துக்கொண்டார் அப்பால் நல்லது இரண்டுபேர்களையும் யிதரயித்து மொகிதின்கான் தாயாரண்டைக்கு கூட்டி அனுப்பச் சொல்லிச் சொன்னார் நல்லது அனுப்புகிறோமென்று முசபர்சங்கு சேதியென்னவென்று கேட்டேன். அதுக்கவர் சொன்னது முசபர்சங்கு யின்னேரமட்டுக்கும் காவலிலே பெரியமனுஷர் சயிது லசுக்கர்கான் முதலானபேர் ரொம்ப தெரியப்படச் சொன்னார்கள்.

அதன்பேரிலே பல்லக்கின் பேரிலே போனால் முன் படுதா போட்டு கட்டிப்போடுறது. இப்போ படுதா எடுத்துப்போட்டு வெளியாயி சகல சனங்களும் பார்க்கும்படியாக போறதுமல்லாமல் முன்னுக்கிப்போ மூகம் சத்துகளையுமிருக்கிறது. ஆற்காடு சேர்ந்தவுடனே சீறப்பாவும் ஆற ஆற்காட்டு வகைபறாவும் கொடுக்கிறதாயிருக்கிற பெரிய மனுஷர்களெல்லாம் பேசி உடன்படிக்கை பண்ணியிருக்கிறதாக சகலமானபேரும் சொல்லிக்கொள்ளுகிறார்கள். மங்சுகர்றுபனும் அந்தப்படிக்கித்தான் தங்கள் தாயாருக்கும் சொல்லச்சொல்லி பின்னை ஒன்றும் சிந்தனைபண்ண வேண்டாம் அஞ்சாறு நாளைக்குள்ளே யெப்போதையும்போலே சுகப்படுகிறதுக்கு ஆலோசனை பண்ணக்கவையில்லையென்று தைரியமாய்ச் சொல்லச்சொன்னார். மங்சக்கர்றுபனும் அந்த தைரியத்தின் பேரிலேதானிருக்கிறான் என்றும் சொல்லி வந்தவாசி மொகத்துமா ரெண்டுலட்சத்தி அன்பதினாயிரம் ரூபாயி மோறே பண்டிதன் மாரிபத்திலே தீர்ந்ததாகவும் அப்பால் சப்பிதால்லிகான் குமாரனுக்கு ஆற்காடு சுபா குடுத்தால் அதுக்கு பத்துலக்ஷம் ரூபாய் திரவியம் விசேஷத்துதர ஒப்புறேம் பிறுவனக்காறன் சந்தாசாயபுக்கும் சமாதானம் பண்ணிக்கொள்ளுகிறோமென்று மோறே பண்டிதன் மாரிபத்திலே அல்லி நக்கிம் சாயபு சால்சவாபு நடப்பிச்சுப்போட்டு மறுபடி உள்ளே தகப்பனாரண்டைக்குப்

போனாரென்றும் அந்தச் சேதி யேதாகிலும் பைசலானால் அப்
பால் மசல்தரம்சனைப் போய்விடுவாமென்று சொன்னான்.
அப்பால் சிதம்பரம் லாதுகான் அறக்காரூர்ரூமய்யன் யென்கிற
வனை கேட்டுது சிதம்பரம் தலைக்கா பணமும் புவனகிரி பட்டணம்
குத்தகைப்பணமும் கூடாமல் வைத்துக்கொண்டு மபூசக்கான்
பேருக்கு பெங்களுக்கு கொடுத்துவிட்டோம் யென்றும் மத்தப்
பணம் தானிய தவச மில்லாமலிருக்குது. மருட்டிபருடைய
சுங்காமாளினாலே கூடவில்லையென்று எழுதினதுக்கு மாட்டியர்
வாங்கிப்போனார்களென்றும் பணம் அனுப்பச்சொல்லியும் எழு
தின காகிதம் மத்தலைப்புபெங்களுக்குத் தெரிஞ்சுது. யென் பணம்
அனுப்பாமல் வைத்திருக்காரென்று துரையவர்கள் கேட்டதுக்கு
ருமய்யன் சொன்னது. காசநுசக்கு அவர்கள் பிறப்பட்டுப்போய்
விடுவார்கள். நீங்கள் பணம் விடப்போறதில்லை வாங்கிப் போடு
வீர்கள் யென்று தான் யோசனைபண்ணி மபூசகானுக்கும் மமு
தல்லிகானுக்கும் சம்பதிராயனுக்கும் பணத்துக்கு போக்குயெழுதி
அனுப்பிவிட்டு அவனும் பணம் சமை பண்ணிவைத்துக்கொண்டு
நீங்களெப்போ கேழ்க்கிறீர்களோ அப்போ குடுத்து அனுப்பி
விடுகிறதாய் யோசனை செய்துகொண்டுதானிருக்கிறான் நீங்கள்
மனுஷர்கள். அனுப்பிவிச்சால் யெப்போ குடுத்துவிட்டு பதிலா
மமைத் தீத்துக்கொள்ளுவோமென்று காத்துக்கொண்டிருக்
கிறதுமல்லாமல் புவனகிரி சீமையும் விசேஷிச்சுக் கொள்ளை
வல்லடி போகாமல் அதுக்கு சேனை சேனை பிறயத்தினைக்க
ளெல்லாம்பண்ணி காப்பாத்தினார்.

அப்படி உங்கள் யெசமான் உங்கள் சினேகத்துக்கும் விருத்
தம் வரப்போகுது யென்று யித்தனையும் நடப்பிச்சுக்கொண்டார்
யென்று சொன்னான். அதுக்கு மகாராசராச-ஸ்ரீ—துரையவர்கள்
சொன்னது அவர் பெரியமனுஷர் யெவது நாளாயி நம்முடனே
சினேகம்பண்ணினவர் அவர் செய்யவேண்டிய காரியம் என்னமோ
அப்படி செய்தார் யிப்பவும் குதிரைகள் வாங்கிப்போயிருக்குதே
ஆனபடியினாலே பணமிப்போ அனுப்பலாமே சீக்கிரமத்துக்கு
அனுப்பச்சொல்ல நீயும் காகிதமெழுதிக்குடென்று என்னைப்
பார்த்துச்சொன்னார். நல்லதென்று நானும் சொன்னேன் அறக்
காரூ—ரூமய்யன் கானும் மமுதகானும் துரையவர்கள் சொன்ன
வயணமும் நடந்த பூருவோத்திரமுஞ்சொல்லி பணம்கட்டி அனுப்
பச் சொல்லுகிறேன் பணம் வருகிற சேதி கொண்டுகொண்டு

முன்னென்று சொன்னான். நல்லது முசபர்சங்கு சேதியென்ன சொல்லுகிறார்களென்று கேட்டதுக்கு ஆற்காட்டுக்குப்போய் சேர்ந்தவுடனே சீறெப்பா குடுக்கிறார்களென்றும் ஆனையின் பேரிலே சவுடோலியின் பேரிலே பொகச்சே ஒரு நாள்தான் பார்த்தேன் என்று மமுதல்லிகானுக்கும் மாபூசுக்கானுக்கும் ஆற்காடு சுபா குடுக்கிறதாயிருந்து கெட்டுப்போச்சுது. மீர்ஷத்துக்கும் சயிதுலசுக்கர்கான் பறுஷாக்களைக்கொண்டு அடிப்பிச்சுதும்அல்லாமல் மமுதல்லிகான் முதலானபேர்களுக்கும் சுபாகுடாமல் பண்ணினான். உங்களுடைய பயம் நாசறுசங்கின் மனதிலேயெழுதினாப்போலே யிருக்கத்தக்கதாகப் பண்ணினான்.

நாசறுசங்கு தன்டெல்லாம் பிறான்சுக்காறர்கள் பேர் சொன்னால் தூக்கம்கூட பிடிக்கிறதில்லை யென்றும் இங்கிலீசுக்காறர்கள் நாம் வற்த்தகம் பண்ணத்தக்கின பேர்களேயல்லாமல் பின்னை ஒரு காரியத்துக்கும் ஆகத்தக்கினவர்களல்ல வென்று தோத்திப்போய் கடசியிலே ஒரு பிறயோசனமுமில்லாமல் கோபத்துக்கும் பாத்திரராயி அவமானப்பட்டுப் போனார்கள் யென்று சொன்னான். அப்பால் சேக்கு அமீது தம்பி பரங்கிப் பேட்டையிலிருக்கிறவனுக்கு சம்பத்றாயன் ஒரு காகிதமும் அவன் குமாஸ்தா அத்தாசிபண்டிதனும் ஒரு காகிதமும் கொடுத்து வாய் விசேஷம் சொல்லச்சொன்னது நாசறுசங்கு பிறப்பட்டமட்டுக்கும் இனிமேல் அந்த பிறாந்தியங்களெல்லாம் பிறான்சுக்காறர் மனுஷர்கள் பிறப்படுவார்கள் ஆனபடியினாலே நீ யிருக்கவேண்டாம் பிறப்பட்டு வந்துவிடச் சொல்லச்சொன்னார்கள் உங்கள் அதிர் அவர்களுக்கு சூத்துக்கிழிஞ்சுப்போயிருக்குது அதைத்தொட்டு ஆற்காட்டு சுபா ஒருத்தருமே எத்துக் கொள்ளமாட்டமென்கிறார்கள் சீமை உங்களுதுதான். நீங்களெப்படி செய்யவேணுமோ அப்படி செய்யலாமென்று சொல்லி நாசறுசங்குக்கும் நசூரல்லிகான்வசீர் பிறப்பட்டாரென்று ஒரு பயம் மருட்டியர் பிறப்பட்டு ராச்சியமெல்லாம் நிர்ப்பாதம் பண்ணுகிற பயம் ஒன்று யிப்படி யிருக்குது இதைத்தொட்டு இப்படி செய்யுங் காரியம் ஒன்றும் தோத்தாமல்படிக்கு யிருக்கிறான் யிதல்லாமல் சாராயம் குடிக்கிறதும் அபினிதின்னுகிற மயக்கத்தினாலே

இந்தக்காரியம் செய்யலாம் யிந்தக் காரியஞ் செய்யலாகாது யென்கிறது இரண்டுந் தெரியாமல் யிப்போ மோரோபண்டிதன்

சானவாசகான் பிள்கள் யெப்படி கெடுத்துப்போட்டிருக்கிறார்க
ளென்றும் யிது முதலான சேதிகளெல்லாம் சொன்னான். அப்
பால் துரையவர்கள் முன் உத்தாரங் குடுத்தபடிக்கு கடுதாசிகளைக்
கொடுத்து அனுப்பிவிடென்று சொல்லி அவர் சவாரி போனார்.
அப்பால் நான் பாக்கு கிடங்கியே வந்தேன். சிதம்பரம் மமுது
கானுக்கு யென் காகிதங் யெழுதிவிச்சதென்னவென்றால் நீர்
அனுப்பின காகிதத்துக்கு பதில் காகிதங்கள். மாபூசுகான்—மமு
தல்லிகான்- சம்பதிராயன் அனுப்பின காகிதங்கள் அறக்கார
ருமய்யன் கொண்டு போகச்சே யெங்கள் சிப்பாயிகள் பிடிச்சவா.
அந்தக் காகிதங்கள் கையிலே அகப்பட்டு அதைப் படிச்சுப்
பார்த்ததினாலேயும் உங்கள் அறக்கார ருமய்யன் முகவசனம்
கேட்டதினாலேயும் சிதம்பரம் புவனகிரி பற்காரனுக்களுடைய மத்
தலப்பெல்லாம் தெரிந்ததினாலே தங்களுக்கு நான் அதிசெய்த்
துக்கு. துரையவர்கள் சந்தோஷப்பட்டு உங்களுக்கெழுதச்
சொன்னதென்னவென்றால் நீங்கள் சினேகம் பாராட்டி
நடத்தினதும் பின்னடிக்குப் பணம் அனுப்பாமல் பெதிரிக்கு
இடங்குடாமல் பண்ணின சமர்த்தத்துக்கும் எழுதிக் கொடுத்
தது. இவர்களானது யென்கிற கிளைப்புக்கும் பெரு சந்தோ
ஷப்பட்டு சிதம்பரம் புவனகிரி ரெண்டு தானுக்கு பணமும்
ஒன்றரை கிஸ்தி கட்டவேணும்மென்றும் அதை சீக்கிரமத்துக்கு
அனுப்பிவிச்சு உம்முடபேரிலிருக்கிற பளுவை யிறக்கிப் போடச்
சொல்லி எழுதச் சொன்னார். ஆனபடியினாலே மேலெழுதின
படிக்கு பணத்தை சீக்கிரமத்துக்கு அனுப்பவேண்டியது
யென்றும் மாபூசுகான் மமுதல்லிகான் சம்பதிராயன் மூனு
பேர்களும் உமக்கனுப்பின அசல் காகிதத்தை வைத்துக்கொண்டு
அதிலிருக்கிற படிக்கி சவ்வாது யெழுதியனுப்பிவிச்சேன். அதை
பார்த்துக்கொள்ளவச்சே தெரியவரும் யென்று எழுதி மூனு
காகித நக்கலும் குடுத்து சம்பதிராயன் சேந்த ஆகீது தம்பி
பேருக்கு வந்துவிடச் சொல்லி யெழுதின வசலக்கையும் ஷெ
வக்கில் அந்தாசி பண்டிதன் வந்துவிடச் சொல்லி யெழுதின
துஜுக்கை யெழுத்துக்கு நக்கலும் எழுதி வைத்துக்கொண்டு
அசலை யித்த அறக்கார ருமய்யன்தானே முன்னும் கொண்டு
வந்தவனான படியினாலே யிவன் கையில் தானே குடுத்துப்
போகச்சொன்னேன். அவனும் வாங்கிக்கொண்டு அனுப்பிவிச்சுக்
கொண்டு போனான் மனசுக்குறியன் மனுஷர்கள் முசபர்சங்கு

காறுபாரி ஆகிபாசிலண்டைக்கு கூட்டி அனுப்பிவிச்சேன். யிருபது கற்னாடக துபபாக்கிகாறர்களைப் பிடிச்சு வந்தவர்கள் சந்தாசாயபுவைச் சேவிச்சவர்கள் சேஷறாயன் சண்டையிலே மறாட்டியர்கள் கையிலே அகப்பட்டோம் அன்றுமுதல் யின்றைய வரைக்கும் உத்தியோகமகப்படும் என்கிற ஆசையினாலே யிருந்தோம் யிப்போ யிவர்கள் பயணப்பட்டுப் போறதினாலே— எங்கே சேவுகம் வைக்கிறார்களோ அங்கே போவோமென்று பிறப்பட்டு வருகிற யெங்களை வழுதாவூரண்டையிலே பிடிச்சு வந்தார்கள் யென்று முன் சொன்னபடிக்கு துரையவர்களுடனே சொன்னதுக்கு சந்தாசாயபு அண்டைக்கு கூட்டி அனுப்பி விடென்று சொன்னார் அந்தப்படிக்கி சந்தாசாயபு அண்டைக்கு கூட்டி அனுப்பிவிட்டோம்.

யெனக்குச் சொல்லி அனுப்பியிருக்கிறார்கள் நீங்கள் வாறது தாமசம் கோட்டையை ஒப்புவிக்கப்போறோம் எங்களை சேவுகத்துக்கு வைத்துக்கொள்ளப்பண்ணவேணுமென்று கேட்டார்கள். நீங்கள் யிப்போ எனக்குத்தாரம் குடுத்தால் நான் கோட்டையை வாங்கிக்கொண்டு வெள்ளைக் கொடி போடுகிறேனென்று கேட்டபடிக்கு பத்திரமாய் நிறுவாகம் பண்ணுவாயாவென்று கேட்டுக்கொண்டு அதின்பிற்பாடு போகச்சொன்னேன். நேத்து அங்கேதானே யிருவர் வேண்டாம் யென்று யெழுதியிருக்கச்சேயும் பிறப்பட்டு வந்துவிட்டானென்று சொன்னார். வெள்ளைக்காறரில்லாமல் யிவர்களைத்தொட்டு ஒருக்காலும் ஆகத்தக்கதில்லை. பூவிலுடனே கூடின நாரும் மணம்பெத்தது யென்கிற சமர்த்தையாய் ஆனதேயல்லாமல் யிவர்களுக்கு கொள்ளையிடத் தெரியுமேயல்லாமல் சண்டைபண்ணத் தெரியுமாவென்று சொன்னதுக்கு மெய்தானென்று ஒத்துக்கொண்டு இவர்கள் சம்மதிகள் கிறிது சொன்னாரிப்படி பேசியிருக்கச்சே சந்தாசாயபுக்கு நாசறுசங்கு லசுக்கரிலிருந்து மகம்மதுறசாவென்கிறவனுடபின் காகிதத்தை யனுப்பி துரைக்குப் படிச்சுச் சொல்லச்சொன்னார் அது பந்துக்கட்டு யெழுத்தில் எழுதியிருந்ததை குத்தபத்திகல்லிகான் பாரிசிலே யெழுதியனுப்பினதினாலே யெழுதியிருந்தது நாசறுசங்கு கூட சாப்பிடப்போறவனை வந்தவாசியிலே யிருக்கிற அல்லி நக்கீம்சாயபு வந்து நாசறுசங்கு யெப்படி பண்ணிக்கொண்டு மொகத்துமா இரண்டு லட்சத்தி அன்பதினாயிரம் ரூபாயாக தீத்துக்கொண்டதுமல்லாமல்

தருபாறு சிலவும் விசேஷிச்சுத்தானே கபுலாயத்தோடே போகாமல் சபுதரல்லிகான் பிள்ளைக்கு ஆற்காட்டு சுபா குடுக்கிற தானால் பின்னை விசேஷிச்சுப் பணம் ஒப்புறோமென்று சொன்ன துக்கு பிறுன்சுக்காறர்களும் சந்தாசாயபுக்கு சமாதானமாயிருந் தென்று சொன்னதுக்கு அவர்களுக்கும் நாங்கள் ருசிபண்ணிக் கொள்ளுறோம் பென்று சொன்னார்கள். அவர்கள் வந்து யிப்படிப் பட்ட அபாசு சால்சவாபு நடப்பிச்சமாத்திரமேயல்லாம லிவர்களுக்கு ஒருக்காலும் நாசறுசங்கு கொடுக்கத்தக்கதில்லே. விறுதாவாய் வந்து பணத்தையும் சிலவழிச்சுக்கொண்டு காரியத் துக்கு வறாத பேச்சுக்களையும் விறுதாவாய்ப் பேசிப்போட்டு இதைத்தொட்டு நாசறுசங்கு வந்தவாசி அண்டையிலே மொக்காம் பண்ணதைத்தொட்டு சத்துப்பட்டுக் கிறுமங்களெல்லாம் படுசூரணமாக்கினதுமல்லாமல் கோட்டையை எங்கே வாங்கிப் போடுகிறானோவென்று ராத்திரியும் பகலும் திக்கில் மனதிலே குடியாயிருக்கத்தக்கதாக உண்டாக்கிக் கொண்டதுமாத்திரமே யல்லாமல் பின்னை யொரு காரியமு மிவர்களுக்கு நடக்கத்தக்க தில்லே யேன்றும் யெழுதியிருந்ததுமல்லாமல் பிறுன்சுக்காறர் அங்கே பற்காணுக்களுக்கு டாணா அனுப்புறது வந்து நாசறு சங்குக்கு வெகு விசாரத்தை கொடுத்துதென்றும் யெழுதியிருந் தது அந்தச் சேதி துரையவர்களுடனே சொன்னதுக்கு பதிலுத் திரமெழுதச்சொன்னது. வந்தவாசியார் சால்சவாபு நடப்பிச்சது யெங்கள் மனதுக்கு விறோதமாய் நடப்பிச்சார்களேயல்லாமல் எங்கள் மனதுக்கு சம்மதியான காரியமல்ல அப்படி யேதாகிலும் நடத்தினால் சீமை சுகப்படப்போறதுமில்லே யென்றும் அவர்கள் சுபாபண்ணத்தக்கதுமில்லே யென்று புதுச்சேரி கோவற்னதோர் சொன்னதாக எழுதி யிப்போதானே அனுப்பிவிடச் சொல்லச்சொன்னார் யிதல்லாமல் பின்னை யொன்றுமதிலே யெழுதி யிருந்ததென்னவென்றால் சயிதுலசுக்கர்க்கான் கையில் மீர்அசத்து அவமானப்பட்ட யிற்பாடு மக்குளமாயிருந்தா னிப்போ யிரண்டு மூணு நாளாயி மிறுத்திகளடக்கிக்கொண்டு நாசறுசங்கண்டைக்கு வந்துபிறுன்சுக்காறரை நாங்களடக்கிக் கொண்டு சுபா நிறுவாகம் பண்ணிக்கொள்ளுகிறோமென்று பேச்சு வார்த்தை நடத்துகிறார்களென்றும் வழுதாவூர் கோட் டைக்குப் பலம் அனுப்புகிறதாய்க் காணுது நீங்கள் வாங்கிற சாடையாயிருந்தாலும் உடனே வாங்கவும் யில்லாவிட்டால்

அந்தப்பிரசங்கமே யெடுக்கவேண்டாம் யிவர் ஆற்காடு சேர்ந்து அப்பால் படுகிறமட்டுக்கும் யென்று முன்னாலே நானுங்களுக்கு மச்சிலிபந்தர் யேனும் முதலான யிடத்தில் கோட்டி மகள் பிறுன்சுக்காறருது யிருக்குதே அதைப் பந்துபண்ணச்சொல்லியும் அதிலேயிருக்கிற வெள்ளைக்காறர்களைப் பிடிச்சு கயதுபண்ணச் சொல்லியும் யெழுதினார்களென்று யெழுதியிருக்கிறதேனே யிப்போ அந்த யிடங்களிலே யிருக்கிற சுபேதாறர்கள் யெழுதினதென்ன வென்றால் அந்தப்படி கோட்டடிகளும் பந்துபண்ணி அவர்களை யும் கைது வைத்தோமென்று யெழுதிவந்தது. அதுக்கு பதி லுத்தரம் அவர்களை யிவடத்துக்கு அனுப்பச்சொல்லி யெழுதி அனுப்பினார்களென்றும் எழுதியிருந்தது. இந்தச் சேதி சொன் னதுக்கு அதை யேன் சொன்னாயென்று கேட்டார். அதிலே யெழுதியிருந்ததைப் படிச்சு யவர் சொல்ல அவர் சொன்ன உத்தரத்தை நான் உங்களுடனே சொன்னேனென்று சொன்ன துக்கு நல்லது பிறுமணனுடனே முன் சொன்னபடிக்கு சந்தா சாயபுக்குச் சொல்லி யெழுதி யனுப்பிவிட்டுப் போடச்சொன் னார். நல்லதென்று அந்தப்படிக்கி மதனாந்தபண்டிதனுக்குச் சொல்லி சந்தாசாயபுக்குச்சொல்லி எழுதியனுப்பிவிடச்சொல்லி அனுப்பிவிச்சேன் அவரும் அந்தப்படிக்குப் போய் பதிலுத்தரம் யெழுதச்சொல்லிப்போட்டு வந்து மறுபடியும் வந்து சொன்ன தென்னவென்றால் யிப்போ ஒரு துனுக்கையிலே யிருந்த தென்று அதன் மத்தலப்பு சொல்லச்சொன்னதென்னவென் றால் மீர்சத்து-மீர்த்தாசல்லிகானுக்கு யிங்கேயிருந்து எழுதின தாய் அதில் முன் அவர் சிறிது எழுதினதாய் நாசறுசங்கு பேரிலே ராசகாரியமாய் யெழுதிவந்து சவுக்கைகளிலே அகப்படு கிறுப்போலேயும் அது நாசறுசங்கு படிச்சு பாத்தவுடனே மீர்சத்து-மீர்த்தசல்லிகான்பேரிலே கோபம் பண்ணும்படியாய் ஒரு காகிதம் யெழுதி மரிச்சத்தை மோசம்பண்ணிவிக்கலாம் போலே யிருந்தால் அந்தப்படிக்கு ஒரு தப்புக் காகிதம் யெழுதி சவுக்கைகளிலே அகப்படும்படியாய் அனுப்புவிச்சால் மீர்சத்தும் பேரிலே அவிசுவாசம் பிறந்து காவல் கட்டு விலங்கு யிந்த மட்டுக்கும் நடந்து யித்துடனே சக்கிற அறுதியாய்ப் போமென்று யெழுதியிருக்குதென்று வந்து சொன்னார். அதுக்கு துரை பதி லுத்தரம் அந்தப்படி தப்புக் கடுதாசியாய் யெழுதி அனுப்பலாம் போலே யிருந்தால் அந்தப்படி யெழுதி யனுப்பச்சொல்லிச்

சந்தாசாயபுக்குச் சொல்லிப்போட்டு வரச்சொன்னார். மறுபடி மதனந்தபண்டிதரையும் போய்ச் சொல்லிப்போட்டு வரச் சொல்லி சந்தாசாயபுவண்டைக்கு அனுப்பிவிச்சேன். அவரும் அப்படியே போய்ச் சொல்லிப்போட்டு வந்தார் அந்தச் சேதியுந் துரைக்குச் சொன்னேன். நல்லது அந்தப்படிக்கு யெழுதியனுப்பினால் வாய்க்குமாவென்று கேட்டார். காகிதங் கொண்டுபோறவன் மெத்த சமத்தனுய் சீவனைப் போக்கடிச்சுக்கொள்ளுகிற படியினாலே பெகு தைரியசாலியாயிருந்தால் நிறுவாகத்துக்கு வரும் யில்லாவிட்டால் போறவன் சீவனுக்கு வாறதுமல்லாமல் அபகீர்த்திக்கும் இடமாகவுமிருக்கும் மெய்க்கி சுவாமி துணையாயிருந்து காரியம் அனுகூலம் பண்ணிக்கொடுக்கிறப்போலே பொய்க்கு சகாயமாயிருக்கதைத்தொட்டு காரியமுஞ் சாதகத்துக்கு வரமாட்டாதென்று சொன்னதுக்கு மெய்தானென்று சொன்னார் யிப்படி பேசிக்கொண்டிருக்கச்சே சேக்குஅசேன் வில்லியநெல்லூரிலேயிருந்து காகிதம் யெழுதி அனுப்பினது வந்தவுடனே துரை பென் கையில் குடுத்து தான் என் ஒடுதியில்லாமல் வந்ததுக்கு போகச்சே என்னுடனே சொல்லிப்போன பொய்க்கு யிப்போ என்ன பொய்யை எழுதினானோ படிச்சுப் பாத்துச் சொல்லென்று சொன்னார். இதிலே மதனந்தபண்டிதர் சந்தாசாயபு வீட்டுக்குப் போய் அவருக்குச் சொல்லிப்போட்டு அந்தப்படி யோசனைபண்ணி யெழுதி அனுப்பின சேதிக்கிச் சொல்ல அனுப்புவிக்கிறோமென்று சொன்னார் யென்று துரைக்கு கபுறு வந்து சொன்னவுடனே சேக்குஅசேன் கடிதாசியைப் படிச்சுச் சொல்லென்று சொன்னார். அதிலே யெழுதியிருந்த வயனம் தங்கள் கையில் அனுப்பிவிச்சுக்கொண்டு வழுதாவூர் கோட்டை வாங்கவேணுமென்று வந்து சிப்பாயிகளைக் கோட்டையின்பேரிலே போய் சண்டை குடுக்கச் சொன்னால் எங்களுக்குண்டான சம்பளம் குடுத்தால் அல்லாமல் பரிச்சேதமாய்ப் போறதில்லை யென்று பண்ணி அவர்கள் பண்ணுகிற அமிறனை யெழுதி முடியாது. அந்னேரம் ஒருவிதமாய் சமுதாயிச்சு பேட்டையண்டையே போய் பத்து வெடி சுட்டுதிரும்பிறம்பிறபத்தனமாச்சுது. அவர்களும் பத்துவேட்டு சுட்டார்கள். மறு நாள் சண்டையிலே யிருக்கிறவர்கள் சண்டைக்குப் போகவேணுமென்றால் அவர்கள் பண்ணுற அமிறன் காகிதத்திலெழுதி முடியாது. இங்கே இருந்தால் கோட்டையிலே யிருக்கிற

வர்கள் அறிஞ்சால் மோசமும் வரும் போன சறுதாருடைய வெழ்க்கமும் கெட்டுப்போமென்று யோசனைபண்ணி பிறப்பட்டு வந்து வில்லியநெல்லூர் சேர்ந்தேன் இதல்லாமல் நாசறுசங்கு இதுக்கு பதினேழு பதினெட்டு கோசிலேயிருக்கிறபடியினாலே யிப்போ வழுதாவூர் கோட்டை வாங்கவேணும் யென்று யெத்தனம்பண்ணுகிறது நன்றாய்க் காணவில்லை. ஆனபடியினாலே பிறப்பட்டு வந்துவிட்ட சேதி அறியவும் நானும் வில்லியநெல் லூருக்கு வந்தேன். முசியே தொத்தேல் சறுதார் முதலாய் சொலுதாதுகள் வகையிறு ஒருத்தரில்லாமல் வந்துவிட்டார்கள். ஆனபடியினாலே எனக்கும் உத்திரவு கொடுத்து அனுப்பினால் உள்ளே வருகிறேன் யென்று யெழுதியனுப்பின காகிதச் சேதியைச் சொன்னவுடனே சேக்குஅசேனுக்கு பதிலுத்தாரம் எழுதச்சொன்ன வயனம் நீ யெழுதியனுப்பின காகிதம் வந்து சேர்ந்து பாத்துக்கொண்டு மிகவும் ஆச்சரியமாச்சுது. நீதானே வந்து கோட்டையிலே யிருக்கிறவர்களெல்லாம் உளவாயிருக்கிறார்கள் நான் போனால் கோட்டையை ஒப்பிச்சிப்போடுவோமென்று சொல்லுகிறார்கள் நீங்கள் உத்தாரம் குடுக்கிறது தாமசம் கோடன்டையை வாங்கிப் போட்டு நீசான் போட்டு உங்களுக்கெழுதியனுப்புகிறேனென்று சொன்னதிபேரிலே நீ கேழ்க்கிற சான்சாமியெல்லாம் கொடுக்கச்சொல்லி முசியே தொத்தேலுக்கு கடுதாசி எடுத்துப் போகச்சொல்லி உத்தாரங் கொடுத்ததேயல்லாமல் நானு உன்னைப் போகச்சொல்லிச் சொன்னதில்லை. அப்பால் உன் சிப்பாயிகளுன்னுட யெக்குத்தியாரிலே யில்லாத்து யிந்த காரியம் சொல்தாதுக்கு முன்னேதானே போசனை பண்ணிக் கொண்டு அவர்கள் நினைப்பு அறிந்துவந்து சொல்லவேணுமே யல்லாமலிப்போ யெழுதினது உனக்கு நல்ல காரியமல்ல. அப்பால் நாசறுசங்கு சமீபத்தில் பதினெட்டு கோசிலே யிருக்கச்சே யிப்போ யிப்படி வேலை செய்கிறது உகத்தமல்லவென்று யெழுதினாய். உன் சிறு பிள்ளை புத்தியினாலே யெழுதினதே யல்லாமல் மத்தப்படியல்ல மத்தப்படி வழுதாவூர்—கோட்டையை வாங்குறது உங்களைத் தொட்டு மாகாது என் கையில் அந்தக் கோட்டை யிருக்குது யெப்போ வேணுமென்று நினைத்தாலிப்போ வந்தது யென்று எண்ணிக்கொள்ளென்று யெழுதியனுப்பச் சொன்னார் அந்தப்படி பதிலுத்தாரம் எழுதியனுப்பிவிச்சோம். அப்பால் துரை

பவர்கள் வெள்ளைக்காறருடனே பேசியிருந்தார் நான் பாக்கு கிடங்குக்கு வந்தேன். இத்தனாள் பகலைக்கு மேலாக நாசறுசங்கு ...க்கரிபியிலிருந்து மொறோபண்டிதன் சானவாசுகான் சந்தா சாயபுடனே கண்டு பேசச்சொல்லி பைகாம் அனுப்பினதாய் சாயங்காலம் சயருும்பண்டிதன் வந்த சமாசாரமென்னவென்று கேட்டதுக்கு அவரிளைப்பிலே வந்த படியினாலே சாப்பிடப் போனார். ருத்திரிக்கு அவருடனே பேசி நாளைக் காலத்தாலே நானும் சயருமபண்டிதனும் துரையுடனே வந்து கண்டு பேசி கிறோமென்று சொல்லச்சொல்லி வக்கீல் சுப்பய்யருடனே சந்தா சாயபு சொல்லி அனுப்பிவிச்சார் அந்தப்படிக்கு துரையவர் களுக்கு அறிக்கை பண்ணினேன்.

**1750 ஸு மாயு மீ 12 உ பிறமோதூத ஸு வையாசி மீ 2 உ செவ்வாய்வாரம்.**

இத்தனாள் காலத்தாலே எட்டுமணி அடிச்சு ஒன்பதுமணி வேளைக்கு சந்தாசாயபும் ருசாசாயபுஞ்சயருமபண்டிதனை அழைத் துக்கொண்டு துரையவர்களண்டைக்கு வந்து சானவாசுகானும் மோறோபண்டிதனும் சொல்லியனுப்பின சேதி சொன்ன வபனம் திருச்சிறுப்பள்ளி பிசாறு தஞ்சாவூர் மன்சுபாசாகீர் குடுக்கிறது அப்பிறம் சானவாசுகான் ஆற்காட்டிலே நாலுமாசம் மட்டுக்கு மிருக்கிறது. யிதிலே அவர் மனதுவர நடந்துகொண்டால் ஆற் காடு சுபாவும் குடுத்துப்போட்டுப் பொறதுயென்று உடம்படிக்கை பேசிவரச்சொன்னார்களென்று துரையவர்களுடனே சயருும்பண் டிதன் சொன்னதுக்கு—துரை சொன்னது, நல்லது அந்தப்படிக்கு கறுநாமா யெழுதி அனுப்புகிறதென்னவென்றால் திருச்சிறுப் பள்ளி தஞ்சாவூர் மனசுபா சாகீர் யிப்போ கொடுக்கிறது நாலு மீ பொறுத்தவுடனே ஆற்காடு கொடுக்கிறதென்று சானவாசு கான் நாலுமாச மட்டுக்குமிருந்து அப்பால் நாசறுசங்கு கைபட சந்தாசாயபு பேருக்கே சன்னது அழைப்பிச்சுக் குடுத்துப் போட்டு சானவாசுகான் போகிறதென்று சொன்னார்.

அதுக்கு சயருும் பண்டிதனிருந்துகொண்டு சொன்னது அவர்களுக்குயிற யிப்போ குடுக்கிற திருச்சினாப்பள்ளி சீமை பணமுஞ் சென்று சான்வாசுகான் மனதுவர நடந்துகொண்டால் உங்கள் வசத்திலேதானே ஆற்காடு சுபாகூட குடுத்துப் போட் டுப் பேறான். நாசறுசங்கு இத்தனைதூரம் வந்து உங்கள் மன

தின்படியே குடுத்துப்போட்டுப் போனால் அவன் பிறதிஷ்டை யென்ன யிவ்வளவு வித்தியாசமில்லாவிட்டால்தானெப்படி யென்று சொன்னதுக்கு துரை நல்லது திண்டிவனம் பூந்தமல்லி அச்சரவாக்கம் விழுப்புறம் திருவிதி-புவனகிரி தேவனும்பட்டணம் சீமை தீர்த்தநகரி வெங்கிட்டம்மாபேட்டை யிதுகளெல்லாம் யெங்கள் பணத்துக்கு அடமானம் பண்ணியிருந்ததாமே அதுகளெல்லாம் யெங்கள் வசம்பண்ணவேணும் அந்தப்பணம் சந்தாசாயபு குடுப்பாரென்று துரை சொன்னார். அதிலே சந்தா சாயபு யிருந்துக்கொண்டு ஒரு வருஷத்துக் காரியத்துக்கு எனக்குத்தானே குத்தகைக்கு சானவாசுகான் ஆற்காடு சீமையெல்லாம் குடுக்க அந்தப்பணம் சானவாசுகானுக்கு நான் செலுத்திப்போடுறேன் நான் மேலே எழுதப்பட்ட சீமையெல்லாம் அவர்களுக்கு நான் குடுத்துவிடுகிறேன் என்று சொன்னார்.

நல்லது அந்தப்படியே பேசிப் பார்ப்போம் அந்தப்படி யிணங்கினால் ஆச்சுது யில்லாவிட்டால் முன் உடன்படிக்கையைப் பிடிச்சுப் பேசுவோம் யிதில் யெது சம்மதியோ அந்த உடன்படிக்கையைப் பிடிச்சுப் பேசிக்கொண்டு வருகிறேனென்று சொன்னார். அதிலே சந்தா சாயபு யிருந்து மசூர்கூடபேசி உடன்படிக்கைப் பண்ணிவரவேணும் யென்று சொன்னார் அதிலே துரையிருந்து கொண்டு முன்னே மச்சிலி பந்தர்-யானம் வகையறா யெங்கள் கொட்டடி வடக்கே யிருக்குதே அந்தக் கொட்டடியெல்லாம் நாசறுக்கு யெழுதியனுப்பிவிச்சு சத்தே சங்கட்டம்பண்ணிக் கொண்டிருக்கிறார்கள் அவர்கள் வழி போகவேண்டாமென்று முன்னதாக யெழுதி அனுப்பச்சொல்லு-அதின் பேரிலே மத்தப் பேச்சுப் பேசினால் யெனக்குச் சம்மதியிதல்லாமல் யேழு பீரங்கி எங்களுது அவர்கள் வசத்திலே யிருக்குது அதை குடுக்கவேணுமென்று கேட்டார். அதுவும் பேசுகிறேனென்று சொன்னான்-ஆனால் பாத்தியஸ்து யெழுதிக்குடுக்கச்சொல்லி சொன்னார். பாக்கியஸ்து யெழுதின வயணம்.—

18 றாத்தல குண்டெடுக்கற பீரங்கி ... ... 2

பின்னேயும் சிறிய பீரங்கி ... ... 1

வெண்கல பீரங்கி ... ... 1

12 றாத்தல் பீரங்கிகுண்டு ஓட்டுகிற பீரங்கி ... 2

ஆகாசம் கூட கட்டிப்போடுவேனென்று நிறைஞ்ச கச்சேரியிலே வாய் திம்மயின் சந்தோஷமாய்க் கொண்டாடினது ஆயிரந்தாத்துக்கு அதனமே சொல்லவேணுமென்று சொல்ல் அதன் பேரிலே-மச்சிலிபந்தரும் அந்த சீமையும் கொடுத்தால் யிங்கேயிருந்து சண்டைசாமான்களெல்லாம் மச்சிலிபந்தர்-பானம்—யிதுகளுக்கு—அனுப்பி அங்கே யிருந்து அபிதாரபாத்து அபரங்காபாத்து வந்துசேருகிறதுக்கு லகுவாயிருக்கும்.

இந்த வட்டங்களிலே அவருட ஒடுதிக்குள்ளே வருதவர்களை சயிக்கட்டுகிறதுக்கு புதுச்சேரியிலிருக்கிற மனுஷர் போதும் யிந்தப்படிக்கி உம்முட மனோரதம் நிறைவேறும்படியாய் சகல மத்தத்தும் பண்ணிக் கொடுக்கிறோமென்று நீர் அந்தரங்கமாய் நன்றாய்த் தெரியப்படச் சொல்லச் சொன்னார். நல்லதென்று சொல்லி அப்பால் மதாம் துப்ளேயிக்கு அண்டைக்குப்போய் கண்டு பேசியிருந்து அங்கேயிருந்து அனுப்பிவிச்சுக்கொண்டு சந்தாசாயபு ஷை குமாரன் சபாருமபண்டிதனும் நடந்தார்கள். யெப்போ போறாயென்று கேட்டதுக்கு நாளைக் காலத்தாலே போறேன் யென்று யின்றைக்குத்தானே போனால் குணம் என்று சொன்னார் நல்லதென்று சொல்லிப்போட்டு போனார்கள் சந்தாசாயபு ரசாசாயபு முதலான பேர்கள் கோட்டையிலே கட்டுகிற குவர்னமா பார்க்கப்போறோமென்று சொன்னார்கள். சோபுதாரரைக் கூட்டி கோட்டைக்குள்ளே தடையில்லாமல் விட்டுவிடும்படியாகவும் உள்ளேயும் அவர்கள் பார்க்குற யிடமெல்லாம் காண்பிக்கச்சொல்லி அனுப்பினதுமல்லாமல். சந்தாசாயபு யிருக்கச்சே சபாருமபண்டிதரை அங்கே சொல்லச்சொன்ன சாடை யென்னவென்றால் வழுதாவூர் கோட்டை வாங்கிறதும் மச்சிலிபந்தர்—யானம் எல்லாம் திபர்த்தம் பண்ணச்சொல்லி கப்பல்களும் பவுன்சும் அனுப்புகிறது கிறுத்திவந்ததைப் நீர் சொல்லும்.

இதல்லாமல் எங்கள் வியாபாரம் நின்றால் அதைத்தொட்டு யெங்களுக்கு பத்துப் பன்னீராயிரம் விராகன் வருஷம் 1-க்கு நஷ்டம் வரும் நாங்கள் சீர்மைகளை கலாதிபண்ணினால் உங்களுக்கு இருபது முப்பது லக்ஷம் நஷ்டம் வருகிறதுமல்லாமல் ராச்சியம் யெல்லாம் விப்பரத்தமாயி வெகு சனங்களும் யிறந்து போவார்கள் யென்றும் கெட்டியாய்ச் சொல்லு இந்த ருச்சியம் கொட்

டில் தாபடியாய் எடுக்கிற திரவியமும் அப்படிதான் போமென்று சொன்னார். அவசியஞ் சொல்லுகிறேன் என்று சொன்னான் க்ஷமட்டிலே அனுப்பிவிச்சுக்கொண்டு கோட்டையைப் போய்ப் பார்த்துப்போட்டு அப்பாலே சந்தாசாயபு முதலானபேர் வீட்டுக்குப் போனார்கள். அப்பால் சாயங்காலம் ஆறுமணி வேளைக்கி சயருமபண்டிதனை அழைச்சனுப்பிவிச்சு முசபர்சங்கு பேச்சு யேதாகிலும் உண்டா யென்றார் அதுக்கு சயருமபண்டிதர் சொன்னது அனேகம் விசை நடந்ததுமுண்டு அவனுக்கு. சீமை கொடுத்துப்போட்டுப் போகவேணுமென்கிற கருத்துமுண்டு கொடுத்துப் போட்டுப் போனல் பிறன்சக்காறர்களை மறுபடி கூட்டிக்கொண்டு அவுரங்கபாத்து முதலான ஆறுதக்கன் சுபாவும் யெங்கே கட்டிக்கொள்ளுகிறார்களோயென்கிற அவ்விசுவாசம் அவனைக் குடுக்கவொட்டாமல் பண்ணிக்கொண்டு வருகிறது பெரிய மனுஷர்களா யிருக்கிறவர்களெல்லாம் முசபர்சங்கு பாரிசமாய்ப் பேசுகிறார்கள்.

நாசறுசங்குவுக்கும் அவர்களுக்கும் பணுயிக்கயில்லை சிப்பாயிகளுமப்படித்தான் ஆனபடியினலே ஒருவேளை குடுத்தால் எங்கே தனக்கேதாகிலும் மோசமாகுதோவென்று முன் பின் பார்த்துக்கொண்டுயிருக்கிறான் எல்லாரும் அவன்பக்கமாய்ப்பேசுகிறபடியினலேயும் இவனுக்கும் அவனுக்கும் பணுயிக்காமலிருக்கிறபடியினலேயும் ஒரு வேளையிலே சீமையும் கொடுத்து அவனையும் வீட்டுக்குப்போகவேண்டி வருமென்று சொன்னான். அதுக்கு நீர் பிறஸ்தாபம் வந்த வேளையிலே நீர் முசபர்சங்குவைவிட்டால் அவன் மறுபடி உம்முடபேரில் கத்தி யெடாமல் நான் பிணையாயிருக்கிறேன் என்று கெட்டியாய்ச் சோல்லியிருக்கிறேனென்றும் அதைச்சொல்லவுமென்று சொன்னார். அவசியஞ்சொல்லுகிறேனென்று சொல்லி ஒரு நாள் நாசறுசங்கு அண்டையிலேயிருக்கிற பெரிய மனுஷர்களையெல்லாமழைத்து — முசபர்சங்கை விடுகிறதாய் காவல் வைத்துக்கொண்டு தானே போவோமா உங்கள் அபிப்பிறாயமென்னவென்று பெரிய மனுஷர்கள் சயிது லசுக்கர்கான் சயிது சிரிப்புகான் கடப்பை அப்துல் நபிகான் சமீல்பெக்குகான் யிம்மத்து பாதர்கான் யிவர்கள் யிருந்துகொண்டு கும்பலிலே கேட்டால் அவரவர் அபிப்பிறாயஞ் சொல்லமாட்டார்கள். நீங்கள் சொல்லுகிறபடிக்கி சொல்லுவார்கள் தனித்தனியே கேட்டால் அபிப்பிறாயஞ் சொல்லுவார்களென்று சொன்னதுக்கு

ஞசாருக்கு கல்புத்த கானுவிலேபோய் கடப்பை அப்துல்நபி
கானை அழைப்பிச்சு அபிப்பிராயம் யென்னவென்று கேட்டதின்
பேரிலே முசபர்சங்கு அவனைச் செய்ததில்லை அவனும் விசீர்
முதலானபேர் உமக்கும் பிறமயிச்சத்தின் பேரிலே சிறுபிள்ளை
யானபடியினாலே நம்முடைய அம்மானுமிலன்ன யென்று யோசனை
பண்ணிப்பாராமல் வேளையுமிப்படி யெல்லாம் நடக்கயிருக்கிறபடி
யினாலே அவனும் நடப்பிச்சுவைத்தான் நடக்கவேண்டிய காரிய
மும் நடந்துப்போச்சுது அதையெல்லாம் மனம் பொறுத்து
முசபர்சங்கை விட்டுவிட்டு அவன் ராச்சியத்தையும் ஆற்காட்டை
யும் அவனாதீனம்பண்ணி அனுப்பிவிச்சால் அவன் பிறன்சுக்காற
ருக்கும் சமுதாயிச்சுக்கொண்டு அவன் சுகமாயி யித்தப் பிறுத்தி
யங்களிலே யிருப்பான் அத்துதப்பாமல் அதுக்கு யெப்படி
கொரான் முன்னிலையில் சத்திய பிறமாணிக்கம் என்று ஒரு
கராற்பண்ணிக்கொண்டு அதுவும் நம்பிக்கைப்போதாமல்போனால்
ஒரு பெரியமனுஷர்கள் தற்மியானுவிலே போட்டுக்கொள்ளுகிறது
தானிதுவெயல்லாமல் வேறே தோத்தயில்லை. அல்லவென்று
கொண்டுபோற பக்ஷத்தில் பிறன்சுக்காறர்களையும் கோட்டை
யைப் பிடுங்கிக்கொண்டு முசபர்சங்கு குஞ்சு குழந்தைகள் புதுச்
சேரியிலே யிருக்கிறவர்களையும் அழைத்துக்கொண்டு சந்தா
சாயபையும் பிடிச்சுக்கொண்டு போறது நல்லது யிதுவுமில்லாமல்
முன் சொல்லப்பட்ட காரியமுமில்லாமல் போனால் உம்முட
உடப்பிறந்தாளைப் பணத்து நிமித்தம் குதுவை
வச்சதாய்க் கேழ்க்கப்பட்டது. உடப்பிறந்தாளை வெள்ளைக்
காறன் பட்டணத்திலே யிருக்கிறாள் யென்ற அபகீர்த்தி பூமி
யுள்ளமட்டுக்கும் போமாயிது சாவிலேகூட பதிலாமை போமா
யென்று யிது முதலான பேச்சுகளுள்ளபடியினாலே அவனுக்கு
சுறுக்கு பிறக்கிற சாடை யென்னமோ அந்த சாடை சொன்ன
தின்பேரிலே அவரை அப்பாலே போயிருக்கச்சொல்லி இருக்கிற
பெரிய மனுஷர்கள் யெல்லாம் அந்தப்படி தனித்தனியே
கேட்டதுக்கு யெல்லாவரும் முசபர்சங்கை விட்டுவிட்டு சீறேப்பா
வும் கொடுத்து ஆற்காடுகூட குடுத்து நடத்துறதே யுக்த்த
மென்று சொன்னார்கள் அந்தமட்டிலே அவனுக்குமப்படித்
நடத்தவேணுமென்ற கருத்து உண்டு ஆனால் ரெண்டொருத்தர்
அவனுக்குட்டிதவு ளோரிச் சொல்லுகிறாப்போலே சொல்லுகிற
சாடை யென்னவென்றால் முபர்சங்குவை விட்டால் யிப்போ

உன்னிடத்திலே யிருக்கிற பெரிய மனுஷர்களும் பவுன்சும் யேகமாய்க் கூடி உன்னைப் பிடிச்சுக் காவலிலே வைத்து முசபர்சங்குவை வைத்துக்கொண்டு தக்கன சுபா பண்ணிப்போடுவார்கள் யென்கிற பயத்தை வருவித்துவிச்சுருக்கிறதாக அதைத் தொட்டு அவரவர் சொன்ன பேச்சையெல்லாம் கேட்டுக்கொண்டு நல்லது கூச்சாய்ப் பிறப்படுகிற வேளையானபடியினாலே சாவகாசமாய்ப் பேசுகிறதுக்கு புரசத்துயில்லையே. ராத்திரிக்குப் பேசுவோமென்று சொல்லிப்போட்டு நாசறுசங்கு சுவாராய்ப் பயலாம் நடந்தார்கள். அப்பால் அந்தப் பேச்சுக்கள் நடக்கயில்லை. இனிமேலேதாகிலும் நடத்துவோனு யென்னமோ தெரியாதென்று சொன்னான். அதுக்குத் துரையவர்களிருந்துகொண்டு முசபர்சங்கை விட்டு சீர்மையும் விட்டால் யிதைவிட நமக்கு கீர்த்தி லோகத்திலே யென்ன யிருக்குதென்று - செ லீ அந்தபபடிக்கு முசபர்சங்குவை விட்டால் அந்த அ திலே யிருக்க நாம் சத்தியம்பண்ணிக் குடுக்கிறதுமல்லாமல் பின்னையுமிருக்கிறோமென்று யெப்படி யிலத்துச் சொல்லவேணுமோ அப்படியெல்லாஞ் சொல்லி பேசச்சொல்லி சொன்னார் நல்லது பேசுகிறேன் யென்று சொன்னான் ஆனால் தயவேப்படி யென்று கேட்டார் அதன்பிறகு தன் பிள்ளையானுலென்னை தன் உடபிறந்தாள் பிள்ளையானுலென்ன ரெத்தமல்லவா தயவில்லாமலே போமா யிதென்ன வாச்சரியமாயிருக்கிறது. அத்தியந்தப் பிறத்திபாயிருக்கிறான் யில்லாவிட்டால் பவுன்சும் கூடி பிறான்சுக்காறர்களுங் கூடினல் தன் பேச்சுக்கே மோசம் வருமென்கிற பயம் பிடிச்சுக்கொண்டு பார்திக்குதென்று சொன்னான் அதுக்கு துரையவர்களிருந்துகொண்டு அவன் அப்படி அவன் மனதிலே யிருக்கிற சந்தேகத்தைப் பரிகாரம் பண்ணும்படியாய்ப் பேசுகிறதை பேசிச்சொல்ல சொன்னார். நல்லதென்று சொல்லி அனுப்பிவிச்சுக்கொண்டு ராத்திரி பதினஞ்சு நாழிகைக்குப் போறதுக்கு வாசற்படிக்கு காகிதமும் வாங்கிக்கொண்டு போனான். அப்பால் ராத்திரிக்கு வந்து யென்னுடனேயும் திட்டமாய்த் தானே சொல்லி யெல்லாத்துக்கும் யின்று அஞ்சாம் நாள் வருகிறேன் என்று சொல்லியனுப்பியனுப்பிவிச்சுக்கொண்டு போனார்.

**1750 ஸு மாயு மீ 13 உ பிறமோதூத ஸு வையாசி மீ 3 உ புதவாரம்.**

இத்தனுள் காலத்தாலே பிறபு அழைச்சனுப்பிவிச்சு சயாம பண்டிதன் போனுனுமென்று கேட்டார். யிப்போதானே போரு னென்று சொன்னேன். யென் நேத்து ருத்திரி போகவில்லே யென்று கேட்டார். காரியமாயிருக்கும் அவர்களுக்கு யிருக்கிற சறாறு யேனிருக்கும் மத்தப்பேருக்கு யின்று யெட்டு மணி மட்டுக்கும் யேன் மனுஷர் போய் சுறுக்கு பண்ணதின்பேரிலே போறுமென்று சொன்னேன் கூடலூர் கபுறு யேதாகிலும் உண்டாமென்று கேட்டார் அன்னூறு சிப்பாய்களும் மூனு ருத்தல் குண்டு ஓடுகிற பீரங்கிகளிரண்டும் கொண்டுகொண்டு வந்தவாசிக்குப் போகத்தக்கதாகப் பயணமாயி பாதிர்குப்பத்து சாவடிபோலே யெறங்கினதாய் சேதி கேழ்க்கப்பட்டுதென்று சொன்னதுக்கு யேது நிமித்தியம் போகுதென்று கேட்டார். மதுரை அந்தப் பாரிசத்திலே மமுதல்லிகான் அம்மான் ஒரு சறுதாறுயிருந்து திருநெல்வேலி சீமை அறுவாக்கிக்கொண்டு யிருந்தானும் அவ்விடத்துப் பாளையக்காறர் பெலத்து அங்கே யெசமானுயிருந்த துலுக்கனையும் வெட்டிப்போட்டு கசானவும் யெடுத்துக்கொண்டு போனார்களாம் அதைத்தொட்டும் மமுதல்லி கான் சமபளம் குடுத்து மேஸ்தர் கோப்பு தயினாத்துவாக வைத்திருந்த சிப்பாயிகளை அனுப்பசொல்லி எழுதினதின் பேரிலே இவர்கள் போனார்களென்று சொல்லிக்கொள்ளுகிறார் கள். யிதல்லாமல் திருச்சிறுப்பள்ளியிலிருந்து அஞ்சு லட்சம் ரூபாய் நாசறுசங்குக்கு குடுக்கிறதுக்காக அழைப்பிச்சானென்று அது அன்னூறு குதிரைகளும் ஆயிரம் றூனுவும் கொம்பாஞ்ஞி ரிட் வருகிறதாம் அது கொள்ளிடத்துக்கிக் கரைப்பட்டாப் போலே பிறுன்சுக்காறர் குறுக்கே பூந்து கொள்ளையிட்டுப் போகாமல் மத்தத்தாயிருக்கவுமிது இங்கிலீசுக்காறர் அனுப்பி விச்சார்கள் எது நிமித்தியம் என்று இவர்கள் கலவரப்பட்டுக் கொண்டிருந்தால் யிதில் அந்த ரூபாயி வந்து லசுக்கர் சேர்ந்துப் போமே யென்று ஒரு யோசனைபண்ணி இந்த அன்னூறு சிப்பாயிகள் பிறப்பட்டுவிட்டதாய் சொல்லிக்கொள்ளுகிறார்களி தல்லாமல் ஆற்காடு சுபா மமுதல்லிகானுக்கு நிஷ்கருஷை ஆச் சுது அது நிமித்தியம் தன்னிடத்திலிருக்க அழைப்பிச்சா னென்று இப்படி மூனு விதமாய் அங்கேதானே சொல்லிக்

கொள்ளுகிறார்கள். கேட்ட சேதியெல்லாம் உங்களுடனே சொன்னேன். அப்பால் யெப்படி சித்தத்திற்கு தோத்துதோ அப்படியே பண்ணிக்கொள்ளவேண்டியதென்று சொன்னேன். ஆனால் மமுதல்லிகான் காகிதம் ஒரு சத்தப் புசவார் கொண்டு வாரார் கொண்டுவந்து குடுத்தான் அதின்பேரிலே இந்தச் சிப்பாயிகளைப் பயணம்பண்ணி அனுப்பினான். வந்தவன் மமுதல்லிகானுக்கு சிறொப்பாவாச்சுதென்று சொன்னாரென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள் யென்று சொன்னேன். மத்தப்படி மமுதல்லிகானுக்கு மெய்யானாலிங்கேயும் இன்று சாயங்காலம் சேதி வரும் யென்று சொன்னேன். துரை அவர்களும் அவனுக்கு குடுத்தது பொய்யாக காணாது. இந்தமட்டுக்கும் சேதி வராதா யென்று சொன்னான் மெய்யாய் எழுதிவந்தால் யெண்ணவேண்டியது முன்னே மமுதல்லிகானுக்கு குடுத்தார்களென்று சந்தாசாயபு வைக்கில் மகம்மதுறசா வென்றுயிருக்கிறவன் யெழுதினது அதின் பிற்பாடு அவன்தானே தானே குடுக்கிறதாயிருந்தது. சயிது லசுக்கர்கான் தடைபண்ணிப்போட்டானென்று யெழுதயில்லையா ஆனபடியினாலே கடசி அறிஞ்சாலே அல்லாமல் யிதுக்கு முன்னே குடுத்தாலும் மெய்யென்று நம்பப்போகாது பவந்தம் பண்ணியிருப்பார்களென்று சொன்னேன். மெய்தானென்று ஒத்துக்கொண்டு மேஸ்தர் கோப்பு என்னமா யிருக்கிறானென்று கேட்டார். யென்னமாயிருக்கிறது அங்கேயிருந்து தேவனாம் மஞ்சகுப்பத்துக்கு தோட்டத்திலே நுழையச்சே ராத்திரி பனிரெண்டு மணிக்கு சத்துபண்ணாமல் பட்டணத்திலிருக்கிறவர்கள் தூங்கிற வேளை பார்த்து நுழைஞ்சவன் அதுமுதல்கொண்டு மஞ்சகுப்பத்து தோட்டத்திலேதானே யிருக்கிறான். சிறிது தமிழ ராணுவுகளிருந்தவர்களை வாங்கிப்போட்டு ஒடம்போடே செத்தியிருக்கிறான். உடம்பு செத்தாலும் நாக்குமாத்திரம் சாகாமல் கமவர்மாய் சொல்லிக்கொள்ளுகிறானாம் நாங்கள் கோபிச்சுக் கொண்டு வந்தோம் மறுபடி அழைச்சனுப்பினார்கள் போறோமென்று சொல்லிக்கொண்டு யிருக்கிறதாய் சேதி கேழ்க்கப்பட்டுதென்று சொன்னேன்.. சிதம்பரம் மமுதுகானண்டைக்குப் பணம் காசு அனுப்பச்சொல்லி யெழுதியிருந்தயே யென்னாச்சு யென்று கேட்டார் மமுதல்லிகானுக்கு ராச்சியமாச்சுது அவர்கள் பணத்தை அனுப்பச்சொல்லி வந்து மனுஷர்கள் காத்துக்கொண்டிருக்கிறார்கள் அவர்களுக்குநானனுப்புகிறதேயல்லாமல் உங்களுக்கு

குடுக்கிறதில்லே யென்று சொல்லுகிறதுமல்லாமல் நீங்களிருக் தால் பிடிச்சுக்கொண்டு போவார்களென்று மொட்டி பணத்தை விட்டுப் போகச்சொல்லுகிறதும் யிப்படி சறுக்கிலே யெண்ண மில்லாமல் வாற்த்தைகளைப் பேசிக்கொண்டு யிருக்கிறுன். நம்முட மனுஷர்களும் நீ யிந்தமட்டுக்கும் அவனுக்கு பணம் கொடுத்த தில்லே யென்று உன் வாயினுலேதானே சொன்னுப்போலே ஆச்சுது இது பிருன்சுக்காறர் பணம் ஒரு காசு போறதில்லே. உன் தலேமேலே சுமந்துகொண்டு வந்து குடுக்கிறவனியும் வாங் கிக்கொள்ளுகிறவர்கள் எங்கள் துரைகளும் யென்று சொல்லிக் கொண்டிருக்கிறதுமல்லாமல் உன் மொட்டுக்கு நான் பயந்து போறபோது கிழக்கே உதிக்கிற சூரியன் தெற்கேயல்ல உதிப் பான் தூரம் விசாரித்து வரப் விசேஷத்தைக் காப்பாத்திப் பேசச்சொல்லி சொன்னதின்பேரிலே கச்சேரியிலே யிருக்கிற வர்கள் காலத்தாலே பேசிக்கொள்ளலாம் யிப்போ யிருக்கப் பேச்சி வரிருமென்று சொல்லிப்போகச்சொன்னுர்களாம் என்று எழுதி வந்தது. திண்டிவனம் அச்சரவாக்கம் சீமை வகையரு சீமையிலே யிருக்கப்பட்ட கிறுமங்களிலே ஒரு குடியாகிலு மில்லே. வீடுகளெல்லாம் சுட்டுத் தீந்துபோச்சுது. இருந்த தானி யங்கள் பயிருகள் சமஸ்தமும் நிப்பாத்தம் பண்ணிப்போட் டார்கள். மாடுகளெல்லாம் ஓட்டிக்கொண்டு போயி தீத்துப் போட்டார்கள்.

குடியானவன் வந்தால் நூதன பிறதிஷ்டையாயி சமஸ்த மும் கொண்டு முந்தித்து பண்ணிக்கொள்ளவேணுமென்று சொன் னேன் விழுப்புரம் திரு விதி சீர்மையும்ப்படிதான் வெங்கட் டாம்பேட்டையுமப்படிதான் யென்று யிது முதலாகிய சேதிகளே சொல்லி தீர்த்த நகரிப்பணம் பண்டாரமுதலியார் பேரில் வா வேணும். அவர் தேவனும்பட்டணத்திலே யிருக்கிறுர் அந்த சீமை ருசுவாயிருக்குது. மேல்தர் பிளேயர் துபாசி முத்து கிருஷ்ணபிள்ளே தொறவும் கட்டிக்கொண்டு யிருக்கிறுனென்று சொன்னேன். நல்லது சுவாமி தயவு பண்ணுவாரென்று சொன் ஞர் அப்பால் நான் பாக்கு கிடங்கியே வந்தேன்.

**1750 ௵ மாயு ௴ 14 ௨ பிறமோதூத ௵ வையாசி ௴ 4 ௨ குருவாரம்.**

இத்தனள் காலத்தாலே பிறபு அழைச்சவிடத்திலே போய்க் கண்டுப் பேசினவிடத்தில் சமாசாரமேதாகிலும் வந்து தா

தாரிக்கு—ராத்திரிக்கு நம்முட வையாசி மீ முதல் தேதி திங்கள் கிழமை ராத்திரி ஆற்காட்டு சுபா மமுதலிகானுக்குக் கொடுத்து சிறேப்பாவும் குடுத்து அனுப்பினார்களென்றும் சந்தாசாயபு அவர்கள் யெங்களை சேவகத்துக்கு வைத்துக்கிறதானால் வாச் சொல்லி எழுதியனுப்பச்சொல்லியும் யில்லாவிட்டால் யின்னேரம் சேவகம் போகங்காது. சாயபு உத்தாரம் குடுத்தாலும் நல்லது அந்தப்படிக்கு இரண்டிலே ஒரு உத்திரவு தெரிஞ்சுக்கொண்டு யெழுதியனுப்பச் சொல்லியும் நபாபுசாயபு அவர்களுக்குப் அறசி யிந்தப்படிக்குத்தான் எழுதியனுப்பிவிச்சேன் அதுவுங்குசரு யிச்சு அதுக்கு உத்தாரமும் வாங்கி அனுப்பச்சொல்லியும் எத்தினை நாளென்றும் யிவர் ஆசையை நம்பிக் காத்துக்கொண்டிருப்போமென்றும் எங்களுக்கு சிலவு சித்தாயங்களுக்கு பெகு தங்கா யிருக்குதென்றும் யிப்படியாக யெழுதியிருந்தது. சந்தாசாயபுக்கு எழுதின காகிதத்திலேயும் காரியமதுதானே யெழுதியிருந்தது. சந்தாசாயபுக்கு எழுதின காகிதத்திலேயும் காரியமது தானே யெழுதியிருந்தது. குண்டோபண்டிதனுக்கு யெழுதின மருட்டி காகிதத்திலேயும் அப்படித்தானே எழுதியிருந்தது. எழுதியிருந்த மத்தலப்புவை துரையவர்களுக்கு அறிக்கைபண்ணினதுக்கு மமுதலிகானுக்கு குடுத்தது யின்னம் மெய்யல்ல அவர்களிதெல்லாம் பவந்தமின்னம் நன்றாய் அறியவேணுமென்று காகிதங் கொண்டுவந்த சேவகனை அழைக்கச்சொன்னார். அழைச்சுக் கேட்டவிடத்திலே அவன் சொன்ன சேதி யென்னவென்றால் மமுதலிகானுக்கு சிறேப்பா குடுக்கிறோமென்றும் யிருக்கிறார்கள் யென்று முசபர்சங்குக்கு குடுக்குறோமென்று சொல்லி அவர் நிசான்கூட கஞ்சிபசாரிலே தயாறுபண்ணுகிறாரென்று சொல்லுகிறார்களென்றும் அவர் டேறா ஆனைகள் குதிரைகள் முதலானதுகள் பிறம்பாயிறங்குதென்றும் உம்முட பயம் தன்டெல்லாம். அதலகுதலப்படுதென்றும் வழுதாவூரண்டையிலே யிறங்கியிருக்கப் பயந்து வந்தவாசி யண்டையிலே போயிறங்கினான். என்றும் சயிதுல்சக்கர்கான் சைதுசெரீபுக்கான் முதலான பெரிய மனுஷர்களுக்கு யெல்லாம் முசபர்சங்குவை விடுவிச்சு சீமையும் கொடுத்து சிறேப்பாவும் புதுச்சேரிக்கு அனுப்பி விடவேணுமென்றும் யெங்கெந்தப் பிறயத்தனம் பண்ணவேணுமோ அந்தப் பிரயத்தினம் எல்லாம் பண்ணி விடுவிக்கவேணுமென்று நாசறுசங்குக்கு பெகு விதமாய்த் தெரியப்படச் சொல்

லிக்கொண்டிருக்கிறார்கள் சபிதுல்சுக்கர்கானையும் சையதுசெரீபு கானையும் பதினையாயிரம் குதிரைகளையும் கூட்டி முன்னே போகச்சொன்னதாகவும் அவர்கள் முசபர்சங்குக்கு சிறுப்பா குடுத்தாலே அல்லாமல் போறதில்லை யென்று ஒரு பிடிவாயப் பிடிச்சுக்கொண்டிருக்கிறதாகவும் அதன்பேரிலே போகச்சொல்லி சபிதுல்சுக்கர்கானுக்கும் சைதுசெரீபுகானுக்கும் சிறுப்பாவும் ஆனையும் கொடுத்து அனுப்பி முன்னே அவரவர் பவுன்சும் தம்முடனே—பவுன்சிலே அவர்களை தயினாத்தாக யிருக்கிறதுகளை யும் கூட கூட்டிக்கொண்டு முன்னுதாக அயிதராபாத்து போய் சேரச்சொல்லியும் தாமும் பிறகாலே வந்து சேருகிறோமென்று சொல்லிப் போகச்சொன்னதுக்கு முசபர்சங்குவை விட்டாலே யல்லாமல் நாங்கள் போறதுயில்லை யென்று சொல்லி பின்னையும் கடப்பை அப்துல்நபிகான் கந்தனூரான் இம்மத்துபாதர்கான் முதலான பேர்களை யெல்லாரையும் கண்டு பேசிக்கொண்டு பேகத் துக்கு முசபர்சங்கை விட்டு ஆற்காட்டு ஆதிவெண்ணை வகைபறு றாச்சியமும் அவர் ஆகினம் பண்ணவேணுமென்று பேசப் பேச் சாயிருக்கிறது யென்றும் நாசறுசங்கு சம்மதிச்சும் சம்மதியா மலும் யிருக்கிறான் ஒருவேளை விட்டால் யென்ன மோசம் வரு மோவென்கிற பயம் வாதிக்குதென்றும் சொல்லிக்கொள்ளுகிறார் களென்றும் சொன்னான். எழுதின காகிதத்துக்கும் அந்தக் காகிதம் கொண்டு வந்தவன் வாய் விசேஷத்துக்குந்தானே தயியத்தா யிருக்கிறது அங்கே யிருக்கிறபேர் சும்மா சமே தாரன்பேர்வைத்து சபாறுபண்டிதனையும் அனுப்பினார்கள் அவர் கள் தானே மமுதல்லிகானுக்கு சுபா ஆச்சுதென்று யெழுதினால் தங்களுக்குப் பின்னையும் பத்து பணம் விசேஷிச்சுக்கொடுக் கிறோம் நமக்குத்தானே பேசிக் குடுக்கவேணுமென்று பணத்தை உசத்திக்கும் நிமித்தியம் யெழுதினதேயல்லாமல் பின்னையும் ஒன் றுமில்லை யென்று சொன்னார். அப்படி தானசு வேணுமென்று சொன்னேன். நல்லது இந்தக் காகிதத்தை சந்தாசாயபு அண் டைக்கு கோடுத்து அனுப்பி இந்த ஆளையும் அனுப்பிவிடச் சொல்லிப்போட்டு அப்பால் பின்னையும் லோகாப்பிறமமாய்ப் பேசியிருக்கச்சே தோஸ்துமகம்மது யென்கிற அப்துல்றயிமா னுடைய வக்கீல் வந்து சிப்பாயிகளுக்கு நித்தியம் கட்டளை சுவா ரவர்களுக்கு மூணு பணமும் ஒரு படி அரிசியும் கால் சேவகர் களுக்கு ஒரு பணமும் ஒரு படி அரிசியும் குடுக்கிற

சட்டத்திற்கு இரண்டாயிரம் ரூபாய்க்கு ரசிது எழுதிவந்தது. கொடுத்துப் பணம் கேட்டான். அப்பால் லிங்கனை அழைத்து ஒரு ரூபாயாகிலும் நாளைய தினம் கொடுக்கிறதுக்கு யில்லே. இதுக்கு யெங்கே வாங்கலாம் யென்று கேட்டார். தமிழர் வசத்திலே யெங்கும் அகப்படாது லாசரு வசத்திலே மாத்திரமிருக்கு மென்று சொன்னேன் அதுக்கு மெய்தானென்று தம்முட கணக்கு முத்தையனை அழைச்சு லாசருவைப் போயழைச்சு பதினாயிரம் ரூபாய் யெட்டு பத்து நாளையிலே மறுபடி குடுத்து விடுகிறோமென்று கேட்டு வாங்கிவரச் சொல்லியனுப்பினார். அவனும் போனான். நானப்பால் பாக்கு கிடங்கியே வந்தேன்.

**1750 ஆம் மாசி மீ 18 உ பிறமோதூத ஆம் வைகாசி மீ 8 உ சோமவாரம்.**

இந்தநாள் காலத்தாலே பிறப. அழைச்சனுப்பிவிச்சு வந்தவாசி அண்டையிலே போயிறங்கின படின்சு திரும்பி—திருவத்திபூர்—செய்யாற்றங்கரை ஓரத்தில் போயிறங்கினது. நாசரு சங்கு கூடாரம் வந்தவாசிக்கு ஒரு நாழிகை வழியிலே போயிறங்கின வாக்கிலே யிருக்குது நக்காசாயபை வந்து பேட்டியண்ணிக்கொள்ளச்சொல்லியும் பத்து லக்ஷம் ரூபாய் குடுக்கச்சொல்லியும் சந்தாசாயபு பெண்சாதி பிள்ளைகள் ரெஷாதமயன் போனூர் மமுதல்லிகான் வகையறா யிருக்கிறவர்களை ஒப்பிவிக்கச்சொல்லி கேழ்க்கிறதாகவும் யிதிலே ஒன்றும் நடக்கத்தக்கதறியாது சண்டை பண்ணுகிறேன் என்று சொல்லி அந்த சான்சாமி யென்னவுண்டோ அதுகள் மூல்தீத்து பண்ணிக்கொண்டிருக்கிறானென்கிற கபுறும் மறாட்டியர் கொள்ளை—குதிரைகள் நாலாயிரம் குதிரை சதுரங்கப்பட்டணம் கோவளம் சென்னப்பட்டணம் சுத்திலும் பூந்தமல்லி சீமை மணிமங்கலம் சீமை உத்திரமேரூர்—சாலப்பாக்கத்து சீமை செங்கல்பட்டு சீமை காஞ்சிபுரம் சீர்மை வகையறாப்போயி கொள்ளையிட்டு பெண் சிறைகள் பிடிச்சதும் மிதமில்லை. அப்படியெல்லாம் கொள்ளையிட்டு சிறை முதலானது செய்து நிப்பந்தம் பண்ணிப்போட்டு வந்ததாயி சேதி வந்தது. யிந்தப் பிருந்தியங்களிலே யெப்படி நடப்பிச்சார்களோ அதுவும் அப்படி நடப்பிச்சாரென்று சொன்னேன். அப்பால் பதினொரு மணி வேளை அழைச்சனுப்பிவிச்சு கும்பினியர் அப்துல்றயிமானுக்கு சேக்குஅசேனுக்கும் இரண்டு மெதாலியும் அனுப்பி அவர்

களுக்கு கப்பித்தான் உத்தியோகத்துக்கு எப்போதும் யிருக்கலாம் அதுக்கு பாவிபக்கேத்தும் யெழுதி வந்தது. அது குடுக்கிறதுக்கு சறபளியும் ரெண்டு சிமிருப்பாவும் சரப்பள்ளி ஒன்றுக்கு நூத்தன்பது விராகனிடை யிருக்கு ரெண்டு பேருக்கும் சரப்பள்ளியும் ரெண்டு சிமிருப்பாவும் முன்னூறு ரூபாயிலே யிருக்க முஸ்திதுபண்ணி வைக்கச்சொல்லியும் நாளையதினம் செகப்பு பட்டையும் செம்லூச (St. Louis) முத்திரையும் போடடுக்கொள்ளப்போறேன். அதுக்கு நாளைக்காலத்தாலே ஆறு மணிக்கெல்லாம் நவப்போத்து முதலான வாத்தியங்களும் தாசிகள் முதலான சம்பிறமமெல்லாம் முஸ்திது பண்ணிவையென்று சொன்னார். நல்லதென்று சொல்லி அந்தப்படிக்கி அந்தத் தொழிலாளிகளுக்கெல்லாம் சொல்லி முஸ்திதுபண்ணி வைக்கச்சொல்லி சொன்னேன். துரையவர்களுக்கு முசியே கருவாலியுட வீட்டில் பகலைக்கும் ராத்திரிக்கும் விருந்தானபடியினாலேயும் கருவாலியு வீட்டுக்குப் போனார். நானும் சாப்பிட வீட்டுக்குப் போனேன். இத்தனாள் சாயங்காலம் முசியே கருவாலியு கோட்டத்திலே துரை யவர்களிருக்கச்சே நான் போனவுடனே யேதாகிலும் சேதி யுண்டாவென்று கேட்டார். லசுக்கர் வந்தவாசியண்டையிலேதான் யிருக்குது யென்று சொல்லி பின்னை வேறே ஒன்றுமில்லையா வென்று கேழ்க்க சமாசாரம் வரயில்லை யென்று சொல்லிப்போட்டு வரச்சே வாசுதேவ பண்டிதர் குமாரன் தங்கள் சாவடியும் குளமும் முருங்கைப்பாக்கத்து ஆத்தண்டையிலே யிருக்குதே அதிலே சேவுகன் குளிக்கப்போனபோது அதிலே போக்குமாடுத்து கிடந்தது. அதிலே துப்பாக்கிக்குப் போடுகிற குண்டு இருபத்து மூணு குண்டு அந்தக் குழாயிலே போட்ட வாக்கிலே யிருந்துது யென்று போக்குமாடுத்தையும் காண்பிச்சு துரையவர்கள் கயிலும் குடுத்தான். வாங்கிப் பார்த்தார். துரை யிருந்துகொண்டு இங்கிரேசுக்காறர் அரியாங்குப்பத்தின்பேரிலே சண்டைபண்ணி அங்கேயிருந்தாலப்போ வந்து புதுச்சேரியை வளைச்சு சுத்திக்கொண்டபினே அந்த சண்டையின்போது அவர்கள் போகச்சே குளத்திலே போட்டுவிட்டு ஓடிப்போனார் அது அகப்பட்டுது நீ யெடுத்துக்கோ யென்று சொன்னார்கள். நான் வாசுதேவபண்டிதர் குமாரனைத்தானே யெடுத்துக்கொள்ளச்சொல்லி சொன்னேன். அவன் சலாம்பண்ணிக்கொண்டு போக்கு மாடுத்தையும் எடுத்

துக்கொண்டு யிருபத்துமூனு குண்டையும் எடுத்துக்கொண்டு விட்டே போனுன். நான் சுவாரிப்போனேன்.

**1750 ஸு மாயு மீ 19 உ பிறமோதூத ஸு வையாசி மீ 9 உ அங்காரகவாரம்.**

இத்தனுள் காலத்தாலே இரண்டு கொத்துசரப்பள்ளி சரூப்பு முத்துக்குமரப்பசெட்டியும் வடுகத்தட்டார் அய்யனனும் கொண்டுவந்து சிறுத்தி—ஒப்பிச்சார்கள். அதைக்கணக்குப் பார்க்க கூலியுள்பட ஆயிரம் ரூபாய் விழும்படியாச்சுது. சிரூப்பா மூன் னூறு ரூபாயிலே எடுத்து ஏகத்துக்கு இரண்டு கொத்து சரப் பள்ளியும் யிரண்டு சிரூப்பாவும் எடுப்பிச்சுக்கொண்டு துரைய வர்களுக்கு மூபார்க்கு பாதி குடுக்கிறதுக்கு ஒரு அச்சில் ரூந்சி சிப்பமும் கையில் யெடுத்துக்கொண்டு துரையவர்களுடைய சம ம் பார்த்து உடுத்திக்கொண்டு வெளியே கடுச்சாலையே வந்த வுடனே நான் போய் சேம்ஆயி முத்திரையும் செகப்புப் பட்டை யும் யிப்போ தரிக்கப்பெத்தீர். அன்வரதிகானே வெட்டி செயிச்ச ஆற்காட்டு சுபா சந்தாசாயபுக்கு குடுத்ததுக்கும் நாசருசஙகு லக்ஷம் குதிரையுடனே வந்தவனே செயிச்ச தொரத்திவிட்டதுக்கு அருல் அகலப்பட்டையும் சேர்ந்து யெஸ்பரித்து பென்கிற மரூத் தபும் வரப்போகுதென்று சொல்லி மூபார்க்கு பாதி சொல்லி ஆரஞ்சு பழம் குடுத்தேன். உடனே புரிவந்தான். அப்போ ஏழு மணிகோமூண்டு. ஆறுவி, ல்சிகப்பு அகலப்பட்டையிலே கோத்து இருக்கிற சேம் ஆயி முத்திரையை உத்திரசஞ்சம் போடுகிறது போலே போட்டுக்கொண்டார் போட்டுக்கொண்டவுடனே ஒரு தாக் கோட்டை வாசற்படிக்கும் துரைகள் வீட்டு வாசற்படிக்கும் வரிசையாய் நிற்கிற சிப்பாயி குதிரை சுவார்கள் கோட்டைக் குள்ளே வரிசை வைத்து யிருக்கிற வெள்ளைக்காறர் யேகத்துக்கு ஒரு வரிசைகள் துப்பாக்கிகள் தீந்து கோட்டையிலேயும் யிருபத் தோரு பீரங்கி விழுக்காடு நாலஞ்சு கப்பல்களிலேயும் போட் டார்கள் அப்போ யிருந்த வெள்ளைக்காறரெல்லாரும் துரையவர் களே கட்டிக்கொண்டு முத்தமிடத்தக்கதாகவுள்ளவர்கள் முத்த மிட்டு ஆசாரம்பண்ணினுர்கள். மத்தபேர்கள் சும்மா ஆசாரம்பண் ணுர்கள். நானும் மறுபடி ஆசாரம்பண்ணினேன். ஆனலிப்போ துரையவர்களிருந்துகொண்டிருக்கிற உற்சாகமும் அவரிருக்கிற ஜெிப்புகளையும்-பார்த்தால்முகத்திலேறுசயோகம்,தாண்டவமாடு

இருப்பேரிலே யிருந்ததும் அல்லாமல் முன்னுக்கும் வெகு யோகத்தையும் கீற்த்தியையும் அநுபவிக்க யேஷியம்கூட தோத்சுது. இந்தப்படிக்கு சகல சனம் சந்தோஷமாய் யிருக்க நவ போத்து முதலான வாய்த்தியங்களெல்லாம் கொகிக்க—முசபர் சங்கு ஆனை முப்பத்திரெண்டின் பேரிலேயும் அம்பாரிசு அவு தாக்கள் வைத்துவரவு மிந்தப்படிக்கு சகல சம்பிறமும் வேடிக்கைகளும் துறத்தனம் பண்ணுற துரைகளிவர்களும் கோயிலுக்கு முன் வரிசையிலே வைத்து அந்த வரிசையிலே போய் கோட்டைக்குள்ளே நுழைஞ்சு கோயிலுக்குள்ளே போய் பூசை கேழ்க்கச்சே மூன்றுதரம் துப்பாக்கிகளெல்லாம் திந்து மூன்று தரம் பீரங்கிகளெல்லாம் திந்து கப்பல்களுட பீரங்கிகளும் அப்படியே திந்தார்கள். நவப்போத்துகள் முதலான வாத்தியங்களெல்லாம் கொஷ்டிக்க கப்பித்தாமார்கள் லூந்தினுந்து முதலான ஒபிசியல்மார்கள் பேரகச்சேயும் வரச்சேயும் யீட்டிகள் திருப்பி ஆசாரம்பண்ண துரையர்கள் மறுபடி விட்டை வந்தவுடனே கும்பினீர் வர்த்தகர் யானம் கும்பினீர் துபாசி அந்தணன் குமாரன் லஷ்மணனுயக்கர் சேஷாசலசெட்டியார்

இத்தனுள் காலத்தாலே வில்லியநெல்லூர் வாசறபடி முதல் கொண்டு துரையவர்கள் வீட்டுமட்டுக்கும் யேகமாய்ச் சொலுதாதுகளும் யிருக்கிற சிப்பாயிகளும் வரிசை வைச்சு துரையவர்களும் யேழரை மணிக்குப் போய் வில்லியநெல்லூர் வாசற்படியிலே போட்டிருக்கிற கூடாரத்திலே சகல கோன்சிலேர்கள் பின்னையும் வெள்ளைக்காரர் பெரிய மனுஷர்களுடனே கூட நவ போத்து முதலான சங்கீத மேள வாத்தியங்கள் கொழிக்க அங்கே போயிறங்கி அங்கே யிருந்து என்னையும் சின்னதுரை முசே கிலியார் பின்னையும் ரெண்டொரு ஒபிசியால்மார்கள் மேள தாள சம்பிறமத்துடனே குண்டுதாழைமட்டுக்கும் யெதிர் கொண்டு போயி நபாபுசந்தாசாயபு அவர்களை அழைத்துக் கொண்டு வரச்சொல்லி உத்தாரம் குடுத்தபடிக்கு நாங்கள் போயி அழைத்துக்கொண்டு வரப்போன விடத்திலே யிதுக்குள்ளே மொறட்டாண்டிச்சாவடியிலே சந்தாசாயபு வருகிறுரென்று காத்துக்கொண்டு யிருந்த—முசே தொத்தேல் முசே புசி முதலான ஆற்காட்டுக்குப்போன பவுனசு ஆம்படியே சந்தாசாயபு அவர்கள் குண்டு தாழைக்கு நேராக வரச்சே—சேஷாசலசெட்டியார்—முதலான பேர்கள் வந்து முபாரக்கு பாதி சொல்லி அவரவர் உபசா

ரங்களெல்லாம் சொல்லியானபிற்பாடு நபாபுசந்தாசாயபு முதலான
பேர்கள் வந்து முபாா்க்குபாதி (Congratulations) சொல்லி
யான பிற்பாடு நாசறுசங்கு லசுக்கர் சமாச்சாரம் வந்தவாசி
பண்டையிலே யிறங்கி யிருக்கிற சமாச்சாரமும் மீர்சத்து மமு
தல்லின்கானுக்கு சேத்தியங்களும் பேசியிருந்து அனுப்பிவிச்
சுக்கொண்டுபோன பிற்பாடு நவாபுமுசபர்சங்கு குமாரன் ஆசி
பாசல் முதலான பேர்கள் வந்து முபார்க்கு பாதி சொல்லிப்
பேசிக்கொண்டு போனார்கள் இன்றையதினம் துரையவர்களுக்கு
பிறன்சு றுசா இங்கிறேசுக்காறர்களை செயிச்சத்துக்கு அனுப்
பின செம் லூயி (St. Louis) முத்திரையும் சிகப்பு அகலப்
பட்டையும் உடைய சந்தோஷம் பட்டணத்துக்குள்ளே அவரவர்
களுக்கு நிக்ஷேபம் அகப்பட்டால் எத்தனை சந்தோஷமோ அத்
தனை சந்தோஷப்பட்டார்கள் அந்த சந்தோஷத்தை எத்தனை
யென்று எழுதப்போறேன் யென்னாலே எழுதி முடியாது.
யிந்த துரையவர்களுக்கு எப்போதும் செய்ய பிறதமும் றுச்சியா
திகாரியமும்—அதிகாரமும் வந்து நூறு ௵ வயது சிறஞ்சீவியா
யிருக்கிறதுமல்லாமல் யிந்த மறுத்தபு அனுப்பிவிக்குறதுக்கு
சுவாமி ஒரு பிள்ளையுங் குடுத்து இந்த றுச்சியத்திலே யெப்போ
தும் யிருக்கத்தக்கதாக தயவுபண்ணவேணுமென்று சுவாமி
யைப் பிறார்த்திக்கிறேன். சுவாமி அப்படி ரக்ஷிப்பார் இதிலே
சேக்குஅப்துல்லாபிமானுக்கும் சீமையிலிருந்து கும்பினியார்
அனுப்பின இரண்டு மெதாலியும் பந்தேந்தும் சிறெப்பாவும்
குடுத்ததை எழுதுகிறேன் நடந்த பூருவோத்தரம் காலத்தாலே
நான் துரையவர்களண்டைக்கு கொண்டுபோய் கொலுசைக்காரன்
பிச்சுவுடனே கொலுசைப் பார்த்து மெதாலியும் ரெண்டும் யென்
கையிலே கொடுத்து அருல்பித்தைக் கொண்டுவந்து ஒவ்வொரு
கொத்துசரப்பள்ளியிலே ஒரு மெதாலியாவைத் அருல்பித்தை
யினாலே கட்டி ஒரு சிறெப்பாவும் கூட வைத்து அந்தப்படிக்கு
இரண்டு சிறெப்பாவும் இரண்டு சரப்பள்ளி கொத்திலே
கோத்த மெதாலியும் வெவ்வேறே வைத்து வை யென்று சொன்
னார் அப்போ அப்புவையும் தியோகையும் அழைத்து அரு[illegible]
பித்தைக் கொண்டுவரச்சொல்லி சரப்பள்ளியிலே மெதாலியை
கட்டிவை—சிறெப்பாவும் அதுவும் அந்தப்படிக்கி வெவ்வேறே
வைத்து துரையவர்கள் யெழுதுகிற கையெழுத்து கபினேத்
திலே மேசைமேலே வைத்து கபுறு சொன்னேன். அதுக்கு

அப்துல்றயிமானையும் சேக்குஅசேனையும் அழைச்சவரச்சொல்லு நான் கோயிலுக்குப் போய் வந்தவுடனே கொடுப்போமென்று சொன்னார் அந்தப்படிக்கி சேவுகனை அனுப்பி அழைச்சவரச் சொன்னபடிக்கி சேவுகன் போயி யழைச்சவந்தான். பிறகு துரையவர்கள் முத்திரையும் போட்டுக்கொண்டு கோயிலுக்குப் போயி வந்தவுடனே அலங்கசபண்ணி ராசா அவர்கள் விவ் லர் ருவா (Vive la Roi) கூப்பிட்டு ருசாவினுடைய சவூதி சொல்லி சாராயம் குடிக்கும்போதாரும் இருபத்தோரு பீரங்கி விழக்காடு கோட்டையிலே போட அந்தப்படிக்கு கப்பலிலே போடவில்லை. வில்லியநெல்லூரிலே யிறங்கியிருக்கிற பவுன்சிலே பிறங்கிகள் போட பிக்தப்படிக்கி நடந்தான பிற்பாடு அப்துல் றயிமானையும் சேக்குஅசேனையும் அழைக்கச்சொல்லி கோன் சேல்க்காறர்களையும் அழைச்ச துரையவர்கள் நடு சாலையிலே யிருந்துகொண்டு சேக்குஅப்துல்றயிமானுக்கு முன்னமே மெடாலியும் கோத்திருக்கிற கொளுசை கழுத்திலே போட்டு யென்னை சீறொப்பா கொடுக்கச்சொன்னார். அந்தப்படிக்கு கொடுத்தான வுடனே சேக்குஅசேனுக்கு மெடாலியும் என்கிற பொன் பதக்கம் கோத்த யிருக்கிற கொளுசை கழுத்திலே போட்டார். நான் சீறொப்பா குடுத்தேன். துளுக்கானிய சட்டமாய் படுகாவைப் பிடிச்சு கழுத்திலே போட்டு ஆனவுடனே அவர்கள் தசிலி மாத்து பண்ணினார்கள். நீ கும்பினியிலே சேவிச்சத்துக்கும் கும்பினியார் உங்களுக்கு பெகுமதியும் அனுப்பி உங்களுடைய உத்தியோகம் கும்பினியிலே எப்போதும் பகலியாய் நடத்தச்சொல்லி பத்தெக் கை யெடுத்து வரச்சொன்னார். மேசைப் பலகையின் பேரிலே காணுமென்று சொன்னதின்பேரிலே தாம் போயி கோபம் பண்ணி அப்பாலெடுத்துக்கொண்டு வந்தார். அதை முசியே பொயிலோ (M. Boyelleau) கையிலே கொடுத்து படிக்கச் சொல்லி அப்பாலிந்தப்படிக்கி கோன்சேலிலே லீவுறும்பேரிலே எழுதிக்கொண்டு அந்த ரெண்டு பத்தேக்கையும் அப்துல்றயிமா னுக்கு ஒன்றும் குடுக்கச்சொல்லி யிவர்கள் யிரண்டுபேர்களையும் பார்த்து லீவுறும்பேரிலே யெழுதிக்கொண்டு முசியே பேரலோவ்— உங்களுக்கு குடுத்தனுப்புவார் நீங்கள் உங்கள் வாகனத்தின் பேரிலே யேறிக்கொண்டு உங்கள் வீடுக்குப் போகச்சே தெரு வீதி சுத்திக்கொண்டு போங்கோளென்று சொன்னார். அந்தப் படிக்கு அவர்களும் ஆசாரம் பண்ணி அனுப்பிவிச்சக்கொண்டு

ஆனைகளின் பேரிலே யேறிக்கொண்டு குதிரை—சுவார்களுடனே கூடப்பிறப்பட்டு வெள்ளைக்காறத் தெருவுக்குப் போய் விட்டே சேர்ந்தார்கள். என்னை கூடப்போகச்சொல்லி துரையவர்கள் சொல்லாதபடியினாலே அவர்களமைச்சத்துக்குப் பிறகே வருகிறேனென்று போகச்சொல்லி போகச்சொன்னேன். ஆனாலிந்த வெகுமதி வாங்கிக்கொள்ளச்சே அப்துல் றயிமானுக்கு ஒரு அற்பத்திலளவு யாகிலும் முகத்திலே சந்தோஷம் காண்பிக்கவில்லை. விசனத்தின் பேரிலே யிருந்தது. சேக்கு அசேனுக்கும் அப்படித்தான் ஆனால் அப்துல்றயிமானுக்கு யிருந்த அத்தனை விசேடை காணயில்லை. அடுத்தது காட்டும் பளிங்கு அதுபோல நெஞ்சிற்கடுத்தது காட்டும் முகம் யென்று திருவள்ளுவர் சொன்ன நீதி யிதுவரையிலே தப்பிதம் வாராமல் வந்தபடியினாலேயும் அவர்களனுபவத்தின் பேரிலேயும் கட்டினபடியினாலேயும் அவர்கள் சொன்ன நீதியின்படிக்கி சரியாயிருக்கிறதே அல்லாமல் தப்பிதம் வாராது யில்லை ஆனால் சேக்குஅப்துல்றயிமானும் சேக்குஅசேனும் மலையாள ராச்சியத்திலே சிப்பாயிகளாயி சேவுகத்துக்கு யிருந்து அக்ணியாகினி சீவனம்பண்ணிக்கொண்டு சேவுகம் யில்லாத வேளையிலே கடன் உடன் வாங்கிக்கொண்டு காடுகளிலே யிருந்துக்கொண்டு அடிச்சுபறிச்சு யாசகமூலமாகவும் யிந்தப்படிக்கெல்லாம் சீவனம்பண்ணிக்கொண்டு மேலே போடுகிற அங்கிக்குக்கூட அவகாசமில்லாமலிருந்தவனுக்கு மகா ள ள ஸ்ரீ பிறன்சு மகாராசாவுக்கும் யிங்கிரீசுக்காறருக்கும் சண்டையாகவும் அது முன்னிலையாயி இவ்விடத்திலிருக்கிற மகாருச ருச ஸ்ரீ ஸ்ரீ முசியே துப்பிளேயிக்சு பாதர்சங்கு அவர்கள் சொல்லுதே மலபாரிலே மயே—யிலே யிருக்கிற பிறன்சு பெத்திரியில் யிதுக்குமுன் கலகம் நடந்தபோது சேக்கு அப்துல்றயிமான் சேக்குஅசேன் முதலான பேர் உள்பட சேவுகத்துக்கு வைத்துக்கொண்டு அப்பால் சண்டையான யிற்பாடு சேக்குஅசேன்பிக்கன்கான் வகையரு ரெண்டு சமேதாரும் யிறநூறு சிப்பாய்களும் ஒக்கவே வந்திருந்தார்கள் அப்பால் நூறு சிப்பாய்களையும் ஒரு வருஷமானவுடனே மறுபடி அனுப்பிவிட்டு சேக்குஅசேன் வகுப்பு நூறு சிப்பாய்களையும் சேக்குஅசேனைமாத்திரம் யிருக்கச்சொல்லி யிவனுக்கு வருகிற சம்பளம் போதாமல் குடிக்க—கஞ்சிக்கு கடன் உடன் வாங்கிக்கொண்டு யிவர்களுக்குஞ் சிறிது போகம் பவுஸ்தியே யென்கிற காலம்

வந்து கேட்டபடி சீமையிலே பிரான்சு ராசாவுக்கும் யிங்கிரேசு ராசாவுக்கும் கலகம் புப்ளிக்கரிட்ட சேதி யெழுதிவந்ததின் பேரிலே சேக்குஅசேனை அழைப்பிச்சு உங்கள் தமையனொருத்தனை மலையாளத்திலே யிப்போ சும்மாயிருக்குறானென்று சொன்னியே அன்னூறு அறநூறு சிப்பாயிகளை கூட்டிக்கொண்டு வரச்சொல்லிச் சொல்லி அனுப்பச்சொல்லி அந்தப்படிக்கி சொல்லி அனுப்பி அப்துல்றயிமானை அழைப்பிக்க யிவர்கள் தலைமுறை தலைமுறையாய் அறியாத பல்லக்கு ஆனை குதிரைகள் யிது முதலானதுகளெல்லாம் மகாராச ஸ்ரீ ராச ஸ்ரீ யென்ற புது செனறல் துப்பிளெயிக்சு பாதுர் அவர்கள் அதுருஷ்டத்தினாலே சென்னப்பட்டணம் இங்கிலீசுக்காறர் கையிலிருந்து தற்றிருபத்தொரு வருஷம் பட்டணமாய் நவதீதியும் கொழிச்சுக்கொண்டிருந்ததை பிடிச்சப்போது யிவர்களுக்கு கொள்ளை அகப்பட்டதை அவனவனை யெடுத்துக்கொள்ளச் சொல்லி தயவு பண்ணினபடியினாலே யிவனுக்கு சமத்தாய் ஆயிரம் சிப்பாயிகள் கூட்டமாய் கைக்குள்ளே யிருந்தபடியினாலே எசந்தாங்கள் சிப்பாயிகள் கொள்ளையிட்டது கூட வாங்கிப் போட்டுக்கொண்டு சம்பாத்தியப்பண்ணிக்கொண்டார்கள் அப்பால் இங்கிரேசுக்காறர் பேரிலே தேவனாம்பட்டணம் சண்டையிலே சண்டைக்குப் போனதும் அப்போது மறுபடி யிங்கிரேசுக்காறர் புதுச்சேரியின் பேரிலே சண்டைக்கு வந்தபோது சிப்பாயிகளை வைக்குறேனென்று கிளிதுக்கு ஊரிலே உண்டானவனையும் இந்த வகுப்பு யெண்ணச்சே அந்த சமையத்திலே சிறிது பேர்களைக் கொண்டு வந்து போட்டு அதுக்கு யிதிலே கொண்டுபோயி சேத்தும் போக்குவரத்திலே சுத்துப்பட்டு கிறாமத்திலே கொள்ளையிட்டும் பட்டணத்துக்குள்ளே யேழைச் சனங்களா யிருக்கிறவர்களை அடிச்சுப்பிடிச்சு அதினாலே சிறிது கொள்ளையிட்டு ஆக்கிருக்கு அன்வறதிகானை பேரய் கேள் அந்தக் கொள்ளையிலேயும் அப்பால் சந்தாசாயபு அந்த மாமூலாவிலே ரெண்டாயிரம் சுவார்களையும் சிப்பாயிகளையும் வைத்தேனென்று அதினாலே வெகு பணம் சம்பாத்தியம் பண்ணினம் அப்பால தஞ்சாவூர் கொள்ளையும் தஞ்சாவூர் ராசவட்டத்திலேயும் நாலு ஆறு லக்ஷம் சம்பாத்தியமும் யிந்தப்படிக்கு பத்துப் பதினைந்து லக்ஷத்துக்கு சேந்து போனதினாலேயும் வெறிமுண்டாக் கொடுக்குகள் நவாயித்தனாபடியினாலேதான் யிலத்து சீமையைத்தானே கட்டிக்கொள்

ளலாம் சந்தாசாயபு வந்து கட்டிக்கொண்டதுக்கு ரசரூசங்கு வந்து யென்ன செய்து போட்டான் பாதுசாவுடைய சோறில்லை ஆனபடியினாலே யெந்த சீமை யெவன் கட்டிக்கொண்டாலும் காது பிறுதியில்லாமல் யிருக்கிறது பார்த்து யிருக்கச்சே நாமும் சோறுவாரியாய் கட்டுவோம் அல்லாதபட்சத்துக்கு பஞ்சசாரி மனசுபாவாகிலும் (5.000 horsemen) வாங்கி சுபா யிருக்கிற வனுடனே ஒட்டுவோமென்கிறமட்டுக்கும் கைக்குள்ளே யிருக்கிற வழக்க வழவழுப்பைத்தொட்டும் தோத்தி யிருக்கிறபடியினாலே யிப்போ சீமையிலிருந்து வந்த கப்பித்தான் உத்தியோகத்துக்கு சேர்ந்ததும் மெதாலியும் வெகுமானமும் பறவாயாய்த் தோத் தாமலும் யிதல்லாமலும் யிதை வாங்கிக்கொண்டு யிந்தக் கப்பித் தான் உத்தியோகத்திலேயா யிருக்கப்போமோருமாமென்று ஒரு அசூறயும் மனதுக்குத் தோத்தினபடியினாலே யிந்த வெகுமானம் வாங்கிக்கொள்ளுகிறதின்பேரிலே அசமாதானமாய் மனதுக்குத் தோத்தித்துமல்லாமல் இனிமேலிங்கே யிருந்தால் தான் நினைத் திருக்கிற நினைப்புக்கு விரோதமானபடியினாலே மெள்ள கழட் டிக்கொண்டு போகவேணுமென்ற நினைப்பாயிருக்கிறதுக்கு இது ஒரு தடைபோலே வந்ததென்ன வென்று நினைத்ததாலேயும் மனதிலே கடுகடுப்பு தோத்தினது. மூகத்தில் கண்டதென்று யெனக்கு தோத்தினதும் யெழுதினேன். ஆனாலிந்த யிடத்தைத் தொட்டு யிந்த சிறேயசை அடைந்தானே அந்த யிடத்தில் கொடுக்கிற வெகுமானம் யெப்போ அசனயம் தோத்தப்படுதோ யினிமேல் யிவன் முன் மயேயிலே (Mahe) யிருந்து வந்தபோது யெந்த பெரியம்மாளை சேர்ந்து யிருந்தானோ அந்தப் பெரியம் மாளைச் சேருகிற காலம் என்றும் யென் மனதுக்கு கெட்டியாய்த் தோத்தி பெழுதினேன். இனிமேல் தாரித்திரத்தை அடைகிற துக்கு யிந்த புத்தி வந்திருக்கவேணும் அல்லது சரீரத்துக்கு யதொரு லபமுண்டாகவேணுமென்று கெட்டியாய் யென் புத்தி யிலே தோத்தி சுவாமி யெனக்கு தோத்திவிச்சபடிக்கு அனே கங் காரியங்கள் சரிப்பட்டபடியினாலே இதுவும் சரிப்படுமென்றும் தோத்தியே யெழுதினேன். பகலைக்கு சாப்பிட துரையவர்கள் உளுக்கார்ந்து சாப்பிடச்சே சாரூபங் குடிக்கச்சே ரூசா முத னவர்கள் சாங்தே சொல்லி குடிக்கும்போதெல்லாம் கோட்டை யிலே இருபத்தொரு பீரங்கி விழுக்காடும் கப்பலுக்குக் கப்ப விருபத்தொரு பீரங்கி விழுக்காடு யேழெட்டு தரம் தீந்தார்கள்.

வில்லியநெல்லூரண்டையிலே யிறங்கியிருக்கிற பவுன்சும் அப் படித்தான் பீரங்கிகள் யிருபத்தோரு விழுக்காடு சாப்பிடச்சே அஞ்சாறு தரம் தீந்தார்கள். மத்தப்படி சாயங்காலம் துரையவர் கள் அழைச்சனுப்பிவிச்சு வந்தவாசியிலே யிறங்கியிருக்கிற நாசருசங்கு கபுறு யேதாகிலும் உண்டாமென்று கேட்டார். விசேஷிச்ச சேதி வரயில்லை யென்று சொன்னேன். முசபர் கானைப் போய் மினவவில்லையா வென்று கேட்டார். நீர் போகச் சொல்லாதபடிக்கி நான் போவேனு வென்று சொன்னதுக்கு கும்பினியார் அனுப்பிவைச்ச வெகுமதிக்கு நீ போய் முபார்க்கு பாதி கொடுக்கவேண்டியதுதான் ஆனால் நான் போகச்சொல்ல மறந்துபோனே என்று சொல்லி நாளையதினம் போவென்று சொன்னார். நல்லதென்று அனுப்பிவிச்சுக்கொண்டு பாக்குக் கிடங் கிபே வந்தேன். அப்பால் ருத்திரி ஆடல் பாடல் சமஸ்த்த வேடிக்கைகளும் நடந்தது. இன்றையதினம் காகிதங்களாடினவர் களும் பாடினவர்களும் யிந்தப்படிக்கு சந்தோஷத்தை அடைஞ்சு யிருந்தார்கள்.

இந்த பீரங்கிகள் சபுதம் கேழ்க்கிற நாசருசங்கு காதுக்கு காதுக்கும் அந்த பவுன்சக்கும் யிடி யிடிச்சாப்போலே பயக் தோற்றுமென்று என் மனதுக்குத் தோத்தித்து விவேகிகளா யிருக்கப்பட்டவர்களுக்கும் தோத்தும்.

1750 ஞு மாயு மீ 20 உ பிறமோதூத ஞு வையாசி மீ 10 உ புதவாரம்.

இத்தனை காலத்தாலே பிறபு அழைப்பிச்சு வந்தவாசி யண்டையிலே யிறங்கியிருக்கிற நாசறசங்கும் அவர் லசுக்கரும் அப்பிறம் நடந்ததா அங்கேதான் யிருக்குதாவென்று கேட்டார். அங்கேதானே யிருக்குது.. சபபித்தரல்லிகான் தம்பி அசனல்லி கான் யென்று யிருக்கிறான் அவன் பெண்சாதியை சபுதரல்லி கான் பெண்சாதியும் நன்றாய் விசாரியாமல் போனதுமல்லாமல் அல்லிதோஸ்துகான் பெண்சாதி மாமியாளாச்சே அவளுமிந்த சின்ன மருமகளை நன்றாய் விசாரிக்கிறதில்லை யிவர்கள் தானே விசாரியாமல்போனால் தக்காசாயேபு போனார் மமுதல்லிக்கான் முதலான நவாபிதர் என்ன விசாரிக்கப்போறார்கள் அப்படி யிருந்து மாமியார் எங்கே யிருந்தாள் அங்கேகூட யிருந்தாள் இங்கிரேசக்காறர் கலாபம் வந்தபோது இங்கேயிருந்த அல்லி

அட்டிக்கொண்டு கோட்டைக்கி நடக்கிற சாகிரையும் அனுப்பி விச்சுக்கொண்டு யிருக்கிறான். அதுக்கு வார்சு கான் என்னைச் சேரவேணும் யில்லாவிட்டால் ருச்சி ருச்சியத்துக்கு யிசமான் நீர் உம்மைச் சேரவேணுமென்று ஒரு பித்திசாம் யெழுதிக் குடுத்து அசனல்லி பெண்சாதியை போய் நாசறுசங்கு மாலிலே பெண்டுகளிடத்தில் போயிருந்து பிறுதுபண்ணி யிந்த பித்திசாமையும் கொடுக்கச்சொல்ல அந்தப்படிக்கு நடப்பிச்சபடியி னாலே அதின்பேரிலே சந்தாசாயபுவை அந்தப் பணத்தை யெல்லாம் கொண்டுவந்து ஒப்பிக்கச்சொல்லியும் கோட்டையை விடச் சொல்லியும் சந்தாசாயபு பெண்சாதி முதலான பேர்களை ஒப்பிக் கச்சொல்லியும் கேட்டதுக்கு அதுக்குப் பெண்டுகளை ஒப்பிக்கத் தக்கதுமில்லை கோட்டையை ஒப்பிக்கத்தக்கதுமில்லை பணம் மாத்திரம் முன் இரண்டு லக்ஷத்து அன்பதினாயிரம் ரூபாயாகத் தீந்தபடிக்கு வேணுமென்றால் மைத்தப்படிக்கி பெண்டுகளை ஒப் பிக்கிறது எந்த ராச்சியத்திலேயாகிலுமுண்டா வென்று உபசார மாய் சொல்லி அனுப்பிக்கொண்டே யிருந்தார்கள் யிதின்பேரிலே ஒரு நாள் சக்குத்தியாய் சவாபு சொல்லி கோட்டையை வாங்கு வேன் மோறசா போடுங்களென்று கோட்டையின்பேரிலே லக்கை யேறுங்கோளென்று உத்தரஞ் சொன்னதின்பேரிலே ஒரு பீறங்கி கோட்டையைப் பார்த்து சுடுகுறேமென்று சுட்டார் களாம் அதின்பேரிலே கோட்டையின்பேரிலே யிருந்து அஞ் சாறு வேட்டு பீறங்கி சுட்ட மாத்திரத்திலே அந்தப் பரும் பரும் குண்டுகள் வந்து லசுக்கரிலே விழுந்தமாத்திரத்திலே நாசறு சங்கு லசுக்கரிலே யிருக்கிறவர்களெல்லாம் காயிருபட்டார்களாம் அதின்பேரிலே நாசறுசங்கு கோட்டைக்கிட்டப் போயிறங்கச் சொன்னவர்களெல்லாரையும் இரண்டு நாழிகை வழிக்கிப்புறம் வந்து யிறங்கச்சொல்லி யிப்போ உத்தாப்பிரதி உத்தாமுஞ் சத்து லகுவாயிருக்குதென்றும் முன் அத்தனை கண்டிப்பு யில்லை யென்றும் சாந்தாசாயபுக்குச் சேதி வந்ததா யிச்சேதி சாந்தா சாயபு சொல்லியனுப்பினாரென்று சொல்லி நேத்தயதினம் மழை யும் பேஞ்சு காத்துமடிச்சு நாசறுசங்கு கூடாரமுள்பட விழுந்து பெண்டுகள் கூட ரூணிவாசத்திலே யிருந்தவர்கள் ரூணிவாசம் விட்டு வெளியே ஓடினார்கள்.

கூடாரம் நாசறுசங்கு மேலே விழத் தப்பிச்சுதாம். நாசறு சங்கு கூடாரம் பெகு பெலத்து யிருப்பு முனை அடிச்சு யிருக்

கிறதுதானே பேத்துக்கொண்டு நாசறுசங்குவைப்போலே ஒத்தவன் மூலைக்கு மூலை ஓடி அமிழுனுப்பட்டான் மத்தப் பேர் சேதியும் லசுக்கர் பட்ட கசாலவையும் சொல்லக் கவையில்லையே. அத்தனை அமிழுனுப்பட்டுதென்று சொன்னதுமல்லாமல் அந்த சந்தடியிலே முசபர்சங்கு ஓடிப்போனானென்று கபுறு கூட பிறந்து பார்க்க வந்தார்களாம் அதுக்கு முசபர்சங்கு சொன்னது அப்படி ஓடிப்போற புத்தியுண்டானால் நானிங்கே வந்து அகப்பட்டுக்கொண்டு முழிக்கக் கவையில்லை. யித்தனை அவஸ்தைப் படவும் கவையில்லை யென்று வந்த மனுஷர்களுக்கு உத்தரம் சொன்னாரும் அந்த வார்த்தையை நாசறுசங்குக்குப் போய் கபுறு சொன்னதுக்கு மெய்தானென்று ஒத்துக்கொண்டானும். யிந்தப் படியெல்லாம் நடந்ததாய் சந்தாசாயபு அண்டைக்கு வந்தவனும் சொன்னான். முசபர்சங்கு தாயாருக்கு கபுறு சொல்ல வந்தவனும் யிப்படிதான் சொன்னான் என்று சொன்னேன். அதின்பேரிலே தானப்பமுதலியார் வந்து சலாம் பண்ணினார். என்னைப் பார்த்து நாசறு வந்து அந்தாறு நாளைக்கு முன்னே காரைக்கால் கிருமங்கள் அஞ்சு வருஷம் குத்தகையாச்சுது இன்னம் அஞ்சு வருஷத்துக்கு நீங்க குடுத்தால் ஆயிரம் ரூபாய் குடுக்கிறோம் என்று பேசினானென்கிறது றங்கப்பிள்ளை வாட்டும் சொல்லுகிறேனென்று சொன்னார். யிப்போதும் உன் கிருமக் குத்தகை யென்ன அவர் கிரும குத்தகை யென்னவென்று கேட்டார். என் கிருமத்துக்கும் மூவாயிரத்தன்னூறுதான். அவர் கிருமங்களும் மூவாயிரத்தன்னூறுதான் என்று சொன்னேன். இரண்டு பேர்கள் கிருமங்களுக்கு ஜுன் மீ வரைக்கும் குத்தகை அறுதியாச்சே யென்று கேட்டார் ஆம் என்று சொன்னேன். இதுக்கும் அதுக்கும் புதுசாய் குத்தகை பண்ணுகிறதுக்கு உசத்தவேணுமென்று சொன்னார். அதுக்கு நான் விசேஷிச்சுப் பிறயோசனமில்லை. வருஷா வருஷம் ஒவ்வொரு குளாறு வந்து வருகிற ஆதாயத்தைக்கொண்டு போச்சுதென்று சொல்லி பின்னையுஞ் சொல்லத்தக்க சாடை யெல்லாம் சொன்னதுக்கு முசியே றீஷ் (M. Le Riche) அங்கே யிருக்கிறவன் யெப்போதும் பணம் வில்தாரமாய்க் காணுதென்று யெழுதுகிறதும் குத்தகை அறுதியிலே யிவ்விடத்தியார்கள் விசேஷிச்சுக் குடுக்குறோமென்று சொல்லுகிறார்கள். அறிக்கை யில்லாமல் கொடுக்கவாண்டாம் யென்று சொல்லுகிறார்கள் என்று எழுதி வந்தது. ஆனபடியினாலே உன்

கிறுமங்களுக்குஅவ்னூறுவிராகன் உசத்தியும்லாசறு (M. Lazar) கிறுமங்களுக்கு இறநூறு விராகன் உசத்தியும் யிந்தப்படிக்கி சம்மதியானால் யெவக்கும் பேச்சுக்கு யிடமில்லாமலிருக்கும் சொல்லுங்கோள் நாளைபத்தினம் கோன்சேல் கூடுகிறோம் அப்போ தீத்துப்போறோம் யென்று சொன்னார். அப்பால் யென் கிறுமங்களுக்கு சம்மதிலாசறு கிறுமங்களுக்கு அவனை கேழ்க்க வேணுமென்று அவரை அழைச்சு கேட்டதுக்கு சம்மதி யென்று சொன்னார். எங்களிரண்டு பேர்களுக்கும் நீங்கள் சொன்ன துகை படிக்கி சம்மதியென்று சொன்னேன் அதின் பேரிலே நல்லது நாளைபத்தினம் கோன்சேலிலே பேறேசிபோ எழுதி தீத்துப் போடுகிறேன் போவென்று லாசரைப் பார்த்துச் சொல்லி யென்னைப் பார்த்துச் சொல்லி என் சம்மதி கிறுமங்களுக்குப் பேசவேண்டியதும் பேசி தீர்த்துக்கொண்டார். அப்பாலென்னு டனே உங்கள் கிறுமங்களை பின்னை ஒருத்தருக்கும் குத்தகை யாய் குடுக்கவேண்டாம் உங்கள் முன் உரவைத்து. காறுபாறு பண்ணுங்கோள்ளென்று சொன்னார் அப்படித்தான் முன்னடந் தது. யினி நடக்கப்போகிறதும் அப்படித்தான். என்று சொன் னேன். அப்படித்தான் செய்யவேண்டியதென்று சொன்னார். இதிலே முசியெ கொக்கேல் முதலான பேர் ஒபிசியால்மார்கள் வந்தார்கள். மணியும் பதினொரு மணி வேளையானபடியினாலே நானிருக்கிற பூறேவை வந்தேன்.

இத்தனால் சாயங்காலம் ஆசிபாசலும் ஒரு கிசுமுத்துக்கார னும் வந்து என்னைக்கண்டு ஆசிபாசல் சொன்னது யிவன் முசபர் சங்குடைய கிசுமத்துக்காறன் யிவன் முசபர்சங்கை கண்டு பேசி அவர் துரையவர்களுக்கு ஒரு றேக்காவொன்று கொடுத்தா ரென்று சொல்லி துரை அவர்களண்டைக்குப் போகவேணு மென்று சொன்னான். அந்தக்ஷினமே மதனாந்த பண்டிதனையும் அழைச்சுக்கொண்டு ஆசிபாசல் அங்கேயிருந்து வந்த கிசுமத்துக் காறனையுங் கூட அழைச்சுக்கொண்டுபோயி துரையவர்களுடனே யெச்சரிச்சு அவரிப்பாலே யிருக்கிற காம்பிறாவிலே வந்து என்னவென்று கேட்டார். முசபர்சங்கு யிந்த கிசுமத்துக்காரன் கையில் உங்களுக்கொரு காகிதமெழுதி யனுப்பிவிச்சாரென்று சொல்ல அந்தக் காகிதத்தை மதனாந்தபண்டிதரை படிக்கச் சொல்ல அவர் படிச்சுச் சொன்னது உங்கள் பவுஞ்சும் நாமும் அங்கே யிருந்த விடத்தில் நடந்த சமாச்சாரம் எல்லாம் அப்போ

தைக் கப்போது உங்களுக்கு சேதி வந்துக்கொண்டேயிருந்ததின் பேரிலே உங்கள் மனதுக்கு காத கமலம்போலே விசதமாய்த் தெரிஞ்சு யிருக்குமே அன்று ராத்திரி பின்னையும் மூணுமணி நேரம் ஒபிசியால் மார்கள் பிறப்படாமலிருந்து நம்முட பவுன்சும் அங்கே யிருந்தால் உம்முட மனதின்படிக்கும் என் மனதின் படிக்கும் சகல காரியங்களும் அனுகூலமாய் சுகமே யிருக்கலாம் அப்படிச்செய்யாமல் ஒப்பிசியால்மார் பிறப்பட்ட படியினாலே காரியங்களெல்லாம் கெட்டுப்போய் நானும் யிந்த மகத்தாகிய நஷ்டியனுபவிச்சுக்கொண்டு இந்தக் காவலிலே விழுந்து கிடக்க வேண்டி வந்து விழுந்தது. நல்லது நடக்கவேண்டியதென்னமோ அது சுவாமியுடைய கட்டளைப்படிக்கி நடந்தது. நான் தாபார் முதலான பேர்களை அனுப்பச்சொல்லி முன்னாலே எழுதியிருந்தேன். அவர்களும் வந்து யிருந்தால் எனக்கு விடுதலைக்கு வழியும் பிறக்கும். அல்லவென்றாலும் ஒருவிடத்திலே யிருந்தாலும் ஆதாரவாகிலும் யிருக்கும் அதுவுமில்லாமல் போச்சுது. இப்பவும் என் தாபார் முதலான பேர்களும் பென் பிள்ளையும் உம்முடைய அடைக்கலத்திலே யிருக்கிறார்கள். அவர்களை நன்றாய் பாராமரிக்கை பண்ணிக்கொண்டு வரவேணும். உம்முடைய சேதுக் கிறிஸ்துவின் பேரிலே ஆணையிட்டதா யெண்ணிக்கொள்ளும் எனக்கு உம்முட ஆதரவு தவிர வேறே ஒன்றில்லை. அது கெட்டியாய் மனதிலே வைக்கவும் சுவாமி யெந்த வேளைக்கு யென்னைக் கட்டளை யிட்டார் அந்த வேளைக்கு அது நடக்கும் நாமும் அதை கபூல் பண்ணி நடந்து கொள்ளவேணும் குஞ்சு குழந்தைகளுக்கும் யெனக்கும் உம்முட ஆதரவு தவிர வேறு ஆதரவுமில்லை. அது கெட்டியாய் மனதிலே வைச்சு நடக்கவும் சந்துருவானுலென்ன என்னைக் கொல்லவேணுமென்கிற நினைப்பே அல்லாமல் விடுகிற நினைப்பு யில்லை. சுவாமி யென்னமாய் நடத்துகிறாரோ அந்தப்படிக்கி நடந்துகொள்ள வேண்டியது. கடினென்று யெழுதி யிருந்தது.

எழுதியிருந்தபடிக்கி துரையவர்களுக்குச் சொன்னேன். ஆசிபாசலே யென்ன சமாசாரமென்று கேட்டார் வந்த கிசுமத்துக்காறன் சொன்னதாவது சயிதுலசுக்கர்கான் சையிதுசெரீபு கான் சாஹேகி நிம்பளக்கர் முதலான சறுதார்களை அவரவர் பவுன்சை கூட்டிக்கொண்டு முன்னே அமிதாபாத்து போய்ச் சேரச்சொல்லி உத்துமாய் சிறுப்பாவும் கொடுத்துப் போகச்

சொன்னுனென்றும் அவர்களும் தயாராய் பிறப்படவேணு மென்று யிருக்கிறார்கள் சிறிது பேர் பயணம் பிறப்பட்டோ மென்று ரெண்டு நாழிகை கூடாரம் பேத்துப்போட்டார்களென் றும் சானவாசகான் நாசிதாயிம் மோமேறுபண்டிதன் மூணு பேர் கள் நாசறுசங்கு கக்ஷியிலிருக்கிறார்கள். இவர்கள் தவிர மற்ற சறுதார்கள் யெல்லாரும் சிப்பாயிகள் உள்பட நாசறுசங்கு சாறு யம் குடியனாய் தீர்ந்தது. யிந்த பிடத்துக்கு யிவன் யோக்கிய னல்ல. இதுக்கு யோக்கியன் வந்து யிந்த வமுசத்துக்குள்ளே முச பர்சங்குக்கு சமானமாக ஒருத்தரில்லே. ஆனபடியினாலே யிவனை விடுதலை பண்ணிவிக்கவேணுமென்று பெரிய மனுஷர்களெல்லா ரும் யோசனைபண்ணி யிருக்கிறார்கள் நாசறுசங்குக்கும் பெகு விதமாய் தெரியப்படச் சொன்னார்கள் யென்ன சொன்னாலும் யிவனை விட்டால் இவர்களெல்லாரு மிந்த முசபர்சங்கு பாரிச மாய் தனக்கு யென்ன மோசம் கொண்டுவந்து விடுகிறார்களோ வென்றும் திகிலாயிருக்கிறான். சானவாசகானும் நாசிதாயிமும் மோமேறுபண்டிதனும் நாசறுசங்குக்குச் சொல்லுகிறது முசபர் சங்கை விட்டால் உன்னைப் பிடிக்கக் காவல்பண்ணி யெங்களையும் பக்கேதக் கானுவிலே போட்டு சயிதுல்சக்கர்கான் முதலான மன சுபாதாறர்கள்—சமாதாறர்கள் சமஸ்தமான பேர்களும் முசபர் சங்குவை யெசமானாக வைத்துக்கொண்டு சீமையெல்லாம் கட்டிக் கொண்டு அதிகாரம் செலுத்துவார்களிருக்கிற காரியம் சொன் னேம் அப்பாலும்கூட மனதென்று சொன்னார்கள்: அதன் பேரிலே நாசறுசங்கு முன்னே முசபர்சங்கை விடவேணுமென்று மார்க்கமாய் பேசி வந்தவன் யிப்போ சத்துருவாய் உத்திரஞ் சொல்லுகிறான் இதல்லாமல் பாதுசாபர்வானு மூணு தரம் முசபர் சங்கு பேருக்கு வந்தது. வழியிலே யெல்லாம் நாசறுசங்கு அறுக்காறுகள் யிருந்து காயிதங்கள் சோதிக்கிறபடியினாலே அறுக்காறுகள் வசம் அகப்பட்டு அவர்கள் பர்வானாவைக் கொண்டு வந்து நாசறுசங்கு கையிலே குடுத்தார்கள். அதைப் படிச்சுப் பார்த்து தன் பெட்டியிலே போட்டுக்கொண்டதின் பிற்பாடு தானிவனை விட்டால் மறுபடி தன்னைக் கொல்லச் சத்துருவா யிவன் பிறப்படுவானென்று கெட்டியாய் மனதிலே தேர்த்திவிடுகிற பேச்சை மெத்தவு பண்ணுமென்றும் நாசறு சங்குவைப் பிடிக்கவேணும் மென்று கூட சயிதுல்சக்கர்கான் முதலான பேர்கள் மனதிலே யிருக்குது சுவாமி யென்னமாய்

நடத்துறாரோ தெரியாதென்று சொன்னான். ராத்திரியும்பகலும் கப்பலுகள் விஸ்தாரமாய் வந்தது. சொலுதாதுகள் மூவாயிரம் நாலாயிரம் பேர்கள் வந்தார்கள் ராத்திரியிலே வந்து விழுவார்களென்கிற பயம் எழுதிமுடியாது யென்று இது முதலான சேதி சொல்லி ஆற்காடு வாலாபேட்டை சாவணியென்றும் சொல்லுகிறார்கள். ஆனால் குதிரைகள் எருதுகள் ஆனைகள் முதலான சீவன்கள் விஸ்தாரமாய் சாகுது. சிறிது சமேதாரர்கள் மூனு நாலு குதிரை யிருந்தவர்கள் யெல்லாம் செத்துப்போய் கால் நடையாய் நடக்கிறார்கள். அப்படி ஆச்சுதண்டு சமாச்சாரம் யென்று மனுஷர்களும் சாவு விஸ்தாரமானால் குதிரைகளெருதுகள் முதலான நாற்கால் சீவனைப்போலே அல்லவென்று சொன்னான். நல்லது இப்போ முசபர்சங்குக்கு காவல் சத்து லகுவாயிருக்குதாவென்று கேட்டார். லகுவில்லாமல்போனால் யிந்தக் காயிதம் பிறப்படுமாவென்று சொன்னான் துரை ஆசில்பாசிலைப் பார்த்து யித்தனையாய் முசபர்சங்கும்பேரிலே தயவாயிருக்கிற சயிதுலசுக்கர்கான் சம்பேக்கோன் முதலான பேர்கள் பெரிய மனுஷர்களெல்லாரும் நாசருசங்குவைப் பிடிச்சுக் காவல்பண்ணப் போகாதாவென்று கேட்டார். என்னமாகிலும் இசமானல்லவா அதினாலே சொல்லுகிறார்கள் மார்க்கத்திலே வருமப்போனால் அப்பால் அப்படித்தான் பிடிச்சுக் காவல் வைக்குறதாயித்தான் யோசனைபண்ணியிருக்கிறார்கள். சுவாமி யப்படியும் நடத்துவார் அதுவும் பார்க்கப்போகிறீர்கள் யென்று சொன்னான். அதின் பேரிலே பதிலுத்தரம் யெழுதத் தேவையில்லையாவென்று கேட்டார். இப்போ கவையில்லை. பின்னமொருத்தரம் அறிஞ்சு எழுத வேணுமென்று சொன்னான் ஆனால் நல்லது வளவுக்குப்போமென்று அனுப்பிவிச்சார் அவரும் அனுப்பிவிச்சு கொண்டு போனாப்போலே முசபர்சங்கு யெழுதின காகிதத்தை பிறுமணியை முசியே திலார்சு அண்டைக்குப் போய் பிறுன்சு யெழுத்திலே யெழுதிவரச்சொன்னாரந்தபடிக்கி மதனாந்தரைப் போ முசியே திலார்சு அண்டைக்குப்போ யெழுதிவரச்சொன்னேன். அவரும் ராத்திரி யெட்டு மணி நேரம் யெழுதிக்கொண்டு வந்தார்.

**1750 ௵ மாயு மீ 21 உ பிறமோதூத ௵ வையாசி மீ 11 உ பிரகஸ்பதிவாரம்.**

இத்தனுள் காலத்காலே யெட்டு மணிக்கு கேத்து ருத்திரி முசபர்சங்கு காகிதத்தை திறுதிக்கியம் பண்ணினதைக் கொண்டு போயி பிறபு கையிலே குடுத்தேன். அது பாத்துக்கொண்டு கையிலே வைத்துக்கொண்டார். வந்தவாசியிலே சேதி யென்ன லசுக்கர் வந்தவாசியிலேதானே யிருக்கிறது. பின்னே ஒன்றும் விந்தையாய்க் கெழ்விப்படயில்லே. சம்புதாச் தஞ்சாவூரிலே யிருந்தவன் நாகூர் வந்து சேர்ந்து அங்கே படகின்பேரிலே யேறி சென்னப்பட்டணத்திலே யிறங்கி சுகமே யிருக்கிறேனென்று சந்தாசாயபுக்கு காகிதம் கொண்டுவந்து குடுத்தான் மத்தப்படி விந்தையாய் ஒரு சேதியும் கேழ்விப்படயில்லே யென்று சொன்னேன். அப்பால் துரையவர்கள் கோன்சேல் வீட்டை ஒபிசியால்மார் முன் பதினஞ்சு பேர் அறமாத்தைவிட்டு ஓடிவந்துவிட்டார்களே. அவர்களைக் கோட்டையிலே காவல் வைத்திருக்குறதே அவர்கள் ஞாயம் கேழ்க்கும்பொருட்டு கோன்சேல் வீட்டுக்குப் போய் கோன்சேல் கூடினார்கள் அப்பால் பதினொரு மணிக்கு கோன்சேல் கலேஞ்சுது. துரை வீட்டுக்கு வந்தவுடனே யேனத்திலிருந்து முசியே லெனுவார் காகித மிரண்டுபேர் கொண்டுவந்து குடுத்தார்கள். அதைப் பார்த்துக்கொண்டார். இத்தனுள் பகலுக்கு மேலாக—நாலு மணிக்கு யேனத்துக்கு முசியே லெனுவார் பேருக்கு பதில் காகிதம் எழுதி கறடா காகிதத்தினாலே துலுக்கு லகோட்டாபோலே சின்ன லகோட்டாபண்ணி தெலுங்கு யெழுத்து மோதிரம் மோகருபண்ணி மேல்விலாசம் யிஞ்சாத்திலே இங்கிலீசு கம்பெனிர் வர்த்தகம் குஞ்சம்கன்னய்யன் பேருக்கு குடுக்கவும் யென்று யெழுதிவந்த சேவகருக்கு பத்து ரூபாயி யினும் குடுத்து ஆறுகிலும் வழியிலே கேட்டால் சென்னப்பட்டணத்து வற்த்தகர்களுக்கு காகிதம் குடுத்தார்களென்று சொல்லிப்போட்டு காகிதத்தைக் கொண்டுபோயி பத்திரமாய் முசியே லெனுவார் கையிலே யேனத்திலே குடுக்கச்சொல்லிப் போட்டுக் காகிதத்தைக்கொண்டு அவசியம் குடுக்கச்சொன்னார். அவசியம் குடுக்கிறேனென்றுசொல்லிப்போட்டு பயணம் அனுப்பிவிச்சுக்கொண்டு காகிதத்தை வாங்கிக்கொண்டு போனார்கள். அப்பால் துரையவர்கள் சாயங்காலம் சுவாரி போகவில்லே. கோசகேமதுல்லாகான் வேலூர் ருசமகேந்திரம் சுபேதாரன் காசறு

சந்தா உத்தாரப்படிக்கி யானத்தின் பெத்திரியான்பேரிலே ரெண்டாயிரம் காலாட்களையும் பிறநூறு சுவார்களையும் கோதாவரி கடந்து யிப்பரம் வந்தார்கள். முசியே ஏலனுவாருக்கும் அந்த சேதி வந்து பெத்திரியைச் சுத்தியிருக்கிற செடிகளெல்லாம் வெட்டி மைதானம்பண்ணி யிங்கே யிருந்தபோது அறுபது எழுபது சொலுதாதுகளையும் பின்னையும் சேவுகர்களையுங் கூட்டிக்கொண்டு பிரங்கி முதலானதுகளும் முஸ்தீதுபண்ணியிவிச்சுக் கொண்டு தயாறாயிருக்கிறுன் நாங்கள் வரச்சே யெனாத்துக்குச் சமீபமாய் வந்தார்கள். நாங்களுமவர்கள் கையில் அகப்பட்டுக் கொண்டு பரதேசிகளென்று சொல்லி தப்பிச்சுகொண்டு வந்தோமென்று மேலே யெழுதப்பட்ட யெனம் சேவுகர்கள் சொன்னார்கள்.

**1750 ஹூ மாயு மீ 22 உ பிறமோதூத ஹூ வையாசி மீ 12 உ சுக்கிறவாரம்.**

இத்தனள் காலத்தாலே மதனுந்த பண்டிதனே சந்தாசாயபு அழைச்சனுப்பிவிச்சு முசபர் சங்கு என் பேருக்கு ஒரு றுக்காவெழுதி அவர் கிசமத்துக்காரன் கையில் குடுத்து யென் கையில் பெகு அந்தரங்கமாக குடுக்கச் சொல்லியனுப்பினுர். அந்த றுக்காவை யென் கையில் கொண்டு வந்து குடுத்தான். அந்த சேதி துரையவர்களுக்கு யெச்சரிக்கைப்பண்ணி அப்பால் பதிலுத்திரம் யெழுதி யனுப்பவேண்டியதானபடியினுலே நான் வந்து கண்டு பேசிக்கொள்ளுகிறதுக்கு துரையவர்களுடனே யெச்சரித்துச் சொல்லியனுப்பினுல் நான் வந்து கண்டு பேசிகிறேன் யென்று சொல்லியனுப்பினுர். இந்தச் சேதியை துரையவர்களுடனே யெச்சரித்ததுக்கு துரையவர்களிப்போ கோன்சேலுக்குப் போறேன் மறுபடி வந்தவுடனே வரச்சொல்லு யென்று சொன்னுர். அந்தப்படிக்கு வக்கீல் சுப்பய்யனுடனே சொல்லச் சொல்லி அனுப்பிப் போட்டு என்னுடைய பிறேவிலே வந்து யிருந்தேன். துரையவர்கள் கோன்சேலுக்குப்போய்ப் பத்தரை மணிக்கு வீட்டுக்கு வந்தார். வந்தவுடனே போய் கண்டு பேசினேன். சந்தாசாய்பை அழைப்பிக்கச் சொன்னுர். சொல்லியனுப்பினவுடனே அவரும் குத்துப்புந்தி கல்லிகானும் மிருஷம்முமும் வந்தார்கள்.

கடுக்காம்பிறுவிலே உளுக்கார்த்தார்கள். உளுக்கார்ந்தவுடனே குத்துப்புத்தி கல்லிகானேயும் மீர்அஷத்தையும் அப்பிறம் போகச்சொன்னுல் யெழுந்திருந்து போறவர்கள் மனதிலே சத்தே குறையாக யெண்ணிக்கொண்டு போனுர்கள்.

அப்பால் சந்தா சாயபு முசபர் சங்கு அனுப்பின ரேுக்காவை மதனந்த பண்டிதர் கையில் குடுத்து படிக்கச்சொன்னுர். அதை துரையவர்களுக்குச் சொல்லச்சொன்னுர். படிச்சுச் சொன்னதென்னவென்றுல் நான் பெகு கஷ்டியனுபவிக்கிறேன் சத்துரு யென்னே யெந்த விதமும் கொல்லவேணுமென்று நினேத்திருக்கிறுன். ஆனுல் பெரிய மனுஷர்கள் யெல்லாரும் என் பேரிலே தயவாயிருக்கிறுர்கள் நல்லது சுவாமி யென்னமாய் நடத்துருரோ. அந்தப்படிக்கி கபுல்பண்ணவேண்டியது. யிப்பவும் யிவ்வடம் விட்டு அவ்விடம் வந்து சேருகிற யோசனே பண்ணுலேயல்லாமல் பின்னே ஒரு வித்திலே சத்துரு விடுகிற மார்க்கம் காண்பியாதபடியினுலே பிறப்பட்டு வருகிற யோசனே பண்ணினேன். இதுக்கு கோவற்ணதோர் சாயபு அவர்களும் சொல்லி உங்களுக்கும் சரிப்பட்டிருந்தால் அந்தப்படி செய்கிறேன். நானிவ்விடம் விட்டு வருகிறதுக்கு இரண்டாயிரம் கோவற்ணதோர் சாயபுக்குச் சொல்லி இந்த சீட்டு கொண்டுவரும் கசம்த்துக்காரன் வசம் குடுத்து அனுப்பிவிச்சால் அது வந்து சேர்ந்தவுடனே நானிவ்விடம் விட்டு பிறப்பட்டு அவ்விடம் வந்து சேர்ந்தால் யெல்லாக் காரியமும் நினேத்தபடி அனுகூலமாகும். ஆசிபாசனுக்கு நம்முடைத்து வரச்சொல்லவுமென்று யெழுதியிருந்தது. யெழுதியிருந்த ரேுக்காப்படிக்கி துரையவர்களுடனே சொன்னதுக்கு நானிதுக்கு யோசனே யென்னமாய்ச் சொல்லுவேன் சுவாமியுடைய கடாச்சம் நன்மையாய்த்தானே யிருக்கும் அதுக்குச் சந்தேகமில்லே. ஆனுலும் பிறப்பட்டு வரச்சே சத்துருக்கள் கையிலே அகப்பட்டுக்கொள்ளாமல் பிறப்பட்டுவந்தால் பெகு கேர்த்தி நாம் நினேத்தபடி யெல்லாம் காரியசாதகமாகி இதைவிடச் சந்தோஷம் வேறே யில்லே. ஆனுலொருவேளே அகப்பட்டுக்கொண்டாலும் அதுக்கும் அப்படித்தான் யென்று சொன்னுர். அதுக்குச் சந்தாசாயபு சொன்னது நீங்கள் சொன்னது மெய்தான் யிருக்கிற பெரிய மனுஷர்கள் சயிதுல்சக்கர்கான் சயிதுசெரீபுகான் சமீல்பேக்குகான் ராசா

சந்திரசேனன் குமாரன் ரூசாருமச்சந்திராயன் சாமேனுசிங்ப
ளக்கர் சுல்தான்சி கடப்பை அப்துல்நபிகான் கந்தனூர் யிம்மத்து
பாதூர்கான் சாவனூர் பங்காபுரம் அப்துல்மசீபுகான் வகையரு
யவர்கள் யெல்லாரும் யிவர்களுடைய பவுன்சைகூட நாசறுசங்கு
சாருய குடியனுயி காறுபாரில்லை. மனுஷர் வறசியாம் வறசியம்
தாரதம்மியம் முதலானதுகள் நற்குணங்களென்னவுண்டோ
அதுகளையெல்லாம் விட்டுவிட்டு யிதுக்கு விரோதமாயிருக்கப்
பட்ட துற்குணங்கள் என்னவுண்டோ அதை அனுசரிச்சு நடக்
கிறபடியினாலே யிவனை சிக்கட்டிப்போட்டு முசபர்சங்கு இந்த
ஆசபுசா யிடத்துக்கு யோக்கியனிவனைக் கொண்டுவந்து நடப்
பிச்சுக்கொள்ளலாமென்று நித்து யிருக்கிறார்கள். அவர்கள் தா
னிப்போ யிந்த முசபர்சங்கை புதுச்சேரி சேர்க்கிறதுக்கு முசபர்
சங்கை காத்துக்கொண்டிருக்கிற சவுக்கிதாறர்கள் ஒரு சமேதா
ரன் பெரிய மனுஷன் அவனைக்கூட உளவுபண்ணி யிந்தப்படி
யெல்லாம் திட்டம்பண்ணி யிருக்கிறார்கள். இந்தப் பெரிய மனு
ஷர்களுக்கு யெல்லாம் நாசறுசங்கு சானவாசுகான் காசிதாயிம்
மோரோபண்டிதன் வகையரா யிவர்களுக்கு பெகு ஆப்பித்தம்
பேரேயும் காண்பிச்சுக்கொண்டு யிவர்கள் நாலுபேர் ஆலோ
சனையும் முசபர்சங்கு பாரிசமாயிருந்து பேசுகிற சயிதுலசுக்கர்
கான் வகையரா அவர்களுக்கு கபுறுகளும் சொல்லிக்கொண்டு
யிதுகளுக்கு எதுக்கட்டி நாசறுசங்கும்பேரிலே காரியம் பண்ணு
கிறதுக்கு உபாயமும் தைரியமுஞ் சொல்லிக்கொண்டு திரியுற
வன் ரூமதாசபண்டிதன் ஒருத்தன் யென்றும் நாசறுசங்குக்கு
முசபர்சங்கை விட்டால் உனக்கு மோசம் வரும் கெட்டியாய்
மனதிலே யெண்ணி அவனை விடாமலிருக்கிறதே உக்குத்தம்.
விட்டாலுமக்கு மோசம் வரும் மோசம் வந்தால் நாங்கள்
சானவாசுகான் காசிதாயிம் மோரோபண்டிதன் வகையிரு கெட்
டுப்போம் அதினாலே நாங்கள் சிரேயசைக் கோரி சொல்லுகிறோ
மென்று பலத்து சொல்லி யிருக்கிறபடியினாலேயும் இவர்கள்
மாரிப்பதிலே அவன் அந்தரங்கமும் நம்பிக்கையும் வைத்துக்
காரியமும் நடப்பிக்கிறபடியினாலே அவர்கள்மாத்திரம் முசபர்
சங்குக்கு விரோதிகள் அவர்கள் தவிர மத்தப் பேர்கள் யெல்லா
ரும் நாசறுசங்குவை சரிப்பிடிக்க வேணுமென்று யிருக்கிறபடியி
னாலே முசபர்சங்கு நிச்சிந்தையாய் வந்து சேருவாமென்று
என் மனதிலே கெட்டியாய் எனக்கு தோத்தியிருக்குதென்று

சொன்னார். அது மெய்தானென்று துரையவர்களும் ஒத்துக் கொண்டார். ஆனால் ஒருவேளை புக்காறுப் நாசறுசங்கு அறிந்து முசபர்சங்கு போய்விட்டவனைப் பிடித்துவரச்சொல்லி சுவார்கள் குதிரைகள் பிறப்பட்டாலோவென்று கேட்டார். அதுக்கு சந்தா சாயபு சொன்னது- சவுக்கிதாறர்கள் உளவாயிருக்கிறபடியினாலே அதுமட்டுக்கும் உடனே கபுறாகப் போகிறதில்லை. கபுறாயி சுவார் கள் பிறப்படுகிறதுக்கு சந்தேதாக்குறைய இரண்டு சாமமாகிலும் பிடிக்கும் முசபர்சங்கு ஒட்டமோடுகிற ஒட்டகத்தின்பேரிலே பிறப் பட்டு வருகிறபடியினாலே இரண்டு சாமத்துக்குள்ளே புதுச்சேரி வந்து போம் பிதல்லாமல் பிவருக்கு அனுகூலமாயிருக்கிற பெரிய மனிதர்கள் இரண்டு பைகோவு (Pegu) மட்டங்கள் (Pony) குதிரைகளும் அங்கே வைத்து யிருக்கிறார்கள் ஒட்டகத்தின் பேரிலே வருகிறதுக்கு அனுப்பு கோத்தினாலே அந்த மட்டங் கள் அஞ்சல் வைத்திருக்குதே அதின்பேரிலே வரத்தக்கதாக வும் எத்தனம்பண்ணி யிருக்கிறார்கள் .இந்த இரண்டாயிரம் ரூபாய் போனால் கிட்ட யிருக்கிற சவுக்கி டலாயித்தார் வந்து சின்ன மனுஷர்களை சந்தியா பேதாகிலும் கை காட்டினால் அவர் கள் கூட வரத்துக்கு உச்சாகமாயிருக்கும் மென்று யிந்தப் பணம் அனுப்பச்சொல்லி யெழுதினது யென்று சொன்னதுக்கு ரூபாயானால் வழியிலே கொண்டுபோறது பிறயாசம் வருகத் தாலே அனுப்பிவிச்ச சீக்கிரமத்துக்கு பிறப்பட்டு வரச்சொல் லென்று சொன்னார். அதுக்கு சந்தாசாயபு சொன்னது அப்படித் தான் சொல்லி அனுப்பிவிக்கிறேன் என்று சொன்னார். துரை யவர்கள் சென்ன பெரிய மனுஷர்கள் எல்லாரும் அனுகூலமா யிருந்தாலும் சானவாசுகான் மோறோபண்டிதன் — காசிதாயிம் இவர்கள் மூனு பேர்களும் நாசறுசங்குக்கு ஆப்தமென்றும் முசபர்சங்கு காரியம் அனுகூலமாகாமல் விரோதம் பண்ணிக் கொண்டு வருகிறவர்களென்று தோர்த்தியிருக்கிறபடியினாலே ஒருவேளை சானவாசுகான் வகையறா காசா சுவார்கள் உண்டே அதிலே முசபர்சங்குக்கு யெல்லாரும் அனுகூலமாயிரார்க ளென்று—நாசறுசங்கு யெசமானாக யிருக்கச்சே யெத்தனை பொல் லாதவனாய் சாறுயக் குடியனாயிருந்தாலும் கொஞ்சம் பேரானா லும் அவனுக்கு அனுகூலமாயிருப்பார்களே அவர்களைப் போகச் சொல்லி அவர்கள் துடர்ந்து வந்தாகிலும் வரட்டும் வந்தா லிப்படி ஒட்டகம் என்னத்துக்காய் வந்தாலும் யெல்லாத்துக்

ரும் நல்லது வருகிற முசாபர்சங்குவை ஆலம்புரவி வழியாய் வரச்சொன்னால் நல்லது ஆலம்புரவி வந்து சேர்ந்தால் நான அங்கே ஒரு சலுப்பும் படவுகளும் சிறிது சொலுதாதுகளும் வைத்துவைக்கிறேன் வந்த உத்திரக்ஷணம் படகின்பேரிலே யேறி சலுப்பின்பேரிலே யேறினால் அப்பால் அசாத்தியம் ஒரு சாமத்துக்குள்ளே புதுச்சேரி வந்து சேரலாமென்று சொல்லி அல்லது கூனிமேடு லகுவானால் அப்படி வந்து சேரச்சொல்லும் கோவணம் போறதுக்கு மார்க்கமாயிருந்தால் அங்கே போகச் சொல் என்று சொன்னார். அதுக்கு நானிருந்துகொண்டு நீங்கள் சொன்னது ஒரு வேளை புதுச்சேரி வழியே தொத்துவார்கள் அதுக்கு ஆலம்புரவி மார்க்கம் பிடிச்சவந்து யிப்பால் கரையோ ரத்துக்கும் ஆலம்புரவிக்கும் போகாமல் மத்தியே குறுக்குவழி பாசல்காடுகளுண்டு அந்த வழியாயி புதுச்சேரியே தானே சுக மாய் வந்துவிடலாம். கோவணம் சதுரங்கம் பட்டணம் வெகு தூரம் தண்டிலேயிருந்து கெலவரியாய் ராத்திரி சாமத்துக்குப் பிறப்பட்டால் பொழுது விடிகிறதுக்குள்ளே புதுச்சேரி வந்து சேருகிறதுக்கு சந்தேகமாவென்று சொன்னேன். மெய்தான் ஆலம்புரவிமுதல் கூனிமேடுமட்டுக்கும் படவுகளை வைப்போம் யெந்த நேரிலே சம்மதிபோ அங்கே படவு யேறலாம். அல்ல வென்று புதுச்சேரிக்கு வாரதுக்கு யிது நடுவே மனுஷர்கள் பின் தொடராமல்போனால் சுகமாய் புதுச்சேரியை சேரச்சொல்லி சந்தாசாயபுடனே சொல்லி முசபர்சங்கு அண்டைக்குப் போற மனுஷர்களுடனே இந்த வயனம் சொல்லி அனுப்பச் சொன்னார்கள். சந்தாசாயபும் நல்லதென்று சொன்னார். பணம் கொண்டு போறது கூடலூர் வழி பிடிச்சுபோனால் ஆராகிலும் கேட்டால் கூடலூரிலிருந்து வாரோம்என்று சொன்னார்களானால்பெகு மனு ஷர்கள் போக்குவரத்தானபடியினாலே மெய்தான் என்று யிருக் கும் யிதுக்கு யெப்படி பத்திரமாய் மனிதர்களை அனுப்ப வேணுமோ அந்தப்படி அனுப்புங்கோளென்று சந்தாசாயபுக்குச் சொல்லி பிறப்பட்டு வருகிறது மெத்த சேத்தி நாமென்ன நினைத்தோமோ நினைத்தபடிக்கி சுவாமி அனுகூலம்பண்ணினார்க ளென்கிற சந்தோஷம் அன்றைக்காங்காட்டும் உண்டாமென் துரை சொல்லி சிக்கிறமத்துக்குப் பிறப்பட்டு வாரச்சொல்லி எழுதியனுப்புங்கோள் வாருகன் பிறகாலே ரங்கப்பன் கையில் குடுத்து அனுப்புகிறேனென்று சொன்னார். நல்லதென்று

அனுப்பிவிச்சுக்கொண்டு வரச்சே ஆனால் காசராசக்குவைப் பிடிக்
கவேணுமென்று யிருக்கிறது மெய்யாச்சே யென்று கேட்டார்
அப்பத்தம்மம் பதினைஞ்சு யிருபது நாளையிலே நடக்கும் அதை
யறியப்போகிறீர்கள் யென்று சொன்னார் சுவாமியை நான்
பிரார்த்திச்சது மெய்யென்று சொல்லி சபாருமபண்டிதனிங்கே
யிருந்து போனபிறகு சேதியொன்றும் வந்ததில்லையாவென்று
கேட்டார். மீறாசாவென்கிற ஒருத்தன் வந்தான் அவனுடனே
சபாருமபண்டிதன் சொல்லியனுப்பினான் நான் வந்த காரியம்
நீங்கள் சொன்னபடிக்கி அனுகூலமாயிருந்தது அஞ்சாறு நாளை
யிலே அங்கே வந்து சேருகிறேனென்று சொல்லி அனுப்பினான்
யென்று சொன்னார். சுவாமி தயவுபண்ணி அனுகூலமாக்க
வேணுமென்று சொல்லி சந்தாசாயபுனை அனுப்பிவைச்சார்.
அவரும் அனுப்பிவிச்சுக்கொண்டு வீட்டுக்குப் போனார். அப்பால்
நேத்து கோன்சேலும் இன்றைய கோன்சேலும் ஒப்பிசியால்
மர் கோன்சேலானபடியினாலே அதிலே யென்னென்ன உத்திர
வுகள் அவர்கள் குடுத்தார்களோ கோன்சேலிலே என்ன நடந்
ததோ அந்த விசனத்தின்பேரிலே மூசியே லாசு-புரி-புசி-யவர்
களுடனே பேசியிருந்து அப்பால் சொனகாதுகளுக்கு யென்று
வைத்திருந்த ரத்தின பெட்டியை யெடுத்துவரச்சொல்லி பார்த்
துக்கொண்டிருந்தார்கள். யினிருக்கிற பிரேவை வந்துவிட்
டேன். மறுபடி ரத்தின நகையை நாளை பார்ப்போமென்று
தனக்கப்பிள்ளை கையில் கொடுத்து வைக்கச்சொன்னாரென்று
கேப்றி வந்தது.

இத்தனுள் பகலைக்கு மேலே மூணரை மணிக்கு அழைச்
சனுப்பி புதுச்சேரி வராகன் அன்னுக்கெழுபத்திரண்டு வரா
கன் ஒரு சாக்கிலே போட்டு கட்டிவிச்சார். அதை யென் கையிலே
குடுத்துக்கொண்டு போய் சந்தாசாயபு கையில கொடுத்து பிதா
யித்துமெதின்கான் அண்டைக்கு அனுப்பச்சொல்லி கொடுத்து
நடுவாந்தரத்திலே கொண்டுபோறவன் சுத்திக்கொண்டு போறா
னோ யென்னமோ தெரியாது யென்று சொன்னார் அதுக்கு நான்
உத்தரஞ் சொல்லாமலிருந்தேன். அப்பால் கபினெத்திலே
யிருந்து மறுபடி வந்து நடுச்சாலையிலே உளுக்கார்ந்து காகிதத்
திலே பணம் அனுப்பச்சொல்லி யெழுதியிருக்குதாவென்று
முசபர்சங்கு கையெழுத்துதானாவென்று கேட்டார். பிதுரொண்
டும் அந்தக் காகிதத்தில் ஒன்று யென்றும் மதனந்தபண்டிதன்

சொன்னானே உங்களுக்கு முசபர்சங்கு யெழுத்துப் பார்த்து வாடிக்கையாயே கையெழுத்து அவனாது போலேதானே யிருக்குதென்று சொன்னேன் மெய்தான் யெனக்கும் தெரியும் அவன் கையெழுத்துதான் மோசமில்லை யென்று சொன்னார். யிதிலே கொல்தத்தே மலபாரிலே யிருந்து தேங்காய் நடுகிறார்களே அவ்விடத்துக்குப் போகவேணுமென்று முசே பொசேத்தை அழைக்கச்சொல்லியிருந்தார். அவனுமிப்போ நாங்கள் பேசிக்கொண்டிருக்கிற அவசரத்திலே வந்தானவனைக் கண்டவுடனே நீ போயிந்த விறகனை சந்தாசாயபு கையில் குடுத்து அனுப்பச்சொல்லுகிறபா அப்பால் ஆலம்பரவி-கூனிமேடுக்குப் படகு மெப்போ அனுப்பலாம் அது நிஷ்கருஷையாய்க் கேட்டு வாமென்று சொல்ல நல்லது கொண்டுபோய் கொடுத்துதும் படகு அனுப்புறதுக்கு நிஷ்கருஷை தெரிஞ்சுக்கொண்டு வருகிறேனென்று அனுப்பிவிச்சுக்கொண்டு மதனாந்தபண்டிதரையும் கூட்டிக்கொண்டு சந்தாசாயபு அண்டைக்குப் போய் அன்னூத்தி முப்பத்திரெண்டு விறகம் இரண்டாயிரம் ரூபாய்க்குக் சரிக்கட்டி மாறபகப்படிக்குப் பார்த்துக் குடுத்தாரென்று சொல்லி விறகன் கட்டின சாக்கை சந்தாசாயபு கையிலே கொடுத்தேன். தன்னுட கிசுமத்துக்காரனை அழைத்துக்கொண்டு முசபர்சங்கு அண்டைக்கு அவிடமிருந்து சேத்து வந்த பீர்மகம்மது யென்கிறவனை அழைத்துவாச்சொன்னார். அந்தப்படிக்கி முசபர்சங்கு பெண்சாதி யிருக்கிற வீட்டண்டையிலே போய் அழைச்சுவந்தான். வந்தவுடனே அழைச்சு உளுக்காரச்சொல்லி வறகன் சாக்கை முன்னே போட்டு மதனாந்தபண்டிதரை யெண்ணிக் கொடுக்கச்சொன்னார். அஞ்சஞ்சாயி யெண்ணிக் குடுக்க அந்தப்படிக்கி யிருபது எண்ணி நூறு ஆனவுடனே கும்பலாக்கி அந்தப்படிக்கி மதனாந்தபண்டிதன் யெண்ணிக்குடுக்க அவன் அன்னூத்தெழுபத்திரெண்டு விறகன் யெண்ணிக்கொண்டேன் என்று சந்தாசாயபுடனே சொன்னான் அதுக்கு அவர் ரெண்டாயிரம் ரூபாயிக்கு கோவர்னுதோர் சாயபு கணக்குப் பார்த்து குடுத்து அனுப்பினாரென்று சொல்ல அதுக்கவன் மூணரை ரூபாய் விறகனாமென்று கேழ்க்க சந்தாசாயபு யென்னைக் கேழ்க்க நான் சொன்னது மூணரை ரூபாய் விழுக்காடுதான் பார்த்து சென்றால்சாயபு குடுத்தார். ஆரிலே வழக்கமானால் முன்னூத்தறுபது-அறுபத்தொன்றாக யிருக்குது. அந்தப்படிக்கிப் பார்த்தால் அன்பத்தஞ்சு அன்பத்

தார ரூபா அதனமிருக்குது. வெள்ளி ராசி ரூபா ஆனல் பிர தார ரூபா அதனமாயிருக்குமென்று சொன்னேன். அந்தப் படிக்கி சந்தாசாயபு முசபர்சக்கு கிசமத்துக்காறனுக்குச் சொன்னர். அவரிருந்துக்கொண்டு நான் பிந்த விறுகன் கொண்டுபோனல் சவுக்கிகாரர்கள் கையிலகப்பட்டால் தலை போகும் உண்டிகை பண்ணி ஒரு காகிதம் வாங்கிக்கொடுத்தால் கொண்டுபோகலாமில்லாவிட்டால் நீங்களுங்கள் மனிதன் கையில் கொடுத்தனுப்புங்கோள் காகிதத்தைக் கொண்டுபோய் குடுத்து அப்பாலிவர்கள் விராகன் கொண்டுவந்த சேதியும் சொல்லி அவருத்தாரப் படிக்கி அப்பாலிவர்கள் கொண்டு போயிருக்கிறவர்கள் வா முன்னேவிட்டுவிடுகிறேன் யென்று சொன்னன். அதுக்குச் சந்தாசாயபு சொன்னது யெனக்கு அதெல்லாம் தெரியாது அவரெழுதின ரேக்காவிலே உன் கையிலே ரெண்டாயிரம் ரூபாய்க் குடுக்கச்சொல்லி எழுதியிருக்குது அந்தப்படிக்கி உன் வசம் ரூபாய் பெரிய பளுவு விஸ்தாரமாய் தோத்துமென்றும் அதுக்கு வறுகன் அடக்கமாயிருக்குமென்று கொவர்னதோர் குடுத்தார். அதை உன் கையிலே கொடுக்கிறேன். ரோக்காவொன்று யெழுதிக் கொடுத்து வாலுபேரை வழிகாட்டவும் சகாயத்துக்கும் கூட்டுகிறேன் என்றும் சொன்னர். அதுக்கு அவன் சொன்னது இன்ன யிரண்டு மூணுபேர்கள் கிசமத்துக்காரர்கள் என்னுடனே கூட சேத்து வந்தார்களே அவர்களையுங் கூட அழைத்துக் கொண்டுபோறேன் அதுக்கு ஆசிபாசலை அழைப்பிச்சு சொல்லுங்கோளென்று சொல்ல ஆசிபாசலை அழைக்கச் சொன்னேனே ஏன் அழைக்கயில்லை யென்று கேட்டார். நீங்கள் சொல்லவில்லை யென்று சிக்கிறமாய் போயழைத்து வரேன் என்று சொல்ல அவனும் போயழைத்து வந்தான் வந்தவுடனே வறுகன் சாக்கை அந்த கிசமத்துக்காறன் கையிலிருந்ததை வாங்கி ஆசிபாசல் கையில் கொடுத்து துரையவர்கள் அண்டைக்குத்தான் போய் முசபர்சக்கு அனுப்பின ரோக்கா படிச்சுக் காண்பிச்சுது முதலாய் யிவர் சொன்ன உத்தாரம் தாம் சொன்ன உத்தாரம் யெல்லாமும் இப்போ ரெண்டாயிரம் ரூபாயிக்கு வந்த அன்னுத்தெழுபத்திரெண்டு விறுகன் அனுப்பினதும் வூரிலே வழக்கப் படிக்கி பின்னையும் உசந்திருக்கிறதையும் வெளியிலே வழங்கிற ரூசி ரூபாய்ப்படிக்கி ஆனல் இறதார ரூபா அதனமிருக்கிறதும் அப்பால் ரேக்கா கொண்டுவந்த கிசமத்துக்காறன் வசம்

ஒப்புவிச்சதும் ரேக்ஙவில் எழுதிபபனுப்பினபடிக்கி வாகன் அவன் கையில் பெண்ணி ஒப்பிச்சதும் அவன் சொன்ன உத்திர மும் ஆசிபாசனுக்குச் சொன்னர். அவனும் உண்டிகைபண்ணி அனுப்பினல் கல்லது யில்லாவிட்டால் மோசம் வருமென்று சொல்ல அதுக்கு வருகனே வாங்கிக்கொண்டு உண்டிகை யெழுது கிற பேரை ஆரையும் காணுமென்று சொல்ல சமேதார்கள் பேர்களே யோசனேபண்ணிப் பார்த்தார்கள். அப்பால் மகம்மது கான்சிலேமான்சி குமாரனே அழைத்து மிசிரிக்கானே அழைப் பிச்சு அவன் கையில் குடுத்து அனுப்பினல் சேருமென்று யோசனேபண்ணி அந்தப்படிக்கி அனுப்புகுமேருமென்று சொல்ல சொன்னதும் அல்லாமல் படகுகள் ஆலம்புரவி முதல்கொண்டு கூனிமேடுக்கு செவ்வாய்க்கிழமைமுதல் வைக்கச்சொல்லி துரை யவர்களுக்குச் சொல்லச்சொல்லி சந்தாசாயபு சொன்னர் அந்தப் படிக்கி அவர் கையில் அனுப்பிவிச்சுக்கொண்டு துரையவர்கள் சவாரி போய்வந்தவுடனே ஆறு மணிக்குப் போய் யெச்சரித் தேன். அப்பால் காசநகருக்கு வந்தவாசிபண்டையிலே யிருக்கிற தும் அவர்கள் தாழ்ந்து கோட்டையார் உத்திரவு சொல்லுகிற படியினலே காசருசங்கு ஒசந்து ஒசந்து துரைகளே ஒசத்திக் கொண்டு அசனல்கான் பெண்சாதியைப் பிராது பண்ணச் சொல்லி மீர்சத்து கலகத்தை விஸ்தரிக்கப்பண்ணி யிவர்கள் கையில் யெப்படியுமிருக்கிற பச்சையை வாங்கிப்போட்டால் அப் பால் ஙவாபிதா அடங்கிப்போவார்களென்று காசருசங்குக்கு யெப்போதும் யிந்த ஙவாபிதர் பிருதே உண்டாக்கிக்கொண்டு யிருக்கிருர்களென்று சொல்லிக்கொள்ளுகிருர்கள் யென்று சொன்னதுக்கு யெவன் வாய்மேலே அடிக்குறானவனுக்கு பண் படுகிற காலமே அல்லாமல் கல்ல பேச்சுப் பேசிக்கொண்டுயிருக் கிறவனுக்கு காலமல்லவென்று யிது முதலாகிய சேதியெல்லாம் பேசிக்கொண்டுயிருந்தால் அப்பால் கான் அனுப்பிவிச்சுக்கொண்டு பாக்கு கிடங்கியே வந்தேன்.

**1750 ஸு மாயு மீ 23 உ பிறமோதூத ஸு வையாசி மீ 13 உ சனிவாரம்.**

மைத்தானுள் காலத்தாலே ஒன்பது மணிக்கு துரையவர்க ளுடனே முசபர்சங்கு அண்டைக்கு அனுப்புற விருகன் மகம்மது கான்சிலேமானசி குமாரன் மிசிறிகான் வசம் குடுத்து அந்தி

ஒப்பிக்கத்தக்கதாக திட்டம்பண்ணி அனுப்பினார்கள். அந்த சாடையின் பேரிலே கிஸுமத்துக்காறன் சந்தாசாயபு ஆசிபாசனும் எழுதிக்கொடுத்த காகிதம் மாத்திரம் கொண்டு மிசிரிகான் மனுஷனைக் கூட கூட்டிக்கொண்டு போனார்கள் என்று சொல்லி வந்தவாசி மொகத்துமா முன்னே இரண்டரை லக்ஷம் ரூபாயா தீந்தது. யிப்போ அஞ்சு லக்ஷம் ரூபாய் தருபாறு கற்கசம் ஆக ஆறு லக்ஷம் ரூபாயாய் தீந்ததாயி சந்தசாயபுக்கு வந்தவாசியிலிருந்து சேதி வந்து பணம் வாங்கிக்கொண்டு திங்கள்கிழமை லஸ்கர் கூச்சாய்ப் போறதாய் சேதி கேழ்க்கப்பட்டுதென்றும் சொன்னார். யிதெல்லாம் சயிதுலசுக்கர்கான் சயிதுசெரிபுகான் சுலுத்தான்சி யிவர்கள் யிருபதினாயிரம் குதிரைக்காரர்கள் பெரிய மனுஷர்கள் சிரோப்பா வாங்கிக்கொண்டு முன்னதாக நடந்ததாய்ச் சொல்லுகிறார்கள் பின்னையும் காணூறு அன்னூறு குதிரை சுவார்கள் ஒவ்வொரு மனசுபாசா கொத்தார்கள் அங்கங்கே யிருந்து குமுக்கு வந்தவர்களனுப்பிவிச்சுக்கொண்டு பதினாயிரம் குதிரைக்காறர்கள் போனதாய்ச் சொல்லுக்கொள்ளுகிறார்கள் என்று சொன்னேன் மைத்தப்படி யித்தனை வேறே சேதி யெழுதத்தக்கதில்லை.

1750 ௵ மாயு ௴ 26 ௨ பிரமோதூத ௵ வையாசி ௴ 16 ௨ செவ்வாய்கிழமை.

இத்தனை பிள்ளையவர்கள் நிதிபானபடியினாலே துரையவர்கள் சந்தாசாயபுவையும் சேத்து ஒத்திரி கசருசங்கு லசுக்கரிலிருந்து சானவாசுகான் அனுப்பிவந்த சபறூபண்டிதன் மீருசா அப்துல்கபி யென்கிறவனையும் ஆறு மணிக்கி காலத்தாலே அழைத்துவரவேணுமென்று சொன்னபடியினாலே காலு மணிக்கி யெழுந்திருந்து ஸ்நானம்பண்ணி பிரமண கலப்பமும் சூரிய உதய வேளைக்கு எல்லாம் முடித்துப்போட்டு சந்தாசாயபையும் சபறூபண்டிதன் வகையறாக்களை அழைத்துவரச்சொல்லி நயசம் சின்னப்பய்யனை அனுப்பி மகனுக்கபண்டிதனை அழைத்துவரச்சொல்லி அனுப்பி நான் யிருக்கிற பிறேஷிலே வந்தேன். துரை கபுறு விசாரித்ததால் நித்திரை போறார் என்று சொன்னார்கள். அவரேழு மணிக்கு எழுந்திருந்து சந்தாசாயபு வகையறா வருகிறவர்களை அழைத்துவரச்சொன்னார். கல்லத்தென்று வைக்கில் கப்பய்யனை அழைத்து சந்தாசாயபு வகையறாக்கள் வாரவர்

களை அழைத்துவரச்சொல்லி அனுப்பிவிச்சு நான் துரையவர்கள்
வீட்டுக்குப் போனேன். அப்போ அவர் உடுத்திக்கொள்ளுகிறார்
நான் வந்த சேதிப்பிறித்து உள்ளே அழைத்து யென்ன சுபராம
பண்டிதன் சொன்னானென்று கேட்டார் நான் கண்டதில்லை.
நேத்து ராத்திரி பிராமணி போய் கேட்டுவந்த சேதியேயல்லாமல்
வேறே யில்லை யென்று சொன்னேன் அதிலே கோன்சேல்க்
காரர்கள் வந்து கோன்சேல் வீட்டிலே வந்து சேருகிறார்க
ளென்று சேதி வந்தது. இவரும் உடுத்திக்கொண்டு கப்பே
குடிச்சு ஆமி நடு காம்பிரவிலே நாற்காலிகள் போடச்சொல்லி
தாம் வந்துஉளுக்கார்ந்து முசியே பெடுத்திருவை (M. Betrand)
அழைத்துக்கொண்டு கோன்சேல் வீட்டிலே கோன்சேல்க்காரர்
எல்லாரும் கூடியிருக்கிறார்களே அவர்களுக்குச் சொல்லு சந்தா
சாயபு வந்தார் அந்த சேர்ம்வெறாக்கியம் (Conversation) வெகு
காரியம் செல்லுமானபடியினாலே இன்றைத்தினம் யெனக்கு
கோன்சேலுக்கு வரக்கூடாது நீங்களாவுமென்று சொல்லி
அனுப்பிவிடு யென்று சொன்னார் அந்தப்படிக்கி அவன் சொல்
லிப் போகச்சொன்னேன். சந்தாசாயபு குத்துபுத்தில்லிகான்
மீர்அஷிம் சுபராமபண்டிதன் யிவர்கள் வந்தார்கள். மீர்சா அப்துல்
கனியிவர்கள் வரயில்லையென்னவென்று கேட்டார்: சுபராமபண்
டிதன் அழைக்கயில்லை யென்று சொன்னான். ஆளழைத்துவரச்
சொல்லி ஆளனுப்பி அவனும் வந்து சேர்ந்தான். அப்பால் துரை
யவர்கள் சுபராமபண்டிதனைப் பார்த்து நீங்கள் போய் பேசினீர்
களே யென்னமாய்ப் பேசி தீர்த்துக்கொண்டு வந்தீர்கள் சானவாச
கான் பிறாந்துவாயென்று கேட்டார். நீங்கள் சொன்ன பேச்சுக்
கும் அவர்கள் சொன்ன பேச்சுக்கும் கொஞ்சம் தவாத்திருக்
குது. அதுகிமித்தியம் மறுபடி அனுப்பினார்களிதுனுக்கு உங்க
ளுக்கு சம்மதியானால் அதைப் போயக்கே பெச்சாரித்து அங்கே
யிருந்து பெரிய மனுஷர்களை அழைத்துவரச்செ கற்று கமே
கூடக்கொண்டு வந்து குந்தித்து கை சல்பண்ணுகிறதாய்ப் பேசி
வந்தேனென்று சொன்னான். அவர்கள் சொன்ன வயனம் யென்
னவென்று கேட்டார். அதுக்கு சுபராமபண்டிதன் சொன்ன
வயனம் திருச்சிராப்பள்ளியிசாரவாய்த் தீர்த்துக்கொடுக்கத் தஞ்
சாவூர் நீங்கள் வாங்கிகொடுக்கவிருக்க வாங்கின பிறப்பாடு
குத்தகைப்பாய் சந்தாசாயபு அவர்களுக்குக் காணே கொடுக்க
ஆற்காடு உட்பனே சேர்ந்தது: சான்வசகான் யிருந்த ஆறுமீ

காலு மீ த்தையிலே சானவாசகான் மனதுக்கேற்க சந்தாசாயபு நடந்துக்கொண்டு திருச்சிராப்பள்ளி வகையிறு யிசார்ப்பணம் வகையறு சொன்னபடி செலுத்தினல் அப்போ ஆற்காடு சுபா யிசாரா தீத்துக் குடுத்துப்போறமென்றும் சொன்னன். அப்பால் முசபர்சங்கு குடுக்கவேண்டிய பணத்துக்கு சந்தாசாயப்புக்கு திருச்சிறுப்பள்ளி வகையறு தடுக்கிறபடியினலே அந்த பணத்துக்கு சந்தாசாயபு புதுச்சேரி கோவற்ணதோர் அவர்களுக்குச் சொல்விக்கொள்ளுகிறபடியினலே முசபர்சங்கு யெழுதிக் கொடுத்த சீட்டும் குடுந்துவிட்டு முசபர்சங்கு தாயார் பெண்சாதி பிள்ளைகள் வகையிறுக்களை அனுப்பிவிடுகிறமென்றும் யிந்தப் படிக்கி சம்மதியானல் உங்கள் காகிதம் வாங்கிக்கொண்டுவந்தால் தாங்கள் அங்கேயிருந்து ஒரு மாத்துபர் பெரிய மனுஷரை அனுப்பிவிக்குறோமென்று காகிதம் எழுதி அனுப்பிவிக்குறோமென்று சொன்ன சொல்லுகிற பேச்சு உங்களுக்கு மனசாராகிறதுக்கு சானவாசகானெழுதின உங்களுடைய பேருக்கு யெழுதிக் கொடுத்தக் காகிதங் கொண்டுவந்தோமென்றும் துரையவர்கள் சந்தாசாயபு வகையறு முன்பாகச் சொல்லி யிதெல்லாம் முன் சந்தாசாயபு உங்கள் கையில் வாங்கின பணத்துக்கு அடமானமாயிருந்ததுகள். கிறமங்கள் மறுபடி உங்கள் பாரிசம்பண்ணி வைக்கிறதாயும் சொன்னர்களென்று சொன்னதின்பேரிலே துரையவர்கள் சுபாறமபண்டிதரைப் பார்த்து சொன்ன வயணம் ஆற்காடு காலு ஆறு மீ சானவாசகானிலிருந்து அப்பால் சந்தாசாயபு வசம் குத்தகை நிஷ்கருஷைப்பண்ணிக் குடுத்துப் போட்டுப்போறதாயி யெழுதிக்கொடுக்கவேணுமென்று சொன்னதுக்கு அவர்களெழுதுகுற பேச்சு சம்மதியில்லை யென்று சொல்லியும் தங்கள் மனதுக்கேற்க நடந்துக்கொண்டால் அப்பால் ஆற்காடு யிசாறுவாய் தீத்துக்கொடுக்கிறோமென்கிறது வாயி விசேஷம் ஒருவேளை சம்மதியாய் நடவாமல்போனல் குடுக்கத்தக்கதில்லை யென்றும் சொன்னதுக்கு துரையவர்கள் சொன்னது தஞ்சாவூர் வுடனே சேர்த்தது யிப்போ வாங்கக்கூடாது யேனென்றால் காவேரி கொள்ளிடம் தண்ணீர் வந்து யெங்கும் பாவி வாய்க்கால் கூட யெங்கும் நீச்சாயிருக்கும் ஆனபடியினலே தை மீ தையிலே வாங்கவேண்டியது அந்தமட்டுங்கும் தஞ்சாவூர் பேசகாஷ் சந்தாசாயபுக்கு தாசில்தாரி குடுக்கிறோமென்பிக்கவேணுமே அல்லாமல் வாங்குறோம் யென்கிற பேச்சு பிறந்து முன்னுதாக தஞ்சா

லூர் அறிந்திருந்தால் யிங்கிலீசுக்காறர்கள் ஒலாந்தாக்காறர் வகை யிறாக்களுக்கு சீமை பூமி கொடுக்கிறோமென்று ஒரு உடம்படிக் கைகளைச் சொல்லி அவர்கள் கும்மக்குகளை அழைப்பிச்சுக் கொண்டு அதுக்கேத்தபடி பந்துபஸ்து பண்ணிக்கொண்டால் அப்புறம் வெகு சனங்கள் சர் வேண்டியிருக்கிறதுமல்லாமல் கோட்டை உடனே வாங்கக்கூடாதென்று சொல்லி அப்பால் யிந்த கோட்டை வாங்குறதுக்கு உங்கள் பவுன்சுடைய மத்தத் துக்கூட கவையில்லெ. கோட்டை நாங்கள்தானே வாங்குறோம் அதுக்கு சொலுதாதுகள் வகையறா சிலவுகள் மருந்து குண்டுகள் சொலுதாதுகள் சாகுறதுகள்படி செல்லப்பட்ட சிலவுக்கு தஞ்சா லூர் சீமையிலே எங்கள் காரைக்காலுக்கு யுக்த்தமாம்படியே சீமை விடுகுறது யிது உடம்படிக்கை யென்று சோன்னதுக்கு தஞ்சாவூர் அவர்கள் வாங்கிக் குடுக்குறோமென்றல்லவோவென்று சயறுமபண்டிதன் கேட்டதுக்கு நாசறுசங்குக்கு—நாசறுசங்குச் சகலதளத்து பாதுஷா தளத்துடன் கூடப்போய் சண்டைபண் ணுலும் தஞ்சாவூர் வாங்கக்கூடாது. யென்று துரையவர்கள் சொன்னதுக்கு மெய்தானென்று ஒத்துக்கொண்டு உங்கள் பவுன்சு வந்து வாங்கினலும் பேர்ஷா சானவாசுகானுதா யிருக்க வேணும் என்கிற சாடையாய் அவர்கள் சொல்லுகிறதெல்லாம் யென்று சயறும்பண்டிதன் சொல்ல நல்லது அந்தப்படியே நாம் வாங்குறோம் நமக்கு கறசு விழுபடி சொல்லுகுறோம் அதுக்கு சீமை விட்டால் சரியென்று துரையவர்கள் சொன்னதுக்கு சய றும்பண்டிதர் அந்த தஞ்சாவூர் சீர்மை நீங்கள் வாங்கிக்கொடுக்கிற மட்டுக்கும் உங்கள் மேனதுக்கு சீமை விடவேண்டியது நியாயம் தானென்று சொன்னர். அப்பால் மறுதல்லிகான்பேரிலேச் சாவல் அதிகமாய் பணத்துக்கு ரொம்பம் வருத்தம்பண்ணிக் கொள்ளுகிறார்கள். நவபோத்து மொத்தபுபண்ணினர்கள். ஆற் காடு சுபா அன்வறிதிகான் பண்ணினது பாக்கி யென்பது லக்ஷம் ரூபாய் குடுக்கவேண்டியதைக் குடுக்கச்சொல்லி யென்னோம் சுருக்காய் சால்சவாபு நடக்குது மாபூசுகான்—மறுதல்லிகானுக்கு ஆற்காடு சுபா குடுத்தமட்டுக்கும் யெனக்கொன்றும் கவையில்லெ. நான் மக்கத்துக்கு (Maca) ப்போறேனென்று யிருந்த ஆனைகள் குதிரைகள் சமஸ்தமும் மறுதல்லிகானண்டைக்கு அனுப்பி விட்டு தான் பக்கீரு்ய் மக்கத்துக்குப் போகத்தக்கதாய் முஸ்தீத் தாக யிருக்கிறன். சயிதுல்சக்கர்கான் சயிதுசெரீபுகான் சுலுத்

தான்கி வகையரு யிருபதினயிரம் குதிரை சவார்கள் போய்விட்டார்கள். ராசா சந்திரசேனன் குமாரன் ராமச்சந்திரராவு அவர்கள் தங்கள் பவுன்சை முன்னே அனுப்பிக் கொஞ்சம் கொஞ்சம் பவுன்சுட்டனே யிருக்கிறார்கள். கடப்பை அப்துல்நபிகான் வகையரு பட்டாணிகள் சுபாதார்களும் அப்படித்தானபடியினாலே நாசறுசங்கு யினிமேல் காள்பட யிங்கே நிறகத்தக்கதில்லை. அவன் சீமையைப் போய்விடுவான் அதுக்குத்தான் யித்தனை துவரித்தம் பண்ணுகிறான் யென்று சொன்னதுக்கு நாசறு சங்கு பேரிலே யிவர்கள் யென்ன கோபமா-அப்படி யேன் போனார்கள் யென்று கேட்டார். சானவாசுகான் சுசுதாயிம் மொரோபண்டிதன் தவிர மைத்தப் பேர் அமீர்களெல்லாம் நாசறுசங்கை சரிப்பிடிக்கவேணும் யென்கிற நினைப்பேயல்லாமல் நாசறுசங்கைவிடத் தக்க நினைப்புடையவன் அந்த லஸ்கரிலே ஒருத்தருமில்லை யென்று சொல்லி முசபர்சங்குக்கும் உனக்கு பங்குனி மீ 25 உ 26 உ சனிவாரனாள் சண்டையின்போது குண்டுகள் வில்தாரமாய் வந்தபோது.

**1750 ஹு மாயு மீ 28 உ பிரமோதூத ஹு வைகாசி மீ 18 உ வியாழக்கிழமை.**

இத்தனாள் ராத்திரி ஒன்பது மணிக்கு முத்துலகப்பசெட்டி குமாரத்தி கலியாணத்துக்கு வூர்கோலம் பிறப்படச்சே நான் கூடயில்லுக்கடை மட்டுக்கும் வூர்கோலத்திலே வந்து இப்பால் கஸ்க்கரிசாயபு குமாரன் மொகதின்சாயபு சங்குவரு-கும்பினீர் கிட்டங்கிலே யிறங்கி யிருக்கிற விடத்துக்குப் போறதுக்கு கலியாணக்காறர் கையில் அனுப்பிவிச்சுக்கொண்டு மொகதீன்சாயபு அண்டைக்குப் போய் கண்டு பேசி அங்கேயிருந்து வீட்டுக்கு வந்தவுடனே பழய செஞ்சி கில்லேதாரன் சாததாயாறகான் குமாரன் சித்திகான் வந்து கண்டு பேசிக்கொண்டு போன பிற்பாடு பறங்கிப்பேட்டை சேக்குசாயபும் அய்யாக்கண்ணுசெட்டியாரும் வந்து கண்டு பேசிக்கொண்டு போன பிற்பாடு ஒருத்தன் ஓடிவந்து முத்தலப்பசெட்டி வீட்டுக் கலியாண வூர்கோலத்திலே ஆடிக்கொண்டு போற தேவடியாளுகளுக்குள்ளே நாலு பேர் தேவடியாக்கள் காளஸ்த்தீசுவரன் கோவிலுக்கு ஆடுகிறவர்களை துரையவர்களுத்தாரம் என்று பள்ளிப்பயல் சின்னத்தம்பி சேருவைக்காறனென்கிறவனும் இரண்டு பேர் கும்பினீர் சேவுகர்களும் வந்து அழைத்துக்கொண்டு போய் நயினார் வீட்டிலே

கொண்டுபோயி காவலிலே வைத்தார்கள் யென்று வந்து சபுறு சொன்னுர்கள் முன் 15 உ சோமவாரம் சாயங்காலம் பாக்கு கிடடங்கியண்டையியே பந்தலிலே நானிருக்கச்சே சின்ன பரசு ராமபிள்ளை தாகு அப்பு அழகப்பமுதலி பெரியண்ணமுதலி முருகப்பிள்ளை—காடக்குமாரன் யிவர்கள் வந்து செட்டித் தெரு விலே கலியாணத்துக்கு உள்ளே போனுல் தேவடியாக்கள் யெழுந்திருந்து மரியாதை பண்ணுகிறதில்லை அது முன் நடந்து வந்ததுண்டு யிப்போ வரவர தள்ளுபட்டுப்போச்சுது. அப்படி வருமல் மரியாதை நடந்தால் உங்கள் வளில் நடந்ததாய் பெகு கீர்த்தியாயிருக்கும் யென்று சொன்னுர்கள் அப்படி முன் பின் நடந்தால் யிப்போ நடவாமல் போறதுக்குக் காரியமென்ன யிருக்குது அவர்களை அழைச்சு செட்டி—கேட்டுச் சொல்லுகிறே னென்று நல்லதம்பிசெட்டி—அருணுசலசெட்டியை அழைச் சனுப்பிவிச்சு கேட்டதுக்குப் பெரிய மனுஷர்களாய் காலத்து ரெண்டு பேர்களுக்கு நடந்தது மாத்திரமேயல்லாமல் மத்தப் பேருக்கு நடந்ததில்லை ஆனுலும் முத்தலப்பசெட்டி வீட்டுக் கலியாணத்திலே என்ன நடந்துதோ அதுதான் அறியேன் அதைவிசாரித்து வந்து நாளைக்கு சொல்லுகிறேனென்று சொல்லிப்போட்டு போனுன். அந்தச் சேதியை சின்ன பரசுராம பிள்ளை வகையரு வலங்கையரு வந்தவர்களுக்கு நாளைக்குச் சொல்லுகுறேமென்று சொல்லி அருணுசலசெட்டிப் போனுன் நீங்களும் நாளைக்கு வாருங்கோளென்று சொன்னதுக்குமுன்னே யெல்லாம் அரங்கேத்துபடிக்கு வந்து பாக்கு வெத்திலை வக்கைய ருக்கள் நாங்கள் போவோம். யிப்போ அழைக்கிறதுமில்லை. பாக்கு வெத்திலை வைக்கிறதுகூட யில்லை. அந்த வழக்கம் தள் ளிப்போட்டார்கள். அப்பால் அரும்பாத்தபிள்ளை வீட்டுக்கு பொங்கல் பண்டிகைக்குப் போவார்கள் அதையுந் தள்ளிப்போட் டார்கள் யிதல்லாமல் வலங்கையாருடனே போரார்கள் வலங்கை தேவடியாள் இடங்கையாருடனே—பிறசித்தமாய்ப் போருளா அந்தரங்கமாய்ப் போருளென்று இப்படி ஞாயஞ் சொல்லி இன் றைபதினம் ராத்திரிக்கு முகூர்த்தமாச்சே இன்றைக்கு அட்டிப் பட்டாலெப்படி யென்று சொன்னுர்கள். அதுக்கு நான் சொன் னது ருசியாய் நடத்தவேண்டியது பலவந்தத்தின்பேரிலே வலங் கைக்கு நடக்கவேணுமென்றால் யெப்படி நடக்கும் வலங்கை யென்றும் யிடங்கை யென்றும் ஏற்பட்டு யிருப்பானேன். என்

புத்திக்கேற்க்க இது வழக்கமாய்ப் பேசி வெல்லவேணுமென்றால் எப்படி நடக்கும் நான் வந்து முப்பது வருஷமாய் நடக்கக் காணேணும் இப்போ நடப்பிச்சுக்கொள்ள வேணுமென்றால் எப்படி நடக்கும் ஆனாலும் அவர்கள் நாளையத்தினம் வந்து சொல்லுகிறோம் என்றாப்போலே ஆச்சுதே நாளைக்கு வாருங்கோளென்று சொல்லிப் போகச்சொன்னதுக்கு நீங்கள் வலங்கைக்கு இசமான் நீங்கள் நடப்பிக்கவேணுமென்றால் ஒருத்தரும் தடுத்து சொல்லப்போறதில்லை யென்று சொன்னார்கள். அவசியம் உங்களுக்குள்தெல்லாம் எனக்கு சந்தோஷம்தான் ஆனால் ஒரு ஞாயத்தை எதிரிக்குச் சொல்லி நடத்தினாலல்லோ அழகு அல்லவென்றால் இருசியின்பேரிலே நடப்பிச்சுக்கொள்ளவேண்டியது எல்லாத்துக்கும் அவர்கள் நாளை வந்து சொல்லுகிறோமென்று சொன்னதுக்கு அதை அறிந்தல்லோ அப்பாலே பேச்சு நடத்தவேண்டுமென்று சொல்லி நாளை வாருங்கோளென்று சொல்லிப் போகச் சொன்னேன் அவர்களும் போனார்கள்.

**1750 ஸ்ரீ மாயு மீ 29 உ பிறமோதூத ஸ்ரீ வைகாசி மீ 16 உ சுக்கிறவாரம்.**

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு நாசறுசங்கு லசுக்கர் சமாச்சாரம் வந்துதாமென்று கேட்டார். செவ்வாய்க்கிழமை நான் மோறோபண்டிதனும் அன்வறதிகான் மகன் மமுதல்லிகானும் வந்தவாசி கோட்டைக்குப் போய் தக்காசாயபுக்குப் பரவசஞ் சொல்லி ஒன்பது லக்ஷம் ரூபாயாய் மொகத்துமா பைசல்பண்ணி நாசறுசங்கு பேட்டிக்கு பரவசஞ் சொல்லி அழைத்து வந்தார்களாம் நாசறுசங்கு உடனே தக்காசாயபு வந்தாரே நாளையத்தினமே பேட்டிக்கு ஆகுதென்று சொன்னதென்றும் இந்தமட்டுக்கும் பேட்டி ஆனதில்லை யென்றும் மமுதல்லிகான் வந்தவாசி கோட்டையிலே போய்த் தக்காசாயபுவைக் கண்டு பேசினபோது தக்காசாயபுக்கும்–மமுதல்லிக்கும ஆணை சத்தியப்பிறமாணமாய் நடந்துதென்றும் ஆற்காட்டு சுபாவுக்கும் மமுதல்லிகானும் திவானகிரி தக்காசாயபுமா ஒன்றுக்கொன்று அன்னியவோன்னியமாயிருக்க ஒடம்படிக்கைப் பண்ணிக்கொண்டார்களென்றும் அப்போ மமுதல்லிகானுக்கு ஒரு சிறோப்பாவும் ஒரு பெரிய தச்சிக்குதிரையும் மோறோபண்டிதனுக்குமப்படித்தான் குடுத்தாரென்றும் அந்த பெகுமதி

வாங்கிக்கொண்டு தக்காசாயபையும் நாசறுசங்கு பேட்டிக்கு அழைத்துவந்ததாய்ச் சொன்னார்களென்று சொன்னேன். சந்தா சாயபுக்கேதாகிலும் சேதி வந்ததுண்டாமென்று கேட்டார். அவர்களுக்கு மிப்படித்தான் சேதி வந்துதென்று சொன்னேன். அதுக்கு சந்தாசாயபு என்ன சொல்லிப்போனான் இப்போ ஒன்பது லக்ஷம் ரூபாய் நாசறுசங்குக்கு குடுத்ததையும் தருபாறு பண்ண சிலவையு மிதில் நாலொத்தொரு பங்கு அஞ்சிலொரு பங்கு எனக்குக் கொடுத்தால் சரி நாசறுசங்கை பறயன் கட்டுக்கு வருமல் அடிப்பேன். அப்பாலும்நான் சீமையெல்லாம் இவன் பாரிசம் பண்ணினேன். அதில் பத்து லக்ஷம் ரூபாமட்டுக்கும் சேத்துக் கொண்டான். அதிலேயாகிலும் குடுத்தானா இப்போ சிலவுக்கு இத்தனை கடிசாயிருக்குதென்று எழுதினாமே பதினயிரம் அய்யாயிரம் ரூபாவாகிலும் சிலவுக்கு குடுத்து அனுப்பினனா எல்லா விதத்திலேயும் என்னை மோசம்பண்ணிதான் பத்துப்பணம் கிறகிச்சு நாசறுசங்குக்கு குடுத்ததுமல்லாமல் மீது மிக்கிலே நம்முடபேரில்கூட ருசு காரியம் பண்ணுகிறது மெத்த வாச்சரியமாயிருக்குதென்றும் இப்போ புதுச்சேரி குவர்ணதோரவர்கள் உதவனுப்போலே ஆருதவப்போறார்கள். தகப்பன் பிள்ளைக்கு செய்யமாட்டான் அப்படிப்பட்ட உபகாரம் லோகத்துக்குள்ளே ஒருத்தரும் செய்யாத உபகாரம் என்மட்டுக்கும் செய்ததுக்கு நனைத்த றுணம் தீத்துக்கொள்ளமாட்டேன் என்று சொல்லிக் கொண்டிருந்தார் என்று சொன்னேன். அவன் உள்ள பசமை சொன்னானென்று துரையவர்கள் சொன்னா அப்பால் சயாறும பண்டிதர் அறிவானோவென்று கேட்டார். அவனுங்கூடத்தானிந்தப் பிரஸ்தாபம் நடக்கச்சேயென்று கேட்டேன் அதுக்கு சயாறுமபண்டிதன் என்ன சொன்னானென்று கேட்டார். அவன் பேட்டிக்கு வாராமல் நின்றால் அப்போதானே வந்தவாசி சீமை விட்டு ஆற்காடு போய் சேர்ந்து ஆற்காடு மோகத்துமாவும் சந்தாசாயபுக்கே பகல்பண்ணி இந்தமட்டுக்கும் கேட்ட மேறி பெகு தூரம் போயிருப்பானே அதையெல்லாமும்முட சட்டகமார்களும் நவாயித்தார்கள் வகையறு மீசத்துங் கெடுத்துப் போட்டார்களிவர்களென்னமாய்க் கெடுத்துப் போட்டாலும் புதுச்சேரி சென்றால்சாயபு அவர்கள் பயம் அவன் மனதிலே குடியாயிருக்கிறபடியினாலே இந்தமட்டுக்கும் ஆசை யுண்டாய் பேச்சு வார்த்தை நடக்குது. ஆற்காடும் சந்தாசாயபுக்கு வரு

மென்கிற பரவசமும் முசபர்சங்குக்கும் விமோசனமுண்டா மென்கிறதும் பிறஞ்சுக்காறர் பயம் பிடிச்சு பிருக்கிறதைத் தொட்டு நம்பிக்கை யென்று சொன்னன் யென்று சொன்ன துக்கு மெய்தானென்று சொன்னன் யென்று சொன்னதுக்கு மெய்தானென்று கேட்டுக்கொண்டிருந்து சயருமபண்டிதர் பின் றைபதினம் வந்தவாசி போய் சேருவானுவென்று கேட்டார். பின்றைபதினம் சேரமாட்டான். நாளைபதினம் சேருவானென்று சொன்னேன். இதிலே சின்னதுரை முதலான கோன்சேலி யோர்கள் வந்தார் தாமும் சட்டை போட்டுக்கொண்டு அவர்களை வரச்சொல்லி மேலண்டையிலிருக்கிற கோன்சேல் வீட்டே போனர். அப்பால் கோன்சேல் கூடி பத்தரை மணிக்குமேல் கலைஞ்சு வீட்டுக்குப் போனர்கள். அழைச்சனுப்பிவிச்சு தஞ்சா வூர் நகைப்பட்டை அறணுவிலே றத்தினம் பிழைத்து பிருபத்து நாலு அட்டிகை கோத்திருக்கிறது ஒரு பட்டை அறணுவைக் குடுத்து விலை மதிச்சுக்கொண்டு வரச்சொல்லி குடுத்து குத்த கைக்காறர்கள் ஒன்றரை வருஷத்து பணம் குடுக்கவேணும் சம்பளத்துக்குப் பணமில்லை அவர்களுக்கு தாக்கீதுபண்ணிபணத் தைக் கொண்டுபோய்ச் செலுத்தச்சொல்லி சொல்லு செலுத்தா விட்டால் சாவடியிலே கொண்டுபோய் காவல் வைக்கச்சொல்லு யென்று சொன்னர். நல்லதென்று சொல்லி நானிருக்கிற பூறே விலே வந்து காளவாய் குமரப்பிள்ளை ஒழுகரை காமியப்பமுதலி வகையறுக்களுக்குச் சொல்லச்சொல்லி தாக்கீது விருனுபக்கனு டனே சொல்லி அனுப்பிப்போட்டு அப்பால் உத்திரபெத்து செட்டி மார்க்க சகாயசெட்டி கையில் காண்பிச்சு விலை பாணித் துக்கொண்டு வரச்சொல்லி கண்டால் குருவப்பசெட்டி கையில் குடுத்தனுப்பிப்போட்டு அப்பால் நான் வீட்டுக்குப் போனேன்.

பகலைக்குமேலாக கண்டால் குருவப்பசெட்டி பெத்துசெட்டி மார்க்க சகாயசெட்டி வகையறு பாணிச்சு யெழுதி வந்ததுக்கு வயணம் பொன் பட்டை அறுகளில் றத்தினமிழைத்த அட் டிகை கோத்த அருணுவி ஒன்றுக்கு விருகனிடை 130-க்கு வய ணம் வயிர றவை 210-க்கு மஞ்சாடி 30-க்கு மஞ்சாடி 1-க்கு 5 விருகனிடை ஆக விருகனிடை மொத்தம் 150 விருகனிடை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நடுநாயக் கெம்புகள் 10-க்கு | | விருகனிடை | 15 | ,, | ,, |
| சின்ன கெம்பு | 180-க்கு | ,, | 36 | ,, | ,, |
| பொடிக் கெம்பு | 160-க்கு | ,, | 4 | ,, | ,, |

பச்சைக்கல் 100.க்கு—நதி-25—க்கு நதி 1—க்கு வி. 1 1/2 ஆக ரூ. 37 1/2 சின்ன பச்சை 96.க்கு நதி—12—க்கு நதி 1—க்கு வி. 1 ஆக வி. 12 பொன் விராகனிடை 163 1/2—க்கு கல் அரக்கு வி. இடை 20 போய் நீக்கு விராகனிடை 143 1/2 விராகனிடை 1—க்கு கிறயம் வி. 1 1/4 ஆக கூடின கிறயம் விராகன் 180 ஆக பட்டை ஆரு காள் 1—க்கு வராகனிடை 163 1/2 க்கு கிறையம் வி. 434 1/2.

இந்தப்படிக்கு மதிப்பு பார்த்து மேலெழுதப்பட்ட கண்டால் குருவப்பச்செட்டி மார்க்க சகாயச்செட்டி வகையறு மதிப்பு பார்த்து நானூத்தி முப்பத்தி நாலரை விராகனைச் சொன்னார்கள். அதை நான் சாயங்காலம் ஆறு மணி வேளைக்கு மதனானந்தபண்டிதர் கூட அழைத்துக்கொண்டு போய் துரையவர்கள் கடுக்காம் பீரு விலே பிருக்கச்சே றத்தினமிழைத்த பட்டை அறுனாளக் கொண்டுபோய்க் குடுத்து முன்னூத்திருபது ரூபா நானூத்தி முப்பது விராகன் மிலத்த மாரிட்டார்கள் என்று சொன்னதுக்கு அங்கே அவர்கள் மூவாயிரம் ரூபாய் விலை கட்டி குடுத்தார்கள். இந்தக்கிறயம் இத்தனை ரூபாயாச்சுதென்று கேட்டார். ஆயிரத்தி முன்னூத்தி எழுபத்தாறு ரூபா ஆச்சுது யென்று சொன்னப் போலே நல்லது இந்த விலை முசியே துப்பளாம் M. (Duplan) கேட்டால் அவனுடனே சொல்லவேண்டாமென்று சொன்னார். உங்களுத்தரவில்லாமல் சொல்ல எனக்கென்ன கவை யிருக்கு தென்று சொல்லி நகையே குடுத்தவுடனே நகையைப் பார்த்து பொடிக்கல்லிலே அல்லாமல் ஒரு கல் நாலாயிரம் பெத்ததாயி வரவில்லை யென்று சொன்னாரப்படியுமுண்டென்று சொல்லி அப்படிப்பட்ட நகைகள் அவர்கள் விடார்கள். திருச்சிராப்பள்ளிக் கோட்டை சந்தாசாயபு வாங்கினபோது பிறப்பட்ட நகைகளைப் பார்த்தது உண்டானால் அதிலே பெருசா யிருந்ததென்று சொன்னேன். மெய்தான் நானும் கேழ்விப்பட்டேனென்று சொல்லிக்கொண்டு முசபார்சங்கு கான் வக்கில் தோஸ்து மகம்மது யென்கிறவன் வந்து நாசருசங்கு லசக்ஷரிலிருந்து மீர்சத்து ரெண்டு கெசமுகாருடனே ஓடிப்போய் சேத்துப்பேட்டுக் கோட் டையைப் போய்ச் சேர்ந்தாரென்று நேத்து எங்கள் சிப்பாயி ஒருத்தன் சேத்துப்பேட்டுக்குப் போயிருந்தவன் மீர்சத்துக் கோட்டையிலே நுழையச்சே பாத்தவன் வந்து சொன்னான். யென்றபோதே துரையவர்களுக்கு அகமலாந்து மெய்தானு என்று

யெங்கள் சிப்பாயிதானே பார்த்து வந்தது பொய்யா மெய்யா வென்று சொன்னான். எதினாலே ஓடிப்போனானென்று கேட்டார். தோஸ்து யிருந்துகொண்டு சபுரதல்லிகான் பணம் விஸ்தாரமா யிருக்குதே தக்காசாயபு வந்தானே என்ன பேச்சு நடந்ததோ அது நிமித்தியம் ஓடிப்போனானென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள் என்று சொன்னான்.

அதுக்கு சபுத்தரல்லிகான் பணம் மீர்சத்து வசமாய்ச் சேர்ந்ததுயென்று ஆறு மறியார்களோ அது யோசனையல்ல பிறுயான வேளையாச்சுதே இவன்தன் பாரிசமாய் ஒன்றும் நடத்துகிற சாடை காண்பிக்கவில்லையே இறுகப் போட்டுக்கொண்டு பணத்தை யெங்கே சொல்லுகிறானோ வென்று ஓடிப்போனானென்றும் நாசறுசங்குக்கு பெகு அவிசுவாசம் தோத்தி யெல்லாரையும் கில்லாதாரர்களெல்லாரையும் காவல் பண்ணுவானென்று மிது முதலான பிறஸ்தாபம் நடந்தது. அப்பால் துரையவர்கள் முசியே துப்பளாமை அழைத்தனுப்பி பட்டை அறுனுள நாற்காலியின்பேரிலே யிருந்ததை திபோகு கையிலதை யெடுத்துவரச்சொல்லி முசியே துப்பிளாமுக்கு காண்பிச்சு விலை சொல்லிக்கொண்டு பேசிக்கொண்டிருந்தார்கள் நானும் மதனந்த பண்டிதனும் பிறப்பட்டு நானிநக்கப்பட்ட பூமேறவை வந்து சேர்ந்தோம் அப்பால் வக்கீல் சுப்பய்யனை அழைச்சு சந்தா சாயபுக்கேதாகிலும் மீர்சதது ஓடிப்போன சேதி வந்ததா கேட்டுவரச்சொன்னேன் சுப்பய்யன் போய்க் கேட்டதுக்கு சந்தா சாயபு சொன்ன சேதி தக்காசாயபு நாசறுசங்கு பேட்டியாய் நேத்து காலத்தாலே நாசறுசங்கு கையில் அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தவாசி கோட்டையே போய்ச் சேர்ந்தான் சேர்ந்தவுடனே பீரங்கிகள் கோட்டையிலே விஸ்தாரமாய் சுட்டு வெகு சம்பிரம்பண்ணி எல்லா வீட்டுக்கும் போய் மெனவி முயார்க்கு சொன்னான். தன் பெண்சாதி யிருக்கிற மகானுக்கு மாத்திரம் போய் விசாரியாமல் போனானென்று வெகு குறையாய் தம்முட பெண்சாதி யெழுதினதாய் சொல்லி நாசறுசங்கும் நாளைய தினம் கூச்சாய் ஆற்காடுபோய் சேர்ந்து அங்கே அஞ்சாறு நாளிருந்து அவ்விடத்திலே ஆற்காட்டு பேச்சுக்கு ஒரு பைசல் பண்ணிப்போட்டு அப்பால் அயிதாபாத்துல் சர்வணி பண்ணப் போறவனுகக சொல்லுகிறார்களென்று எழுதிவந்ததாய்ச் சந்தா சாயபு சொன்னானென்று சொல்லி பின்னையும் தான் வரச்சே

மெத்தையின்பேரிலே சாயபு சதா யிருந்தவரை பழைச்சு மீர்சத்து ஓடிப்போய்விட்டானே என்று தேவனாம்பட்டத்திலிருந்து ஒரு பிறாமணன் வந்தவன் சொன்னானென்றும் யிது நிஷ்கருஷை சேதி யென்றும் சொல்ல மறுபடி சந்தாசாயபு அண்டைக்குப் போய் சொல்ல சந்தாசாயபு மீர்சத்து ஓடிப்போன பேச்சு பெண் புத்திக்கேற்கப் பொய்யாய்க் காணுதென்று சொன்னாரென்று வக்கீல் சுப்பய்யன் வந்து சொன்னான். அப்பால் முசபர்சங்கு வீட்டுக்கு முசபர்சங்கு காகிதம் கொண்டு கொண்டு வந்தான். சொன்ன சேதி வந்தவாசி மொகத்துமா பைசலாய் தக்காசாயபு கோட்டையிலே போய்ச் சேர்ந்தான் நாசறுசங்கு யித்தனாள் கூச்சாய்ப் பயணம் சாகிப்போனான். நானும் காகிதம் கொண்டு கொண்டு காலத்தாலே பிறப்பட்டு யிப்போ வந்து சேர்ந்தேனென்று சொன்னான். நல்லது காகிதத்தை கொண்டு ஆசிப்பாசலையும் காலத்தாலே வரச்சொல்லி சால்சவாபு ஆகுதென்று சொல்லிப் போகச்சொன்னோம் அவன் சொன்னது ஆசிபாசலுக்கு ஒரு ரேக்காவும் சந்தாசாயபுக்கு ஒரு ரேக்காவும் சந்தர்சாயபுக்கு ஒரு ரேக்காவும் துரைக்கு காகிதமும் வந்துது ஆசிபாசலைக் காலத்தாலே கொண்டு வாரேனென்று சொல்லி அனுப்பினேனென்று சொன்னதுக்கு அப்படியே காலத்தாலே வரச்சொல்லி அனுப்பிவைத்தேன்.

இத்தனாள் காலத்தாலே போனபோது துரை நேத்து ராத்திரி இடங்கை தேவடியாள் எழுந்திருக்கவில்லை யென்று வலங்கையார் பிறாதுபண்ணி தேவடியாக்களை நேத்து ராத்திரி காவல்வைத்த சேதி யென்னவென்று கேழ்க்கவில்லை. அவருடனே சொல்லிக்கொண்டு அவறைப் கொண்டுபோய்க் காவல் வைக்கச்சொல்லி சொன்ன சேதி அவர் கேழ்விப்படாதினாலே நமக்கென்ன காமென் எடுத்துப் பேசவேணுமென்று சொல்லி யிருந்ததுமல்லாமல் அவரோது நிமித்தியம் இந்தப் பேச்சை யெடாமல் நிற்குறாரோ தெரியாதே அவர் மனதறிந்துபல்லோ உத்தாரம் நடத்தவேணும் ஆனபடியினாலே இன்றெல்லாம் அவரும் எடுத்ததில்லை. நானும் அவரேடாத பேச்சைப் பேச காரியமென்னவென்று சும்மாயிருக்கிறேன். நாளையதினம் நடக்கிற பேச்சிலே அறியவேண்டியது இத்தனாள் ரெண்டு மணி வேளைக்கு சாப்பிட்டவுடனே மத்திபானம் இடங்கையாரெல்லாம்

கும்பலாய் கூடி வந்தார்கள் வந்து நேத்து ராத்திரி அகாமியாய்
நடப்பிச்சதுக்கு நேத்து ராத்திரி சொன்னதுக்கு இன்றையக் காலத்
தாலே வாறதுக்கு சடங்காயிருக்கபடியினாலே வரக்கூடாமல்ப்
போச்சுது. யிப்போ வந்தோமென்று சொல்லி எங்களுர்களுக்கும்
வலங்கையாருக்கும் முன் முசியே மர்த்தேம் (M. Martin) காலே
யிலே வூர் கூடி அத்துப் பிறிச்சுக்கொண்டு கையெழுத்துப் போட்
டுக்கொண்ட சீட்டுகளிருக்குது. அதுகளெல்லாம் யெடுத்துக்
கொண்டு வருகிறோம் நீங்களிங்கே யிருங்கோளென்று சொன்னார்
கள். நல்லது அந்தப்படியே எடுத்துக்கொண்டு வாருங்கள் பாத்து
துரையவர்களுக்குச் சொல்லுவோம் ஆனால் கும்பல் கூடவேண்
டாம் பெறுமென்ற மனுஷர்களாய் நாலு பேர் மாத்திரம் வாருங்
கோளென்று சொல்லிப் போகச்சே மறுபடி ராத்திரி பதினென்
றரை மணிக்கு வந்து முசியே மர்த்தேன் (M. Martin)
காலேயிலே யெழுதிக் கொடுத்த சீட்டும் அப்பால் சார்வரி ௵-ல்
நடந்த கோயில் உடம்படிக்கை சீட்டும் அப்பால் முசியே
லெனுவார் (M. Lenoir) காலேயிலே பாரி வேட்டை உண்டாக்கி
நடத்தினதுக்கு சீட்டும் இப்பால் வலங்கையார் பொதுத் தெரு
வில் இடங்கையார் குதிரை பல்லக்கு ராச வீதியிலேறி வருகிற
துக்கு எழுதிக் கொடுத்த சீட்டொன்றும் அது யிரண்டு இந்த
துரை நாளிலே மறுபடி யெழுதப்பட்ட சீட்டொன்று இதுக
ளெல்லாம் கொண்டு வந்து காண்பிச்சபோட்டார்கள். அதுக
ளெல்லாம் பார்த்து இதிலே யில்லே. பொன்னப்பரை யோசனை
பண்ணிக்கொண்டு வரச்சொல்லிச்சொல்ல நாங்களிதுவரைக்கும்
நடப்பிச்ச யிப்போ நடப்பியாமல்போனால் எங்கள்பேரிலே
கோபம் செமத்தவும் அபராதமும் வாங்கலாம் தெண்டிக்கவும்
ஞாயம். அதமமாய் நடப்பிக்கவேணுமென்று எங்களே
அழைத்து ஞாயம் கேளாமல் கொண்டுபோய்க் கச்சேரியில்
காவல் வைக்கச்சொல்லி யிப்பவும் இந்தச் சாடை நடத்தச்
சொல்லுகிறது எந்த ஞாயம் ஒருக்காலும் வழங்காத வழக்
கத்தை வழங்கிவிக்கயில்லே யென்று தப்பிதமாய்ச் சொன்ன
வனேப் பிடிச்சுக் காவல் வைத்து அபராதமும் வாங்கவேண்டிய
தென்று சொல்லி இனிமேல் வலங்கையார் ஆனே முதலானதுக
ளேறுகிறதுக்கு எங்களுத்தாரமில்லாமல் ஏற வொட்டுகிறதில்லே.
இனிமேல் நாங்களும் அவர்கள் தேவடியாக்கள் எழுந்திருக்க

இல்லை யென்று நாங்களும் யெப்படி நடப்பிக்கவேண்டியபடிக்கு
நடப்பிக்கிறோம். அல்லவென்றால் வூரைவிட்டுப் போறோம் கிற
பறுதியாய் யெங்கள் கட்டுக்குள்ளே நாங்களிருக்கச்சே எங்களை
அழைத்தும் கேளாமல் தேவடியாக்கள் எழுந்திருக்கவில்லை
யென்று கலியாணத்து வூர்கோலம் வருகிற வேளையிலே தேவடி
யாக்களைக் கொண்டுபோய்க் காவல்பண்ணுகுற அனியாயம் யெங்
கேயாகிலும் ஒருத்தர் வந்து சொன்னால் மத்தப் பேர்களையும்
அழைப்பிக்க ஞாயம் கேழ்க்க தப்பிதமாய் நடந்துயிருக்கிற
வனுக்கு தெண்டனைபண்ற இதெல்லாம் ஞாயமிதை விட்டுப்
போட்டு இந்த வூர் தோன்றின நாள் முதல்கொண்டு நடவாத
நடத்தையை யிப்போ நடத்தவேணுமென்றால் அதுக்குத் துரை
யவர்களுக்குஞ் சம்மதியாயிருந்து சோராவரியாய் நடத்திக்
கொள்ளுங்கோள். நாங்கள் எங்கே எங்களுக்கு மேன்பாடு நடக்
குமோ அங்கே போறோமென்றும் வலங்கைக்கும் இடங்கைக்கும்
அதுகளோப்பட்டிருக்கிறதென்ன அதுப்படிக்கி அவரவரவர்
நடக்கவேணுமென்ற கட்டென்னவென்று இப்படி தாங்கள் ஞாய
மினைகமாய்ச் சொல்லிக்கொண்டார்கள். இதுக்கு ஞாயமென்
னத்தைச் சொல்லுகிறதென்று மனதிலே வைத்துக்கொண்டு
நீங்கள் சொன்ன ஞாயத்தை யெல்லாம் விட்டுப்போட்டு நடக்க
வேண்டிய கிறுகை யென்னமோ அதை யோசனைபண்ணித் தீத்
துக்கொண்டு இரண்டு இரண்டு பேர்களாய் வந்தால் ஞாயமாய்
கேட்டுத் தீத்துப்போடத்தக்கதாக துரையவர்களுக்குச் சொல்லு
கிறேன். அந்த யோசனை தவிர வேறே யெனக்கு யொன்றும்
தெரியாது யென்று சொல்லிப் போகச்சொன்னேன் ஆனாலிவர்க
ளுக்கு ஞாயம் பதிவிச்சு சொல்லத் தெரியும் ஆனால் நடத்தின
பேர்கள் வேறே யிருக்க நமென் யிதிலே வேசப்படவேணு
மென்று மனதிலே எண்ணிக்கொண்டு போகச்சொன்னேன்.
அவர்களும் யோசனைபண்ணிக்கொண்டு வாறோமென்று சொல்
லிப் போனார்கள் இப்படி பட்டணத்தில் அனியாயம் நடத்தினால்
இதுக்கு உத்தாரஞ் சொல்லத் தக்கினவர்கள் ஆர் கடசி கட்சி
யிலே பட்டணஞ் சுகப்படுகிற நாளின்னம் வரயில்லை சுவாமி
சித்தமில்லாமலிருக்கச்சே பட்டணம் மாமூறாகவேணுமென்று
என்னதாம் நினைத்தாலும் மாமூல் ஆகிறது சமயம் வராமல்
ஒன்றும் நடக்க அறியாது.

**1750 ௵ மாயு ௴ 30 உ பிரமோதூத ௵ வைகாசி ௴ 20 உ சனிவாரம்.**

இத்தனுர் காலத்தாலே நாசருசங்கு லசுக்கரிலே யிருந்து முசபர்சங்குவினுடை ரோக்கா துரையவர்களுக்கு கொண்டுவந்ததையும் எடுத்துக்கொண்டு ஆசிபாசல் வந்து துரையவர்களைக் கண்டு சொன்ன சேதி முசபர்சங்கு ரோக்கா அனுப்பினுர் பென்று கையில் ரோக்காவைக் குடுத்தான். அந்த ரோக்காவை துரையவர்கள் வாங்கி மதனந்தபண்டிதன் கையில் கொடுத்துப் படிக்கச்சொல்லி அதனுடைய பயனைக் கேட்டுச் சொல்லச்சொனனுர். அந்தப்படிக்கு அவர் படிச்சச் சொன்ன வயணமாவது இப்போது நான் அகாதமான காவலிலே விழுந்தேன் என் சிவன் உடனே விடுகிறதாய்த் தோணவில்லை. ஆனபடியினாலே நான் வெளியே வந்து என்னைத்தொட்டு ஆகிற சரிபமொன்றுமில்லை ஆனபடியினாலே என் தாயார் பெண்சாதி பிள்ளைகளிருக்கிறவர்களுக்கு சிலவுக்கு குடுத்து உம்முட கெற்ப வாசத்திலே வைத்திருக்கிறதுக்கு சம்மதியானால் வைத்திருக்கிறது. அல்லவென்று சிலவுக்கு குடுக்கிறதுக்கு சம்மதியில்லாமல்போனால் அவர்களை யிருக்கிற சறுவ சோப்பானமுமெடுத்துக்கொண்டு கட்டிக்கொண்டு யிருக்கிற பிடவையையுடனே விட்டுவிட்டால் சகமா யிங்கே வந்து சேர்ந்தால் யெனக்கத்ததாய் அவர்களும் காவலிலே கிடக்கிறார்கள் யென்றும் உமக்கு பைகம் பீசாறவும் பேரிலேயும் பிரியம்பேரிலேயும் ஆணை யென்றும் யிப்படியாக துக்கசாகரத்திலே மூழுகிக் கிடக்கிற யென்னைக் கடத்தேற விட ஒருத்தருமில்லை உம்முட பாவசம் தவிரவென்று கெட்டியா யெண்ணவும் யென்று யிப்படி யெகு வேசாறலாய் யெழுதியிருந்தது. அந்தப்படிக்கி அவர் படிச்சு சொன்னபடிக்கி துரையவர்களுடனே சொன்னதுக்கு காவலிலே விழுந்தவுடனே புத்தி கெட்டுப்போயி யெழுதினானென்று துரை சொன்னார். அது மெய்தானென்று ஆசிபாசல்கான் சொன்னான். அப்பால் லசுக்கு சமாச்சாரமென்னவென்று கேட்டார். லசுக்கர் ஆற்காட்டுக்கு போகத்தக்கதாக நேத்தயதினம் கூச்சாய் வந்தவாசி விட்டப்பிறம் சாகிப்போச்சுது யென்று சொன்னான். இத்தனை சாயங்காலம் ஆறு மணிக்கு வந்த சேதி யென்னவென்று த்து பத்தொன்பதாந் தேதி வந்தவாசி விட்டு நாசருசங்

லசுக்கர் கூச்சபண்ணி புரிசை (Purisai) போய்ச் சேர்ந்தது யென்றும் தக்காசாயபு ஒன்பது லக்ஷம் ரூபாய் தீத்துக்கொண்டு வந்தவன் தான் அஞ்சு லக்ஷம் ரூபா கொடுக்கவும் போனூர் மமுதல்லிகான் நாலு லட்சம் ரூபா குடுக்கவும் உடம்படிக்கை பண்ணிக்கொண்டு அன்வறதிகானுடைய மகன் மமுதல்லிகானுடனே அனுகூலமாயிருக்கிறோமென்று சந்தாசாயபுடனே சேருகிறதில்லை அவனுக்கு அனுகூலமாயிருக்கிறதில்லை யென்று சத்தியம் பண்ணிக் குடுக்கச்சொல்லி சொல்லுகிறேன். அந்தப்படிக்கி போனூர் மமுதல்லிகான் சம்மதிச்சு நடத்தினால் நல்லது நடத்தாவிட்டால் மமுதல்லிகானை உங்கள் மனுஷர்கள் கையில் ஒப்பிச்சுப் போடுகிறேன் நீங்கள் அழைத்துப் போய் வேண்டியபடி செய்துகொள்ளுங்கோளென்று தக்காசாயபு நாசறுசங்குடனே சொன்னதாகவும் நாசறுசங்கு நல்லதென்று சம்மதிச்சுக்கொண்டு அல்லிநக்கிம்சாயபுவை மாத்திரம் கில்லைக்குள்ளே போகச் சொல்லி உத்தாரங் குடுத்ததாகவும் அந்தப்படிக்கி கில்லைக்குள்ளே போய் போனூர் மமுதல்லிகானை நாலு லக்ஷம் ரூபாயும் குடுத்து அன்வறதிகான் குமாரன் மமுதல்லிகானுக்கு அனுகூலமாயிருக்கிறோமென்று சத்தியம்பண்ணிக் குடுக்கச்சொல்லிச் சொன்னதாகவும் அதுக்குப் போனூர் மமுதல்லிகான் தனக்கு பணத்துக்கு அவகாசமில்லை யென்றும் அன்வறதிகான் குமாரன் மமுதல்லிகானுக்கு அனுகூலமாயிருக்கிறேனென்று சந்தாசாயபுக்கு விரோதமாயிருக்கிறேன் யென்று நானெப்படி சத்தியம்பண்ணிக் குடுப்பேன். என் தம்பி என் ரத்தம் அவனுக்கு விரோதமாகவும் நீ யெனக்கு அனுகூலமாயிருக்கிறேனென்று நான் சத்தியம் பண்ணிக் குடுத்தால் அந்தப்படி யெப்படி நடக்கும் வெளிக்குச் சொன்னாலும் உள்ளே மனது பொருந்தத் தேவையில்லையா. அப்போ பொய் சத்தியமல்லோ பண்ணிக்குடுக்கவேணும் அப்படி பொய் சத்தியம் பண்ணிக்குடுத்து எத்தனை நாளிருக்கப் போறேன். ஆனபடியினாலே கூடாதென்று சொன்னாப்போலேயும் அதின்பேரிலே நாசறுசங்கு அண்டைக்குப் போனூர் மமுதல்லிகானைக் கூட்டி அனுப்பிவிச்சாப்போலேயும் நாசறுசங்கு பார்த்து நாம் வந்தமட்டுக்கும் நீ யெதிரே வந்துகொண்டு பேசாமல் போகக் காரியமென்ன. இப்போ ஒப்பினபடிக்கு பணம் குடாமலிருக்கக் காரியமென்ன வென்று கோபம்பண்ணி ஒரு

மொகுலன் முன்னூறு குதிரை சமேதரான் வசம்பண்ணி ரேசு முன்னூறு ரூபாய் குடுத்தாலே அல்லாமல் அந்த மொகுலனை சோத்துக்குக்கூட வாண்டாமென்று பெகு சக்குதிபண்ணி நடப்பிக்கச்சொல்லி நாசறுசங்கு உத்தாரம் குடுத்தானும் அந்தப் படிக்கு சக்குத்தியாய் அந்த மொகுலன் நடத்துகிறானென்றும் பேரளூர் மமுதல்லிகான் சந்தாசாயபுக்கு காகித மெழுதி அனுப்ப அந்தக் காகிதச் சேதி யெனக்குச் சொல்லி துரைக்குச் சொல்லச்சொல்லி துரையவர்களுக்கு நான் கபுறு சொன்னேன். அதுக்கு துரையவர்கள் சொன்னது என்ன கஸ்தி பண்ணினாலும் ஒரு காசளவிலே குடுக்கவாண்டாமென்றும் பத்து நாள் பதினஞ்சு நாளிருக்கிறான் அப்பாலே போய்விடுகிறான் ஆனபடியினாலே பயப்படத் தேவையில்லை யென்று யெழுதியனுப்பச் சொல்லியும் இந்தப் பேச்சு சந்தாசாயபைப் பரிச்சேதமாயிந்தப் பேச்சை ஆருடனேயும் எடுத்துப் பேச வாண்டாமென்றும் சொல்லச்சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பால் முசபர்சங்கு வீட்டுக்கு கோசா ஒருத்தன் குதிரைமேலே வந்தானே அவனென்ன சொன்னானென்று கேட்டார். அவன் சொன்னது நாசறுசங்கு வந்தவாசி விட்டப்பாலே போனான் என்றும் ஆற்காடு நாலாம் நாள் சேருகிறதாய் திட்டம்பண்ணி அப்பால் முசபர்சங்குவைப் பிடிச்ச சந்தோஷப் பண்டிகை ஒன்பது நாள் பண்டிகைபண்ணி அப்பால் அயிதராபாத்து போய் யிம்மேவறானிடுகிறானென்றும் (Dress of Honour) ஒரு வேளை நதி வெள்ளம் விஸ்தாரமாய் வந்து போகக்கூடாமல்போனால் மைசூர் சீமையிலே யிம்மேவறானிடுகிறானென்றும் போகச்சே முசபர்சங்குக்கு சிறேப்பா குடுத்துப்போட்டுப் போறானென்றும் முசபர்சங்குக்கும் முன்னைப்போலே சக்குத்தி யில்லையென்று மிதுதானவன் சொன்ன சேதியென்று சொன்னதுக்கு நல்லது அவனை அழைப்பியென்று சொன்னார். அந்த கோசாவை அழைத்துவிட்ட விடத்தில் அவனைக் கேழ்க்குமிடத்தில் அவன் சொன்ன பேச்சு நாசறுசங்கு ஆற்காட்டிலே ஒன்பது நாள் பண்டிகைபண்ணி அப்பால் முசபர்சங்குக்குச் சிறேப்பா குடுத்துப்போட்டு அயிதராபாத்துக்குப் போறதாகவும் இதல்லாமல் நதி வெள்ளம் வந்துபோகக் கூடாமல்ப்போனால் சிற்பி (Sirpi) அந்த வட்டத்தில் நாசறுசங்கு சாவணிபண்ணுகிறான் யென்கிற

கபுறு அல்லாமல் பின்னை பொரு கபுறுமில்லை யென்று சொல்ல மறுதலிகானுக்கு சுபா குடுத்த சேதி யென்னவென்று துரை கேட்டதுக்கு யின்னேரத்துக்கு குடுத்தது மெய்தான் கைப்பணம் சாடாவாய் வாங்கி ஆனவுடனே முசபர்சங்குக்கு கொடுக்கப் போறுனென்று சொல்லுகிறுர்கள். மீர்சத்துப் பேச்சு சத்துப் பிறபலமாயிருக்கிற தென்னவென்றால் கில்லேதார்கள் பேரிலே கோள் சொல்லி பணம் வாங்கிக்கொடுக்கிறதினுலே அவன் பேரிலே கில்லேதார்கள் சம்மதி தீந்தால் அப்பாலிவன் பிறு ணை வாங்கிப் போடுவான். பணம் வாங்கிற நிமித்தியமாயி வித்தையும் பண்ணுறது பணம் வந்தால் அப்பால் பிணஞ் சுட்டதடியைக்கூட சுட்டுப்போடுகிறதேயல்லாமல் விடத்தக்கதில்லை யென்று சொன்னதுக்கு முசபர்சங்கைக் கண்டியா—பேசினயா வென்னமாயிருக்கிறுனென்று துரையவர்கள் கேட்டார். அதுக்கு முசபர்சங்குக்கு அக்குளிலே ஓருக்கண்டு ரொம்ப வருத்தப்பட்டான் அப்போ நாசறுசங்கு வந்து பாத்து என்னை எங்கள் தகப்பனர் காவல் வைத்தபோது ஒரு வருஷம் பெகு சக்குத்தியை வைத்து நடப்பிச்சார். அப்படி யேதாகிலும் செய்யவில்லை யிருபது நாளைக்குள்ளே எனித்தனை வருத்தப்படுகிறுய் நல்லது உன் மனதின்படிக்கி கொஞ்ச நாளையிலேதானே நடப்பிக்குறேன் கயிரியமாயிரு ஆனலுன் மனதுக்கு யிச்சையான வஸ்துவுகளெல்லாம் அனுப்புகிறுப்போலே ஆச்சுது—சுகமாய் சாப்பிட்டுக்கொண்டிருக்கிறதுதானல்லோ வுள்ளது யென்று சொல்லிப்போன பிற்பாடு சவுக்கு சக்குத்தியில்லை. நாலு கிசுமத்துக்காரர்களும் ஆறு புராஷுகளையும் வைத்து மத்தப் பொடலாயித்தர் அறுக்காறுகள் சவுக்கியிருந்தவர்களை வாங்கிப் போட்டதுமல்லாமல் முன் கனுத்துக்கள் கட்டியிருக்குமே அதுகளெல்லாம் அறிந்துவிட மனுஷர்களங்கே யிருக்கிறவர்கள் பேசிக்கொண்டிருக்க பின்னை ஆராகிலும் பெரிய மனுஷர் பேசவேணுமானுலும் போய் பேசியிருக்க அத்தமட்டுக்கும் லகுவாயிருக்குமென்று சொன்னதுக்கு நீ போய் பாத்தியாவென்று கேட்டதுக்கு கிட்டப் போய் ரூபு ரூபாய்ப் பாத்தேனென்று சொன்னுன். சயிது லசுக்கர்கான் சமீல்பேக்குகான் முதல் பேர் போனுர்களே அவர்களை அப்பிறம் மிஞ்சிப்போக வாண்டாமென்று நாசறுசங்கு காகிதம் எழுதி அனுப்பிவிச்சான் சிறிது பேர்கள் ஆற்காடு

லாலாப்பேட்டை பேன்னை யிந்தப் பிருந்தியங்களிலே போன
வர்கள் அங்கங்கே நிற்குறார்களென்று சொன்னதுக்கு மாபூசு
கான் யென்ன செய்யுறானென்று கேட்டதுக்கு மக்காத்துக்குப்
போறேனென்றும் பக்கிர் வேஷம் போட்டான். அதின்பேரிலே
உனக்கு சுபா குடுக்கிறேம் மமுதல்லிகான் கையிலிருக்கிற
பணம் வாங்கிப் பிறகு ஆகட்டும் என்று அவனுக்கு நம்பிக்கை
தோணும்படியாய் நாசறுசங்கு சொன்னதின்பேரிலே அவன்
நம்பியிருக்கிறான் யென்று சொன்னான். மீர்சத்து ஓடிப்போய்
விட்டானென்று கேட்டார். மூந்நாம் நாள் பார்த்தேன் யிருந்
தான் அவன் ஓடிப்போகக் காரியமென்னவென்று சொன்னான்.
எட்டரை மணி ஆயி சாப்பாட்டுக்கு அழைக்கத் தண்ணீர் கைக்கு
கொண்டுவந்தார்கள். அதின்பேரிலே போகச்சொல்லி உத்தாரம்
குடுத்தார். கோசா பிறப்பட்டு மூசபாச்சுக்கு பெண்டுகள் அண்
டைக்குப் போனான். நாங்கள் பாக்கு கிடங்கியை வந்தோம்.

இத்தனாள் பங்களாத்துக்கு மூன் சுத்தாவுக்கு (Jeddah) ப்
போகக்கூடாமல் புதுச்சேரி துரை பிடிக்க பங்காளத்து அறம்
சாம் கப்பல் கப்பித்தான் மூசியே பெக்காசு (M. Bocage)
அந்தக் கப்பலிலே துரையவர்களுட உடப்பிறந்தான் பிள்ளை
மூசியே கெலமவில் (M. Glainville) சொப்பிறகாக்காக
(Super cargo) வந்தான். அந்தக் கப்பல் சுத்தாவுக்கு யேத்தனே
பிடவை கட்டு அறுநூறும் பெறக்கி சர்க்கரை நூத்தன்பது பார
மும் இறக்கிப்போட்டு உப்பு எத்திக்கொண்டு யித்தனாள் பங்கா
ளத்துக்கு பாயபடுத்து ஓடினான். இந்தக் கப்பல் கோவளத்
திலும் உப்பு ஏத்திக்கொண்டு அங்கே யிருந்து பங்காளத்துக்
குப் போய் மறுபடி செப்தேம்பர் மீ யிவட்டத்துக்கு வந்து
இங்கே இறக்கிவைத்த கட்டை யேத்திக்கொண்டு சுத்தாவுக்குப்
போகத்தக்கதாகப் பயணமாய்ப் போனான். இந்தக் கப்பலில்
சம்பாவுனு கோயில் சுப்பீரியோறாக யிருந்த பாதிரி குருடுது
(Cœurdoux) என்கிறவர் பங்காளத்துக்கு யேறிப் போனார்.
முன்னிருந்த ருசேந்திரசாமி யென்கிறவர் யிப்போ சுப்பீரியோ
ராக யிருக்கிறார். இவர் மெத்த நல்லவர். வெகு சன உபகாரி
யென்று சமஸ்தமான பேர்களும் சொல்லுகிறார்கள். இத்தனாள்
காலத்தாலே பிறப்பு கோட்டைக்குப் போய் பூசை கேட்டு வந்த
விட்டே நான் பேசய் கண்டு பேசினவுடனே நாசறுசங்கு

யெங்கே யென்று கேட்டார். இன்றையதினம் கலியன்டையிலே பெரிய பெரியத்தோப்பும் மோதிக்குச் சமீபத்தில் பங்களாவுகளாக விருக்கிறதாம் அங்கே பிராங்கி கல்லிக்கோட்டைக்காறன் சப்துருசென்கான் (Safdar Hussaine Khan) என்கிறவன் விருந்துபண்ணுகிறானும் அது சாப்பிட்டு நாளையதினம் ஆற்காடு போய் சேருகிறானென்கிற கபுறு ஒரு கபுறு ஆற்காடு சாவணி பண்ணுகிறானென்கிற கபுறு சொல்லிக்கொள்ளுகிறார்கள் ஆற்காடு தானாது அப்பால் சிற்பி (Sirpi) அந்த வட்டங்களிலே போய் சாவணி பண்ணுகிறானென்றுஞ் சொல்லுகிறார்கள் எந்த விசேஷமும் நிலத்தடையாய் எண்ணப்படக்கூடவில்லை யென்று சொன்னதுக்கு மெய்தானென்று சொல்லி அப்பால் லோகாபிறமாய் பேசிக்கொண்டிருந்து யினிமேல் திருவிதி, பண்ணுருட்டி (Panruti, Tiruvidi) விழுப்புரம் சீமை வகையறா தோறணம் கட்டவேணும் சிதம்பரம் தணக்கா வகையரா புவனகிரி சம்மதிகட் மருதுகான் கையிலே வாங்கிப் போடவேணுமென்று பேசிக்கொண்டிருந்தார். அதுதான் றொக்கப் பணம் மத்த திருவிதி விழுப்புரம் திண்டிவனம் வகையறா பிதிரிலே சுவாரஸ்யமில்லை. மருதுகான் பணமுண்டானவன் றொக்கமாய் வருமென்று சொல்லி சத்து சொல்தாது வகையறா ஒரு மொடுத்தியே (Mortar) உள்பட போனால் பணம் தடையில்லாமல் வந்துவிடும் யென்று சொன்னதுக்கு அப்படிதான் செய்யவேணும் நாளைக்கி யெச்சரி—மறந்துபோகாமல் அந்தப்பணம் வரப் பாரென்று சொன்னார். அதுக்கு சாதகமெல்லாம் நான் வைத்திருக்கிறேன் யென்று சொல்லிப்போட்டு அப்பாலே பாக்குக் கிடங்கியே வந்தோம்.

இத்தனாள் சாயங்காலம் ஆறு மணிக்கு சந்தாசாயபு பிறுமன் றுகவபண்டிதன் இரண்டு விரக்கடை துணுக்கிலே மகாராஷ்ட்த்திலே நாலஞ்சு வரி யெழுதியிருக்கது அந்த துணுக்கையைக் கொண்டுவந்து மதனாந்தபண்டிதனையுங் கூட்டிவந்து படிச்சக் காண்பிச்சுச் சொன்ன வயணம் தக்கா சாயபு யெங்களைப் பண்ணுகிற கஸ்திதி எழுதி முடியாது. இந்த க்ஷணம் கோட்டையைவிட்டு வெளியே போகச்சொல்லுகிறான். இதுக்கு என்ன வயணம் சொல்லியனுப்புகிறீர்களோ அந்தப்படிக்கு நடந்து கொள்ளுகிறோமென்று சந்தாசாயபு பெண்சாதி சந்தாசாயபுக்கு யெழுதின துணுக்கையை வாசித்துக் காண்பிச்ச தக்கா சாயபு

வலங்கையருக்களை கோட்டையை விட்டு பிறப்படச் சொல்லி பண்ணுகிற அரிக்கத்து காகிதத்திலே யெழுதி முடியாது எழுதவுங், கூடாது சந்தாசாயபு பென்சாதி யிருக்கிற விடத்துக்குப் பின்னை யொருத்தரும் போக்கூடாது மகலிலேயிருந்து வெளியே ஒருத்தரும் போகப் போகாது கோட்டையை விட்டு வெளியே போங்களென்று சொல்லுகிற உதாசீனமும் வார்த்தையும் கஸ்தியும் சொல்லிமுடியாது. இந்தச் சேதி துரையவர்களுக்குச் சொல்லச் சொல்லி சந்தாசாயபு உங்களுடனே சொல்லச்சொன்னாரென்று சொன்னவுடனே ராகவபண்டிதனையும் மதனாந்தபண்டிதனையும் கூடக் கூட்டிப்போய் துரையவர்களும் கப்பூசக்கோயிலுக்குப் போய்விட்டு வந்து சேர்ந்து ஆறு மணி அடிக்க துரையவர்களுடனே பேச்சரிச்சதுக்கு தக்காசாயபு என்ன சக்குத்திபண்ணினாலும் கோட்டையைவிட்டுப் பிறப்படவாண்டாமென்று எழுதியனுப்பச்சொன்னார். அந்தப்படிக்கி ராகவபண்டிதருக்குச் சொன்னோம். அப்பால் தக்காசாயபு சந்தாசாயபு யிடத்தில் நடப்பிக்கிறதுக்கு ஆச்சரியப்பட்டு தக்காசாயபுவை வைத்து அப்பால் ராகவபண்டிதரைப் போகச்சொன்னார். நாங்களும் அனுப்பிவிச்சுக்கொண்டு பாக்கு கிடங்கிலே வந்தோம். இந்த மூணு நாளும் இடங்கை தேவடியாக்களை காவல் வைத்திதன்ன வலங்கையார் எழுந்திருக்கவில்லை யென்று பிராது பண்ணுகிறது யென்னவென்று துரை யென்னைக் கேட்டதுமில்லை. அப்பவே தேவடியாக்களை வைத்தவுடனே யிடங்கையார் பணத்துக்கு ஒப்பிப் பேசுவார்களென்று சொன்னியே ஏன் வரவில்லை யென்று கேட்டாராம். அதுக்கு கொண்டி கவிஞரைக்கொண்டு போய்விட்டு அருணாசலசெட்டி கூத்தியார் முதலான பேர்கள் வந்து நாலு ரெண்டு பேர்களிருக்கிறார்கள் அவர்களைக்கொண்டுபோய் வைத்தால் நெருக்கம் வந்துப் பேசுவார்கள் யென்று சொன்னப்போலேயும் அதின்பேரிலே இன்று மத்தியானம் அருணாசலசெட்டி வகையிரு கூத்திமார்களைக் கொண்டுபோய் வைத்தார்கள். அதினாலே அருணாசலசெட்டிக்குத் தலைவெட்டிப்போட்டத் தனைத் துக்கம் உண்டு. முன்னில்லையென்று சொன்னால் முன்னில்லை. அதேகமென்றால் முத்து அழகப்பசெட்டி வீட்டுக் கல்யாணத்தில் பாதோரு பங்கம் வருவிச்சு அவர்களை தனக்கு வணங்கப்பண்ணுகிற புத்தியினாலே இந்தக் கலாபத்துக்கு துவக்கம் ஆதி அருணாசலசெட்டிதான் அப்போ அவர்கள் வீட்டில் பங்கம்தான்

துவக்கினபடிக்கி நடக்குமென்று வெகு மகிழ்ச்சியடைந்திருந்தவ னுக்கு இவன் சூத்திய மேவியைக்கொண்டுபோய்க் காவல் வைத் தது பெண்சாதியை வைத்தாலும் அத்தனை துக்கம் வராது. அத் தனை அவமானம் தோத்தாது. அத்தனை அவமானமவனுக்குச் சம்ப விச்சது இப்போ தன் கலியிலே கலியில் தன் தாரித்திரம் லோகத் தாரித்திரம் யென்று பிரபஞ்சமதிலே சொல்லுவார்கள். அது அரு ணாசலசெட்டியினிடத்தில் கண்டோம். அதெப்படியென்றால் இவன் க்ஷத்தியாரைக் கொண்டுபோய்க் காவல் வைக்காததுக்கு முன்னே இவன் மகிழ்ச்சியைப் பார்க்கமுடியாது. இப்போகாவல் வைத்த பிற்பாடுயிருக்கிற விசாரமும் பார்க்க முடியாது. ரெண்டுக்கும் அத்தாட்சி முகமல்லோ திர்ஷ்டாந்திரஞ்சொல்லு கிறது. ஆனபடியினாலே யிப்போ அருணாசலசெட்டிக்கு சீக்கிற மத்திலே துரையவர்களைக் கண்டு பேசுவோமென்றும் தீத்துப் போட்டு காவலிலிருக்கிறவர்களை விடுதலைப் பண்ணிக்கொள்ள வேணுமென்றும் பெருக்குருக்கிலேயிருக்கிறான் ஆனபடியினாலே ஒருத்தருக்கு கேடு நினைக்கலாகாது என்று பெரியவர்களேன். சொல்லுகிறார்கள் என்றால் அனுபவமாய் அனுபவிச்சபடி யினாலே அனுபவத்தைப் பாட்டாய்ச் சொல்லிவைத்தார்கள் லோகமிப்படி யிருக்கிறதுதானிதிலே விசனப்படாமல் யெந் தெந்த வேளைக்கு யெது நடக்கவேணுமோ அது நடக்குமென்று விசனப்படாமலிருக்கிறவன் விவேகி யென்றெண்ணவேண்டியது.

1750 ௵ சூன் ௴ 1 ௳ பிரமோதூத ௵ வைகாசி ௴ 22 ௳ சோமவாரம்.

இத்தனாள் காலத்தாலே பிறபு பத்து மணிக்கு உடுத்திக் கொண்டு வந்தபடியினாலே கண்டு சமாச்சாரம் கேட்டு யித்த னுள் ஆற்காடு போய்ச் சேரவேணுமென்று சொன்னேன். தக்காசாயபு யென்ன யிப்படி நடத்தினது தன் பெண்சாதிக்கு கூடப் பிறந்தவள் வந்து சந்தாசாயபு பெண்சாதி மாமனார் வீட்டைத்தொட்டு சகல தவுல்த்துப்படி யிருக்க தன் மான மென்கிறதுகூட யில்லாமல் சந்தாசாயபு பெண்சாதியைக் கில்லா வைவிட்டுப் போகச்சொல்லிச் சொன்னதும் தன் மச்சான் மமு தலிகானை ஒப்புக்கொடுத்ததும் இது பெரிய வாச்சரியமென்றும் பேசியிருந்து அப்பால் முசபர்சங்கு வாரூமென்று இரண் டாயிரம் ரூபா அனுப்பினது அவ்விடத்து சிலவுக்கு வைத்துக்

கொள்ளுகிறது நம்முட மனதுக்கு அட்டியில்லாமல் அநுபவம்
வேணுமே அதுக்குத்தான் பிறப்பட்டு வந்துவிடுகிற சாஷ்டாங்க
பெழுதினான் என்று சொன்னாரப்படிதான் தோத்துதென்று
சொன்னேன். அப்பால் சயராமபண்டிதனும் முன்னூறு ரூபாய்
வாங்கிறதுக்கு அந்தக் காரியங்களும் புஷ்டி சொல்லிப்போட்டுப்
போனாப்போலே காணுதென்று மின்னமொருதரம் வந்து பின்
னம் புஷ்ட்டி காண்பிச்சு பின்னஞ் சிலவுக்கு மில்லை யென்று
முன்னூறு ரூடாவை வாங்கிக்கொண்டு விட்டடிப்பானென்று
சொன்னார். இனிமேல் நீங்கள் குடுக்கிறீர்களாவென்று சொன்
னேன் அதுக்கு சும்மாயிருந்தார். அப்பால் நான் பாக்கு கிடங்
கியே வந்தேன்.

இத்தனாள் ரூத்திரி மச்சிலிபந்தரிலே நம்முட பிறான்சுக்கும்
பினியார் பெத்திரி தலைவன் முசியே கொக்கேத்து முதலான
பேர்களைக் காவல் வைத்திருக்குதே அதைப் பரிகாரம் யேதா
வது பண்ணும்பொருட்டு ரூபுதேகால் போட்டுயிருந்த பேர்
விளங்கன் சுலுப்பில் நாலு பீரங்கியும் ஆயிரத்தருனூறு குண்டும்
அதுக்குத்தந்த மருந்து முதலான சாமான்களும் முப்பது வெள்
ளைக்கார சொல்தாதுகளையும் இருபது சட்டைக்காரர்களையும்
ஒப்பிசியால்மார்களையும் யேத்தி முன் முசியே புரி சுலுப்புடனே
போய் மச்சிலிபந்தர் பிடிச்சு நம்முட பிறான்சுக்காறர்கள் காவலி
லிருக்கிற கபுறுகள் அறியாதபடியினாலே யேத்திப்போன சரக்
கும் ஒப்பிச்சுப்போட்டு அவனும் காவலிலே அகப்பட்டுக்
கொண்ட சேதி யிவர்களுக்குச் சொல்லி மோசம்போகாமல்
கரையிலிருக்கிறவர்களை நம்பாமல் காரியம் சாகிருதையாய்ப்
பார்த்து நடப்பிக்கச்சொல்லியும் பின்னையும் என்னென்ன ஒடுதி
கொடுக்கவேணுமோ அந்த ஒடுதிகளை யெல்லாம் குடுத்து
சுலுப்பை மச்கிலிபந்தருக்குப் பயணம் பண்ணி யித்தனாள் ராத்
திரி பயணம் அனுப்பினார்கள் சுலுப்பும் பாயெடுத்து பொழுது
விடியகாலத்தாலே ஓடிப்போச்சுது.

இத்தனாள் சாயங்காலம் மச்சிலிபந்தரிலே யிருந்து ரெண்டு
பேர் சேவுகர்கள் வந்தார்கள். அவர்கள் துரைக்கு முசியே
கோக்கேத்து கடுதாசி கொண்டுவந்து கொடுத்தார்கள். அவர்கள்
வந்து சேதி யேனத்திலிருந்த முசியே லெனுவார் பெத்திரியின்
பேரிலே யெப்போ கோசா கேமத்துல்லாகான் பவுன்ச் வந்துதே

தன் காசா சலுப்பின்பேரிலே யிருந்த சரக்குகளெல்லாம் யேத்திக் கொண்டு முப்பது சொலுதாதுகள் வகைபரு யிருந்தவர்களையும் யேத்திக்கொண்டு பங்காளத்துக்குப் பிறப்பட்டுப் போய்விட்டான் யென்றும் அந்தப் பெத்திரியிலே அன்பது பீரங்கியிட்டு யிருந்ததாகவும் பின்னையும் இருபத்தஞ்சு கட்டுப் பிடவை சரக்காம் பின்னையும் அனேக நற்காலி வகையரு பெகு சாமான்களைப் போட்டு ஆரு சேவுகர்களை அதிலே வைத்துப் போட்டு போனதாகவும் அதின்பேரிலே கோசா நேமத்துல்லாகான் மனுஷர் வந்து ஆக்கிரமிச்சுக்கொண்டு அவர்கள் பாளையம் போட்டுக் கொண்டு யிருக்கிறதாய் பந்தருக்கு அங்கே யிருக்கிற சேவுகர் வந்து முசியே கொக்கேத்துக்கு சொன்னதின்பேரிலே முசியே கொக்கேத்து துரைக்கு காகிதமெழுதி அனுப்பினான் அதுக்கு முன்னேதானே முசியே லெறுவா (M Le Roi) யென்கிறவனைப் பிடிச்சுப் போய் வேலூர் ராசமகேந்திரத்தில் காவல் வைத்திருக்கிறபடிக்கு அவன் காவலிலேதானே யிருக்கிறான் சுவாமியினுடைய சித்தமெப்படியோ யப்படி யிருக்கது

1750 ஹூ ஜூன் மீ 2 உ பிறமோதூத ஹூ வைகாசி மீ 23 உ செவ்வாய்க்கிழமை.

இத்தனாள் காலத்தாலே பிறபு தெரிசனத்துக்குப் போன விடத்திலே பிறபு சொன்னது காசறுசங்கு ஆற்காடு சேர்ந்தானென்று கேட்டார் சேர்ந்தானென்று சொன்னேன். கும்பினீர் ஆனையிலே பெரிய ஆனை நேத்து செத்தது. இன்றைக்கு ரெண்டாவதொரு ஆனை செத்துதாம். பின்னை ஒரு ஆனைக்கு திரும்பியும் நோவு பிடிச்சதாம் என்னவென்று கேட்டார். சேக்குயிபுறும் அண்டையிலே முசபர்சங்குது ஒரு ஆனை பெரிய ஆனை யிருந்தது அது நேத்து செத்தது. இன்று முசபர்கான் அண்டையிலே முசப்பர்சங்குது ஆனை ஒன்று யிருக்குது அதுக்கும் வியாதி பிடிச்சது சாவுக்கு சமீபமாயிருக்குது முசபர்சங்கு ஆனைகள் கானுவிச்சாரிக்குறேனே அதிலே ஆறு ஆனைகள் சாவுக்கு வழி பாத்துக்கொண்டிருக்குது. ஆனபடியினாலே பட்டணத்திலே யித்தனை நாளும் மாடுகள் விஸ்தாரமாய் செத்தது இப்போ ஆனையைப் பிடிச்சுதென்று சொன்னேன். இதிலே முசபர்கான் வந்தா அவ்வினென்னவென்று கேட்டதுக்கு இந்தக் காத்து ஆகாதென்று சொல்லுகிறார்களென்று சொன்னான். இந்த காத்து எப்போதும்

வரவில்லையாவென்றார். அதுக்கு நான் இது ஒரு காச்சல் இது நாளைக்கு நிற்கும் அப்பால் வாங்கிப்போம் என்று சொன்னேன். அதுக்கு துரையவர்கள் பில்லில் பேதாகிலும் வந்ததோவென்றார். அந்தவிடத்திலே பாம்பு யேதாகிலும் யிருந்து கடிச்சுதோவென்று கேட்டார். அப்படியல்ல இது மூறாகங்களுக்கு ஒவ்வொரு வேளையிலே வருமென்று சொன்னேன். மெய்தான் யிப்படி பேசியிருக்கச்சே முசபர்கான் பதினாயிரம் ரூபாய்க்கு வர்த்தகருடனே சொல்லி பிடவை வாங்கி கொடுக்கிறோமென்று சொன்னீர்களே யென்று சொன்னதுக்கு நம்பப்புள்ளே வர்த்தகரைக் கண்டு பேசிப்பாரென்று துரையவர்கள் சொன்னார். சொன்ன சாடை பார்த்தால் போக்கு விசேஷமாய்க் கண்டுது. அந்த சாடை பார்த்துக்கொண்டு அப்பாலே வர்த்தகருடனே பேசிச் சொல்லுகிறேன் என்று உத்தாரஞ் சொல்லிப்போட்டு பின்னையுஞ் சேதி நாசறுசங்கு லசுக்கர் சமாச்சாரம் லேவாவிரமமாய்ப் பேசியிருந்து அப்பால் முசபர்கானும் நானும் வரச்சே முசபர்கான் சொன்னது யிந்த பதினாயிரம் ரூபாய்க்குப் பிடவை வந்தால் ஆயிரம் ரூபாய்க்கு சிலம்புரியும் கெடு முழமும் சிப்பாயிகள் அங்கிக்கு ஆகிறப்போலே கிண்டன் முதலானது இரண்டாயிரம் ரூபாயிக்கு இந்தப்படிக்கி பதினாயிரம் ரூபாயிக்கு வேணுமென்று ஒரு புடுதிக்கிசு (Portuguese) யெழுத்திலே ஒரு லீஸ்து யெழுதிக்கொடுத்து வயணமுஞ் சொன்னானதுக்கு நான் நல்லது வர்த்தகர்களைக் கண்டு பேசி சொல்லுகிறேன் என்று சொல்லி அனுப்பிவிச்சுக்கொண்டு நானிருக்கிற பூமேறுவை-வந்தேன்.

இத்தனுள் சாயங்காலம் ஆறு மணிக்கு துரையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு ஆற்காடு சேதி யேதாகிலும் வந்ததாவென்று கேட்டார். கூச்சுத்தற் கூச்சாய்ப் போறப்டியினாலே யெந்த சேதியும் விசிதப்படாது. நேத்தயதினம் ஆற்காடு சேர்ந்திருந்தால் நாளனண்டைக்குச் சேதி வருமென்று சொன்னேன். இடங்கை தேவடியாக்கள் வலங்கையாருக்கு யெழுந்திருக்கவில்லையென்று கொண்டுபோய் தேவடியாக்களைக் காவல் வைத்து யின்று ஆறு நாளாகுது. அவர்களேன் யிருது பண்ணவில்லையென்று கேட்டார். அப்படி யேதாகிலும் வலங்கையார் வந்து சொன்னால் எங்களையும் அழைத்து ஞாயம் கேட்டு நேரம் சமத்தி

யல்லோ காவல் வைக்கவேணும் இந்த வூரைத் தோணின நான் முதலாய் அவரவர் மரபுப்படிக்கி நடந்து வந்ததுக்கு மரியாதை பண்ணவில்லை யென்று காவல் வைக்கலாமாவென்றும் நாங்களும் மரியாதைபண்ணாமலிருக்கிறதல்லோ நியாயம் அதைத்தொட்டு இப்படி நடப்பிச்சார்கள் யிதிலே மெத்த அபகீர்த்தி யெங்களுக்கு என்று பெகு தாபந்தியமாய் உங்களுடனே சொல்லிக் கொள்ளவேணுமென்று சொல்ல வந்திருக்கிறார்கள் என்று சொன்னேன். எங்கே வந்திருக்கிறார்களென்று கேட்டார். அதுக்கு நானிருக்கிற பூறேவண்டையிலே வந்திருக்கிறார்களென்று சொன்னேன். அதுக்கு அவர்கள் மனதுக்கெப்படியோ அப்படி நடப்பிச்சுக்கொடுக்கிறேன் யிப்போ சிப்பாயிகள் முதலான பேர்களுக்கு குடுக்கிறதுக்குப் பணமில்லாமல் சங்கடப்படுகிறது நீ யறிவாயே அதுக்குச் சீட்டெழுதி தாரேன் இருபதினாயிரம் ரூபா மாத்திரம் கடன் குடுப்பாரா மத்தப்படிக்கு யெனக்கு சருவாத்தி யென்று ஒரு காசு சருவாத்துமனும் வாங்குகிறதில்லை. அதை உன் மனதிலே யிருந்தாலும் மறந்துவிடென்று சொல்லி கடன் குடுக்கிறதுக்கு இடங்கையரெல்லாம் மகருசர் அயிசுவரியந்தானபடியினாலே சீமை கப்பல் வந்தவுடனே வட்டியும் முதலும் குடுத்துவிடுகிறேன் அந்தப்படி பேசிப் பார் வலங்கையான் அரும்பாத்தை கும்பினீர் பணத்தை திருடி பத்துப் பணம் வைத்திருக்கிறான் அவன் தவிர பணமுள்ளவர்கள் ஆருமில்லையே யென்று சொன்னார். பின்னையும் நாலத்து ரெண்டு பேர்கள் உண்டு அவர்கள் காசு குடுக்கமாட்டார்கள் இப்படியின் சேவிக்குமவர்கள் வாறார்கள் என்று சொன்னேன் மெய்தான் அந்தப்படிக்கி யிடங்கையாரைக் கண்டு பேசி வாவென்று சொன்னார். நல்லதென்று அனுப்பிவிச்சுக்கொண்டு இடங்கையாரையும் உபத்திரவர்களையும் நாளை உங்களண்டைக்கு வரச் சொல்லி சொல்லி அனுப்பிக்குறேன் என்று சொல்லிப்போட்டு நானிருக்கிற பூறேவை வந்து இடங்கையாரிருந்தவர்களை நாளைக்கு வரச்சொன்னார். துரையவர்களென்று சொல்லிப் போகச்சொல்லி அதிலே நாலத்து ரெண்டு பேர்களை மாத்திரம் அழைப்பித்து துரையவர்கள் சொன்ன சாடையை அவர்களுக்குச் சொன்னவிடத்திலே அவர்கள் பெதறியே யெங்களுக்குப் பணத்துக்கு அவகாசமிருக்குதா ஞாயமாப்படியே விசாரித்து குடுக்கான் இந்தப் பட்டணத்திலே யிருக்கிறோமில்லாவிட்டால்

இந்த வூர் அன்னந்தண்ணீர் பிடிச்சுதென்று பார்த்துக்கொள்ளு றுமென்று கண்டிப்பிலே உத்தாரஞ் சொன்னார்கள் அதுக்கு நான் விவகாரத்தை உளப்போரை யெடுத்து அம்மடங்கச் சொன்னேன். அப்பால் சவுக்கி யெங்களுக்கு ஆஸ்தி யிருக்குதா வென்று யெவ்வளவாகிலும் நன்குடையாகக் குடுக்கச் சொன்னால் கொடுக்கிறோம் என்றும் சொல்ல, ஆலோசனைபண்ணிக்கொண்டு வாறோமென்று போனார்கள் அப்பால் பாளையக்காறனை அழைத்த வலங்கையாரை நாளைக்காலத்தாலே வரச்சொல்லியென்று சொல்லி அனுப்பிப்போட்டு நானும் ஒன்பது மணி வேளைக்கு வீட்டுக்குப் போனேன்.

இத்தனை திரையூர் பெரிய தளவாய்க்கும் ஷை தம்பி குமாரன் குமர தளவாய்க்கும் ஆகாமலிருந்து வெளியே போயி ருந்த பெரிய தளவாய் பாப்புரெட்டி யென்கிறவன் ரூணுவு கூட்டிக்கொண்டு வந்து திரையூரிலே உள் புகுந்து கோட்டையை வாங்கிக்கொண்டு குமர தளவாய் தம்பியாய் பட்டத்திலிருந்த வனைப் பிடிச்சுக் காவல்பண்ணி தன் மகனைப் பட்டத்துக்கு வைத்து குருவிந்தமாச்சிரெட்டி பிள்ளைகள் வரதராசரெட்டி சகாயமாயிருந்தபடியினாலே அவனுக்குத் தளவாய்ப் பட்டம் குடுத்து கோட்டையும் சீமையும் கைவசமாக்கிக்கொண்டோம் குமார தளவாய் ஓடிப்போய் உடையார்பாளையத்தே சேர்ந்தான். அவனுக்கு நீங்களா சறு குடுக்கவேண்டாமென்றும் நூறு கல் துப்பாக்கி விலைக்கு வாங்கி அனுப்பிக்கவேணுமென்றும் பெகு உபசாரமாய் புதுசாய் திரையூர் கட்டிக்கொண்ட பெரிய தளவாய் பாப்புரெட்டியும் தளவாயாய் யேற்பட்ட வரதராசரெட்டியும் காகிதமெழுதி அனுப்பினார்கள் நானும் பதில் காகிதமும் உபசார மாய் எழுதினேன்.

1750 ௵ ஜுன் ௴ 3 ௳ பிறமோதூத ௵ வைகாசி ௴ 24 ௳ சவுமியவாரம்.

இத்தனை காலத்தாலே கோன்சேல் கூடி கோன்சேலிப்ரே சியோமிலே காரைக்காலிலே நம்மைச் சேர்ந்த பத்து கிராம மும் நமக்குக் கானே மூன் றுவாயிரத்தன்னூறு யிருந்ததை நாலாயிரம் வராகனாக அந்த வருஷத்துக்கு நமக்குக் கானே தீத்து எழுதினார்கள் கனகராய முதலியார் குத்தகை கிராமங்கள் அவருக்குக் கானே ஏழாயிரத்தன்னூறாயிருந்ததை மூவாயிரத்

தெழுதுற வருகனுக அஞ்சு வருஷத்துக்கு ஷெடி தம்பிக்குத் தானே குத்தகை தீத்து எழுதிப்போட்டு முசியே திலார்சு கொத்தேறனபடியினாலே அவரழைத்து யெங்களிரெண்டு பேருக்கும் குத்தகை பட்டயம் அஞ்சு வருஷத்தைக்கு மேலே எழுதின துகைப்படிக்கு எழுதச்சொல்லி உத்தாரம் குடுத்தார். அப்போ நானும் தானியப்பமுதலியும் சொன்னதுக்குப் பணம் சொல்லுகிறது ரெண்டு கெடுவாமே ஒரு கெடுவு கார்த்திகை மீ மும் ஒரு கெடுவு ஆனி மீ மும் முன்னெழுதின கோந்திறுத்திலே எழுதினது யிப்போ ஒரு கெடுவு சனேரி மீ 30 உயுமாக இரண்டாங் கெடுவு ஆனி மீ 31 உயுமாய் யெழுதச்சொல்லி கேட்டதுக்கு தமிழருடைய சுபாவம் அந்தப் பணத்தைக்கொண்டு அந்தக் காரியத்தை நடத்திப்போடுகிறதே தங்கள் பணம் அவன் சாபிடுகிறதேயில்லை சீமையிலே ஒவ்வொரு வறத்தகன் நாலாறு வருஷம் சரக்கு வேணுமென்றாலும் முன்னதாக கூட்டி வைத்தும் வந்தவனுக்கு வேணுமென்ற சரக்கு விக்கிற வாடிக்கையென்று முசியே திலார்சுவைப் பாத்துச் சொல்லி அந்தப்படிக்கி சனேரி மீ தவணையும் ஆனி மீ தவணையும் ஆக யெழுதிப் போடச்சொன்னார். அந்த சந்துக்கட்டிலே தானப்பமுதலி யெட்டு வருஷத்துக்கு சேர்த்து யெழுதிப்போட்டால் தேவலை யென்று. சொன்னார் உங்கள் கையிலேதானிருக்கிறப்போலே ஆச்சுது நீங்கள் தானே கோந்திறுவாரிட்டு வருகிறப்போலே ஆச்சுதே மூணு வருஷமிப்போ யெழுதவேண்டியதென்று சொல்லி அப்பால் பின்னையும் அரை நாழிகை தேச காலம் பேசியிருந்து அவர்களனுப்பிவிச்சுக்கொண்டு போன பிற்பாடு யென்னையும் அழைத்து யிப்போ நூதனமாய் எண்பத்தொரு கிறமம் காரைக்காலுக்கு சேத்தோமே அதையும் துகை பார்த்து வரச்சொல்லு குத்தகை கொடுத்துவிடுகிறேன் என்று சொன்னார். முன்னாலே ஒருதரம் சொன்னீர்களப்போதானே நானெழுதி அனுப்பிவிச்சேன் யிப்போதும் யெழுதியனுப்பிவிக்குறேன். சேதி வந்தவுடனே சொல்லுகிறேன் யென்று சொன்னேன் அப்பால் யின்றையக் கோன்சேல் பின்னையும் வெகு சம்மதிகளெல்லாம் கோன்சேலிலே பேசினதாய்க் காண்கிறதுமல்லாமல் முசியே மேரை கோன்சேலுக்கு அழைக்கவேண்டாமென்— கோன்சேலியோர்களை அழைக்கச்சொல்லி சோபுதாருடனே காலத்தாலே சொல்லச்சேதானே அந்தப்படிக்குச் சொல்லப்.

போட்டதுமல்லாமல் எட்டாம் நாள் ஒன்பதாம் நாள் ஒபிசியால் கொன்சேல் நடக்கச்சே யேதோ சிறிது தகறாறுகள் நடந்த அன்றுதானே மூசே துப்பிளாமுக்கு ரூசா பெற்குறேதோர் உத்தியோகத்தைக் குடுத்தாச்சுது. இனிமேல் கோன்சேல் பேச்சும் முன்னுப்போலே நான்டங்கனசாலே உத்தியோகம் ஆருக்கு குடுப்பார்களோ தெரியாது யென்று சொன்ன கட்டம் சரிப்பட்டு தென்று யோசனைபண்ணிக்கொண்டு யிருந்தேன். அப்பால் நாசறுசங்கு சமாச்சாரம் என்னவென்று பிறபு கேட்டார் வலைப்பேட்டை அப்பிறம் பொன்னே யென்று பாலத்துக்கரையோரமிருக்குது. அங்கே போய் சண்டா விழுந்துதென்றும் யேழெட்டு மொக்காம் ஆற்காட்டிலேயிருந்து அப்பால் போய் இம்மேவறை நடிகிறுமென்றும் சொல்லுகிறார்களென்றும் சொன்னேன் வலங்கையாரென்னும் இருதிறத்தார்களும் வந்தார்களென்று சொன்னேன். நேத்து சொன்ன் பேச்சு என்னவென்று கேட்டார். இன்று ஆலோசனைத் தேறுகடையாமென்று சொன்னேன். ஆனால் அது தேறுகடையான பிற்பாடு ஆகட்டுமென்றும் சொன்னார் அப்பால் பாக்கு கிடக்கியே வந்து பனிரெண்டு மணி வேளைக்கி வலங்கையாரையும் இடங்கையாரையும் யழைப்பிச்சு பின்னையதினம் துரையவர்கள் அறுவலிலே யிருக்கிறார்கள் நாளையதினம் வாருங்கோளென்று உபயத்திறவர்களுக்கும் சொல்லிப்போகச்சொல்லி நானும் வளவுக்கு சாப்பாட்டு வேளைக்கு வந்தேன்.

இத்தனாள் பகலைக்கு மேலாக அஞ்சரை மணிக்கு நான் வண்ணாந்துரைக்குப் போகச்சே மன் மூசியே திலார்ச—லொஷேத்து நாசறுசங்கு வக்காலத்துப் போகச்சே துக்கி ஆசிஅப்துல்லா யென்கிற பத்துப் பனிரெண்டு பாக்ஷக்காரன் நடப் போறானே அவனை மறுகால் சானவாகவான் காவல் வைப்பிச்சு அப்பால் கட்டத்தின்பேரிலே கொண்டுபோய் விட்டு விடச்சொல்லி அனுப்பிவிட அவன் கடப்பையே போய் கடப்பையிலிருந்தாப்போலே நெல்லூரின் பேரிலே பிறப்பட்டு கஞ்சப்பட்டணம்—துகறுசப்பட்டணம்—கரை துரையின் பேரிலே பிறப்பட்டு பழவேற்காடு சென்னப்பட்டணம் சதுரங்கபட்டணம் வந்து யித்தனாள் சாயங்காலம் புதுச்சேரி பிறவேசமாக வண்ணாந்துறை தண்டையிலே வரச்சே நான் வண்ணாந்துறை விசாரிக்கப்போ

கச்சே யெதிருக ஒண்டிபாய் போட்ட பிடவையுடனே வருகிறவன் யென்னைக்கண்டு நான் லசுக்கர் சமாச்சாரம் மர்மங்கள் சொன்னதாகவும் அதின்பேரிலே உங்கள் வக்காலத்துக்கு நான் கூடவந்து அவ்விடத்து மர்மம் அறிஞ்சு சொல்லுகிறதாய் நோக்கி என்னைக் காவல்வைத்து கட்டத்தின்பேரிலே அனுப்பிவிட்டார்கள். நான் கடப்பை முதலான விடங்கள் அங்கே போயிருந்து செல்லூரின் பேரிலே பிறப்பட்டு மேலெழுதினபடிக்கு கரை வழியாய் வந்து சேர்ந்தேன். புரணபுரி நாசறுசங்கு தாமே அதை வசீர்மன் நூர்லிகான் சித்தப்பன் மகன் சீர்சங்கு (Sher jang) யென்கிறவன் லக்ஷம் குதிரையுடனே வந்து புரணா புரிவகையறா சீமைகளெல்லாம் கட்டினான். அபரங்காபாத்து வையாயிருக்கிற கில்லேதார்கள் மன்சுபேதார்கள் சாகிர்தார்கள் வகையறாக்களுக்குப் பாதுஷாவாயிருக்கிற பேர் வரனெழுதி அனுப்பினதென்னவென்றால் சீர்சங்கை (Sher jang) தக்கன் (Deccan) சுபாவுக்கு மொகற்றுபண்ணி யனுப்பினோம் அவருக்கு ஒப்புசேரிட்டு ஆனைக்கு ஆக்கினைக்குள்ளே அவர் சொன்னபடிக்கு நடந்து கொள்ளுகிறவர்களுக்கு அவரவர் சாகிர் கில்லாக்கள் மன்சபாயிதுகள் பகலியாயிருக்கும் அவருத்தாரப்படிக்கு நடவாதவர்களுக்குத் திமிறன்றெழுதின பாமனுக்கள் அவரவர் பாத்தவுடனே பிறதானம்–புரானபுரி (Burhampur) சுபேதாரன் போய் சீர்சங்கை சந்திச்சு சுவறன்ன ஆக்கினைக்குள்ளாக நானவ்விடத்திலிருக்கிற மன்சுபேதாரன் கில்லேதாறர் சாகிர்தாறர் வகையறா சமஸ்தமான பேர்களும் வந்து பேட்டிப் பண்ணிக்கொண்டு அவர் ஆனை ஆக்கினைக்குள்ளே யிருக்கிறார்களென்றும் அபரங்காபத்தும் பித்தனை நாள் வாங்குவாரென்றும் இந்தக் கபுறு நாசறுசங்குக்கு யிதன்பேரிலே ஒன்றுந் தோத்தாமல் பேபர ஒளிக்கொண்டு செய் காரியமறியாமல் சாறுபம் வகையறா புகையிலே போதை மேலேயிருந்து கிடக்கிறான். அவனுக்கு யிந்த அயிசுவரியம் இல்லாதென்று சொல்லி துரையவர்களண்டைக்குப் போறேன். அங்கே நீரும் வருவீரே சாவகாசமாய்ப் பேசிக்கொள்ளுவோமென்று சொல்லி முன் மறுட்டியர் குதிரைகள் கிஷ்ணைக்கப்பிறம் யிருக்கிற ஒருயனாபேட்டை குண்டு மட்டுக்கால் என்கிற பெரிய பெரிய பேட்டைகள் மறுட்டியர்கள் கொள்ளையிட்டதேயல்லாமல் கடப்பைக்கு வந்து கொள்ளையிட்டதுவென்று சொல்லிப்போட்டு அனுப்பிவிச்சுக்கொண்டு துரை

யவர்கள் வீட்டே போனேன். நானும் வண்ணாந்துரைக்குப் போய் நானிருக்கிற பூஞ்சோலைவை போனவுடனே ஆறு மணி வேளைக்கு ரையவர்கள் வீட்டுக்கு வந்தவுடனே பனிரெண்டு பாஷைக் காரன்—துர்க்கியும் போய் சந்திச்சான் யென்னுடனே முன் சொன்ன பேச்சு மேலே எழுதியிருக்குதே அந்தப்படிக்கு துரை யவர்களுடனே சொல்லிக்கொண்டிருக்கச்சே துரையவர்கள் யென்னை அழைச்சார். நானும் போய் கூடப் பேசியிருந்து அப் பால் நானிருக்கிற பூஞ்சோலைவை வந்தேன். அவனுக்கு துரை வீட்டு குசினி அண்டையிலே முன் வியாதி பாத்துக்கொள்ளும்போது விட்ட அறையைத்தானே யிப்போதும் விட்டார்கள். அந்த துற்க்கியும் அதிலே போய் சவதாயிருந்தான்.

1750 ஸு ஜூன் மீ 5 உ பிரமோதூத ஸு வைகாசி மீ 26 உ சுக்கிறவாரம்.

இத்தனுள் காலத்தாலே பிறபு எழுந்திருந்து உடுத்திக் கொள்ளப் பத்து மணி சென்றது. அப்போ போய்க் கண்டு பேசினவுடனே நாசறுசங்கு சேதி யென்னவென்று ஆற்காட் டிலே போயிறங்கினான் கண்டு போனமட்டுக்கும் யிறங்கியிருக் குது இன்றைக்கு அவர்களுக்கு சந்து காணவேணும் யின்றைக்கு முதல் தேதி ஆனபடியினாலே யிந்த மீ பதினோறாந் தேதி நாசறுசங்கு அப்பால் போறானென்கிற கபுறுகள் சானவாசு கானை வைத்துப் போறானென்கிற அவாயிசாயத்தானே யிருக் குது. யிதல்லாமல் மாபூசகானும் சம்பதிறாயனும் ஒருமிச்சு ஆற்காட்டுக் காரியம்தானிருவாகம் பண்ணிக்கொள்ளுகிறோமென் றும் மமுதலிகான் ஆற்காட்டு சுபாதான் வாங்கிக்கொண்டானே பிறுன்சுக்காரர் துவேஷமிருக்கிறமட்டுக்கும் ஒருக்காலும் நிறு வாகமாகாது. உங்களுக்கும் அபகீர்த்திக் கொண்டுவருகிறதே யல்லாமல் மத்தப்படி காரியம் சமுதாயிச்சுக்கொண்டு போவார்க ளென்றெண்ணவேண்டாம் மமுதலிகான் தகப்பனார் அன்வறதி கான் யிருக்கச்சே திருச்சிராப்பள்ளி பத்து லக்ஷம் ரூபாயாயி சாறுவாங்கிக்கொண்டான். இந்த ராச்சியத்திலே பெரு ராச்சியம் அவனாதீனமாயிருந்துது. யிந்த சம்மதி பணமெல்லாம் யிருபத் தஞ்சு லக்ஷம் ரூபாமட்டுக்கும் அவன் கையில் சேர்ந்துயிருக்குது. அந்த ஆங்காரத்தினாலே அவன் பேசுகிறதும் பணம் ஒப்பினானே அல்லாமல் ஆகிறுக்கு சிமைசலாதி யில்லாமலிருக்கத் தக்கதில்லை

யென்று சொல்லி நாசருசங்குவுடனே அது பகல் பண்ணின விடத்திலே ஆற்காட்டு சுபா உனக்குத் தாறேன் பிரான்சுக் காறருக்கு நீர் காவந்தி பண்ணிக்கொள்ளுகிறியா வென்று கேட்டார்ப்போலேயும் அதுக்கு அவர்களுட அபிப்பிறுபம் சந்தா சாயபுக்கு வாங்கிக் குடுக்கவேணுமென்றும் யிருக்கச்சே என் கக்ஷியிலே சம்மதிக்கிறதில்லையென்று சொல்லி நான் மக்கத்துக்கு (Mecca) ப்போறேன் உத்திரவு கொடு யென்று சொல்லி கேட்டதுக்கு நாசருசங்கு யிருந்துகொண்டு மமுதல்லிகான் பணம் வாங்கித் தாட்டும் சுபா உனக்குத்தானே குடுக்கிறேனென்று நிஷ்கருஷையாய்ச் சொன்னதுமல்லாமல் நீ பிறஞ்சுக்காறருக்கு பைகாம் அனுப்பியுங்களுக்கு சந்தாசாயபு யென்ன சாகீர் குடுத்தானே அது சாகீராய்க் கொடுக்கிறதுமல்லாமல் பின்னையும் சத்து சாஸ்தியாய் நாங்களாய் சிறிது கிறமமாய் நாம் கூட குடுக்குறோம் யிதல்லாமல் உங்களுக்கு சந்தாசாயபும் யிதாயத்து மொகதீன்கான் குடுக்கவேண்டிய பணம் யென்னவுண்டோ அது நாங்கள் குடுத்துவிடுகிறோம் உங்களுக்கு சிறிது சீமை குத்தகையாய் குடுத்திருந்துதே அந்த சீமையையும் பின்னையும் சத்து சவுரியம் பண்ணித்தானே உங்களுக்கு குத்தகையாய்க் குடுக்குறோம் நீங்கள் சந்தாசாயபுக்கு மத்தத்து பண்ணவும்வேண்டாம் விருத்துவமும் பணணவேண்டாம் அல்லவென்று உங்களூரிலே யிருக்கட்டும் அவருக்கு மன்சுபாவும் சாகீரும் கொடுக்கிறோம் சுகமே யிருக்கட்டுமென்று பைகாம்விட்டு ருசி பண்ணிக் கொள்ளென்று நாசருசங்கு மாபூசுகான் சம்பதிருயனுக்குச் சொன்னதாகவும் அந்தப்படிக்கி சம்பதிருயன் ஆனந்தரங்கப் பனைக் கண்டு பேசச்சொல்லி லாலா வீதி சந்து செங்கழுநீர் பேட்டு சீமை அமுல்பண்ணுகிறான் அவனுக்கு எழுதி அனுப்பிவிச்சான் அவன் என்னிடத்தில் ரொம்ப கடுத்தி விசுவாசமாய் வெகு நாளாய் நடந்துகொள்ளுகிறான் அந்த அறிக்கையினாலே எனக்கு யெழுதியனுப்பிவிச்சதுமல்லாமல் யெங்கள் மாமனர் சேஷாத்திரிப்பிள்ளை யென்று செங்கழுநீர்பேட்டுப் பாளையக் காறனுயிருக்கிறது நீங்களுமறிவீர்களே. அவர்களுக்குத் தெரியப் படச்சொல்லி யெனக்கு யெழுதியனுப்பச் சொன்னனும் அவரும் யெழுயனுப்பிவிச்சார். இந்தப்படி சேதி வந்துதென்று சொன்னேன். ஆனலிந்த ஆற்காடு சுபா மமுதல்லிகானுக்கு குடுத்தது கரூறு அல்லாமல்ப்போச்சுது யென்று சொன்னர் அதுக்கு

நான் சொன்னது முன்னேதானே இந்தச் சேதி வந்துதென்று யெட்டு நாளைக்கு முன்பாக ஒருதரஞ் சொன்னேனே. இது பசுமை சேதியானபடியினாலே ஆற்காட்டு சுபா வும்முடைய பயத்தைக்கொட்டு ஒருத்தருக்கு மேத்துக்கொள்ள பயந்து விட்டுவிட்டார்.

நாசறுசங்கும் தாம் விசாரித்து உங்களுக்குச் சமாதானம் பண்ணி முசபர்சங்குக்குக் குஞ்சுக் குழந்தைகளைக் கூட அழைத்துப் போகவேணுமென்று கெட்டியா யோசனை பண்ணியிருக்கிறானென்று முன்னால் நான் சொன்ன பேச்சுக்கு யிது தாக்கலாவென்று சொன்னேன். மெய்தானென்று ஒத்துக்கொண்டு லா விதி சந்து (Lala vidi chand)க்கும் உங்கள் மாமனுருக்கும் சம்பந்திருயனெழுதின காகிதம் யெல்லாம் பொய்யேயல்லாமல் மெய்யல்லவென்று பதிலுத்தரம் நீ யெழுதி அனுப்பு அதுக்கவர்கள் எழுதுகிற உத்தரமென்னமோ அதை வந்து சொல்லென்று சொன்னார். அப்பால் சிதம்பரம் முதாமியாவானால் தன் பணம் காசு சமஸ்தமும் தீவுக்கோட்டை சேத்தேன். மத்தது தட்டுமுட்டுகள் சேத்துக்கொண்டு வாறானாம் இதல்லாமல் பெரிய பெருமாள் பிள்ளையென்கிறவனொருத்தன் காறுபாரியும் கணக்கும் சமஸ்தமும் அவன்தான் அவனெப்படி யசைச்சால் அப்படி அசைக்கிறது அந்தச் சிதம்பரம் சீமைகூட முதாமியா கூட அவனுக்கு ரொம்ப கடினமாயிருக்குது. அடி சீமைப்பார் காட்டார் வகையறா போய் முதாமியாபேரிலேயும் பெரிய பெருமாள்பிள்ளை யென்கிறவனும் நாலு ஆறு லக்ஷம் சம்பாதிச்சுப் போட்டதுமல்லாமல் பெங்களையும் கெடுத்துப் போட்டார்களென்று அதுக்கு கணக்கு வழக்குகள் அத்தாசுகூட சொன்னதின்பேரிலே கடப்பை அப்துல் நபிகான் முதாமியாவின் பெரிய பெருமாள்பிள்ளைபேரிலே கோபம்பண்ணி யிவர்கள் நசர் அனுப்பினதுகூட தட்டுமுட்டு டேரா சாமான்கள் வகையறாயனுப்பினதுகளெல்லாம் எடாமல் அனுப்பிவிட்டு வெகு கோபம் பண்ணியிருக்கிறதுமல்லாமல் சீமைகள்கூட தகிர்ப்பண்ணி கணக்கு வழக்குகள் விளங்கவும் காவல்வைத்து வீடு வாசல் முத்திரிக்கவும் மிந்தப்படிக்கி யெல்லாம் யோசனை நடந்து அதின்பேரிலே தான் முதாமியா தன் பணம் காசு சாமான் வகையறா தீவுக்கோட்டையிலே சேத்து அவனும் இங்கிலீசுக்காறர் ஆசிறுவிலே போய்ச் சேரவேணுமென்று யிருக்கிறதாய்ச் சேதி வந்தது.

இந்த சமயத்திலே இங்கேயிருந்து சிறிது சொலுதாதுகள்
சிப்பாயிகளும் ரெண்டு கர்னல் சிதம்பரம் சீமை தணிக்கா பண
மும் புவனகிரி பிசாறு பணமும் வெங்கிட்டாம்பேட்டை சீர்
மையை நாசறுசங்கு வந்தபிற்பாடு சப்த்திபண்ணி அந்தப்
பணம்கூட அறுவிட்டுக்கொண்டு யிருக்கிறான் இந்த மூணு
சீமைப் பணமும் நியாயப்படிக்கி அவன் கை அத்தாக்ஷிப்படிக்கி
வாங்கிப்போடலாம். இனிமேல்வன் ஓடிப்போய் இங்கிரேசுக்
காறர் ஆசிறுவிலே திவிக்கோட்டை போய்ச் சேர்ந்தால் அப்பிறம்
பிறயாசம் யென்று சொன்னேன். அதுக்குத் துரையவர்கள் ஒரு
காகிதம் பென் காகிதமா யெழுதியனுப்பி அதின்பேரிலே வரு
கிற உத்தாரம் பாத்துக்கொண்டு சொலுதாதுகள் சிப்பாயிகளை
அனுப்பிவிச்சு சக்குத்திபண்ணி தடுக்கச்சொன்னார். முன் அஞ்
சாறு காகிதம் நாமெழுதினதுக்கு அவன் சட்டைபண்ணாம
லிருக்கிறபடிக்கும் இனி காலதாமசம் ஆயிருக்கிறதுமல்ல ஆனா
லும் உங்கள் காகிதம் அனுப்பவேண்டியதுதானென்று சொன்
னேன். காகிதமெழுதச் சொன்ன வயணம் நங்கப்பிள்ளை யெழு
தின காயிதத்தை நீ பார்வைபண்ணாமலிருந்தது ஆனாலுனக்கு
அதினாலே சம்பவிக்கப்பட்ட பொல்லாப்பை நீ யோசனைபண்ணா
மல்போனாலும் நாமின்னம் பொறுத்துமிந்தக் காகித மெழுதி
னோம் பெகு நாளாய் எங்கள் பிறஞ்சுக்காறனுடனே சினேக
மாய் நடத்திக்கொண்டு வந்ததின்பேரிலே திஷ்டிவைத்து
யெழுதினோம் இப்போது உங்களுக்காலுள்ளபடி உண்டான
படிக்கி பணத்தைக் கட்டியனுப்பு சினேகம் விருத்தியாய் நடப்
பிச்சுக்கொள்ளுகிறீரா யில்லையென்று உம்முடைய சீர்மையும்
நீரிருக்கப்பட்ட பட்டணமும் அதிலுள்ள சனங்களும் நீரும்
சங்கடப்பட்டு அதின்பேரிலே பணம் குடுக்கிறீரா யிதிலே பெது
உமக்கு சம்மதியோ அது யெழுதி அனுப்பினால் அந்தப்படிக்கி
நடக்கிறோமென்று யெழுதச்சொன்னார். அந்தப்படிக்கி யெழுதி
மோகறுபண்ணி ஆனவுடனே அனுப்பிவிக்கட்டாயென்று யெச்
சரித்து அனுப்பச்சொல்லி உத்தரம்பண்ணினார். அந்தப்படிக்கு
காகிதத்தைச் சேவுகர் கையில் குடுத்து அனுப்பிவிச்சேன்.
மேற்படி இத்தனாள் சாயங்காலம் மச்சிலிபந்தரிலே யிருந்துக்
கொண்டு யிப்போ முசே கொக்கேத்து காகிதம் கொண்டுவந்து
பிறபுவுக்குக் கொடுத்தார்கள். முசே லெனுவார் யேனம் பெத்தி
ரியிலிருந்தவன் யிருந்த சரக்குகள் மனுஷர்கள் சிறிது பிரங்கிக

ளைத்திக்கொண்டு பங்காளம் போறுமென்றல்லோ முன் வந்த கபுரு யிப்போ வந்த கபுரு பங்காளம் போகவில்லை. யேனத்துக்கடுத்த வட கீழ் பாரிசத்திலே கோதாவரி தீவு ஒன்றுயிருக்குது அதிலே காமறாசு கட்டனுசே மிருத்தீஞ்சயருது(Mrityunjayan) (Kama Raja Warehouse) தோட்டம் கூடயிருக்குதாம் அதிலே முன் மறாட்டியாந்தப் பிறுந்தியத்துக்கு வந்தபோது மதிலேதானும் போயிருந்தார்களாம் யிப்பவும் அந்தக் கோதாவரி தீவு வாத வழி உண்டாம். அதிலே மூசே லெனுவார் முதலான பேர்கள் போயிருக்கிறார்கள் என்று கபுறு வந்துது. யிதல்லாமல் மூசே கொக்கெத்து யெழுதினது வறத்தகர் கையில் பன்னீராயிரம் கொடுக்கச்சொல்லி சொல்லுகிறார்கள் என்றும் நாசறுசங்கு அண்டைக்கு கூட்டி அநுப்பவேணுமென்று யிருக்கிறார்களென்றும் தங்களையும் பதினையாயிரம் வராகன் மட்டுக்கும் கேழ்க்குறார்களென்றும் யினிமேல் யிறுன்கத்தாறர் வந்து யிந்த மச்சிலிபந்தரிந்தப் பிறுந்தியங்களெல்லாம் சுட்டுக் கொட்டைப் பரப்பிப் போடுவார்கள் அறியாமல் செய்தோம் யென்றும் யிப்படி அமுல்தாரர் கடு கடுந்துறார்கள் வர்த்தகர்கள் யினிமேல் பட்டணம் ஆகுதாமென்று சொல்லவும் சொல்லுகிறார்கள் என்று எழுதினதாய்க் கேழ்க்கப்பட்டுது.

**1750 ௵ ஜூன் ௴ 6 ௳ பிறமோதூத ௵ வைகாசி ௴ 27 ௳ சனிவாரம்.**

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போனவிடத்திலே துரையவர்கள் யென்ன கபுறு வந்துதென்று கேட்டார் யிதிலே சேக்கு அசேன்-தௌலது மகம்மது யென்குறவன் கூட சேக்கு யிப்றும் கூட வந்து சேக்கு-அசேன் தங்களவர்கள் மயேயிலே யிருக்கிறவர்களுக்கு ரெண்டாயிரம் ரூபாயிக்குத் துரையவர்கள் கையில் உண்டிகை வாங்கிக்கொண்டான். சேக்குயிப்றும் அன்னூறு ரூபாய்க்கு உண்டிகை வாங்கிக்கொண்டான். அப்பால் சேக்கு அசேனைப் பார்த்து ஆற்காடு நாசறுசங்கு சமாச்சாரம் ஏதாகிலும் வந்துதாமென்று கேட்டார். மமுதல்லிகான் தன்னாலே ஆற்காட்டு சுபா நிறுவாகம் பண்ணக்கூடாதென்று யிஸ்ரபா-யெழுதிக்கொடுத்தாமென்று என் சுபாவுக்கு சீரொப்பா வாங்கிக்கொண்டாமென்று மூனு லக்ஷம் ரூபாய் அபராதம் குடுக்கச்சொல்லி ஆற்காட்டு சுபா மமுதல்லிகானுக்குத் தகீர்

பண்ணினர் யென்றும் அதின்பேரிலே மமூதலிகான் தன்னண்டையிலே யிருந்தி பவுசையெல்லாம் பர்தாப்பு பண்ணி பாடடனும் யிந்தப்படிக்கு எங்கள் சிப்பாயிகள் தண்டிலே கூடயிருந்தவர்கள் வந்து சொன்னார்கள் என்று சேக்கு அசேன் துரையவர்களுடனே கபுறு சொன்னான். யிப்படியிருக்கச்சே காலிபுகான் குமாரன் அசத்தும்கம்மதுகானுக்கு திமிரியிலிருந்து எழுதிவந்த காகிதத்தில் சானவாசுகான் ஆற்காட்டு சுபாவுக்கு யிருக்கவும் மமுதலிகானுக்கு தகீரும் சந்தாசாயபுக்கு னாயபும் குடுக்கப்போறார்களென்றும் வெகு தூரம் கபுறுயிருக்குதென்று யெழுதிவந்தது. அந்தக் காகிதச் சேதி சொல்லவேணுமென்றச்சே மூசே திலார்ஷு காரைக்கால் குத்தகை கிறாமங்களுக்கு குத்தகைக்கும் குத்தகைப்பட்டயும் யெழுதிவந்து யெங்கள் ரெண்டுபேர்களையும் கையெழுத்துப் போடச்சொன்னான். நாங்கள் ரெண்டுபேரும் கையெழுத்துப் போட்டான்வுடனே துரையவர்கள் கையெழுத்துப் போட்டாராம் மத்தக்கோன் சேவியோர்கள் கையெழுத்துப் போட்டயிற்பாடு உங்கள் ரெண்டு பேருக்கும் காப்பி யெழுதிக் குடுக்கிறேனென்றும் ஆனால் நூறு நூறு ரூபாய்க் குடுக்கவேணுமென்று பரியாசமாய் மூசே திலார்ஷு சொன்னதுக்கு தானப்பமுதலி நூறு நூறு ரூபாய் குடுக்கிறதேது யென்றாகிலும் குடுத்ததுண்டா யென்றும் சொன்னார். யேதாகிலும் கொடுக்கவேணும் யேனென்றால் திருவை முதலான சம்மதி யிவரைக் கேட்டு அறியவேணும் யென்று நாளை சாயங்காலம் போமென்றும் பேசிக்கொண்டு மூசே திலார்ஷுவைப் பார்த்து அஞ்சு வருஷக் குத்தகைப் பட்டயம் நீர் யெழுதினீரே யல்லது உமக்கு சந்தோஷமாய் யேதாகிலும் அனுப்புகிறோம் சிறிது சம்மதி அறியவேண்டியதுண்டு அதுக்கு நாங்கள் வருகுறோம் என்று சொல்லி அதிலே அசத்குமகம்மதுகான் காகிதத்திலே யெழுதியிருந்த மத்தலப்பை படிச்சு பாரிசிலே மதனந்தபண்டிதர் சொல்ல அதை மூசே திலார்ஷை பாரிசிலே கேட்டு பிறான்சு வார்த்தையில்தானே துரைக்குச் சொல்லுமென்று சொல்ல அந்தப்படிக்கி மூசே திலார்ஷு துரையவர்களுக்கு காகிதச் சேதி சொல்ல அப்பால் துரையவர்கள் யிந்த பிரஸ்தாபம் அனேகம் மூசே திலார்ஷுடனே பேசியிருந்தார். பாதிரி பிரான்சுவாவுடனே பேசினாரப்போ நாங்கள் பிறப்பட்டு பூனேவை வந்தோம் மூசே திலார்ஷுசு அவர் வீட்டே போனார்

யித்தநாள் மதாம் துப்பிளேயிக்சுக்கு மூசெ தெமெரென்கிறவன்
துரையுடைய பொட்டேலர் மூன் ரெண்டு மாசத்துக்கு முன்னே
மதாமுடனே சிலுக்காறுமபத்திரரெட்டிச் சொல்லி ஊரிலே உன்
டான மாடுகளிலே ஆயிரம் மாடுகள்மட்டுக்கும் சோறுவரியாய்
ஒட்டிக்கொண்டு போனபோது தன் மாடு ஆரேழு உருப்படி
ஒட்டிக்கொண்டு போய்விட்டார்கள் அது கும்பினீருக்கு ஆங்
காட்டும் பணம் வருமென்று பாத்தேன் யிந்தமட்டுக்கும் வர
யில்லை யென்றும் ஆரைக் கேட்டாலும் உன்னுடைய உத்தரத்
தின்பேரிலே ஒட்டிக்கொண்டுபோனது உன்னைக் கேழ்க்கச்
சொல்லிச் சொல்லுகிறார்களென்று ஒரு பெத்திஷம் யெழுதி
மதாம் துப்பிளேயிக்சுக்குக் தானே குடுத்ததாயும் தன் பேர்
ஆர் சொன்னது அவனைக் கொண்டுபோய் சாவடி கிடங்கிலே
விலங்கு போடச்சொன்னதாயும் அப்போ வந்து ஒட்டிக்கொண்டு
போனது நயினாரென்று சொன்னதாகவும் அதன்பேரிலே
விலங்கை மாப்பு பண்ணி சாவடி கிடங்கிலே போடச்சொன்ன
தாகவும் யென்பேரிலே யென்ன நேரம் நீர் உத்தாரம் குடுத்த
படிக்கி உன் சேபுகாரன் கூட வந்து ஒட்டிக்குடுத்தான்.
நானென்ன செய்வேன் யென்றும் யென்பேரில் குத்தமில்லையென்
றும் அல்லவென்றால் ஒட்டிக்கொண்டுபோன கிஷ்ணரெட்டி வில்
லியநல்லூரிலே யிருக்கிறானவனை தெரிஞ்சுக்கொண்டு அவனை
யில்லாத பேச்சு ஆரிலே யென்ன சொன்னாய் ஆரார் மாட்டை
யெல்லாம் யேன் ஒட்டிப்போனாயென்றும் தண்டிக்கவேணுமே
யல்லாமல் யென்னைக் காவல்வைக்கக் காரியமென்னவென்றும்
மதாம் துப்பிளேயிக்சைக் கேட்டவிடத்திலே துரை ஒட்டிக்
குடுக்கச்சொன்னாரென்று சொல்லாமலேன் போனார். லஸ்துவா
னென்று காவல் வைக்கச் சொன்னதாய் கேழ்விப்பட்டேன்
மற்றபடி பதினொன்றரை மணிக்கு அழைச்சனுப்பிவிச்சு கோவை
யிலிருந்து சிறிது சரக்கு இனுசு கூட்டியனுப்பச்சொல்லி தொம்
லூயிசு கப்பித்தான் (Capitain Dom Louis de Almeida)
என்ற புடுதிகக்காறன் யெழுதினான். அந்தப்படிக்கு முஸ்தீது
பண்ணிவியென்று சொன்னார். நல்லதென்று வாங்கிக்கொண்டு
வந்தேன். அப்பால் சாயங்காலம் துரையவர்களழைச்சனுப்பி
விச்சார். சமாச்சாரம் யேதாகிலும் வந்த சேதி உண்டா யென்று
கேட்டார். காலத்தாலே வந்த சேதியே யல்லாமல் மைத்தப்படி
வேறே சேதி வரவில்லை யென்று சொன்னதின்பேரிலே காலத்

தாலே நடந்த மமுதல்லிகான் பேச்சைதானே உட்டங்கிருச்ப் பேசி நம்முட்ப பட்டணம் நாசருசங்குவைப்போலே கோத்த வன் வந்து செபிக்கமாட்டாமல் போனதுயெல்லாம் யெல்லாரும் அறிந்து பட்டணம் அல்தென்று அறிந்திருந்து யிந்தப் பட்டணத்துக்கு ஏன் வாரமல் யிந்த வற்த்தகர் வகையரு சனங்கள் வெளிகளிலே அவ்லதைப்படுகிறுர்களென்று கேட்டார். யினியூரிலே உன் பெண்சாதியினுடைய அனியாயத்தினலே ஒருத்தரும் வந்து சேரப் பயப்படுகிறுர்களென்று சொல்லக்கூடாதே அந்தக் காரியத்துக்கு யிவர்கூட சம்மதிச்சு நடத்துகிறபடியினலே யென்று சொல்லக்கூடாதே அதைத்தொட்டு அவருக்குத் தாமும் மார்க்கமாய் திருப்த்தியா யிருக்கச்சொல்லவேணுமே முன் கலகத்தைக் குறிச்சு வாராமலிருந்தார்களே இப்போ அல்லோ தெரிந்துது. யிதனுடைய பலாபலம் யினிமேல் சேருவார்களென்று சொன்னேன். மெய்தானென்று ஒத்துக்கொண்டார் யிவருக்கு சுவாமி செய்க்காத்தின்பேரிலே கீர்த்தி சூரியப் பிறகாசம்போலே ராச்சியமெல்லாம் பிறகாசிக்கப்பண்ணினுர்கள் அங்கம் உள்ளபடியினலே பட்டணம் விசாரிப்பு கிபாயத்தின் பேரிலே யெவ்வளவு நட்டத்தை பண்ணிவிச்சாலும் மாமூலாய்ப் போம் அதில்லாதபடியினலே பட்டணம் செய்த பாவம் சேவகனும் பள்ளிப்பயல் காடுவெட்டி தோட்டிப் பறயனும் பல்லக்கு யேறவும் காறுபாறு பண்ணவும் ஆனல் பட்டணம் எந்தவிதம் சுக்ப்பட்டு மாமூலாகப்போகுது மாமூருகிற காலங்கள் வந்தா லிப்போ நடக்கிற அமுல் போய் பெரிய மனுஷர் காறுபாரும் அவர்கள் பேச்சும் பெரிய மனுஷர்கள் விறுதியுண்டாம் என்றும் மதனந்தப்பண்டிதரோன்னுட்னே சொன்னுர் யிவா சாடை அறிவேனே லகுவாய்ப் பேசி வந்தேன்.

**1750 ஸூ ஜுன் மீ 7 உ பிறமோதூத ஸூ வைகாசி மீ 28 உ ஆதிவாரம்.**

இத்தனள் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்குப் போய் பூசை கேட்டு வந்தார். வந்தவுடனே கப்பே குடிச்சுஆன பிற்பாடு யிப்பறம் வந்ததும் சபருமபண்டிதன் பிறகே போன கிஷ்ணுசி யெழுதின ஓலையிலே யெழுதியிருந்தது. நாசருசங்கு ஆற்காட்டிலே சமுசாரத்துடனே ஆத்தங்கரை ஓரத்திலே கட்டியிருக்கிற சந்தாசாய்ப்பு வீட்டிலே இறங்கின

வந்திருந்தான் சின்ன பரசுராமனும் வந்து நின்று ஆசாரப்ப முதலி தனக்கு நூறு விராகன் கொடுக்கவேணுமென்று முசியே செம்போலுடனே சொன்னதின்பேரிலேயும் பின்னையு மிரெண்டொரு கடன்காறர் வந்து சொல்லிக்கொண்டார்களென்று முசியே செம்போலுடனே துரையவர்களிடம் சொல்ல துரை என்னை அழைத்து ஏன் தீரவில்லை யென்று கேட்டார். முன் கனியாதான் மென்றேறப்படுகிறதுக்கு வெகு நாள் சென்று யேற்பட்டுது அப்பால் உடமைகள் ரொக்கம் பணம் வருகனிருக்குது போய் பங்கிட்டுக்கொள்ளப் போறுப்போலேயும் சிறிது பங்கிட்டுக்கொடுத்தாப்போலேயும் மத்தது கேட்டாலிவர்கள் தகரறு சொன்னுப்போலேயும் அதின்பேரிலே பித்திசாமெழுதிக் கொண்டுவந்து உங்களுக்கு குடுக்கவேணுமென்று யிருக்கச்சே ஒன்றுக்கொன்று அட்டியாயிருந்து போச்சுதென்று இதின் பிற்பாடு உங்களுக்குப் போறசத்து யில்லாமலிருக்குதே அதைத் தொட்டும் அட்டியாயிருந்து சொன்னதாயும் இதிலே முசியே திவார்ஷு வகையருக்களையும் மத்தியஸ்தமாய் வைத்துக்கொள்ளுகிறதாய் சின்னதுரை முன்பாக பேச்சு நடந்துதென்றும் யிந்தப்படி நடந்து மறுபடி கவையில்லையென்று இத்தார்கள் யென்ன யிப்படியென்னுடனே சொல்லி உங்களுடனேதான் பிறுது பண்ணிக்கொள்ளுகிறதுக்கு சமயம் யெப்போவென்று வந்து கேட்டதுக்கு நாளை வருகிற திங்கட்கிழமைக்கு வரச்சொல்லி சொன்னேன் யென்று சொன்னேன். அதிலே தானப்பமுதலியைப் பார்த்து லாசறு யிதெல்லாம் யென்னத்துக்கு பங்கிட்டுக் குடுத்துப் போடாமல் இப்படி பாக்கி வைத்திருக்கிறீர்கள் என்று கேட்டார். ஆசாரப்பனுடைய உடமை யென்னமோ அதைக் கொடுத்து தீத்துப்போட்டோம் அவனப்பனுடைமை யென்னமோ அது குடுக்கயில்லை யென்று அதுக்குத் துரையவர்கள் ஆசாரப்பன் சம்மதி எத்தனை வராகன் அவர்களுக்கு குடுத்ததென்று கேட்டார். ஆயிரத்தன்னூறு விராகனுக்கு உண்டென்று சொன்னார். அதின்பேரிலே வெள்ளைக்காறர் மத்தியஸ்தமும் கவையில்லை அது கவைக்கு வராதென்றும் தமிழர் சாடை தமிழருக்கு யென்கிறதாய் சொன்னார். அதுக்கெல்லாத்துக்கும் யெதிரியாயிருந்தவர் வாய்மொழி கேட்டல்லோ தீர்க்கவேணும் அவனை நாளை வரச்சொல்லுகிறேன் அவன் வாய் விசேஷமும் கேழ்க்கச்சே தெரியவருமென்று சொன்னேன். இப்படி பேச்சு நடக்

கச்சே சின்ன பரசுராமன் கிட்ட வந்து துரையுடனே வெகு சனுவாய் யெனக்கு ஆசாரப்பன்பேரிலே நானூறு வராகன் வரவேணுமென்றும் மழலைச்சொல்லாய் குறுண்டி குறுண்டிச் சொன்னான். இதொரு பிறுது வந்துதென்று துரை சொன்னாரே அல்லாமல் பின்னை ஒன்றும் சொல்லவில்லை. நப்பேரல தூர தூர ஒதுங்கி நடுங்கிறவன் இத்தனை சனுவாய் கிட்ட வந்து சொன்ன சாடை என்னவென்றால் நாலு நாளைக்கு முன்னே கொஞ்சம் பராபத்திய சாடையாய் தளம் ஒருடமாசமுது கொண்டுவந்து குடுத்தான் இன்னம் குடுக்க உமேதுவாயிருக்கிறான் அந்த சனுவுனாலேயும் முத்துலகப்பசெட்டி வீட்டு கலியாணத்திலே தேவடியாக்களை யெழுந்திருக்கவில்லையென்று காவல் வைக்கும்பொருட்டு சிறிது சாருபிச்ச சனுவும் இத்தனை கிற்பயம் குடுத்து கிட்ட வரச்சே அற்பர் சாடையும் மகருசன் சாடையும் காரியங்களிலே தெரியுமென்கிறதெப்படி லக்ஷ லக்ஷ மொகத்துமாக்கள் நடப்பிக்கிறவனுக்கு தினமதினம் பச்சகமாயிருக்கும் ஒரு நாளுமறியாதவன் யிப்படி அபுரூபமாயி தன் கைப்பணம் பிரத்தியக்ஷமாய் போக்கடிச்சுக்கொண்டது அது ஒரு சந்தோஷம்போலே உத்சாகத்தை அடைந்து மஸ்தாயிருப்பான் உடனே மறுநாளைக்கு செருப்படி வந்தாப்போலே திரும்பியும் ஒதுங்கிறதுதான் இந்த சாடையிலே அல்ப்பன் நடத்தை யிருக்கிற சாடை கதையிலே சொல்லுவார்கள். சாமித்தை சொல்லுவார்கள் யிப்போ பிறத்தியக்ஷமாய் யிந்தப் பட்டணத்துக்குள்ளே சின்ன பரசுராமன் நடாக்குமானதற்கு அப்பு வக்கையரு முதலான பேர்கள் சிறிது பேர்கள் நடக்குறார்கள். ஆனால் அவன் சாதிக்கும் அவன் மேன்பாடுக்கும் நடக்கயேயல்லாமல் பின்னை வேறல்ல அப்பால் துரையவர்களும் முசியே சேம்போலும் அவர்கள் பங்காளத்திலே இந்த நாருயணபிள்ளை ரெண்டு மூணு பேர் சொல்லி அவர்கள் ஒரு வியாச்சியம் வந்து அவர்கள் சொன்னால் அப்பிறம் குறுக்கே பேசப்போமோ யென்று யென்னைப் பாத்துச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். அதின்பேரிலே பங்களாத்துப் பேச்சும் பேசிக்கொண்டிருந்து அப்பால் காம்பிறுவிலே போனார்கள். நாங்கள் அங்கே யிருந்தவர்களிப்பறம் பிறப்பட்டுவந்து அவரவர் சாகாவுக்கு போனார்கள் நானும் பூரோவை வந்தேன்.

அப்பால்சாயங்காலம் ஆறுமணிக்கு மறுபடி அழைத்தனுப்பிவிச்சு மத்தியானஞ் சொன்னேனே நாளை யேலத்தில் பட்டை

அறுநாள் வாங்கச்சொன்னேனே வாங்கினவுடனே என் பேரெ ழுதிவை யென்று சொன்னர். நல்லதென்று சொன்னேன். அப் பால் யேதாகிலும் ஆற்காடு சமாச்சாரம் வந்ததாவென்று கேட் டார். வரயில்லே யென்று சொன்னேன். இத்தனுள் முத்தியப் பிள்ளை வருகுறதுக்கு மதாம் துப்பிளேயிக்சு துரை கையிலுத் தரம் வாங்கிக் கொடுத்து வாசற்படிக்கு காகிதம் வாங்கிக் குடுக் கிரேம் யென்று போயழைத்துவரச் சொன்னளாம் சியானன் என்கிறவன் அழைத்துவர இத்தனுள் காலத்தாலே போனன் யென்கிற கபுறு வந்தது. ஆனலிது போன ஹூ அற்பிசி மீ முதல் பேசுகிறது யிப்போ குவிஞ்சுது. ஆனல் சும்மா வந்திருக்க அப்பால்கிறமேண நடத்தாது சந்தோஷமாய்ச் சொல்லி அழைப் பிச்சுதேயல்லாமல் வந்து கிருகை யில்லாமல்போச்சுது. இப்படி வந்து யிருக்க ஒரு வருஷத்துக்கு முன்பாகவும் சொன்னேன். போன அற்பசி மீ கார்த்திகை மீ த்தையிலும் சொன்னேன். அப்பாலும் ஒரு காசளவிலே விறயமில்லாமல் அதுக்கு சம்மதிச் சுப் போகாமல் யிப்போ விறயத்துக்கு சம்மதிச்சு மதாம் துப்பி ளேயிக்சு முகாந்திரத்திலே வெகு பிறயத்தினம் பண்ணிவந்து நடக்கவேண்டிய காரணமிப்படி யிருக்கச்சே அப்படி யேன் நடக் கும் சுவாமி சித்தமெப்படியோ அப்படி நடந்தது. இதிலே அப் படி நடந்தது இப்படி நடந்தது என்று என்கிறவன் விவேக மில்லாதவனேயல்லாமல் விவேகமுண்டானவன் ஒருக்காலும் யென்றல் சுவாமியுடைய சித்தப்படிக்கி அந்தக் காலாகாலங் களிலே நடக்கவேண்டியதென்னமோ நடந்தது என்கிறவன் விவேகியேயல்லாமல் மத்தப்பேர் விவேகியல்ல.

**1750 ஹூ ஜூன் மீ 8 உ பிரமோதூத ஹூ வைகாசி மீ 29 உ சோமவாரம்.**

இத்தனுள் மூணு மணி பகலேக்கு மேலாக துரையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு முசபர்சங்கு காகிதம் இந்த கிசுமத்துக் காறன் கொண்டுவந்தான். இதிலே யெழுதியிருக்கிறது படிக்கச் சொல்லிக் கேட்டுச்சொல் யென்று சொன்னர். மதனந்தபண்டி தன் படித்துச் சொன்னன். அதன் வயணம் யிப்பவும் யெனக்கு விடுதலையில்லாதபடிக்கு நான் துக்கசாகரத்தில் விழுந்தேனல்லது நீர் யிந்தமட்டுக்கும் யென்மட்டுக்கும் நடப்பிச்ச வுபகா ரத்துக்கு நான் செய்யப்போற வுபகாரம் நானிருக்கிற ஆலேப் பாத்தாலுமக்குத் தெரியும் தெரிஞ்சுயிருக்கச்சே நானெழுத

வேண்டியதென்ன விருக்குது யென்று யிப்பவும் நிருதவாய் தக்கசீகாத்திலே முழுதி நடைத் தேறமாட்டாமலிருக்கிற யெனக்குயென் தாயார் பெண்சாதிகட் டிருந்தால் ஒரு ஆதரவா யிருக்கும் ஒருவேளை என் விடுதலைக்கு மூலமாயிருந்தாலுமிருக் கும் ஆனபடியினாலே என் தாயார் என் பெண்சாதிகளை அனுப்பி விக்கவேணுமிந்தப்படி அனுப்பிவிச்சால் யிந்த வுபகாரம் மறக் கத்தக்கதில்லை. யிதுக்கு சுவாமி உம்மை ரக்ஷிப்பார் யிப்பவும் உமக்கு செகதிருஷ்டிபேரிலே ஆணையிட்டதாய் வைத்துக் கொண்டு யென் பெண்சாதி பிள்ளைகள் அனுப்பிவைக்கவும் அனுப்பிவியாமல்ப்போனால் நிதிவிலே செத்துப்போற பாபம் உம்மையடையுமென்று யிப்படியாக சத்து பயித்தியக்கார சாடையாய் யெழுதின மத்தலப்பை யிறவுவினுடனே சொன்னேன் அதுக்குப் பிறபு வைத்திபரதனைப் போனான் யெத்தினான் புத்தி கெதி யெழுதினானென்று சொல்லிப்போட்டு வெளியே சவாரி போனார். அப்பால் சாயங்காலம் ஆறு மணிக்கு வந்து மூசபர்சங்து பதில் காகிதமெழுதி யனுப்பச்சொன்னது நாமனுப் பின காகிதம் பாத்துக்கொண்டு சகலமும் தெரிவந்தது. நாமெழுதி யனுப்பினபடிக்கு தாயார் வகையறா சமுசாரத்தை அனுப்புவிக்கிறதுக்கு நான் நமக்கு சத்துருவல்ல நம்முடைய சமுசாரமிங்கே யிருந்ததைக்கொட்டு நமக்கு யினிமேல் விடு தலைக்கு மூலியமாயிருக்கிறதுமல்லாமல் நாசறுசக்குக்கு தலை மண்டை புழுவாயிருந்து குடைச்சலாயி அவனை பலவந்தமா யிந்த காரியத்தை செய்விக்கச் சொல்லுகிற பாத்தியமுண்டாகிற தானபடியினாலே நிறுத்தி யிருக்கிற காரியமேயல்லாமல் யின்னை ஒரு காரியத்தைக்கொட்டும் நிறுத்தினதல்ல. சுவாமியினுடைய தயவினாலே கொஞ்ச நாளையிலே விடுதலையாயி சந்தோஷத்தை யும் சகல தவுலத்தையும் அடைகிறபோது யிவர்களும் ஆசிரா யிருக்கிறார்கள் விபத்து வந்த வேளையிலே தைரியத்தினாலே யாக்காட்டும் சத்துருவை செயிக்கிறதென்கிறது நாங்களறிந் திருக்குமிப்படி யெழுதுகிறது ஆச்சரியமாயிருக்குது ஆனால் காலதேச வர்த்தமானத்துக்குத் தக்கதாய்ங்கே யிருக்கிற பேர் களுக்கு சத்து நல்லதனம் சொல்லி சகல காரியமும் அனுகூலப் படும்படியாகும் யென்று யெழுதியனுப்பச்சொன்னார். அந்தப் படிக்கு யெழுதி மூன் காகிதம் கொண்டுவந்த கிசமத்துக்காரன் கையில் குடுத்து அனுப்பச்சொன்னார்.

அந்தப்படிக்கு எழுதி குடுத்தனுப்பிவிச்சேன். அப்பா லென்னப் பாத்து காலிபுகான் மகள் முசபர்சங்கு விட்டிலே யிருந்தவள் யெப்படி போய்விட்டாள் இவர்களேதாகிலும் போகப்போருர்கள். அங்கே யிருக்கிற சேவுதர்களுக்கு தாக்கீது பண்ணி பத்திரமா யிருக்கச்சொல்லு யென்ருர். நல்லது யென்று சேவுகரை அழைச்ச தாக்கீதுபண்ணி காலிபுகான் மகள் யெப்படி போனுளென்று கேட்டதற்கு நாங்களேப்படி அறிவோம் ஆயிரம் தரம் யிருக்கிற வெள்ளாட்டிகள் உள்ளே போறதும் வாறதுமாயிருக்கிருர்கள் சாடையாய்ப் போய்விட்டால் எப்படி தெரியும் ஆனபடியினுலே ஒரு பல்லக்கு குதிரை காடி ஒரு எருது மேலே ஆகிலும் உம்முடைய முடிச்சையாகிலும் யெடுத்துக் கொண்டு பிறப்பட்டால் தெரியுமென்று இந்த ஞாயத்தைச் சொன்னுர்கள். இந்த சேதியை துரையவர்களுடனே யெச்சரித்து இனிமேலிருக்கிற காரியத்தில் சாகிருதையாயிருக்கச் சொல்லியனுப்பிவிச்ச நானிருக்கிற பூறேவை வந்தேன்.

இத்தனுள் ருத்திரி முத்தியப்பிள்ளை யவர்கள் சாவடி கோட்டைக்குப்பத்தில் யிருக்கிறதில் வந்திறங்கி ஞானப் பகலைக்கு மேலாக மகநக்ஷத்திரத்திலே வூருக்கு வறுகிறதாய் மேட்டுக் காறர் வந்து கபுறு சொன்னுர்கள்.

1750 ஹு சூன் மீ 9 உ பிறமோதூத ஹு வைகாசி மீ 30 உ செவ்வாய்க்கிழமை.

இத்தனுள் காலத்தாலேழு மணிக்கு துரையவர்க்ளழைப்பிச் சனுப்பி இடங்கையார் சேதி யென்னமாய் தீந்தது என்று கேட்டார். உங்கள் பேச்சுக்கு அவர்கள் திருகு பேசுகிறீர்களா நீங்கள் கடனுக கேட்ட துகைக்குச் சம்மதிச்சாப்போலேதான் ஆனவிந்தக் காரியம் முன்னிலேயாயி குடுத்தாப்போலே யென்ருெரு பேரு யென்று ஆலோசனைபண்ணிக்கொண்டிருக்கிருர்கள். யல்லாமல் மைத்தப்படி யிதுவரைக்கும் நீங்கள் சொன்ன வேலையிலே அவர்கள் யின் வாங்கினதுண்டா வென்று சொன்னேன். ஆனுல் நானேதாகிலும் நன்கொடையாய்க் கேட்டால் சரியிப்போ பணத்துக்கு மெத்த கடிசையாயிருக்கிறபடியினு கடனுக கேட்டேன் என்று சொல்லி நானே அவர்களேயும் இவர்களேயும் அழைத்துவிசாரித்து முன் சொன்னபடிக்கு அவர்கள் மனதின்படியே நடப்பிப்போமென்று சொன்னுர் நல்லதென்று

சொன்னவுடனே ஆற்காட்டு சமாச்சாரம் ஏதாகிலும் வந்துதா வென்று கேட்டார். சயராமபண்டிதர் போன காரியம் சலதியில் நடக்கயில்லை சத்து மெதுபோலே காணுமிதன்று சொன்னேன். அதெப்படி யென்றார். கிட்டயிருந்தாலல்லவோ பயம் தூரம் பதிங் காத வழியிலே வந்தோம் அசென்ன செய்யலாம் அல்லவென்று பாறு பிறப்பட்டால் வழி மூடிப அறக்காருக்கள் யிருக்கிறார்கள் கபுறு வருமே அதுக்குத் தக்க யிலாசாயிருப்போமென்று கோட்டை ஆசிருயிருக்குது வென்று பெகு வுசாருவாயிருக்கிறு னிதல்லாமல் வருஷ காலம் வந்துது அந்த ராச்சியத்துக்குப் போகக்கூடாது யெப்படியும் கிஷ்ணை நதிக்கிப்பிறம் யிருக்கப் போறோமே ஆனபடியினாலே பத்து நாள் யேறக்குறைய போவோம். இதிலே கில்லேதாரர்களுக்கு எல்லாம் ஒரு தமக்கு சாவணி யிங்கே பண்ணுகிறோமென்று ஒரு பேரை வைத்து தான் அபரங்காபாத்திலே யிருந்து புதுச்சேரிக்கு வந்ததினாலே பெகு பணம் கர்சாயிருக்கிறது யிதுக்கு பாதியாகிறதுக்கு கில்லே தாரகள் வெகு நாளாய் பத்துப்பணம் சத்துப்பணம் சம்பாதிச்சு யிருக்கிறார்கள் யிதை மூறுக்கி பணங்களை வாங்கி பற்றி பண்ணு வோமென்று நினைத்திருக்கிறான் என்றாப்போலே சொல்லிக் கொள்ளுகிறார்கள். இதல்லாமல் சந்தாசாயபு காரியத்துக்கு தக்காசாயபு அல்லிநக்கிம்சாயபு போய்க் கண்டு பேட்டிபண்ணிக் கொண்ட பிற்பாடு இவடத்து காரியங்களினாலே நாசறுசங்குக் குப் அசனயம் தோத்துது. அதும்படியாய் சொன்னதின்பேரிலே சயராமபண்டிதர் பேசின காரியம் மெதுவிலே யிருக்கிறதாய்க் காணுமிதன்று அவர்கள் சொல்லிக்கொள்ளுகிறார்கள் என்று சொன்னதுக்கு ஆர் அப்படி சொல்லுக்கொண்டிருக்கிறவர்கள் யென்று கேட்டார். ஆற்காட்டிலே யிருந்து வரப்போக யிருக்கிற சமேதாரர்கள் சிப்பாயிகள் சொல்லிக்கொள்ளுகிறார்கள் யென்று சொன்னதுக்கு அவர்களுக்கு அதுக்கு நாசறுசங்கு கல்பத்துக் கானு கானு பேச்சு யெப்படித் தெரியுமென்று கேட்டார். சொல லிக்கொள்ளுகிற பேச்சுக்களை உங்களுடனே சொல்லாமலிருக்கிற தல்லவே அதினாலே கேழ்விப்பட்டப் பேச்சை சொன்னேன் அப்பாலே இன்றையதினமும் றத்தினமிழைத்த கல்லு நகைகள் யேலம் போட்டபடியினாலே துரையவர்களுடனே யெச்சரிச்சுப் போட்டு கோட்டைக்கு யேலத்துக்குப் போனேன்.

1750 ஆம் ஜூன் மீ 10 உ பிரமோதூத ஆம் வையாசி மீ 31 உ புதவாரம்.

இத்தனுள் காலத்தாலே சீர்மையிலே யிருந்து பிறப்பட்டு மறபா (Maurepas) என்கிற கப்பல் கப்பித்தான் முசியே புறகார் (M. Beauregard) இந்தக் கப்பல் சீர்மைவிட்டுப் பிறப் பட்டு மோரீசுக்கு வந்து மோரீசுயிலிருந்து யித்தனாள் காலத் தாலே ஆறரை மணி யேழு மணி வேளைக்கு வந்த துரை பிடிச்சு பதினேழு பீரங்கிகள் போட்டான் கோட்டையிலேயும் 17 பீரங்கி போட்டு கப்பலின் கப்பித்தான் முசே புறுகாரை யிறங்கி வந்தான். வந்தவுடனே துரையவர்கள் பேட்டியானவுடனே சிமையிலேயிருந்து கொண்டுவந்த கும்பினியார் காகிதத்தைக் குடுத்தான் அதைத் துரையவர்கள் வாங்கிக்கொண்டு உள்ளே போயி படிச்சப் பார்த்துக் கப்பல் கப்பித்தானைமாத்திரம் அழைத்துக்கொண்டு ரெண்டொரு வார்த்தைக் கண்டு பேசி அனுப்பிவிட்டு அப்பால் காகிதம் பார்த்துப் போட்டு வெளியே கப்பல் கப்பித்தானுடனே பேசியிருந்தார். அப்பால் கோன்சேலி யோர்கள் வந்தவர்கள் யெல்லாம் சும்மா யிருந்து கப்பல் கப்பித் தான் சொல்லிக்கொண்டிருந்த பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்து அவரவர் போனார்கள், இந்த கப்பலிலே வந்த அன்பதினாயிரம் மார்க்கு யென்று சொன்னார்கள். முசே கோசாமுக்கு சீமையிலே ராசாவினுடைய ஒபிசியால் உத்தியோகம் குடுத்தார்களென்றும் முசே புரிகூட முசே கெர்சாமுக்குத் தாழ்ந்து நடக்கவேணு மென்று அவுருத்தியோகம் பெரிய உத்தியோகமென்றும் சொன் னதுமல்லாமல் முசே புரி கும்பினியாரை சேவிக்கவன் அவர் ராசாவினுடைய சேவுகமானபடியினாலே அந்த உத்தியோகத் துக்கும் வெகு தபாத்து யென்றுஞ் சொல்லிக்கொண்டதுமல்லா மல் முசே கெர்சாம் இரு நூறு (200) திறகோம்களை (Drgoons) கூட அழைத்துக்கொண்டு பிந்தின கப்பலிலே ஏறுகிறார்களென்று சொன்னார்கள். இவ்விடத்திலிருந்து போன சென்தோர் (Centaure) என்கிற கப்பல் காப்பை (Cape) யண்டையிலே ஒடைஞ்சபோனதாயும் அதிலே மூனு பேர் மாத்திரம் செத்துப் போனதாயும் மத்தப் பேர் பிழைச்சார்களென்றும் அந்தக் கப்பல் கப்பித்தான் பேர் முசே லெ புத்தென்றும் (La Butte) அந்தக் கப்பலிலே கப்பே கோட்டை யிளகு முதலானது யேத்தி

யிருக்கது யென்றும் அதெல்லாம் சேதப்பட்டுப்போச்சென்றும் சொன்னர்களென்றும் யிதல்லாமல் யிந்தக் கப்பலிலே அன்பது லுதாதுகள் வந்தார்கள் யென்றும் யின்னம் வருகிற கப்பலிலேயும் நூத்தன்பது யறநூறுமாக அஞ்சு கப்பலிவ்விடத்துக்கும் பங்களாத்துக்கு யிந்த வருஷம் நேமிச்சு அனுப்பினர்களென்றும் யிது முதலான சேதி கேழ்க்கப்பட்டுது. யினிமேல் கேழ்க்கிற சேதி எழுதவேண்டியது. யிந்த கப்பலிலேயும் யிளாம் போட்டிருந்தது. (Flamme) முசே லசனே (M. Lassigny) கப்பலிலேயும் போட்டிருக்குது. யினிமேல் பெரியவன் சின்னவன் அறிஞ்சு வாக்குவார்களென்று சொல்லிக்கொண்டார்கள். சீமையிலே பிறன்சு ருசா கப்பல்கள் முஸ்தீத்தாகிறவிடமெல்லாம் தாம்தானே போய்ப் பார்க்குறேனென்றும் பின்னையும் ருச்சிய சீமாச்சாரமெல்லாம் தாம்தானே விசாரிக்குறேனென்றும் சொன்னர்கள் பட்டணத்திலே ஆனல் பிறசைகளுடைய சந்தோஷம் யெழுதி முடியாது. சீமை கப்பல் வந்தபடியினலேயும் திரவியம் வந்தபடியினலேயும் வியாபாரம் முதலானதுகள் யெல்லாம் உண்டாயிருக்கும் வெகு சனங்களுக்கும் பிழைப்பு உண்டாயிருக்கும் யென்றும் நாசறுசங்குவுக்கும் கப்பல்கள் வில்தாராய் வருமென்று பயம் பிடிச்சு ஓடிப்போவானென்றும் பட்டணத்தில் உண்டான செனங்களெல்லாம் சந்தோஷத்தையடைந்து பேசிக்கொண்டார்கள் சந்தர்சாயபுக்கு ஆனல் நாசறுசங்குவை செயிக்க சொலுதாதுகளையும் பெலனையும் விஸ்தாரமாய் வந்ததென்றும் முன்னேயே நாசறுசங்குக்கு பிறன்சுக்காறர் பயம் பிடிச்சு யிருக்கிறதுக்கு யிது மெத்தப் பயமுண்டுபண்ணும் அதின்பேரிலே ஆற்காடும் குடுத்து முசபர்சங்குக்கும் விடுதலை பண்ணிப்போட்டு போருமென்கிற சந்தோஷம் யிப்படி பரஸ்பரம் அவரவர்களுக்கு வந்த சந்தோஷத்தைக் காகிதத்தில் எழுதமுடியாது. இன்றையதினம் மத்தியானம்வரைக்கும் துரையவர்களுக்கும் சீமைக் காகிதம் பார்க்கிற அலுவலைத்தொட்டு யென்னை அழைக்கயில்லை.

சாயங்காலம் அழைப்பிச்சு ஆற்காட்டிலிருந்து யேதாகிலும் சேதி வந்ததாவென்று கேட்டார். விசேஷித்து ஒன்றும் வாயில்லை யென்று சொன்னேன். வர்த்தகர்களை சுறுக்குபண்ணி கப்பல்களுக்கு சாக்கு அழைப்பிக்குறபிறகாரம் பண்ணச்சொல்லி

பிந்த பிடங்களிலே கூட்ட சமையமில்லாமல்ப்போனாலும் சேலம் உடையார்பாளையம் பிதிலே கூட்டுறத்துக்கு ஆகிலும் யோசனை பவானி அழைப்பிப்பாரென்று சொன்னார் நல்லதென்று சொல்லி அப்பால் வற்த்தகரை அழைப்பிச்சு சேலம் உடையார்பாளையம் வடக்கே ஆறணி முதலான குன்னனூர் சயிதாப்பேட்டையில் கூட ஆலோசனைபண்ணி ஓலை மத்தது அனுப்ப திட்டம் சொல்லி அனுப்பினேன்.

**1750 ஹூ ஜூன் மீ 11 உ பிரமோதூத ஹூ ஆனி மீ முதல் தேதி (1 உ) குருவாரம்.**

இத்தனாள் காலத்தாலே துரையவர்களிடத்துக்குப் போய் முசபர்சங்குவைக் கொண்டுபோய் கோட்டையிலே கொண்டு போய் காவலிலே வைத்தார்கள் அதன்பேரிலே நானு கொல்லு கிறேன் என்று கழுத்திலே பிடவையைப் போட்டு றனுக் கொண்டாப்போலேயும் அதிலே அந்த பிடத்திலே சவுக்கி பிருந்தபடியினாலே நாசறுசங்குவினுடைய மனுஷர் பாத்துப் பிடிச்சுக்கொண்டு பிடவையை அவிழ்த்துப்போட்டு நாசறுசங் குக்குப் போய் யெச்சரிச்சார் யென்றும் அவளிப்படிப்பட்ட காரியம் என் செய்யவேணும் யென்று சாவகாசன் முதலான பேரை அனுப்பி தேறுதலை சொல்லி கொஞ்ச நாளையிலே உம்முட மனதின்படிக்கு சீமையும் குடுத்து சீறொப்பாவும் குடுக் கிறேனென்று நாசறுசங்கு சொன்னபடிக்குச் சொல்லிப்போட்டு வந்ததாய் வந்த கபுறை சொன்னேன். மத்தப்படி யிவ்விடத்தில் காரிய பாகங்கள் மெதுவிலே யிருக்கிறதாயவர்வர்கள் சொல்லிக் கொள்ளுகிறார்கள் ஆற்காட்டிலே யிருக்கிறவர்களும் அந்த சாடையிலே யிருக்குறார்கள். விழுப்புறம் திரு வீதி வாங்கத்தக்கதாக சிப்பாயிகளை அனுப்பி சத்து சுருக்குப்பண்ணாமலே யல்லாமல் காரியமில்லை யென்று சொன்னேன் நல்லது அப்படியே செய்வோமென்ற சொன்னார்.

**1750 ஹூ ஜூன் மீ 12 உ பிறமோதூத ஹூ ஆனி மீ 2 உ புறுகுவாரம்.**

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்கு சின்னதுரையைக் கண்டு பேசவேணுமென்று போனவிடத்திலே சின்னதுரை கோட்டையிலேயில்லாத போனபடியினாலே அப்பாலவர் யெவ்

விடத்திலேயிருக்கிறார்களென்று விசாரித்தால் வெள்ளிக்கிழமை யானபடியினாலே சாவடி ஞாயத்துக்கு போனாரென்று சொன்ன படியினாலே துரையவர்கள் வளவிலே வந்தேன். அப்பால் நேத்துராத்திரி யெட்டுமணிவேளைக்கு வந்த சிதம்பரம் முதாம் மியா காகிதத்தைப்படிச்சுத் துரையவர்களுக்கு சொன்ன தென்னவென்றால் நீங்கள் தயவுபண்ணி அனுப்பின காகிதம் வந்து படிச்சுப்பார்த்துக்கொண்டு மிகுதியும் சந்தோஷமாச்சுது அந்தக்காகிதத்தில் ஆனந்தறங்கப்பிள்ளை புவனகிரிதாலுக்கு யிசார்பண் நிமித்தமாகவும் சிதம்பரம் தனக்கா பணம் நிமித்திய மாகவும் யெழுதினது நீ சட்டை பண்ணாமல் போனாயென்றும் எழுதினீர்கள். அப்படி ஒருக்காலும் நான் மத்ததும் யிருக்கத் தக்கதில்லே புவனகிரி தாலுக்கா யிசாரூன் செந்தமானபடி யினாலே என் காருபாமா உங்கள் ஆனந்தறங்கப்பன் வசத்திலே யிருக்கிறபடியினாலே அந்தப்படிக்கு நடந்துக்கொள்கிறேன் சிதம்பரம் தனக்கா காரியத்தோடே சேந்ததுக்கு எசமான் கீழ் சேவுகாமானபடியினாலே அவ்விடத்திலிருந்தும் எழுதி வருகிற படிக்கி தங்களுக்கு எழுதியனுப்பிவிக்கிறேன் யிதல்லாமல் மமுதல்லிகான் மனுஷர்களும் வந்து பணம் கொடுக்கச் சொல்லி கேட்டுக்கொண்டுயிருக்கிறார்கள் யிது உங்கள் மனுஷர் யிங்கே யிருக்கிறவர்கள் அறிவார்கள் யென்று எழுதி அப்பால் உபசார மாய்யெழுதி சமாச்சாரம் சொன்னேன் அதுக்குத் துரை அவர் கள் சொன்னது உங்கள் மனுஷர்கள் யென்ன யெழுதினார் களென்று கேட்டார். அவன் குமக்கு அனுப்பிவிக்கச்சொல்லி ஆற்காட்டுக்கு யெழுதினான் அந்த குமுக்கு வருகிற பரியந்திரம் தப்பு உபசாரங்கள் எழுதிக்கொண்டிருக்கிறான். அதல்லாமல் யிவன் தட்டுமுட்டு சமஸ்தமும் தினம் கோட்டை சேத்தான பின்னையும் ஊரிலேயிருக்கிறவர்களை ஆண்மையான சமஸ்தமான பேர்களையும் அழைத்து பிறான்சுக்காரர்களுக்கும் யெங்களுக்கும் அதிலெழிச்சியிருக்கிறமட்டுக்கும் யிருந்தாப்போலே யிருந்து பவுன்சுகளை அனுப்பிவிச்சால் உங்களுக்கு அப்போவருத்தமா யிருக்கும் ஆனபடியினாலே அவர் தட்டுமுட்டு குஞ்சு குழந்தை களைக் கொள்ளிடத்துக்கு அக்கரையிலே அனுப்பி ஆண் குழந்தை களை மாத்திரம் யிருங்கோளென்று சொன்னானபடியினாலே யிப்போ யெழுதின காகிதத்தை நம்பப்போகாது யென்று சொல்லி ஒரு வேளையிப்படிப்பட்டவன் போய் விட்டாலும்

போய் விடுவான் ஆனபடியினாலே யெச்சரிக்கையாயிருந்து அதுக் கேத்தபிலன் போய் உளுந்தூரவைத்துக்கொண்டு பணம் வாங்கிப் போகவேணுமோ அல்லாமல் நல்ல பேச்சிலே குடுக்கிற சாடை கால் வரிசை அரை வரிசை குடுக்கவேண்டியத்திலே குடுத்தும் மைத்ததுக்கு கணக்குப்பார்ப்போம் உண்டானது குடுப்போமென்று அல்லோ நடத்தவேணும் அந்த சாடையில்லாதபடியினாலே அவனுக்குடுக்கிற மனதுயில்லை. அதைத்தொட்டு ஆகிற கூட்டுபெலனை பார்க்கிறது அதிலே சத்துயில்லாமல் போனால் பாயை விரிப்போம் யிப்படி பத்து வருஷம் கஷ்டப்பட்டாலும் லக்ஷம் ரூபாய்கப்படுமா அகப்படயில்லையென்ற யோசனை பண்ணிக்கொண்டிருக்கிறோமென்று சொன்னதுக்கு பதில் காகிதம் யெழுதியனுப்பு அதின் பேரிலே பாத்துக்கொள்ளுவோமென்று சொன்னார் பதிலுத்தாரம் யெழுதச்சொன்னது உன் உடம்படிக்கைப்படிக்கி உன் பேரிலே வரவேண்டிய பணத்துக்கு ஆனந்தரங்கப்பிள்ளை மனுஷன் கணக்குக் காண்பிப்பான் அந்தப்படிக்கி அவன் கையிலே கொடுத்து ரசீது வாங்கிக்கொள்ளச்சொல்லியும் சிதம்பரத்துப்பணம் உன் எசமானுக்கு யெழுதி அனுப்பினாலென்ன யெழுதி அனுப்பாவிட்டாலென்ன நீ ஒப்புக்கொண்ட மட்டுக்கும் நீ கொடுத்துத் தீரவேணும் அந்தப்பணம் நீர் அனுப்பினதுபோக மத்தப்பணம் சீக்கிரமத்துக்கு அனுப்பச் சொல்லியும் எழுதச்சொன்னார் அந்தப்படிக்கி யெழுதி என் காகிதமொன்று அதுக்கேத்தபடி யெழுதி களச்சியப்பிள்ளை பாலொசிபண்டிதனுக்கும் யெழுதியனுப்பிவிச்சேன். அப்பால் அப்துல்றயிமான் வந்தான் அவன் தன் மனுஷன் ஆற்காட்டிலே யிருந்து யெழுதின காகிதமொன்று பாரீசு காகிதம் கொண்டு வந்து படிச்சுக் காண்பிச்சு சொன்ன வயணம்.

ஆற்காட்டு கில்லா காலிபண்ணி இதாயத்து மொகதின் கானைக் கொண்டுபோய்க் கோட்டையிலே வைத்து தணக்கா சானுவை கூடக் கொண்டுபோயி வைத்து அப்பாலே போனார் மழுதல்லிகானையும் கோட்டையிலே கானே வைத்தாரென்றும் மத்தக் கில்லேதாறர்கள் ஆர் பணங் குடாமல் சண்டித்தனம் பண்ணுகுறார்களோ அவர்களையெல்லாம் காவல் வைக்குறதாய்க் காணுது யென்றும் நாசறசங்கு தக்நாசாயபுக்கு காகிதம் எழுதி ரெண்டு டலாயித்தாக்களையும் வந்தவாசிக்கு அனுப்பினதுமல்லா

மல் அல்லிநக்கிமுக்குக்கூட தாக்கீது பண்ணினதென்னவென் ருல் நீங்கள் வந்தவாசியண்டையிலே உங்கள் மொகத்துமா பைசல் பண்ணிக்கொள்ளச்சே சந்தாசாயபை அழைக்கிறே மென்று யெல்லாருக்கும் அந்தப்படிக்கு அவருக்கும் ஒரு கில்லா வும் சாகீரும் குடுக்கவேணுமென்றும் ஒருவேளை சந்தாசாயபு வருமல் போனல் அவர் பெண்சாதி வகையரு அவர்கள் தாலுக்கா யிருக்கிறவர்களை ஒப்பிச்சுப்போடுகுறோமென்றும் யிந்தப்படிக்கி நீங்கள் கருறு பண்ணிக்கொண்டபடிக்கி சந்தாசாயபுவையும் அழைப்பியாமல் போனீர்கள் அல்லது அவர் பெண்சாதி நீய யாகிலும் ஒப்பிச்சுப்போடுறோமென்று கருறு பண்ணினபடிக்கு ஒன்றும் நடப்பியாமல் போனீர் யிப்பவும் சந்தாசாயபுவை அழைப்பிக்குறது அல்லது அவர் பெண்சாதியை கொண்டு வந்து ஒப்பிச்சுப்போடுறது யிதில் ரெண்டிலொன்று அதி சீக்கிரமாய் அனுப்பச்சொல்லி எழுதினுரென்றும் தக்காசாயபு அண்டைக்கு ரெண்டு டலாய்த்தர் வந்தார்களே அவர்கள் மனுஷர்களும் தக்காசாயபு மனுஷர்களும் புதுச்சேரிக்கு வருவார் கள் வந்தாலதுக்கு யெடம்குடாமல் வந்தவர்களே முகபங்கம் பண்ணி அனுப்பி விச்சால் அதின்பேரிலே சந்தாசாயபு வருவார் என்கிறபறவசமாய் சயராமபண்டிதரை அங்கே அனுப்பிவிச்சு பேசினபேச்செல்லாம் சயருமபண்டிதனும் வந்தவாசிவிட்டுப் பயணம் பிறப்பட்டபிற்பாடு வந்தபடியினலே யிவர் வர ரெண்டு நாளைக்கு முன்பாக தக்காசாயபு வந்து இந்தவுடன்படிக்கையைப் பண்ணிக்கொண்டு போனபடியினலே சயருமபண்டிதர் வந்து பேசிக்கொண்டு வந்த காரியம் மெதுவாய் விட்டுவிட்டார்கள் எப்படி சந்தாசாயபு காரியம் தக்காசாயபுவைத்தொட்டுகெட்டுப் போனல் நம்முட பிறன்சுக்காரர் பயமிருக்கிறபடியினலே யிந்த மட்டுக்கிகிலும் பேச்சுவார்த்தை நடக்குது யில்லாவிட்டால் தக்காசாயபு நடப்பிச்ச காரியம் அதுக்கு சந்தாசாயபு பேச்சு நிறுவாகத்திலே யில்லே யிந்தச் சேதியெல்லாம் சயிதுசாயபு சொல்லி எழுதச் சொன்னுரென்றும் இன்னம் சந்தாசாயபு வருதே போனல் காரியம் யெப்படியும் நிறுவாகத்துக்குவர சுவாமி தயவு பண்ணுவாரென்றும் சந்தாசாயபு பெண்சாதியை அதிசீக்கிறமாய் புதுச்சேரிக்கு அழைப்பிச்சுக்கொள்ளச்சொல்லி யும் நாலுநாளை றக்குறைய அனுகூலமாகப் பார்க்கிறேன் யென் றும் சயிது சொன்னுரென்று யெழுதினதுமல்லாமல் சயிதுசாயபு

மெத்த விசாரமாய் நாசறுசங்கு தறுபாறுக்கு கூடப்போகாமல் யிருக்கிறாரென்றும் சயிதுலசுக்கர்கான் வகையறா மன்சபதாரர்கள் யெல்லாம் போனார்களென்றும் தோப்புக்கான வகையறா சாமானு களெல்லாம் சிறிது பவுன்சைக்கூட்டி முன்னுதாக அனுப்பி விச்சாரென்றும் பயணம் போறவன் தானென்றுமிதிலே ஒரு தமுக்குப்போட்டுப் பத்துப்பணம் விசேஷிச்சு கில்லேதாரர் கையில் வாங்கவேணுமென்றும் போய்விட்டார் யென்றும் தான் சாவணிபண்ணுகிறானென்றும் அப்துல்நபிக்கான் யிமமத்து பாதூர்கான் அப்துல்வசீபுகான் வகையறா பட்டாணிகள் தங்க ளூருக்குப் போகவேணுமென்றும் பயணம் கேழ்க்கப்போன துக்கு யெட்டுப் பத்து நாளையிலே நானும் பயணம் பிறப்படு கிறப்பேர்லேயாச்சுதே அதிலே நீங்கள் முன்னேயும் நான் பிற கேயும் யென்னவென்று சொன்னதுக்கு நீங்களித்தனை சறூறாய்ப் பிறப்படவேண்டியதில்லையே யிதோ பிறப்படுகிறோமென்றாலும் ஒரு மாசஞ் செல்லும் ஆனபடியினாலே நாங்கள் முன்னே போறோமென்று சொன்னார்களாம் அதுக்கு தோப்புகாரனை அனுப்பிப்போட்டு நானிருப்பேனு யிந்த ரசபு மீ 15 உ பயணம் பிறப்படலாமென்று சொன்னதாகவும் ஆனால் நல்லதென்று சம்மதிச்சுக்கொண்டு வந்ததாகவும் இந்தப்படிக்கு எழுதியிருந் ததுமல்லாமல் அரிசி தினுசுகள் விலையுங்கூட எழுதியிருந்தது மிருந்தசல்கானை நைதுபண்ணினார்களென்று மிது முதலான சேதி எழுதியிருந்தது யிந்த சேதி கேட்டவுடனே துரையவர் கள் சொன்னது அப்துல்றயிமானைப் பார்த்து பதிலுத்தரம் யெழுதுகிறது இந்தச் சேதியெல்லாம் துரையவர்கள் நகைச்சுக் கொண்டு யிருந்தார் சிறு பிள்ளை விளையாட்டுப்போலே யிருக் குது சாறுயக்குடியருடைய காரியமாய்க் காணுதேயல்லாமல் நிறு வாகியா யிருந்து துரைத்தனம் பண்ணுகிறவன் காரியமாய்க் காணவில்லை யென்று யெழுதச்சொன்னார் அதின்பிற்பாடு மறு படியுமழைச்சு சொன்னதென்னவென்றால் தார்ப்புபணி மதக்கரி பிரிக்கி நாசறுசங்கு சாடை யென்றெழுதச்சொன்னார். அந்தப் படிக்கி மதனாந்தபண்டிதரை எழுதிக்கொடுக்கச்சொல்லி அப்துல் றயிமான் தான் அனுப்புகிறேனென்று வாங்கிக்கொண்டுபோனான்.

அப்பாலந்தப் பிறச்தங்கம் நின்று வழுதாவூர் கில்லா வாங் கினாலே அல்லாமல் காரியமில்லை யென்று முசபர்கான் சொன் னான். துரை யெதினாலே என்றார். தக்காசாயபு தன் காரியம்

நிமித்தியம் யிவ்விடத்துப் பயம் யிருந்ததைச் சத்து மெதுவிலே சொன்னதினாலே காரியம் சத்திபாய்க் கெட்டுப்போச்சுது. யிப்போ சத்து சுறுக்குப் பிறக்குது. அதுக்கு வழுதாவூர் கோட்டையை வாங்கினவர்களுக்கு சுறுக்குப் பிறந்து முன் சமாதானம் பேசின சாடையைத்தொட்டு சும்மாயிருந்தார்கள். அது நாம் மெதுபண்ணினபடியினாலே அவர்கள் கலாபம்பண்ண ஆரம்பிச்சார்கள். இனிமேல் விஸ்தரிக்கும் யிப்போவேதானே சமாதானம்பண்ணவேணுமென்று அவர்களுக்கு புத்தி தோத்தி காரியம் அனுகூலத்திற்கு வரும் யில்லாவிட்டால் இனிமேல் நாசறுசங்கு நமக்கொருக்காலும் காரியம் குடுக்கமாட்டானென்று சொன்னதுமல்லாமல் சந்தாசாயபு உங்களுடனே யிப்படி செய்து திருவிதி விழுப்புறம் வகைபறு பற்காணுக்களும் சப்தி பண்ணினால் அடங்குமென்றும் சப்திச்செய்துக் காரிபம் எட்டு நாளைக்குள்ளே ஆகுமென்று சொல்லச்சொன்னாரென்று சொன்னான். ஆனால் விழுப்புறம் வாங்குறதுக்கு அசேனையும் பிறநூறு குதிரை சுவார்களையும் மூன்னூறு சிப்பாயிகளும் இரண்டு பீரங்கிகளையும் எடுப்பிச்சுக்கொண்டு போய் திருவிதிக் கோட்டையைப் போய் வாங்கி வெள்ளைக் கொடி போட்டு எழுதி அனுப்பிவிக்கச்சொல்லியும் அப்பால் நடக்கவேண்டியதுக்கு யெழுதியனுப்புகிறோமென்றும் சேக்குயிபறுமையும் நூறு குதிரை சுவார்களையும் மூன்னூறு சிப்பாயிகளும் விழுப்புறம் போய் வாங்கி வெள்ளைக்கொடி போட்டு அனப்துசிபாயிகளை மாத்திரம் வைத்துப்போட்டு வரச்சொல்லியும் இந்த ரெண்டு ஸ்தானங்களுக்கும் அமுல்தாரர்களையும் அதுகளுக்கு சேவுகர்களையும் அனுப்பச்சொல்லி என்னுடனே சொன்னதுமல்லாமல் பாங்கிப்பேட்டை வெங்கட்டம்மாள்பேட்டை முதலான யிடங்களிலே நம்முட வெள்ளைக் கொடி போட்டு அமுல்தாரர்களையும் போடச்சொல்லிச் சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பால் சேக் அசேன் சேக்குயிபறும் அரிசி வேணும் யென்று சொன்னதுக்கு என்னுடனே அரிசி அனுப்பச்சொல்லி துரை சொன்னார் அந்தப் படிக்கி அ[illegible]விக்குறோமென்று சொன்னேன். அப்பால் சேக்குஅ[illegible] சேக்குயிபறும் அனுப்பிவிச்சுக்கொண்டார்கள். அவ்விடத்துக்கனுப்புகிற குமாஸ்தாக்களும் நிசானிக்குப் பிட[illegible]யும் குடுத்து அரிசியும் கூட குடுத்து தா[illegible]ள் போனவிடத்தில் நடக்கவேண்டிய வயணமென்னவென்று கேட்டார் துரை

யவர்கள் சொல்லியிருக்க ஓடுதி கோட்டை வாங்கினவுடனே தானியதவசம் பணம் காசு கொள்ளையிடக்கவையில்லை தானியம் சாப்பாட்டுக்கு மாத்திரம் யெடுத்துக்கொள்ளுகிறது முதலான பத்திரங்கள் சொல்லவேண்டியதென்னமோ அதெல்லாம் சொல்லி அனுப்பிவிச்ச விட்டுக்கு றங்கோபண்டிதன் தம்பி கேசவறுயன் இவர்களிரண்டு பேர்களுக்கும் யிரண்டு சீமைக்கும் அமுலுக்கும் சன்னதும் யெழுதிக் குடுத்து நூத்தன்பது சேவுகர்களும் கூட்டிக்கொடுக்கவேண்டிய பங்கிறவாடையும் தீத்து சிலவுக்கு சம்பளம் முதலானதுகள் குடுத்து கொடி தச்சு வழெட்டு பத்துக் கொடி ஒருமிக்கக் கொடுத்து சமீபத்திலிருக்கிற சீர்மைகள் கூட சபத்திபண்ணி அமுல்பண்ணச்சொல்லி சன்னது யெழுதிக்கொடுத்து றவானுபண்ணி அனுப்பிவிச்சேன். அவர்களும் அனுப்பிவிச்சுக்கொண்டு இத்தனாள் சாயங்காலம் றவானுப் போனார்கள். இத்தனாள் கோட்டையிலே வந்து நிறுத்துப் பார்க்க அன்பதினாயிரத்தன்பத்தாறு சில்லரை மார்க்கு கண்டதென்று அதுக்கு டங்காசாலைக்கு முப்பத்தையாயிரத்தன்பத்தாரே சில்லரை மார்க்கு நிறுத்து டங்காசாலைக்கு விட்டு சீனத்துக்கு அனுப்புறதுக்கு பதினய்யாயிரம் மார்க்கு நிறுத்து அப்பால் வைத்துக்கொண்டதாகவும் டங்காசாலையார் வந்து கபுறு சொன்னார்கள்.

**1750 ஸு ஜூன் மீ 14 உ (13) உ பிறமோதூத ஸு ஆனி மீ (4) (3) உ சனிவாரம்.**

இத்தனாள் காலத்தாலே ஆற்காட்டிலே யிருந்து பீருமகம்மது எழுதின ஓலை வந்தது. அந்த ஓலையிலே எழுதியிருந்தது. முசபர்சங்கு அண்டைக்கு மகம்மது அன்வார்கான் சானவர்சுகான் மேரிருபண்டிதன் காசிதாயிம் ரூமதாசுபண்டிதன் முதலான பேர்கள் போய் சந்தாசாயபுவை அழைப்பிச்சாலும்முடமனதின்படியே சீமை குடுக்கிறேமென்று சொன்னதாகவும் அதுக்கு முசபர்சங்கு எனக்கு காத்திர்சம் பண்ணினால் அதின்பேரிலே சந்தாசாயபை அழைப்பிக்கிறேன் என்று சொன்னதும் அதின்பேரிலே பின்னையும் பேச்சு வார்த்தை நடந்துதென்றும் முசபர்சங்குவுக்கு பதினோராந் தாரிக்கு சிரோப்பா குடுக்கப்போறார்களென்கிற வதந்தியாக யிருக்கிறதென்றும் நாசறுசங்கு பதினஞ்சாம் தாரிக்குப் பயணம் போறானென்றும் மிருத்தி சல்லிகானுக்கும் மீருசத்துவுக்கும் இதுவரைக்கும் அனுகூலமா

பிருந்ததே யிப்போ பிகாடிச்சு வெளிப் பிறப்பட்டார்களென்றும் மாபூச்கான் மமுதல்லிகான் வீட்டுக்குப் போய் சீமையாலல் நிப்பாத்தமாய்ப் போயிருக்கிறது பிறன்சுக்காறர் நல்ல சிப்பாயிகள் அவர்கள் சத்துருவாய் சுபாவுக்கு வருகிறவனை கொல்லுகிறோம் ராச்சியமெல்லாம் நிப்பாத்தம் பண்ணுகிறோம் யென்று உளுக்கார்த்துகொண்டு யிருக்கிறதுமல்லாமல் யிப்போ சிமை கட்டிக்கொண்டே வருகிறார்கள் ஆனபடியினாலே கையிலே யிருக்கிற பணம் கொடுத்துக் கேட்கப்போறதேயல்லாமல் கிரிகையில்லை யென்று சொன்னதின்பேரிலே மமுதல்லிகான் சீர்மை தனக்குத் தவையில்லை யென்று சொல்லிப் போனானென்று கந்தனூர் யிம்மத்துபாதூர்கான் சிறிய தகப்பன் காலிபண்ணிப் போனதின்பேரிலே அவனும் நடப்பை அப்துல்நபிகானும் வூருக்குப் போறோமென்றும் கேட்டதின்பேரிலே நானும் பயணம் வருகிறேனே யிதுக்கு முன் பட்டணம் பிறப்படுவான் என்றும் மொசகூபு பண்ணினதாகவும் இப்படி காலாச் சமாச்சாரமும் எழுதி மமுது தாக்கல் கிறிது உபசாரமாய் சொல்லி தன்பேரில் சத்து தயவாயிருக்கத்தக்கதாக தெரியப்பட யெழுதியனுப்பச் சொன்னானென்றும் எழுதியிருந்தது. அக்கச் சேதியாம்படியே துரையவர்களுடனே சொன்னதுக்கு முசபர்சங்கு புதுச்சேரிக்கு எழுதியனுப்பி அவரைக்கொண்டு நடப்பிச்சக்கொள்ளச் சொல்லிச் சொல்லாமலிப்படி யேன் சொன்னானென்று சொன்னார். அப்படித்தான் சொல்லிருப்பானென்று சொன்னேன் ஆனாலிந்த காரியம் முசபர்சங்கு மாரிபத்திலே தீர்ந்துபோனதாய்ச் சொன்னேனே அப்படித்தானே வந்துதென்று நிஷ்கருஷையாய்ச் சொன்னார். நானிப்படி நடந்தால் யிதைவிட உங்களுக்கு கீர்த்தி வேறேயில்லை சொன்னது மெய்தானென்று ஒத்துக்கொண்டார். இதிலே சேக்குயிபறும் விழுப்புறத்திலே நேத்து சாமத்துக்கு முன்னே போய் வெள்ளைக் கொடி போட்டோமென்றும் நாங்கள் போறதுக்கு முன்னே அவ்விடத்து அமுல்தாரன் சேதி கேட்டு ஓடிப்போனானென்றும் ஆயத்திலே யிருந்த கணக்கப்பிள்ளை முத்தப்பிள்ளை யென்கிறவன் மேளதாளத்துடனே யெதிரே வந்து அழைத்துப் போய் கோட்டைக்கு கூட யெங்கள் வசம் பண்ணிப்போட்டு அவனும் வூர்க்குடிகள் கூட ருசுவாயிருக்கிறார்களென்றும் லாலாப்பேட்டை வற்த்தகன் கண்ணடிபவிஞ்ச வாருது ரெண்டு யானை பறங்கிப்பேட்டையிலே வாங்கி லாலாப்

பேட்டைக்கொண்டுபோகிறதற்கு நேத்து ருத்திரி விழுப்புறத்தி
விறங்கிபிருந்து நாங்கள் வந்த சேதி அப்பால் பயணம் சாகிப்
போகச்சே சேதி கேட்டு ஓடிவந்தோமென்றும் அந்த ஆனையை
யும் ஓட்டிக்கொண்டு நானும் பவுன்சும் அன்பது சிப்பாயிகளை
மாத்திரம் வைத்துப் போட்டுவந்து விடுகுறோமென்றும் எழு
தின ஓலை வந்து அந்த சேதி துரையுடனே சொன்னதுக்கு
ஆனையை ஓட்டிக்கொண்டு சிக்கிரமாய் வந்து சேரச்சொல்லி
எழுதியனுப்பச் சொன்னார். அந்தப்படி யெழுதியனுப்பிவிச்
சேன். முசபர்கான் துரையவர்களுடனே உத்திரமல்லூர் மியா
சாயபுவைப் பிடிச்சவந்தால் லக்ஷம் இரண்டு லக்ஷம் ரூபாயகப்
படும் என்று சொன்னதின்பேரிலே அவர் போய் பிடிச்சுவரச்
சொல்லி உத்தாரங் குடுத்தாரென்று நாளை யிங்கேயிருந்து
சிப்பாயிகள் போறார்களென்றும் நாளையன்றைக்குப் போவார்க
ளென்றும் யிப்படியாக அவர்களண்டையிலே குதிரை சிப்பாயி
கள் பேசியிருந்தார்களென்கிற கபுறு நம்முட பாத்திமி அறுக்
காறுகள் வந்து சொன்னார்கள். யிதல்லாமல் மியாசாயபுவைப்
பிடிச்சுக் கொடுக்கிறோமென்று அவ்விடத்து சேவுகர்களுடைய
நாயகப்பாடிமாரும் உத்திரமல்லூர் குடிகளும் முசபர்கானண்
டைக்கு வந்து அவ்விடத்து மார்க்கமெல்லாம் சொல்லி நீங்கள்
யிறநூறு முன்னூறு குதிரைக்காறரைமாத்திரம் கூட்டினால்
நாங்களுஅவாயிருந்து பிடிச்சு ஒப்பிச்சுப்போடுகிறோம் என்று
சொல்லி முசபர்கானுக்குச் சொல்லி காத்துக்கொண்டிருக்கிற
தாயி சொல்லிக்கொண்டிருந்ததாகவும் சொன்னார்கள்.

கூடலூரிலிருந்து முன் அழைப்பித்திருந்த இரண்டு பீரங்கி
களையும் சிறிது துப்பாக்கிகள் மருந்து குண்டு வகையறு அழைப்
பிச்சு முஸ்தீதுபண்ணிக்கொண்டு யிருந்து சேக்குஅசேன்
போயிறங்கினவுடனே சண்டை பண்ணினதும் அவர்களும்
கோட்டையிலே முன்னூறு முன்னூத்தன்பது துப்பாக்கிக்காறர்
மட்டுக்கும் யிருந்தபடியினாலே யிவர்களும் போய் கிட்டி சண்டை
பண்ணின அவர்கள் யெக்கா யெக்கியாய் போகக்கூடாமல் போச்
சுது. இதல்லாமல் லக்கு யேருகிறதுக்கு யெத்தினம்பண்ணினால்
யேணி யில்லாமல்ப்போய் அதின்பிற்பாடு முஸ்தீப்பு பண்ண
ணர்களென்று நம்முடவர்களுக்கு பத்து பேர்களுக்கு மாத்திரம்
காயம் பட்டுதென்றும் இரண்டொருத்தரும் சாவு காயமென்றும்
கோட்டைக்குள்ளே யிருக்கிற பேர்களில் நாயக்கன் பாட்டிகள்

இரண்டொருத்தர் வந்து உள்ளபடி பேசிப்போட்டு போனதாக வும் சேதி வந்தது பிதல்லாமல் அவர்கள் சம்மதியாய் வந்து சொன்னால்தானுச்சுதே யல்லாவிட்டால் நாளைக் காலத்தாலே லெக்கை யேறி கிசான் போட்டு அந்தச் சமாச்சாரம் எழுதி யனுப்புறோமென்றும் எழுதியிருந்த சேதி துரையவர்களு டனே சொன்னேன். அப்பாலே லோகாப்பிறமமாய்ப் பேசி யிருந்தார்.

**1750 ௵ ஜூன் ௴ 15 ௳ பிரமோதூத ௵ ஆனி ௴ 5 ௳ சோமவாரம்.**

இத்தனுள்காலத்தாலே ஆறரை மணிக்கு காரைக்காலைச் சேர்ந்த கிறமங்கள் குத்தகைப் பட்டயம் எழுதின காகிதங்கள் பார்க்கவேணுமென்று நானும் தானப்பமுதலியும் முசியே திலார்சு வீட்டுக்குப் போய் அவரைக் கண்டு அந்தக் காகிதத் தைப் படிக்கச்சொல்லிக் கேட்டுக் காரைக்காலிலிருந்து அழைப் பிக்குற காரியத்துக்கு தீர்வை குடுக்கவேண்டியிருக்குமா வென்று கேட்டோம். அதுக்கு குடுக்கக் கவைபில்லை யென்று யெழுதியிருக்குதென்று சொன்னான் அதைத்தொட்டு தெரிந்து கொண்டு இந்தக் கிறமம் குத்தகைப் பட்டயம் எழுதினதுக்கு எப்போதும் ஒன்று குடுக்கிற வாடிக்கை யில்லை. யிப்போ யிவ னேதாகிலும் கேழ்க்கிறானே யென்று ஆலோசனைபண்ணி தானப்பமுதலி முப்பது ரூபாய் குடுக்கிறதுதான் யிவன் பெரு ஆசைக்காறன் என்று சொன்னார். நானுமதுக்கு யெப்படி சம்ம தியாச் சொல்லுகிறீரோ அப்படி யெனக்கு சம்மதி யென்று சொன்னேன். அந்தப்படிக்கி குடுத்து அனுப்புகிறோமென்று சொல்லிப்போட்டுப் பிறப்பட்ச்சே முசியே கிலியார் அழைக் குறான் யென்று சேவுகன் வந்து அழைச்சான் அங்கே கோட் டையே போய் முசியே கிலியாரைக் கண்டு பேசினதுக்கு அவர் துரையவர்கள் யென் கையில் மூவாயிரத்தெழுநூத்தி நாற்பத்தி ரெண்டு 3742 விறாகன் புதுச்சேரி முன்னயிருக்கிறது அதை உன் கையில் குடுத்து மாத்திப் போடச்சொன்னார். வாங்கிக்கொண்டு போவென்று வராகன் பையை யெடுத்துக் கொடுத்தான். ஒரு ரசிதொன்று எழுதிக் கொடுத்துப்போட்டு வறாகனை வாங்கிக் கொண்டு பிறப்பட்ச்சே துரையவர்களழைக்கிறார்களென்று சேவுகன் வந்து அழைச்சான். அப்பால் துரையவர்கள் வீட்டே போனவுடனே திருவிதி சேதி வந்துதாவென்று கேட்டார்.

சேத்து சாயங்காலம் வந்துதே அதுவே சேதியல்லாமல் அப்பால் சேதி வரயில்லை. பின்றைத்தினம் வருமென்று சொன்னேன். அப்பால் சேக்குயிபறாம் வந்து முசரபண்ணி ஆனை ரெண்டும் கொண்டுவந்து முன்னே நிறுத்தி இது வற்த்தகர்களுது யிவர்கள் பரங்கிப்பேட்டையிலே கொண்டு லாலாபேட்டைக்குக் கொண்டு போறார்கள் தண்டிலே வித்தும்பொருட்டா யென்று சொன்னான் றங்கப்புள்ளை இந்த இரண்டும் கட்டுவிச்சு அவர்களைத்தானே அது கூறுக்குச் சாரு வகையறா விசாரிக்கச்சொல்லு. விசாரித்துக்கொண்டு போகச்சொல்லுவோமென்று சொன்னார். நல்லது யென்று சொல்லி ஆனையைக் கொண்டுபோய் முசபர்சங்கு ஆனையுடனே கூட கட்டிவிக்கச்சொல்லியும் ஆனையின் பிறகே வந்த வற்த்தகர் மனுஷர்களைத்தானே ஆனைச் சிலவு போட்டுக்கொள்ளச் சொல்லிச்சொல்லி அனுப்பிவிச்சேன். அப்பால் சேக்குயிபறாம் துரையுடனே தாங்கள் விழுப்புரம் போனதும் முன் அமுல்தாரன் ஓடிப்போனதும் அங்கே ஆபத்தின்பேரிலே யிருந்த முத்தப்பிள்ளை யென்கிறவன் மேள தாளத்துடனே எதிரே வந்தழைத்துப் போய் கோட்டையும் ஒப்பிச்சு அமுலும் ஒப்பிச்சான் அப்பால் விழுப்புறம் கோட்டையிலே ஒரு கொடியும் போட்டேன். அன்பது சேவுகரை வைத்துப்போட்டு இந்த ஆனை சாவுக்காரருது ஓட்டிப்போற சேதி அறிந்து மடக்கி வரச் சொல்லி ஓட்டிவந்தேன் என்று சொன்னதுக்கு வற்த்தகருடமை நடத்தேன் யென்று சொல்லி வேறே கட்டி சிலவு போட்டுக் கொள்ளச்சொல்லி விசாரித்துக்கொண்டு போகச்சொல்லுவோமென்று சொன்னார். அந்தப்படித்தான் சொல்லிப்போகச் சொன்னேன் யென்று சொன்னபிற்பாடு சேக்குயிபறாமைப் பார்த்து உன் சிப்பாயிதனை அழைத்துக்கொண்டு திருவிதிக்குப் போவென்று சொன்னார். அதுக்கு சிப்பாயிகள் சம்பளம் குடுத்தாலே அல்லாமல் போறதில்லை யென்று சொல்லுகிறார்களென்று சொன்னதுக்கு சேக்குயிபறாமை கோபிச்சுக்கொண்டார். அப்பால் அவன் வீட்டுக்குப் போனான்.

இத்தனாள் பகலைக்கு மேலாக பனிரெண்டு மணி வேளைக்கு திருவிதி கோட்டை லக்கை யேறிப் பிடிச்சோமென்று சமாச்சாரியார் காகிதம் கொண்டுவந்து குடுத்து சமாச்சாரம் சொன்னார் அப்போ பனிரெண்டு மணி அடிச்ச அரை மணி வேளையானபடியினாலே துரை சாப்பிடுகிறதுக்கு உளுக்காறப்போற வேளை

யானபடியினாலே, சமாச்சாரியார் திருவிதி கோட்டையை வாங்கின சேதி கொண்டுவந்தாரென்று சொன்னேன். பின்னேரம் ரங்கினார்களென்று கேட்டார் இத்தனாள் சூரிய உதயமாக ரெண்டு நாழிகை எ..றச்சே லக்கை யேறி சூரிய உதய வேளையிலே வெள்ளை நிசான் போட்டார்கள் கொடி போட்டவுடனே இருபத்தொரு வேட்டு பீரங்கி சுட்டு வில் லருவாய்க் கூப்பிட்டார்களாம். சேக்கசேனுக்கு உதட்டிலே ஒரு ரவைப் பட்டு ரெண்டு பல்லசையுதாம் கில்லேதாரன் தப்பிச்சுக்கொண்டு ஓடிப் போய்விட்டான் அவன் திவானா யிருந்தவனொருத்தன் அகப்பட்டானாம் அவன் கையிலே தேவனாம்பட்டணம் கொவற்ணதோர் யெழுதின காகிதம் ஒன்று யிருந்தது மாபூசகான் எழுதின காகிதமொன்று யிருந்தது. அது ரெண்டும் அப்துல்றயிமானுக்கு சேக்கசேன் அனுப்பிவிச்சான். அந்தக் காகிதம் வரும் அது பாரத்தால் தெரியுமென்று சொன்னதுக்கு பெரு சந்தோஷமாச் சுது சந்தாசாயபுக்குச் சொல்லி அனுப்பு இந்தச் சேதி நாசறு சங்கு கேட்டால் கட்டிவைத்துக் கழிவான் என்று சொல்லி நீயும் சாப்பிட்டு வா யென்று சொல்லி அவரும் சாப்பிடப் போய் உளுக்கார்ந்தார் நானும் வீட்டே வந்தேன்.

அப்பால் மூணு மணிக்கு துரையழைச்சனுப்பிவிச்சு சாமரேகுகெரயும் (M. Sombreuil) இருபது சொல்தாது வெள்ளைக்காறரும் பத்து சட்டைக்காறரும் அன்பது சிப்பாயிகளும் போறார்கள் அந்த திருவிதிக் கோட்டையை ஒப்பிக்கச்சொல்லி சேக்கசேன் பேருக்கு எழுதியனுப்பச்சொல்லியும் மூசியே சாமரேகுரே (M. Sombreuil) கையில் மருந்தும் குண்டும் நாலு பீரங்கி யெடுத்துப் போறதுக்கு யெட்டு ஒட்டை மூஸ்தீது பண்ணி ராத்திரிக்குத்தானே கோட்டையே அனுப்பச்சொல்லிச் சொன்னார். அப்போ சேக்கசேன் பேருக்கு காகிதமெழுதினது தாம் திருவிதி கோட்டை பத்தே பண்ணினது மொபார்க்கு யிருக்குது நாளைக்காலத்தாலே யிருபது சொலுதாதுகளும் பத்து சட்டைக்காறர்களும் அன்பது சிப்பாயிகளும் ஒரு ஒபிசியாலேயும் அனுப்பிவிக்குறேன். அவன் கையில் கோட்டையை ஒப்பிவிச்சுப்போட்டு நீரும் உம்முடய பவுன்சும் அங்கேதானே யிருக்கவும் நாளை சாயங்காலம் யிங்கே யிருந்து திறகோம் அவர்களும் ஒபிசியாலும் வாறான் வந்தவுடனே அவர்களும் நீரும் உம்முடைய பவுன்சும் கூட சிதம்பரத்திற்குப் பாதி வழி யேதா

வது பாத்துப் போயி யிறங்கி யிருக்கவும் அப்பால் நடக்கவேண்டிய காரியங்களுக்கு யெழுதியனுப்பிவிக்கிறோமென்று எழுதச் சொன்னாரந்தப்படிக்கு யெழுதி சமாச்சாரியார் கையிலே கொடுத்து யிந்த வயணத்துக்கு றங்கோபண்டிதருக்கு காகிதமெழுதி சமாசாரியாரை அனுப்பிவிச்சேன் அப்பால் சாயங்காலம் ஆறு மணிக்கு துரையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு சாமச்சாரி யென்கிறவன் திருவிதி கோட்டைக்கு ஒப்பிசியாலாய்ப் போறான் அவன் வசத்திலே கோட்டையை ஒப்பிக்கச்சொல்லி சேக்கசேன் பேருக்கு ஒரு ஒடுதி யெழுதிக் குடுக்கச்சொன்னார் அப்பால் சொல்தாதுகளுக்கு நித்தம் ஒரு பணம் குடுக்கச் சொல்லி அரும்பாத்தைக்குச் சொல்லுகிறேன் அந்தப்படிக்கு வாங்கிக்கொண்டு செலவுபண்ணிக்கொள்ளுங்கோள் றங்கப்பிள்ளை மனுஷரங்கே யிருக்கிறவர்கள் கோட்டையிலே ஒரு கரிசை அரிசி அன்பது அறுபது ஆடு அதுக்குத் தக்க நெய் வகையறா சாகிரா சேத்து வைப்பார்கள். அதை நீங்கள் தொடவேண்டாம் அங்கே கடை போடுவிச்சு குடுப்பார்கள். நீங்கள் வேணுமென்றதுக்கு உள்ள பணம் கடைக்காறன் கையில் குடுத்து வாங்கிக்கொள்ளுங்கோள் என்றும் அப்படிக்கு உங்கள் மனுஷருக்கு யெழுதியனுப்பச்சொல்லியும் யெனக்குச் சொன்னார். எங்கள் அமுல்தாறர் அங்கே யிருந்து யெந்த வேளையிலே மருந்து குண்டு கடுதாசி கேட்டாலும் கும்மக்கு கேட்டாலும் கூட்டச்சொல்லி உத்தரம் குடுங்கோளென்று சொன்னேன். திருவிதி கோட்டையை சாமரேகுகிறேவசம் ஒப்பிவிக்கச்சொல்லியும் அவர்கள் ஒடுதிப்படி நடந்துகொள்ளவும் சாயங்காலம்வரை அங்கேதானே தறாகாம் வருகிறவரைக்கும் அங்கே யிருக்கவும் அவர்களென்ன ஒடுதி கொண்டு வருகிறார்களோ அந்தப்படிக்கு நடந்துகொள்ளச்சொல்லி எழுதிக் கொடுக்கச்சொன்னார் அந்தப்படிக்கு எழுதி மொகறுபண்ணி சேக்கசேன் பேருக்கு எழுதி செமரெகு கையில் குடுத்துப் போகச்சொல்லிச் சொன்னதுக்கு அவனும் காலைக் காலத்தாலே போறதா யனுப்பிவிச்சுக்கொண்டு போனான். துரையவர்கள் யெட்டு ஒட்டகம் மருந்து குண்டு கடுதாசி வகையறா யெடுத்துப் போறதுக்கு அனுப்பச்சொல்லி சொன்னார் அந்தப்படிக்கித் திருவிதிக் கோட்டைக்குப் போய் மருந்து குண்டு கடுதாசி யெடுத்துப் போறதுக்கு ஒட்டகங்களை பிறங்கி மேஸ்திரி அண்டைக்கு அனுப்பிவி அப்பால் போன வையாசி மீ 27 உ

சாபபு பார்த்துக்கொண்டு துரையவர்களுக்குப் படிச்சுக் காண பிச்சச் சொல்லிகொடுத்து அனுப்பின காகிதங்களைப் படிச்ச

ரயவர்களுக்குச் சொன்ன வயணம் பரிசுக் காகிதம் (Persian) மத்தலப்பு பிதாயித்கமொகதின்கானுக்கு சமாதா னம்பண்ணி ஆற்காட்டு சுபாவுக்கு ஆதிவென்னே (Adoni) வரையாரு பழய சீமையும் அவருக்கு கொடுத்து உம்மை அழைப் பிச்சு மிலாக்காத்து பண்ணிக்கொள்ளவும் நிக்குயிருக்கிறது உம்மை அழைப்பிச்சால் சருவாத்துமஞக வரண்டாமென்று அவர் சொல்லி அவர்கள் பிற்சாத (M. Pirzada) முதலான பேரை அனுப்பிவிச்சுக்கொறான் பெரிஸ்கூட அடிச்சுக்கொடுத்து யென்ன யென்னமாய் மத்தத்து பண்ணவேணுமோ அத்தனை பாத்துபாவும் பண்ணுவார்கள். அதுக்கு சருவாத்துமஞக சம்மதி யில்லை யென்று சொல்லியிராமலிருக்கவும் வந்தால் மோசம் பண்ணுவார்கள் அவர்களுக்கு சத்தியமில்லை தெய்வமில்லை ஆன படியினுலே சருவாத்துமஞக வரவேண்டாமென்று அதுக்கு யெப்படி யெலஞ யெழுதவேணுமோ அப்படிக்கி வேண்டா மென்று யெழுதினன் யிதல்லாமல் தன் காரியத்துடனே சேர்ந் தது அல்லிக்கி மாரிபத்திலேதானே பேசுகிறோம் யென்றுப் போலேயும் அவர்கள் தகப்பனும் பிள்ளையும் யென்னை நித்தா சுபிவண்பமாய் கோட்டையிலே யிருந்த யென்னை பிடிச்சு ஒப்பிச் சாலும் காலத்துக்குத் தக்கதாய் யிவ்விடத்திலே அல்லிக்கி சத்தே-காசிதாயிம் மேறேபண்டிதன் மாரிபத்தில் சேரக்கையா யிருக்கிறபடியினுலே அல்லிக்கி மாரிபத்திலே தானே சால் சவாபு நடப்பிக்குறோமென்றும் மூணு லக்ஷம் ரூபாய் கேழ்க் குறார்களென்றும் தன் சிவன் தவிர வேறே யில்லை யென்றும் அல்லவென்றல் சிவனை வாங்கிக்கொள்ளப் போறதேயல்லாமல் மைத்தப்படி அவன் பணம் வாங்கப்போறதில்லை யென்று யெழுதி காசருசக்கு யினிமேல் யிருக்கத்தக்கதில்லை யித்த ரசபு மீ 11 உ யிதாயித்து மொகதீன்கானுக்கு சிறேப்பா குடுத்துப்போட்டு அவனும் கூச்சாய்ப் போறுன் யெழுதியிருந் தது ருகவபண்டிதன் பேருக்கு யெழுதிவந்த மகாருஷ்டிர காகி தச் சேதியும் யிப்படித்தான் ஆனல் முசபர்சங்குக்கு 11 உ தாரிக்கு குடுக்கிறதை கிஷ்க்கருஷையாய் யெழுதி சானவாசுகான் புதுச்சேரிக்குக்கு வந்து துரைக்குஞ் சந்தாசாயபுக்கும் சமாதா னம்பண்ணி முசபர்சங்கு தாயார் பெண்சாதி பிள்ளைகளை அழைத்

துப் போகவேணுமென்று அவ்விடத்துக்கு வரப் பயணமா யிருக்குறமென்றும் அவ்விடத்துக் காரியம் சுறுக்கா யிருக்கிற படியினலே முசபர்சங்கை அனுகூலம்பண்ணிக்கொண்டு தன்னவ னுக்கிக்கொள்ள வேணுமென்கிற சாடையின்பேரிலே நாசறு சங்குக்குப் பிடிச்சயிருக்கிறதா யெழுதியிருந்ததுமல்லாம் முச பர்சங்குக் குஞ்சு குழந்தைகள் அங்கே நின்றதைத்தொட்டுக் காரியமனுகூலத்துக்கு வந்தது சந்தாசாயபு அவர்கள் மனதின் படிக்கி காரியம் கூடிவந்தது யில்லாமல்ப்போனல் பிறயாசந்தா னென்றும் யெழுதியிருந்த மத்தலப்பும் ஆம்படியே சொன் னேன். அதுக்கு துரையவர்கள் சுவாமி முத்திலுமிப்போ வந்த சேதியாம்படியே சீமொப்பா குடுத்த சேதி கேழ்க்கப் பண வேணுமென்று சொன்னர் அதுக்கு நான் சொன்னது சுவாமி அப்படி நினைத்து யிருக்கிறபடியினலேதான் கடசி யப்படி கேழ்க்கப்பட்டுதென்று அவருக்குச் சொன்னேன். யிப்படி பேசி யிருக்கச்சே சந்தாசாயபு பேருக்கு யிதாயித்துமொகதின்கான் பக்கீசுமீரும் மமுதுகான் யென்கிறவன் முன் நாசறுசங்குக்கு அனுகூலமாயிருந்து முசபர்சங்கு வெள்ளைக்காறர் பிறப்பட்டு வரச்சே கூட வாரமல் யிங்கே நிற்கப்பண்ணி நாசறுசங்குக்கு முகப்போதாவாய் முசபர்சங்கு யிருக்கத்தக்கதாகப் பண்ணி னேன் என்று போய் சொன்ன சுவாமி துரோகி அப்பால் நாசறுசங்குக்கு ஒரு காரியமும் நடக்கிறதைத்தொட்டு உபய பிறட்டனயிருக்கிற பக்குசி ஒரு காகிதம் எழுதினன் அந்தக் காகிதத்தில் அன்வறதிகான் குமாரன் மமுதல்லிகான் அண்டை யிலே யிருக்கிறவன் நாலாயிரம் அய்யாயிரம் சுவார்களெல்லாம் முன் யிதாயித்துமொகதின்கானை சேவிச்சவர்களென்றும் காரி யம் பார்க்கப்பட்டால் மமுதல்லிகானை அப்பாலிப்பால் போக வொட்டாமல் பத்திரமாய்க் காத்து பிடிச்சு ஒப்பித்ததாகத் திட் டம் பண்ணியிருக்குதென்றும் முசபர்சங்குக்கு யிந்த ரசபு மீ பதினோராந் தேதிக்குமேலே சீமொப்பா குடுக்கிறதாகவும் சான் வாசுகான் வகைவரு புதுச்சேரிக்கு வந்து கொவறணதோர் மனதும் உம்முட மனதும் சந்தோஷம்பண்ணிவிச்சு சீமைகளும் உங்கள் பாரிசம் பண்ணிவிச்சு முசபர்சங்கு குஞ்சு குழந்தைகளை யும் அழைச்சுக்கொண்டுபோய் வருகிறுனென்றும் பின்னையும் நாசறுசங்குக்கு வடக்கத்து சமாசாரத்தைத்தொட்டு பெகு சுறுக்கிலே பயணம் போகவேணுமென்று யிருக்கிறுனிதைத்

தொட்டு உங்கள் காரியம் நினைத்தபடி முடிஞ்சுது என்று எண்ணிக்கொள்ளவும் யென்று யித்தமட்டுக்கும் சமஸ்த பவுன்சும் வாங்கிப்போச்சுது தோப்புக்காளுவும் மூலவாடிக்கோவுள்ள பரியந்திரம் போய் வைத்திருக்கச்சொல்லி அனுப்பினர். நித்தியம் அன்னூறு அறநூறு குதிரை சுவார்கள் சேனங்கள் பயணம் அனுப்பிவிச்சுக்கொள்ளாமல் சொல்லாமல் பிறப்பட்டுப் போய்விடுகுறர்கள் அதினலே யிருக்கமாட்டான் அல்லவென்று யிருந்தாலும் நாலாயிரம் அய்யாயிரம் குதிரையுடனே யிருப்பான் ஆயிரம் சொல்காதும் பெரிய பிரங்கி நாலு பிரங்கியும் ரெண்டாயிரம் மூவாயிரம் மயிப சிப்பாயிகளும் வந்தால் நாசறு சங்குவை கைப்பிடியாய்ப் பிடிச்சுக்கொள்ளலாம் யென்று யெழுதி யிருந்த சேதி சொன்னப்போலே துரைபவர்கள் சுவாமி துரோகியிவன் வெழ்க்கமில்லாமல் யெழுதினனு நல்லது பதிலுத்தரம் யிப்போ யிவனுக்கு யெழுதவேண்டியது உபசாரமாய் நல்ல பேச்சாய் யெழுதியனுப்பச்சொல்லி சொன்னர் நல்லதென்று மதனந்தபண்டிதருடனே சொல்லி சந்தாசாயபுக்குச் சொல்லச் சொல்லி சொல்லி அனுப்பிப்போட்டு நானும் பாக்குக் கிடங்குலே வந்தேன். ஆனல் துரையவர்களுக்கு யின்றையதினம் சந்தோஷம் யெழுதி முடியாது. சுவாமி துரையவர்களுடைய கீற்த்திக்கு முசபர்சங்கு வந்தால் களங்கமில்லாத கீற்த்தி யென்று லோகமெல்லாம் பிறகாசிக்கும் ஆனபடியினலே முசபர்சங்கும் வந்ததும் ஆற்காட்டு சீமையும் முசபர்சங்கு வசமாகுதென்று யிப்போ யெழுதியிருந்தபடிக்கி முக்கிலும் யிது மெய்யாக நிற்கவேணுமென்று சுவாமியை நான் பிறாற்த்திக்கிறுப்போலே பெகு சனங்கள் பிறாத்திக்கிறர்கள்.

1750 ஸு ஜூன் மீ 18 உ பிறமோதூத ஸு ஆனி மீ 8 உ குருவாரம்.

இத்தனள் காலத்தாலே சேக்கசேன் அப்துல்றயிமான் வந்தான். சேக்கசேன் திருவிதி கோட்டை லக்கை யேறின போது பட்ட காயம் சத்து அதைப்பாயி ஒதடுமாத்திரமிருந்தாலும் மேல் பல் விரெண்டும் நன்றுய் அசைவு குடுத்திருக்கிறது யிந்தச் சாடையை யெல்லாம் துரையவர்களிடம் சொன்னலும் சொல்லாமல் பிறப்பட்டு வரலாமாவென்கிற கோபமாய்ப் பேசினர். அவனதுக்கு சிப்பாயிகள் ஆறு மீ ஏழு மீ சம்பளம்

குடுக்கயில்லே யென்று யென்னை வைத வசவு சொல்லிமுடியாது. அப்பாலிருந்தால் என் சிவன் விறுதாவாய்ப் போறுப்போலே கண்டபடியினாலே நான் பிறப்பட்டு வரச்சே அல்லிகான் யெதிர்ப் பட்டான் அவன் ரெண்டாயிரம் ரூபாய் கொண்டுவந்தான் யென்று சொன்னாலவனைக் கூடத் திட்டின வசவு சொல்லப் போகாது அவர்கள் சம்பளம் குடுக்கவேண்டாம் உங்கள் துப் பாக்கியை வாங்கிக்கொள்ளுங்கோள் போறோமென்று சொன் னால் அதுக்குச் சம்மதியாமல்போனால் யெங்களை கொல்லப் பணைக்குறமட்டுக்கும் உங்களை சொல்லுகுறோம் யென்று கெட்டி யாய்ச் சொல்லுகிறார்கள் யென்றும் சொன்னதின்பேரிலே அப் பிறம் லக்குவாய் உத்திரம் கோளர் சொன்னபிறகாரம் பிறபாடு உத்திரமல்லூர் மியாசாயபுவைப் பிடிச்சுவந்தால் லக்ஷம் ரூபாயி அகப்படும் சந்தாசாயபு சம்மதிச்சப் போகச்சொல்லுகிறார் என்று அஞ்சாறு நாளைக்கி முன்னமே யிப்பவும் அவர் போகச் சொல்லுறார் நீங்கள் கடுதாசிக்கும் உக்கை என்று மண்ணாலே பண்ற கற்ணுக்கும் உத்தாரங் குடுத்துப் போகச்சொல்லி உத்தாரங் குடுத்தால் லக்ஷம் ரூபாய் வந்தால் சிப்பாய் சம்பள மும் நடந்துபோம் உங்களுக்கும் அன்பதினாயிரம் ரூபாமட்டுக் கும் குடுக்குறோமென்றும் சொன்னதுக்கு அவசியம் போங்க ளென்று சொன்னதுக்கு ஆராயிரம் கடுதாசிக்கும் அன்னூறு உருக்கைக்கும் சீட்டும் குடுத்தார் அந்த சீட்டு வாங்கிக்கொண்டு நானூறு சிப்பாய்கள் நாளை காலத்தாலே போறோம் பின்னையும் யெங்கே யெங்கே பணம் அகப்படுமோ அங்கே யெல்லாம் கைப் பார்க்குறோம் யென்று சொன்னார்கள் உங்களுக்கு யெப்படி சம்ம தியோ அப்படி யிருங்கோளென்று சொன்னார். அப்பால் ரூவுகத் தெல்லூர் துற்க்கத்துக்கு நாலாயிரம் கடுதாசுக்கும் அன்பது உக்கைக்கும் மீரஷம் வந்து கேழ்க்க அதுக்கும் சீட்டு குடுத்தா ரிப்படி நடந்தது அவரவரனுப்பிச்சுக்கொண்டு வீட்டுக்குப் போனார்கள் நானும் பாக்குக்கிடங்கிலே வந்தேன்.

இத்தனாள் ராத்திரி சந்தாசாயபு அண்டைக்குப் போய் சம்புதாசு காலம்பண்ணி போனதுக்கு ஷை குமாரன் பால கிருஷ்ணதாசு என்கிறவன் தங்கள் தகப்பனார் காலம்பண்ணிப் போய் சேஷ்ட்ட சுத்த வித்திய சனிவாரம் ராத்திரி பதினெட்டு நாழிகைக்கு காலம்பண்ணிப் போனாரென்றும் தங்கள் கடனுக்கு உள்ளானேம் இனிமேல் நான் சிறு பிள்ளை பத்து வயது

வூரரைப் பணஃ குடாமல்பண்ணி யென்னையும் கெடுத்து கடசி யில் தான் கெட்டதுமல்லாமல் சரீரங்கூட விட்டுவிட்டான். வெகு தூரத்துக்கு துருஷ்டடனென்று ரொம்பவும் வேசறினர். அதின் பேரிலே சங்கிரிபாரிக்கி முதல்கொண்டு உங்களாகிறுவிலேயிருந்து உங்களைச் சேர்ந்தவர்களானபடியினாலே அவனுக்கு மறனகால மானபடியினாலே யிப்படிப்பட்ட புத்தி தோத்தி ஆக்கிருக்கு சரீரம் விழுந்து போனபடியினாலே அவர் பிள்ளை பத்து வயதா னபடியினாலே அவன் வீட்டை நிலைநிறுத்தி அந்தப் பிள்ளை முன்னுக்கு கொண்டுவருகிற பாரம் உங்களுதென்று உபாசார மாய்ச் சொன்னதின்பேரிலே அவரும் குடுக்கவேண்டிய பண மெல்லாம் குடுத்து அவனையும் ரக்ஷிச்சுப் போட்டதாய் வெளிக் குப் பேச்சினாலே சொல்லிப்போட்டார். நாங்களும் அவர் சொன்னதுக்கு நீங்களெப்போ மனதிலே நினைத்தீர்களோ வென்று அவன் கூடத்தேறிப்போய்விட்டாமென்று சொல்லிப் போட்டு பதில் காகிதம் நாளைக்கி யெழுதிக் கொடுக்கிறே மென்று சொன்னார் நாங்களும் அனுப்பிவிச்சுக்கொண்டு அவ ரவர் வீட்டுக்குப் பத்தரை மணிக்குப் போனோம்.

**1750 ஸ்ரீ ஜூன் மீ 19 உ பிரமோதூத ஸ்ரீ ஆனி மீ 9 உ சுக்கிறவாரம்.**

இத்தனாள் காலத்தாலே துரையவர்களுடனே சொன்னது சிதம்பரத்தி லிருந்துகொண்டிருக்கிற யென் குமாஸ்தா கலிச் சியப்பிள்ளை பாலோசி பண்டிதன் (Balaji Pandit) ரெண்டு பேர்களும் யெழுதின காகிதத்திலே முன் சிதம்பரம் மமுதுகான் சண்டித்தனம் பண்ணிக்கொண்டிருந்தவன் திருவீதிக் கோட்டை யிலே லக்கை யேறி வாங்கினார்களென்கிற கபுறு சிதம்பரம் மமுதுகான் கேட்டவுடனே சிதம்பரம் தனக்கா சம்மதிக்கு அய்யாயிரம் ரூபாயும் புவனகிரி சம்மதிக்கு பதினய்யாயிரம் நடுக்கிற ரூபாயும் குடுக்கிறோமென்றும் அழைத்துச் சொல்லி வராகனும் பணமும் ரூபா பாதி புதுச்சேரியிலே கொண்டுபோயி செலுத்தச் சொல்லி அனுப்பிவிச்சாமென்றும் அப்பால் முன் பாக்குவு விட்டுவிட்டு நல்ல பேச்சாய் பேசுகிறுமென்றும் நான் பெகுநாளாய் பிறான்சுக்காறர்-சினேகம் கோறி யேன் நடக்கு கொண்டோமென்றால் அவர்களுக்கு யினிமேல் சகல யோகமும் வரும் நாமும் அநுபவிக்கலாம் என்றும் யிப்படி பெகுஸ்தோத்

திரமாய் வுத்தியோகம் பண்ணிச் சொன்னுமென்று மெழுதி வந்தது யென்று சொன்னதுக்கு வந்ததை வரப்பத்து மத்தப் பேச்சு அப்பால் பேசச்சொல்லி யெழுதியனுப்பென்று சொன்னார் அந்தப்படிதான் யெழுதி அனுப்புரேனென்று சொன்னேன். அதன் பிற்பாடு நம்முட திறகோழும் சிப்பாயிகளும் மேட்டுப் பாளையத்துச் சாவடியிலே போயிறங்கினால் பின்னையும் சறுக்குப் பிறக்கும் மத்தப்பணமும் குடுத்து விடுவாமென்று சொன்னார். அதுக்கு நான் சொன்ன யித்தப் பணம் அவனேது கொடுக்கிறது திருவிதிக் கோட்டை வாங்கினவுடனே சிதம்பரம் கோட்டையும் வாங்கவாரார்கள் யென்று சிதம்பரத்தாரெல்லாரும் வலசை வாங்கினார்கள் பறங்கிப்பேட்டையிலே யிருந்த அமல்தாரன் ஓடிப்போய்விட்டான் பறங்கிப்பேட்டையெல்லாம் அதலகுதல மாய் கிடக்குது பின்னையும் அந்த அந்த பற்காணுக்களிலே யிருந்தவர்களெல்லாரும் ஓடிப்போனார்களென்கிற சுமாரும் யெழுதி வந்ததா யிதல்லாமல் மழுதுகான் சொன்னது அன்வறதிகான் குமாரன் மனுஷர் வந்து புவனகிரி பட்டணமும் சிதம்பரம் தணக்கா—பணத்துக்கும் குடுக்கச் சொல்லியும் வந்து காத்துக் கொண்டிருக்கிறார்களென்றும் சொன்னாலும் அதுக்கு எங்கள் மனுஷர் அதுக்கொண்டு எங்களுக்கு கவையில்லை எங்களுடனே நீர் கபுறு பண்ணின படிக்கி எங்கள் கையில் பணத்தைக் குடுத்துப் போட்டு அவர்கள் வாங்கிக்கொண்டு போனார்கள் யென்றும் மமுதல்லிகானுக்கு எழுதி அனுப்பிவிடென்று சொன்னார்களாம் யென்று யெழுதினார்களென்று சொன்னதுக்கு அப்படிதான் பேசச் சொல்லி யெழுதியனுப்பென்று சொன்னார். நல்லதென்று அந்தப்படி யெழுதியனுப்பச் சொல்லி ரூமோசி பண்டிதனை அழைச்சு யெழுதியனுப்பச் சொல்லி சொன்னேன். அப்பால் கோவளத்திலே யிருக்கிற முசியே பிளாம் (M. Le blanc) யென்கிறவன் யெழுதின காகிதத்திலே முன் பழய கில்லேதாரனை அங்கே காவல் வைத்து இருக்குதே அவர்கள் குஞ்சுக் குழந்தைகள் வந்து அங்குலாய்க்குறார்களென்று எழுதினான் அவன் ஆர் யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது முன் அன்வறதிகான் அமுலிலே கிரானாக யிருந்தவனை முசே புறுனே சந்தாசாயபு அன்வறதிகான் செயிச்சு ஆற்காட்டுக்கு வந்தவுடனே முசே புருனே கோவளம் கோட்டை வாங்கின வுடனே அந்தக் கில்லேதாரனை யிங்கே பிடிச்சு அனுப்பினாப்

போலே பதினொரு மாசமாயி நயினார் வீட்டிலே காவல் இருக்கிறா னென்று சொன்னேன். நல்லது அவனை விட்டுப் போகச்சொல்லு அவனைத்தொட்டுக் காரியமென்ன வென்று சொல்லி யிப்போ தானே விட்டுப் போகச்சொல்லென்று சொன்னார். நல்லது விட்டுப் போகச்சொல்லுகிறேன் யென்று சொல்லி அப்பால் நான் யிருக்கிற பாக்குக் கிடங்கிலே வந்து பெரியண்ணநயினாரை. அழைத்துக் கோவளம் கில்லேதாரனை உங்கள் வீட்டிலே காவல் வைத்து யிருக்குதே அவனை விட்டுப் போகச்சொல்லென்று உத்தாரங் கொடுத்தேன் மறுபடி பதினொரு மணிக்கு அழைச் சனுப்பிவிச்சு தேவனாம்பட்டணம் மேஸ்தர் குருக்கு துபாசி கொண்டுவந்த காங்கு பிடவை எழுத்து சீட்டை லம்பாசு மாதிரிக்கு விலை யெழுதி குடுத்தியா வென்று கேட்டார். நீங்களும் மூசே கருவாலியும் நேத்து சொன்னபடிக்கி விலை யெழுதிக் கொடுத்தேன் அதை வாங்கிக்கொண்டு மேஸ்தர் குருக்கு (M. Crokes) துபாசி தேவனாம்பட்டணத்துக்குப் போய் தங்கள் துரையைக் கண்டு பேசிக்கொண்டு மறுபடி வருகுறா மென்று போனானென்று சொன்னேன். அதின்பேரிலே தேவனாம்பட்டணம் கோவற்னதோர் பிறஸ்தாபமாய் சென்னபட்டணத்திலே யிருக்கிற கோவற்னதோர் ஒரு பய்யல் அவன் வெகு அனியாயம் பண்ணுகுறான் யிருக்கிற பேர்களை யெல்லாம் அழைத்து மணிலா கை சீட்டி கூட்டி வைத்திருக்கிறவர்களை மணிலாவுக்குப் போற கப்பலுக்கு கேழ்வுக்கு யேத்துங்கோள் யென்று சொல்லி சரக்கெல்லாம் தழைஞ்சுப் போட்டானாம் அதின்பேரிலே போன ஒரு அனுப்பின கப்பல் ஒடைஞ்சு போய் எங்களுது முப்பதினாயிரம் வறாகன் நாற்பதினாயிரம் வறாகன் நஷ்டமிட்டோமென்று சொன்னார்களாம் நஷ்டமிட்டாமலென்னு யிப்போ கூடி வருமென்று சொன்னதுக்கு அஞ்சாறு வருஷம் வெகுசாய் நஷ்டப்பட்டோம் போதும் போதாதுக்கு இன்னமும் நஷ்டப்படச் சொன்னால் யெங்களுக்கு அத்தனை அவகாசம் போதாது யென்று யென்ன சொன்னாலும் கேட்கமாட்டோம் யென்று அசலிலே கேழ்க்கிற பேருக்கு விக்கவொட்டாமல் வீட்டின்பேரிலே முத்திரைபோட்டுக்கொண்டு வருகிறதுமல்லாமல் பின்னையும் ஊரிலே அவாவரை நெருக்கியில்லாத அபாண்டங்களின் போட்டு பத்து பணம் விசேஷிச்சு வாங்குறதுமல்லாமல் அடிகள் காவல்கள் யிது முத

லான நடத்துகிறானும் யிப்படி நடத்துறதைவிட ஒரு துப்பாக்கி யிலே ரெண்டு குண்டு போட்டு சுட்டுப் போடுறதுதானே பட்ட ணத்திலிருக்கிற குடிகள் துரைத்தனம் பண்ணுகிறவர் யிப்படி அனியாயம் பண்ணப்போமா வென்று துரையவர்கள் யென் னுடனே சொன்னார் அதுக்கு நான் சொன்னது அந்தப் பட்ட ணம் யினி குடியேறமாட்டாது யென்று சொன்னேன். அதுக்குத் தக்கதாய் துரைத்தனமும் அனியாயம்பண்ணத் தலைப்பட்டால் யிருக்கிறது ஓடிப்போறதேயல்லாமல் சுவாரசியமில்லை யென்று சொன்னேன். அதுக்கு பாதிரி பிறான்சுவா தொழிலாளிகளெல் லாரும் அங்கேதானே போறார்கள் சரக்கு வேணுமென்கிறவர் கள் அங்கே போய்கொள்ள வேண்டியிருக்குறதென்னவென்று கேட்டார் அப்போதுரையவர்களுக்கு அவர்பேரில் வந்த கோபம் எழுதிமுடியாது. முன் யிந்த வூரிலே அந்த வேலைக் காறர்களிருக்கயில்லையா அந்தப்படி சரக்கு வேணுமென்றவர்கள் அங்கே போய்கொள்ளவேணுமென்கிறதென்னவென்று கேட் டார். யிங்கே வரங்கவில்லையா யிங்கிரீசுக்காறர் கலாபம் வளந்து கொண்டதினாலேயும் தொழில் யில்லாதினாலே வேலைக்காறர்கள் சிதறினார்கள் யென்று சொல்லிப்போட்டு யிப்போ கோந்தி ருத்து குடுத்துப் போன ஷ துவக்கி நடந்துதா யிதிலே மறு படி கலகம் துவக்கினபடியினாலே சனங்கள் வந்தவர்களும் போய் விட்டார்கள் யினிமேல் கலகம் நின்று வியாபாரமும் நடந்தால் தன்னிச்சையாய் பதினேஞ்சு நாளையிலே வந்து சேர்ந்து போவார் களென்று சொன்னதுமல்லாமல் பறங்கிப்பேட்டையிலே கூட வூரிலே நீந்த காங்கு பிடவையைப்போலே பின்னை யெங்கேயும் தீரமாட்டாதென்று சரக்கை யிந்த வூரிலே நீந்த சரக்கு முன்னே போட்டு பார்த்தால் ஒன்றுக்கும் ஆகாதென்று போம் யிதல்லா மல் சீட்டியும் அப்படித்தானென்று சொன்னேன். அது மெய்தா னென்று துரை அதை விஸ்தாரமாய்ச் சொன்னார். அப்பால் முசே கருவாலியும் யிருந்து சிறு பிள்ளை விளையாட்டாய் மேஸ் தர் பிளேயரும் சென்னப்பட்டணத்திலேயிருக்கிற தெப்பியத்தே கெவர்னரும் விளையாடுகிறதேயல்லாமல் காரியம் நிறுவாகியாய் துறைத்தனம்பண்ணுகிற நியாயம் சரியாய் நடத்துகிறார்களா அதொன்றுமில்லை யென்று சொன்னதுக்கு துரையவர்கள் சொன்னது ரெண்டு பேர்களும் ரெண்டு பசகள் அவர்களுக்குத் துரைத்தனம் பண்ணுகிற சாடை யின்னதென்று தெரியுமா

வென்று சொல்லி யிது ரெண்டு நாழிகை நேரம் பிறஸ்தாபமாய் சென்னப்பட்டணத்து சேதியே நடந்தது அப்பால்.

**1750 ஸு ஜூன் மீ 21 உ பிறமோதூத ஸு ஆனி மீ 11 உ ஆதிவாரம்.**

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்குப் போய் பூசை கேட்டு வந்தவுடனே சேக்குஅப்துல்றயிமான் தோஸ்துமகம்மது வகையறா வந்து பேசிக்கொண்டிருக்கச்சே ஆற்காட்டிலே நாசறுசங்கு சாவணிபண்ணுகிறானென்றும் தோப்புகானா வகையறா அனுப்பிவிட்டு ஆறாயிரம் அய்யாயிரம் குதிரையுடனே கசானாவை ஆற்காட்டு கில்லாவிலே வைத்துப் போட்டு யிவனும் ஆற்காட்டிலே சந்தாசாயபு அரண்மனையிலே யிறங்கி யிருக்கிறானென்று அப்பாலிவ்விடத்து சிப்பாயிகள் சம்பளம் வகையறா பேச்சுகளும் நடந்தது அப்போ அப்துல்றயிமானைப் பார்த்து துரை சொன்னது மூந்நாம் நாள் கூடலூருக்கு ஒரு வர்த்தகனண்டைக்கு கொல்லன் பதில் கொண்டு போகச்சே பிடிச்சுக்கொண்டு வந்தீர்களே அதிலே யென்ன யிருக்குது யென்று கேட்டார். அதிலே ஆயிரத்தன்னூறு ரூபா யிருந்தது யென்று தோஸ்துமகம்மது சொன்னார்.

அதுக்கு நானிருந்துகொண்டு அன்னூறு ரூசேசாயி போனானால் நானூறு ரூபாயும் யிருந்துதென்று தோஸ்துமகம்மது சொன்னான் யென்று சொன்னேன். அதின்பேரிலே துரையவர்கள் அந்தப் பதிலுடனே ஓலை யிருந்துதோ யில்லையோ வென்று கேட்டார் தோஸ்துமகம்மது ஓலை யிருக்குதென்று பதிலுத்தாரம் சொன்னான். அந்தப்படிக்கி கூட்டிக்கொள்ளுகிறோம் சிப்பாயிகளுக்கு குடுக்கவேண்டிய சம்பளத்திலே சேத்துக்கொண்டு ரசீது கொடுங்கோள் யிதல்லாமல் விழுப்புறத்தண்டையிலே லாலாப்பேட்டை வர்த்தகருடைய ஆனை ரெண்டு போகச்சே பிடிச்சு வந்தார்களே அதென்ன பொருமென்று கேட்டார். பறங்கிப்பேட்டையிலே கிட்ட வர்த்தகன் சருப்பரு லாலா கையிலே யிந்த வர்த்தகர் க்ஷேத்திரம் வராகன் ஆயிரத்தெழுநூத்தன்பது வராகனாக கொண்டார்கள் யிதல்லாமல் சிலவு சென்னு யிருக்குமென்று சொன்னதுக்கு துரையவர்கள் அப்துல்றயிமானைப் பார்த்து ஆயிரத்தன்னூறு வராகனுக்கு கூடுத்துவிடுகிறேன் முன் துகையும் சிப்பாய்கள் சம்பளத்திலே சேத்துக் குடுக்கிற

தும் றசிது கொடுத்துவிடுங்கோமென்று துரையவர்கள் சொன்னது அப்துல்றயிமான் பட்டாணியா ஆருகிலும் கொள்ளுகிறவர்களுண்டாயிருந்தால் விசாரித்துக் கண்டு பேசிச் சொல்லுகுறேமென்று சொன்னன். அப்பால் உத்திரமல்லூர் மியாசாயபைப் பிடிச்சவந்தால் சந்தாசாயபுக்கும் அவர் உறவானபடியினாலே அவர் தற்மியானவாய் பேசுகிறாப்போலே பேசி லக்ஷம் ரூபாயாய்த் தீத்துப்போடுகுறோம் யென்று சொன்னரென்று சொன்னதுக்கு துரை சொன்னது அது வந்தால் அதுவும் உங்கள் சம்பளத்துக்கு ஆகும் யென்று சொன்னர். அதுமாத்திரம் ஆனல் இந்த சஞ்சாமெல்லாம் தீந்துபோமென்று சொல்லி சந்தாசாயபும் பேசியிருந்தார் யென்று சொன்னதுக்கு மதனந்தபண்டிதன் சொன்னது சிப்பாயிகள் யிங்கே ரெண்டு நாள் அறிக்கீதுபண்ணி போறதில்லை யென்று கூக்குறல் போட்டதினாலே வூமெல்லாம் கொல்லென்று யிந்த சேதி பிறந்துது. ஆனபடியினாலே அந்த மியாசாயபு அகப்படுகிறது பிறயாசை யென்று சொன்னர் அதென்னவென்று கேட்டார். நடந்த பூருவோத்திரத்தை சொன்னர்கள் மெய்தான் அக்கரங்கமில்லை துலுக்கருடனே சேர்ந்த பேச்சு வாயிலே பிறந்துதாயெல்லாரும் அறிந்து போறர்கள். செகரோதுயில்லை சொல்லி பேசியிருந்துதுக்கு தோல்துமகம்மது சொன்னது யெங்களைத் தொட்டு வெளிக்கு வருது. நாங்கள் சிப்பாயிகளை ஒரு யிடத்துக்குப் போகவேணும் பயணமாய் வாருங்கோமென்று சொன்னப்போலே அவர்கள் உத்திரமல்லூருக்குப் போறதுக்கு ஆச்சே யெங்கள் சம்பளம் குடுத்தாலேயல்லாமல் போறதில்லை யென்று சொல்லி தொந்திரவுபண்ணினர்கள் யென்று சொன்னன். அப்பால் பின்னையும் நாசறுசங்கு லசுக்கரிலே யிருக்கிற சயிது அப்துல்றயிமான் யென்கிற பிர்சாதா பிருன்சுக்காறர் சந்தாசாயபு தாரீப்பு பண்ணுகிறதும் நாசறுசங்கு சீக்கிறமாய் யிந்த அநுகூலம்பண்ணிக் கொடுக்கயில்லை யென்று கோபமாயிருக்கிறது முதலான சேதிகள் பேசியிருந்து அப்பாலிவர்கள் அனுப்பிவிச்சுக்கொண்டு போனர்கள் நானும் பாக்குக் கிடங்கே வந்தேன். அப்பால் மறுபடி பதினொரு மணிக்கு அழைப்பிச்சுப் பேசியிருக்கிறபோது நடந்தது யென்ன யென்றால் செம்மரம் சேலத்துப் பிடவை வகைபறுவை அழைப்பிக்கவேண்டிய சங்கதிகளும் அப்பாலதுக்குப் பணங் காசு குடுப்போம் விஸ்தாரமாய்

அழைப்பிக்கச்சொல்லி அப்பால் ரெட்டிகள் சீமைப் பேச்சுகள் வந்தபடியினாலே அந்தப் பேச்சுப் பேசியிருக்கச்சே வில்லிய நெல்லூர் ரெட்டிகள் திருப்பாதிரிப்புலியூரிலே யிருக்கக் காரிய மென்ன உங்கள் ஆடி மீ முதல் தேதி முதல் 13 உ தேதிவரைக் கும் வில்லியநெல்லூரிலே பாகூரிலே வந்து குடியிருந்தாலாச் சுது யில்லாவிட்டால் அவர்களுக்கு நம்முட வில்லியநெல்லூர் சீமைக்கும் பாகூர் சீமைக்கும் நாட்டு தனங்களாயில்லே யென்ற தமுக்கும் போடச்சொல்லி அப்பை அழைத்து கணக்கு றங்கப் பனுக்கு ஓலையும் யெழுதி யனுப்பச்சொன்னார் அந்தப்படிக்கி வில்லியநெல்லூரிலே போய் தமுக்குப் போடச்சொல்லி சொல்லி அனுப்பிவிச்சேன் மைத்தப்படி விசேஷிச்ச சேதி யில்லே.

இத்தனாள் ஆறு மணி வேளைக்கி அழைச்சனுப்பிவிச்சு முன்னே வடக்கு பாரிசம் யெல்லாம் கை யெட்டினமட்டுக்கும் தோறணம் வைக்கச்சொன்னனே யிப்போ மேற்கு வட்டம் வடக்கு வட்டம் தோறணம் வைக்கச்சொன்னார் நல்லதென்று அனுப்பிவிச்சுக்கொண்டு வந்து அதுக்குத்தக்க மனுஷர்களைப் பயணம்பண்ணி நாளைக் காத்தாலே போகச்சொல்லி திட்டம் பண்ணினேன் சிதம்பரத்தானது யிருபதினாயிரம் ரூபாய் யின் னம் வரயில்லே யென்று கேட்டார் கூடலூரிலே மாத்த வந்தார் கள் ஒரு பொழுது யெறத்தாழ வருமென்று சொன்னேன். அப்பால் எட்டரை மணிக்கு வீட்டுக்குப் போனேன்.

1750 ௵ ஜூன் ௴ 22 உ பிறமோதூத ௵ ஆனி ௴ 12 உ சோமவாரம்.

இத்தனாள் காலத்தாலே துரையவர்களிடத்துக்குப் போன விடத்தில் யென்ன சமாச்சாரம் ஆற்காட்டிலிருந்து வந்த தென்று கேட்டார் விசேஷிச்ச ஒரு சமாச்சாரமும் வரயில்லே யென்று சொன்னேன். விழுப்புரத்திற்கு நாலு சின்ன பீரங் கியும் மருந்துக் குண்டும் யெருது ஆறேழு ஒட்டகம் அமத்தி அனுப்பி எருது மாடு கும்பினியிலே யிருக்குது அதைக்கொண்டு பீறங்கி யிழுக்கப்பண்ணி அனுப்பிவிக்கிறதாய்ச் சொன்னாரதின் பேரிலே ஆறு ஒட்டகம் முஸ்தீதுபண்ணி பீறங்கி மேஸ்திரி அண்டைக்கு அனுப்பச்சொன்னேன் அந்தப்படி பத்து நாயக் கனை அனுப்பிவிச்சேன் யென்று கபுறு சொன்னான்.

மைத்தப்படி கூடலூர் சமாச்சாரம் யென்னவென்று கேட்டார் சொன்னப்பய்யன் குமாரன் அய்யாவய்யன் தேவனும்பட்டணத்திலிருந்து வந்தவன் சொன்ன கபுறு யிவ்வடத்துக்கு சிமைக் கப்பல் வந்தாப்போற்பாடு தேவனும்பட்டணத்துக்கும் சிமை கப்பல் ஒன்றும் வந்தது அதிலே கோன்சேலியோர்கள் கோவற்ணதோர் கூட யேறே வருகிறார்களென்றும் யிப்போ யிருக்கிற கோன்சேலியோர்கள் கோவற்ணதோர் கூட தக்கிற யென்று எழுதிவந்ததுமல்லாமல் யிந்த ஞாயமெல்லாம் வேறே வொருத்தன் விசாரிக்க வாறான் அவன் கோட்டைகள் கூட கட்டுகிறதுக்கு கூட அவன் யெங்கே பாத்து கேமிக்குறானோ அங்கே கட்டவும் கட்டுகிறதுக்கு யிஞ்சினீர்கள் கூட வருகிறார்கள் யென்றும் யிந்தப்படியே யெழுதிவந்தது. யிப்போ அவரவர் வீடுகள் கட்டுகிறவர்களைக்கூட வாணுமென்று சென்னப்பட்டணத்திலேயும் தேவனும்பட்டணத்திலேயும் நிறுத்தினார்களென்றும் யிதின் பேரிலே யிப்போயிருக்கிற துரைக்கு கிரந்தி அரையாப்பு வைத்து ரொம்ப கஷ்டிப்படுகிறதோடேகூட யிந்த விசாரமும்கூட வந்தாய்ச் சேதி சொல்லிக்கொள்ளுகிறார்களென்று சொன்னதுக்கு துரையவர்கள் சொன்னது சிமையிலிருந்து யெழுதிவந்த சேதியிலே யிங்கிரேசு கும்பினியார் சிமையிலிருக்கிறவர்களுக்கு மூப்பத்திரண்டு மில்லியோம் ரூபா கடன் குடுக்கவேணும் யிதல்லாமல் இந்தியாவிலே யெம்மாத்திரம் கடனிருக்குமோ தெரியாதென்றும் யெழுதி வந்ததென்று சொன்னார். அதுக்கு நான் ஒரு மில்லியோம் பத்து லக்ஷமல்லவா யென்று கேட்டேன். ஆம் மூணு கோடியும் யிருபது லக்ஷம் ரூபாயாச்சுதென்றும் யினிமேல் இங்கிரேசு கும்பினி நிறுவாகத்துக்கு வராதென்றும் பங்காளத்திலேயும் ஒரு கோடி ரூபாய் குண்டு கடன் ஆனபடியினாலே யிங்கிரேசு கும்பினிர் யெடுத்துப்போம் நிறுவாகத்துக்கு வாராது யென்று சொன்னார். யிப்படியானாலெப்படி நிறுவாகத்துக்கு யெப்படி வரும் அதுக்குத் தக்கினாப்போலேதானிவ்விடத்திலேயும் நாளுக்குநாள் கிழக்கு யிறங்கிப்போகுதென்றும் சொன்னதுக்கு அது மெய்தான் அதனாலே யிங்கிரேசுக்காறர் யித்தனை மேனத்துப் பண்ணி ஆக்கிருக்கு நாசறுசங்கு கோபம் கூடப்பண்ணி கையைப் பிடிச்சு சேபுதாரர் மேஸ்தர் கோப்பு முதலான பேர்களை கையைப் பிடிச்சு யிழுத்துவிடச்சொல்லி அதன்பேரிலே யிவர்கள் வெழ்க்கம் போய் ஒருத்தருடனேயும் சொல்லிக்கொள்ளாமல்

ருத்திரிக்கு ருத்திரியே போய் யிருபதா ளுழியிலே தேவ ளும்பட்டணம் கோட்டையிலே யிருட்டிலே தீவிட்டிக்கூட யில்லா மல் போய் நுழைஞ்சுக்கொண்டார்கள் யிப்படியெல்லாம் நடக் கிறது பொல்லாத காலத்துக்கு அல்லாமல் நல்ல காலத்துக்கு நடக்குமா அவனிவர்கள் பிடவை யிவ்விடத்து வியாபாரம் பண்ணி பிழைக்கத்தெரியுமே அல்லாமல் தொரைத்தனம் பண் ணவும் சிப்பாயி கிரிபண்ணவும் ராச்சியமாளவும் புதுச்சேரி பிருன்சுக்காறருக்குச் செல்லுமே அல்லாமல் மத்த் சாதிக்கு செல்லாதென்று நாசறுசங்கு வாயினலே சொல்லுகிறது சாமா னியமா. அப்பிடிப்பட்டவன் வாயினலே சொன்ன பேச்சுக ளெல்லாம் லக்காவிஞசுகளெழுதி டில்லி முதலான யிடங்களுக் குப் போய் அந்த ருச ல்தானங்களிலே பிருன்சுக்காறர் கீற்த்தி பிறகாசிக்குதென்று சொல்லி பின்னையும் லோகாப்பிறமமாய் பேசியிருந்து அப்பால் பாக்கு கிடங்கிலே வந்தேன்.

இத்தனுள் சாயங்காலம் ஆறு மணிக்கு துரையவர்களழைச் சனுப்பிவிச்சு சந்தாசாயபுவுக்கு காகிதம் வந்துதே ஆர் காகித மென்று கேட்டார் சந்தாசாயபு தம்பி படேசாயபு யென்று யிருந் தார் அவருடைய குருவாம் அவர் சந்தாசாயபு பேருக்கு காகித மெழுதிவிச்சான். அதிலே பின்னை யொரு சேதியுமில்லையாம் அலாயிதாயி சந்தாசாயபு மருமகன் சேரீபுசாயபு அண்ணன் பேர் விளங்கன் பேர்பட காகிதம் அந்தரங்கமாய் மதனுந்த பண்டிதனுடனே சொல்லி அனுப்பினதென்னவென்றல் நாசறு சங்குவினுடைய தோப்புக்காறு தாரூகா் நிஷ்கருஷையாய்ச் சொன்னவுடனே யிந்தச் சேதி யிந்த ரசபு மீ 29 உ நாசறு சங்கு கூச்சாய்ப் பயணம் சாகிப்போறதாயும் உங்கள் காரியம் அனுகூலமாய் நடக்கும் சுவாமி உம்முட மனதின்படியே தயவு பண்ணினுரென்றும் அவுரங்காபாத்திலேயிருந்து சினேக மறவா மலிருக்கவேணுமென்று சொல்லியனுப்பினதாய்ச் சொன்னுர். அந்தச் சேதியை துரையவர்களுடனே சொன்னேன். அவரும் சந்தோஷமாய்க் கேட்டுக்கொண்டிருந்தார். மைத்தப்படி விசே ஷமான சேதி யில்லையே யென்று கேட்டார் விசேஷிச்ச சேதி வரயில்லை யென்று சொல்லி நம்முட திறகோமுகளும் சிப்பாயி களும் மேட்டுப்பாளையத்திலே போயிறங்கின சேதி சிதம்பரத் திலே யிருந்தவர்கள் தாமும் வலசை போய் அவன் பிள்ளைகள் தட்டுமுட்டு கூட தீவிக்கோட்டை போய் சேர்ந்துபோச்சுது அவ

றும் கோட்டையிலே போய் பூந்துக்கொண்டார் நம்முடவர்களும் கூட வந்தார்கள் இவர்களும் கோட்டையிலே போயிருக்கிறோம் ருபதினையிரம் ரூபா உண்டிகை அனுப்பிவிச்சோம் அது கூட ஊரிலே ரூபாய் யெடபிபண்ணி அனுப்பிவிப்பார்கள் யென்று சொன்னதுக்கு யெப்போ வருமென்று கேட்டார் பிதை நிஷ்கருஷையாய்ச் சொல்லப்போமா ரெண்டு மூணு நாளையிலே வந்து சேருமென்று சொன்னேன் மெய்தான் ஆனால் வெகு பணம் குடுத்து யெதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். யெனக்கு யிந்த பணம் மாத்திரம் வந்தால் அப்பாலிந்தக் காரியம் யெப்படிப் போனாலும் சரி சந்தாசாயபு யெப்படி போனாலும் சரி யென்று வெகு வேசடையா யுத்தரம் சொன்னார் அதுக்கு நான் சுவாமி உமக்கு யிந்த ருச்சிபத்திலே மகாப் பிறஸ்தாபமும் வெகு கீற்த்தி ஒருத்தருக்கும் அடையாத கீற்த்தி உம்மை அடையப் பண்ணி சுவாமி உம்முடைய திரவியத்துக்கு நஷ்டம் வரப் பண்ணப்போறதில்லை யென்று சொன்னேன். அதுக்கு உத்திரங் கொடாமல் சும்மா யிருந்தார் நான் அனுப்பிவிச்சுக்கொண்டு பாக்குக் கிடங்கிக்கு வந்தேன்.

**1750 ௵ சூன் ௴ 23 உ பிறமோதூத ௵ ஆனி ௴ 13 உ அங்காரகவாரம்.**

இத்தனாள் காலத்தாலே பிறபுவினிடத்திலே போய்க் கண்ட விடத்திலே சயறாமபண்டிதன் அனுப்பின காகிதம் சேதியும் சானவாசுகான் காகிதச் சேதியும் சொன்ன வயனமாவது சானவாசுகான் யெழுதினதாவது தாங்களுடைய காகிதம் பார்த்துக் கொண்டோம் சயறாமபண்டிதன் வசத்தில் தாங்கள் அனுப்பின காகிதம் தகலபுனாலேயும் அவர் முகவசனத்தினாலேயும் தெரிய வந்தது. அவர்கள் எத்திதாக்ஷியாய் தம்முட ஆக்கினைக்கு விரோதமாய் நடத்துகிறார்களா அவர்களை சிக்ஷிக்கும்படியாய் நவாபுசாயபு அவர்களிடத்தில் எழுதருளி யிருக்கிறார்கள் மத்த சமாச்சாரம் யெல்லாம் செயறாமபண்டிதர் காகிதம் பார்த்து தெரியவரும் யென்று யெழுதியிருந்த சேதியை துரையவர்களுக்கு எச்சரிச்சு ஆய் அப்பால் செயறாமபண்டிதன் யெழுதின காகிதத்தில் யென்ன யெழுதியிருக்குமென்று கேழ்க்கச்சொன்ன வயணம் தாங்களெழுதின காகிதத்தில் நான் ஆலசியமாயிருக்கிறதாய் யெழுதினார்கள். அப்படி யொருக்காலும் சுவாமி காரி

யத்தில் வஞ்சனை பண்ணினதுக்குத் தக்கதில்லை அது முன்னும் காரியத்திலே அறிஞ்சு யிருக்றீர்கள். யினிமேலும் அறியப் போறீர்கள் யிப்பவும் சானவாசுகான் காசா சொல்லி அந்தரங்க மாய் யெழுதச்சொன்னது தாங்களிப்போ சீமைகள் கட்டச் சொன்னதும் கில்லாக்கள் வாங்கினதும் கேட்டு உங்கள் யாதரி தனக்கு ருச்சியமெல்லாம் தாரிப்புபண்ணச்சொன்ன சந்தோஷம்படுகிறது ஆச்சரியமில்லை. ஆனலிங்கே சிறிது சின்ன மனுஷர்கள் தப்புந்தாறும் சொல்லி தங்கள் தங்கள் வயறு வளத்துக் கொள்ளுகிறுர்கள் முகங் கருப்பாச்சுது அந்த வழுதாவூர் கோட்டையும் வாங்கினல் அப்போது மிந்த மனுஷர்கள் கூட யிவர்கள் விசேஷம் மெய்யென்று யெண்ணுகிற பெரிய மனுஷர்கள் கூட சித்திரம்போலே யிருக்கிறுப்போலே போறதுமல்லாமல் அந்த சின்ன மனுஷர்களுக்கு இப்படி தப்பு பொய்களினிமேலக்கு யென்றென்றைக்கும் சொல்லாமல் ஆக்கினை கூடவரும் ஆகையால் வழுதாவூர் கோட்டை ஆலயமாய் வாங்கவும் வாங்கினல் நீங்கள் யென்ன யிப்போ நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள் இன்னமென்ன நினைச்சாலும் அது கூட உங்கள் மனதின்படியே நீங்கள் பிறுரத்திச்சுக் குடுக்கும்படியாய் அவருக்கு மெழுதச்சொன்னதும் அல்லாமல் முன்னுள் யென்ன கபுறுபண்ணி சொல்லி அனுப்பிவிச்சேனே அதிலே ஒருக்காலும் தப்பிதம் வாறதில்லை யென்று சொல்லி, எழுதச்சொன்னதுமல்லாமல் உங்கள் சினேகத்தைக் கோரினபடியினலே அவருக்கென்னமோ உங்கள் காரியமென்றல் சுய காரியத்தைப் பார்க்கிலும் அதனமாய்ப் பார்க்கிறுர் இது சத்தியமென்றெழுதினதுமல்லாமல் நாலு பேர் அறக்காறுகளை அங்கே காவல் வைத்திருக்குதே அவர்களை விட்டனுப்பினல் பெகு உபகாரமாயிருக்குமென்றும் யெழுதச்சொன்னதுமல்லாமல் உங்கள் சொலுதாதுகள் மூணு பேர் யிருந்ததிலே ரெண்டு சொலுதாதுகளை சுனத்துப்பண்ணி அப்போதானே விட்டுவிட்டார்கள் ஒருத்தன் செத்துப்போனன். அவர்கள் பறிச்சேதமாயில்லை யென்று சொன்னுரென்றும் மெய்தான் அது அபத்தமல்லவென்று சயறுமபண்டிதன் யெழுதினன். அந்தமத்தலப்பாம்படிக்கு அவருடனே சொன்னேன். நல்லது அந்த அறக்காறுகளை விட்டு அனுப்பிவிடென்று சொன்னுர் நல்லது நாளைக்காலத்தாலே அனுப்பிவிடுகுறேன் யென்று சொன்னேன். அவர்களெங்கே யிருக்கிறுர்கள் யென்று சொன்னேன். கும்பனீர்

தோட்டத்திலே கழுத்திலே வலயம் போட்டுக்கொண்டு மண் சுமக்கிறார்களென்று சொன்னதுக்கு சீக்கிரமத்துக்கு விட்டு ஆற்காட்டை சாவடிசகானண்டையிலே ஒப்பிவிக்கச்சொல்லி சயருமபண்டிதருக்கு யெழுதி அனுப்பிவிடச்சொன்னார். அப்பாலொரு துணுக்கையிலே சயிதுசாயபு மூக்கிலே போடுகிற கண்ணாடி ஒரு சோடி அனுப்பச்சொல்லி யெழுதியிருந்தது. அதைச் சொன்னேன். தாம் ஆறு சோடு குடுத்தனுப்பச்சொன்னார் பின்னே ஒரு துணுக்கையிலே சந்தாசாயபுவைக் கொல்ல ரெண்டு பேரை மமுதலிகான் அனுப்பினான். பத்திரமாயிருக்கச் சொல்லி யெழுதியிருந்தது. அதைச் சொன்னதுக்கு சந்தாசாயபுவுக்கு முன்னாலே பதினஞ்சு நாளைக்கு முன்பாகவும் எழுதி வந்தது. நல்லது பனிரெண்டு சொலுதாது ஒரு சார்செண்துவையும் நாளைக் காலத்தாலே அனுப்புகிறோமென்று சந்தாசாயபுக்குச் சொல்லு.

1750 ஷு ஜூன் மீ 24 உ பிறமோதூத ஷு ஆனி மீ 14 உ புதவாரம்.

இத்தனாள் காலத்தாலே மதாம் பேர்கொண்ட பண்டிகையானபடியினாலே சமஸ்தமான பெரிய மனுஷர்கள் கோன்சேலியேர்கள் முதலான பேர்களும் அனைவரும் வந்து கண்டார்கள். நானும் போய்க் கண்டு உபசார வார்த்தை சொல்லியானவுடனே கோயிலுக்குப் போய் பூசை கேட்டார்கள் யெப்போதும் வாடிக்கைப்படிக்கு மூணு தரம் துப்பாக்கி தீந்தார்கள் அப்பால் கப்பல்களிலேயும் அப்படிதான் ஆனால் ஏக வேளையிலே பீறங்கி சுட்டார்களானபடியினாலே அது சண்டை போடுகிற வேளையிலே சுடுகிற சாடையாய் யேக வேளையிலே சுட்டபடியினாலே அது பெகு தமாஷாகவுமிருந்தது வெளியெ கேழ்க்கிறவர்களுக்கு வெகு பீக்காமாகவுமிருந்தது. அப்பால் பூசை கேட்டு வந்தவுடனே சாராயம் சாந்தே சொல்லி குடிக்கச்சேயும் பீரங்கி அப்படித்தான் கப்பல்களின்பேரிலே கோட்டையின்பேரிலேயும் சுட்டார்கள். அப்பால் சந்தாசாயபு குமாரன் சந்தாசாயபு மீர்ஷம் வகையரு வந்து விசாரிக்க உபசாரமாய் வார்த்தை சொல்லி பண்டிகை முபாரக்கு குடுத்து ஆனபிற்பாடு துரை அவர்களிடத்திலேயும் பேசியிருந்து நாசருசங்கு லசுக்கர் சமாச்சாரமும் மமுதலிகான் பிறப்பட்டு வருகிறதுக்கு சுவார்கள் புதுச்சேரியின்பேரிலே சண்டைக்குப்

போறதில்லை யென்று அவர்கள் பின்வாங்கிப்போன சேதியும் அவன் அத்துமீறி அண்டையிலே அன்பது குதிரையுடனேயும் முப்பது சாலுடனேயும் வந்து யிறங்கின சேதி முதலானதுகள் பேசியிருக்கச்சே இதுக்கு முன்பாக நீர் வெங்கிடாசலசெட்டி முசே மேர் எழுதிக்கொடுத்த தாக்கீத்தை குடுத்து டங்காசாலை யிலே ரெண்டாம் நெம்பர் வெள்ளியை முதல் நெம்பரிலே வைத் துக்கொள்ளச்சொல்லி சொல்ல அந்தப்படிக்கு எடுத்துக்கொள்ள மாட்டமென்கிறார்கள் யென்று முசியே மேர் பிறாதெழுதின காகிதத்தை குடுத்த மாத்திரத்தில் அவர் குண்டூர் வெங்கிடாசல செட்டியின்பேரிலே கோபம்பண்ணி இரண்டாம் நெம்பராயிருந்த காசைச் சாசினிப் பார்க்கவேணுமென்று சொல்ல அது மூணாந் தரம் மூணும் நம்பராய்ப் பார்த்தார்கள். அந்தக் காசு யிப்போ சத்து மாத்துக் குறைச்சலாயிருக்குதென்று திரும்பியும் பிறாது பண்ணுவானேன். ஒருக்கால் பார்த்துத் தீர்ந்தபடிக்கு ஒத்துக் கொள்ளவேணுமேயல்லாமல் யென்று கோபம்பண்ணி முசியே மேரை அழைக்கச்சொன்னார். அப்போ அழைக்க சந்தாசாயபு பேசியிருக்கச்சே வந்தான் வந்தானென்கிற கபுறு சொன்ன வுடனே முசியே திலார்ஷையும் அழைக்கச்சொல்லி சொல்லிப் போட்டு சந்தாசாயபுவை அழைக்கச்சொல்லி முசியே மேர் உடனேயும் முசியே திலார்சுடனேயும் யிவர்கள் மெத்த மோசம் பண்ணுறவர்கள் முன்னே தான் தானே இதுகளையெல்லாம் பார்க் கச்சொல்லி அப்போ பார்த்து தீர்ந்தபடிக்கு ஒத்துக்கொண்டவன் யிப்போ சத்து குறைச்சலாயிருக்குதென்று ஒரு தினிசுக்குப் பேசுகிறான் மத்த தினிசுலே நயமிருக்குதே அதைப் பேசத் தேவையில்லையாவென்று கேட்டார் அதுக்கு வெங்கிடாசல செட்டி சொன்னது அப்படி கவையில்லை. வருகிற வெள்ளியை அப்போதைக்கப்போது சாசினி பார்த்துக் கொடுக்கச் சொல் லுங்கோளென்றும் அதை யெடுத்துக்கொள்ளுகிறோம் ஒரு தினி சுலே நயமென்றும் ஒரு தினிசிலே நஷ்டம் என்றும் சொல்லக் கவையென்னவென்று சொன்னதுக்கு அப்படிக் கவையில்லை. முன் தீர்ந்தபடிக்கு ஒத்துக்கொள்ளுகிறதானால் ஒத்துக்கொள்ளு யில்லாவிட்டால் நாங்கள் கும்பினியிலேதானே செய்துக்கொள்ளு கிறோம் யென்று சொன்னார். அதுக்கு வெங்கடாசலசெட்டி நீங்கள் எத்தி தாக்ஷி பார்த்துக்கொள்ளுகிறதென்று சொன்ன படியினாலே கேட்டோம் யில்லாவிட்டால் முன் பார்த்தபடிக்கு

யென்று சொன்னால் காங்களிதினாலே காலு பணம் கூடி வரும் யென்று பார்க்கிறது போய் நஷ்ட்டமிடலாமிந்த தொழில் பண்ணுகுறதென்று சொன்னான். அதுக்கவர் உனக்கு சம்மதியானால் பின்னம் முன் குத்தகைபோலே அஞ்சு வருஷத்துக்கு உடன் படிக்கை பண்ணிக்கொள்ளு யில்லாவிட்டால் கவையில்லை யென்று சொல்லு கும்பினீரிலேதானே சிலவிட்டு வெள்ளியை உருக்கிக் கொள்ளுகிறோம் யென்று சொன்னார் அதுக்கு யிவன் விடவு மாட்டான் ஒத்துக்கொள்ளவுமாட்டான். இந்த அடுக்கிலே உத்தாஞ் சொல்லாமல் குளறிக்கொண்டு யிருக்கிற வேளையிலே முசியே திலார்சவை மூன் அஞ்சு வருஷத்துக்கு கோந்திராத்து உன் கையிலேயா யிருக்குமென்று கேட்டார். அது நொத்தேர் முன்பாக நடந்ததில்லை கோன்சேலியேர் பிரேசிதேயாமிலே மாத்திரம் யெழுதினதேயல்லாமல் நொத்தேர் முன்பாக யெழுதப் பட்டதில்லை யென்று முசியே திலார்சு சொன்னார். ஆனால் கோன்சேலி பிரேசிதேயோமிட்டு காப்பி யெழுதி வரச்சொல்லுமேவா மென்று யோசனைபண்ணச்சே முசியே மேர் யென் கையிலே டங்காசாலையிலே யிருக்குமென்று சொன்னான். ஆனால் தை யெடுத்துவரச்சொல்லி முசியே திலார்ஷை போகச்சொல்லி சொன்னார். அப்போ முசியே போலேவை அழைக்கச்சொன்னார். முசியே மேர் டங்காசாலைக்கு காகிதம் யெடுத்துவரப் போனான். முசியே திலார்ஷு அவன் வீட்டே போனான். அப்பால் குண்டூர் வெங்கிடாசலசெட்டி தான் முன்னே யெழுதிக்கொடுத்தபடிக்கு பின்னை யொரு பித்திசாம் யெழுதிவைத்திருந்ததை குடுத்தான். அதிலே எழுதியிருந்தது முன்னே கரி சுண்ணாம்பு கரி சவுக்கையாயிருந்தது இப்போ பிறியமாய் ஒன்றுக்கு ரெண்டாய் இரண்டையாயிருக்குது அது ஒரு சரக்கு நாத்துப்பந்து மார்க்கு நாலு ரூபாய் அதனம் சிலவு செல்லுதென்று பத்துப் பதினய்யாயிரம் ரூபா கிறுத்து வாங்கிக்கொள்ளாவிட்டால் யியத்தைவுடனே அறவு தீரத்தை தொட்டு ஆயிரம் ரெண்டாயிரம் ரூபா நஷ்டம் வருகிறது. ஆனபடியினாலே பத்து பதினய்யாயிரம் ரூபாய் கிறுத்து வாங்கிக்கொள்ளவேணுமென்றும் சீமையிலே யிருந்து வருகிற பத்ராக்கு முன்னையைப் போலே அந்தந்த கெம்பற்ப்படிக்கு சரியாய் வருதபடியினாலே அப்போதைக்கப்போது சாசினி பார்த்துக் கொடுக்கவேணுமென்று யெழுதியிருந்தது. அந்தக் காகிதத்தைப் பார்த்து

முன் ரெண்டு மாசத்தையும்போது இதுகளுக்கு அதுக்கதுக்கு மார்க்கம்பண்ணுகிறோம் மென்று சொல்லி முசியே மேர் கையி லும் பித்திசாமையும் குடுத்துப் பார்க்கச்சொன்னவர் யிப்போ ஒன்றும் கூட்டிக் குடுக்கிறதில்லை யென்று கண்டிப்பாய் உத்தாரம் சொன்னார் யெத்தனை விதத்திலேத் தெரியச் சொன்னாலும் ஒரு பிடியாய் சறுவாத்துவமனைக் கூட்டிக் கொடுக்கிறதில்லை முன் ஒப்பந்தப்படிக்கே சகல உடன்படிக்கையும் யென்று சம்மதிப் பினால் வைத்துக்கொள்ளுங்கள் யில்லாவிட்டால் நானே குமபினி யிலே கானே செய்துகொள்ளுகிறோம்-யென்று கண்டிப்பிலே சொல்லி தீத்துப்போட்டார். அந்தமட்டிலே நானும் குண்டூர் வெங்கிடசலசெட்டி மதனந்தபண்டிதனுமாக பாக்கு கிடங்கியே வந்தோம் யிதிலே முசியே மேர் அந்தக் கோன்சேல் பிரேசியோ முட காப்பி டங்காசாலையிலே யிருந்ததை யெடுத்துவந்து துரை யவர்கள் கையில் குடுத்துப்போட்டு போய்விட்டான் மறுபடி யென்னை அழைத்துவரச்சொல்லி அந்தக் கோப்பியை முசியே போலோ கையில் குடுத்து டங்காசாலைக்கு போயிருந்து முசியே மேரையும் கூட வைத்துக்கொண்டு வெள்ளி யிப்போ இரண்டு மாசத்தையும்போது பாத்தபடிக்கும் மைத்த உடம்படிக்கை யெல்லாம் முன் அஞ்சு வருஷத்துக்கு எத்துப்படியும் யிப்போ அஞ்சு வருஷத்துக்கு உடன்படிக்கை தீத்து எழுதி அந்தப்படி எழுதச்சொல்லி உத்தாரம் கொடுத்தார். முசியே போலோ யென்னைப் பார்த்து உனக்கும் பங்காமே நீயும் அந்த வற்த்த கனும் நாளைக் காலத்தாலே டங்காசாலைக்கு வாருங்கோளென்று சொன்னதுக்குப் பகலைக்கு மேலாக நாலு மணிக்கு வருகுறோம் யென்று சொன்னேம். இப்பறம் வரச்சே குண்டூர் வெங்கடாசல செட்டி இதில் பிறயோசனமில்லை. தன்னைக் கட்டிக்கொண்டு போம் வெறும் பிறயாசை மாத்திரம் அல்லாமல் கிறிகையொன்று மில்லையென்று சொன்னான் ஆனால் விட்டுவிடுமென்று சொன் னேன். அது யெப்படி விட்டுவிடுகிறது. நல்லது யீய சம்மதி பத்து பதினையாயிரம் ரூபாயாகிலும் நிறுத்தச்சொல்லிக் கேட்டுப் பாரும் அதிலேயாகிலும் கூடி வருதாமென்று நல்லதென்று அந்த பித்திசாமிலே அந்த அர்த்திகிலே (Article) எழுதி யிருக்கிறதைப் பார்த்து அந்த வரியைக் காண்பிச்சு கேழ்ப்போ மென்று அவர்ப்போகான் பேய் படுத்துக்கொண்டார் அவரண் டைக்குப் பேய் காண்பிச்சு சொல்லங்காட்டிலும் முன் வுடம்

படிக்கை சம்மதியானல் பார்க்கச்சொல்லு யில்லாவிட்டால் விட்டு விடச்சொல்லு அதுவேயல்லாமல் நான் பரிச்சேதம் ஒன்றும் கூட்டிக்கொடுக்கிறதில்லை யென்று பெருத்துவரையிலே சொல்லு குருர். சுவாமி ஆதாயம் குடுக்கிறவர் நல்லது இனிமேல் ரெட்டிக்கவேண்டாம். ஒத்துக்கொண்டு வாரும் யென்று சொன்னன். வேளை பார்த்துச் சொல்லுவோம் யென்று சமயம் பார்த்துச் சொல்லுவோமென்றும் முன் மேர் யெழுதிக்கொடுத்த காகிதத்தினலே துரையவர்கள் ஒன்றும் கூட்டிக் குடாமல் சா|| உத்தாரமாய்ச் சொல்லிப்போட்டார். அவர் முன்னே சொன்ன பேச்சுக்கும் யிப்ப நடந்த காரியத்திற்கும் எத்தனை வித்தியாசமென்று பேசிக்கொண்டு மதனந்தபண்டிதன் வெகிடாசலசெட்டி கூட பாக்குக் கிடங்கியே வந்தோம்.

மதாம் துப்பிளேயிக்சுவை சந்திக்கிறதுக்கு செட்டி கை வாறதில்லையென்று சொன்னபடியினலே சித்தம்பலசெட்டி வகையருக்களையுங் கூட்டி விருசெட்டியும் கூட்டி சாதிக் கோடவையாய் தேவடியாக்களை வைத்துயிருந்தால் கும்பினீர் விபாபாரத்திற்கும் மத்தக் காரியத்துக்கும் வாறதில்லை யென்று சொல்லிப் போட்டுவிடலாமாவென்று சொல்லத்தக்க ஞாயமாய் தெரியச் சொல்லி அவர்களையும் மதாங் துப்பிளேயிச்சு சந்திப்புக்கு வருகிறதுக்கு சம்மதி பண்ணிவிச்சுப்போட்டு பகலைக்குமேல் வந்திருங்கோள் சமையமானல் பேட்டிபண்ணிவிக்குறேன் யென்றும் யில்லாவிட்டால் நாளையதினம் ஆகுதென்று சொல்லி அனுப்பிப்போட்டு நானும் வீட்டுக்கு சாப்பாட்டுக்கு வந்தேன்.

பகலைக்கு சாப்பிடச்சேயும் சாந்தே சொல்லச்சேயும் சாருயம் குடிக்கச்சேயும் கோட்டையிலேயும் கப்பலின்பேரிலேயும் காலமே சட்டபடிக்கு பீரங்கிகள் யேழெட்டு திரம் தீந்தார்கள். முத்திரிக்கு விருந்தும் கூத்து யென்றும் சொன்னர்கள்.

ஆறு மணி வேளைக்கி புவனகிரி பட்டணம் விசுவநாதரெட்டி வந்து பதினேரு விருகன் கொண்டுவந்து நதீர் வைத்தான் கண்டு ஆனதும் மத்தியானம் ஒரு மணி வேளைக்கு முமபத்திரரெட்டி வந்து அஞ்சு விருகன் நதீர் வைத்துக் கண்டான். கண்டானவுடனே திருவிதி சீமை—காட்டு முத்துகிஷ்ணரெட்டியும் அழைத்துக்கொண்டு ராத்திரி ஒன்பது மணிக்கு வாறேன் என்று அனுப்பிவிச்சுப் போனன். இத்தனுள் இராத்திரி ஒன்பது

மணிக்கி செல்லிக்குப்பம் சதாசிவசெட்டி குமாரன் முத்துகிஷ்ண ரெட்டி பதினொரு ரூபாய் கொண்டுவந்து கண்டான்.

**1750 ௵ சூன் ௴ 25 ௳ பிறமோதூத ௵ ஆனி ௴ 15 ௳ குருவாரம்.**

இத்தனுள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போன விடத்திலே ஆற்காட்டுச் சேதியேதாகிலும் வந்துதாவென்று கேட்டார். அப்துல்றயிமானுட பேருக்கு சயிதுசாயபு அனுப் பின காகிதம் ஒன்றும் யிருச்சந்து யென்கிறவன் அனுப்பின காகிதமொன்று ஆக ரெண்டு காகிதமும் சோனக தோல்து மகம்மது என்கிறவன் கொண்டுவந்து என் கையில் குடுத்துமதனுந் தபண்டிதன் படிக்க சொல்லச்சொல்லி துரையவர்களுக்குச் சொல் லிச் சொல்லின காகிதம் படிச்சு சொன்னதாவது சயிதுசாயபு காகிதத்தில் நீ யெழுதின காகிதம் படிச்சுப் பார்த்துக்கொண்டு மிகுதியுஞ் சந்தோஷமாச்சுது. அனுப்பின தினிசுகளும் வந்து சேர்ந்தது மெத்தவும் கூசாலா ஆனால் உங்கள் யெசமான் சந்தா சாயபு காரியத்தில் சானவாசுகான் மனப்பூர்விகமாய் செய்து குடுக்கவேணுமென்று யிருக்கிறபடியினாலே எப்படியாகிலும் காரியங்களுக்கு பத்தேயாம் அதுக்குச் சந்தேகமில்லை வந்த மட்டுக்கும் சுவாமியைப் பிரார்த்திக்குறதில் சுவாமி தயவுபண் ணுவார் என்றும் இப்படியாக யெழுதியிருந்தது அப்பால் யிருச் சந்து யென்கிறவன் யெழுதினதில் மறுதல்லிகான் புதுச்சேரி யாரை செயிக்கிறேன் யென்று பிறப்பட்டதுமாத்திரமேயல்லா மல் செயிக்கமாட்டானென்று அன்பதினாயிரம் குதிரைமட்டுக் கும் சேர்த்துக்கொண்டு வருகிறானென்றும் ஆரோ ஒரு பக்கிர் மந்திரம் யெழுதிக் குடுத்தானும் அந்த மந்திரம் மந்திரிச்ச காகிதத்தில் சந்தாசாயபுவை வரச்சொல்லி எழுதினால் அந்தக் காகிதம் பாத்தவுடனே ஆரென்ன நிறுத்தினாலும் நில்லாமல் வந்துவிடுவாரென்றும் மந்திரிச்சுக் கொடுத்தாரென்றும் அந்தக் காகிதத்தைக் கொண்டுவாறானென்றும அது சந்தாசாயபு அண் டைக்கு குடுத்துப் போட்டாப்போலே அதைப் பார்த்த மாத் திரத்திலே அவர் வந்துவிடுவாரென்கிற பரவசத்தினால் வருகிறா னென்றும் யெழுதியிருந்தது. பின்னையும் சானவாசுகான் சந்தா சாயபு காரியம் அனுகூலம்பண்ணி வைப்பானென்றும் முசபர் சங்குவுக்கு சிரோப்பா குடுத்து ஆகுமென்றும் யெழுதியிருந்

தது. யிதுவுமல்லாமல் மனசூரல்லிகான் யென்கிற வசீர் பங்கா ளம் சுபாவின்பேரிலே போயிறங்கி இரண்டு நாள் சண்டை ஆன தாகவும் அதிலே பங்காள நபாபு பவுன்சு முறிஞ்சு ஓடிப்போன தாகவும் அதன்பேரிலே பங்காள நபாபு பத்துக் கோடி திரவிய மாய்த் தீத்துக்கொண்டு அஞ்சு கோடி ரூபாங்களுகுடுக்கவும் அஞ்சு கோடி ரூபாய்க்கு ஆறு மாசத் தவணை யென்றுப்போலே உடன்படிக்கை யானதாய் அதின்பேரிலே அஞ்சு கோடி ரூபாய் ரொக்கமாய் செலுத்தி பங்காள நவாபுதான் பாலி பாவாணு வாங்கிக்கொண்டாரென்றும் அப்பால் ராசமகேந்திரம் ஸ்ரீக்கா குளம் சுபேதாரான் கோசாகேமேதுல்லாகான் வகையறுக்களுக்கு யெல்லாம் வசீர காகிதங்களெழுதி தம்முட சமூகத்துக்கு வரச் சொல்லி எழுதியனுப்பினதாகவும் அவரவர் போறதாயிருக்கிறார் களென்றும் நசறுசங்குக்கு சேதி வந்ததாய் யெழுதியிருந்தது மல்லாமல் ஆனைகள் ஒட்டகங்கள் காடி யெருதுகள் காஞ்சீபுரம் சோளங்கிவரம் வகையறு யிடங்களுக்கு மேச்சலுக்கு அனுப்பி விச்சதாகவும் சாவணிபண்ணுகிறதாய்க் காணுதென்றும் யெழுதி யிருந்தது. அந்தச் சேதியைத் துரையவர்களுடனே சொன்ன துக்கு கேத்து ரூத்திரி போனுர் மமுதல்லிக்கான் சந்தாசாய புக்கு சின்னல்க் கோட்டை அனுப்பிவிச்சானே அந்தச் சேதி யென்னவென்று துரையவர்கள் கேட்டார் அந்தக் காகிதச் சேதி அல்லிநக்கிசாயபு முன்னுலே மூணு லக்ஷம் ரூபாயி குடுத்தால் விடுதலை பண்ணுகிறேனென்று பேச்சு வார்த்தை நடப்பிச் சானே இப்போ அஞ்சு லக்ஷம் ரூபா கொடுத்தாலே யல்லாமல் விடார்கள் யென்று பேசுகிறதுமல்லாமல் என் சொந்த ஆனை கள் வேலூருக்கு அனுப்பின பேர்படி அல்லிநக்கிசாயபு அறிந்து சானவாசுகானுடனே அதை மறிக்கச்சொல்லி அதுக்குப் பேர் விளங்கன் பட்டாணியனுது யென்று சொல்ல அவனும் மேல் வாங்கிக்கொண்டு பேசினுலும் சானவாசுகான் நம்முடைய யிடத் தில் பெரு பட்சத்துடனே யிருக்கிறபடியினலே அதைப் பட்டா ணியனுது யென்று யெண்பிச்சு ஆனைகளை விட்டுவிடச் சொன் ஞன் ஆனபடியினுலே இன்னோத்தைக்கு சானவாசுக்கான் யிரு தயத்தில் புருந்து நம்முடைய காரியம் அனுகூலம்பண்ணி கொடுக்க வேணுமென்று மனம்வரப் பண்ணிவிச்சபடியினலே நாமும் யிந்த யிபத்து நீங்கி சுகப்படுவோமென்று சொன்னதுக்குச் சந்தேக மில்லை யென்று மமுதல்லிகான் திருவிதி விழுப்புரம் வகையறு

சீமைகள் சப்த்தி பண்ணுகிறார்களென்று அந்தச் சேதியைச் சொல்ல சப்த்திபை வாங்கிப்போடவும் புதுச்சேரியார் வெளிப் பிறப்பட்டு சண்டை பண்ணுமல்படிக்கு பந்து பண்ணச்சொல்லி சானவாசகான் அனுப்பினது நம்முடையபேரிலே யிருக்கிற பக்ஷத்தைக் குறிச்சாங் காட்டுமிப்படி அவன் போய் பங்கப்பட்டேன் என்றும் அவனுக்கு நயினுத்து ஆயிரம் குதிரை சுவார்களை போகச்சொல்லி அவர்களுக்கு நாலு மாசத்திய சம்பளம் கொடுக்கவேண்டியதும் மமுதல்லிக்கான் கையில் வாங்கிக்கொள்ளச்சொல்லி சொன்னபடியினுமேல அந்தச் சுவார்களை வந்து ரெம்பவும் தங்களுக்கு உண்டான பணம் குடுக்கச்சொல்லி சக்குத்தி பண்ணதின்பேரிலே மமுதல்லிக்கான் யென் கையிலே ஒரு காசு ஆகிலும் குடுக்கத்தக்கதில்லே யென்று சொன்னுப் போலே அவர்கள் ஆறகாட்டை மறுபடி போய்விட்டதாகவும் மமுதல்லிக்கான் திமிரியிலேதானே யிருக்கிறாப்போலேயும் யிது மூனாந்திரங்களிலே அவனுக்குப் பங்கம் வருவிக்கவேணும்.

1750 ௵ ஜூன் மீ 27 உ பிரமோதூத ௵ ஆனி மீ 17 உ சனிவாரம்.

இத்தனுள் காலத்தாலே பிறபுவினிடத்துக்குப் போன விடத்திலே ஏதாகிலும் சேதி வந்துதாவென்று கேட்டார். ஆற்காட்டு சேதியானல் நாசறுசங்கு அப்துல்நபிகான் இம்மத்து பாதூர்கான் அப்துல்மசிகான் இவர்களை பேஷ்க்கஷு கேட்டதாகவும் அதுக்கவர்கள் அவர்கள் உங்கள் தகப்பனுரைப்போலேக்கொத்தவர் எங்கள் கையில் வாங்கினதில்லே. நீர் வாங்கவேணுமென்றால் குடுக்கப்போறோமா குடுக்கப்போறதில்லே. அப்பாலும் வந்து எங்கள் சீமையில் பாளையக்காறர் மயமாய் பொழுது விடிஞ்சால் அந்திப்பட்டால் பாளையக்காறர் சேர்று சொல்லிமுடியாது. அப்படி நாங்கள் சிப்பந்த வைத்துப் போருடி நாங்கள் கடன் பட்டதுக்கு நீங்கள் சம்மதி பண்ணவேண்டியது போய் நாங்கள் குடுத்ததாகவும் எங்களுக்குப் பணம் சமையமா யிருக்குதாவென்றும் பின்னேயும் அதுக்குத்தக்க அநேக நியாயமெல்லாம் சொல்லிவந்த மனுஷனைப் போகச்சொன்னதாகவும் அதின்பேரிலே நாசறுசங்கு கோபம்பண்ணி சக்குத்தியாய் குடுத்தாலே அல்லாமல் கேழ்க்கப்போறதில்லே யென்று சொல்லி அனுப்பினதின்பேரிலே யவர்கள் குடுக்கிறதில்லே யென்று

சொல்லி அனுப்ப யிப்படி சால்சவாபு நடக்கிறதின்பேரிலே யிவர்
களும் தறுபாறு போகாமலிருக்கச்சே நாசறுசங்கு மனுஷர்
கை கபாடம் போனவிடத்திலே கடப்பையார் கந்தனூர் சாவனூர்
பங்காபுரம் மனுஷர்கள் யிவர்கள் கைக்கபாடம் மனுஷர்களும்
போனவிடத்தில் யிவர்களுக்கும் அவர்களுக்கும் சண்டையான
போது நாசறுசங்கு மனுதர் யிவர்கள் மனிதர்களைப் பிடிச்சுக்
கொண்டுவந்து நாசறுசங்கு அவர்களுடனே சொன்னதுக்கு
நாசறுசங்கு அவர்களை ஆக்கினை பண்ணச்சொன்னதாகவும்
அதின்பேரிலே கடப்பையார் கந்தனூரார் சாவனூரார் பங்காபுரத்
தார் யிவர்கள் பட்டாணியரானபடியினாலே இந்த மூணு சுபே
தார்களும் ஏகத்துக்கு கூடி தங்கள் பவுன்சை முஸ்தீதுபண்ணிக்
கொண்டு நாசறுசங்கும்பேரிலே சண்டைபண்ண நினைத்ததாகவும்
அந்தச் சேதி நாசறுசங்கு அறிந்து சானவாசுகானுக்குச்
சொல்லி சமாதானம் பண்ணச்சொன்னதாகவும் அதின்பேரிலே
சானவாசுகான் வந்து சமாதானம் பண்ணினதாகவும் சேதி
கேழ்விப்பட்டது ஆற்காட்டிலே யிருக்கிறவர்களுக்கும் பின்னை
யும் கில்லேதாரர்கள் முன் கட்டி யிருந்தவர்களுக்கும் ஒருத்தருக்
கும் ருசியில்லையாம் அப்படி நாசறுசங்குவுக்கு முன் அனுகூலமா
யிருந்தவர்களாரோ அவர்களெல்லாரும் யிப்போ பகையானார்கள்
சானவாசுகான் அவன் காசாதிவான் அவன்தானே யிவனுக்குப்
பகையானால் மத்தப்பேர் ஆர் நிவேஷமில்லாதவர்கள் இப்போ இந்
தடுக்கிலே நாசறுசங்கு பேச்சு கிழுக்கிறங்கிப்போனதாய் இனி
மேல் யிவன் முன்னுக்கு வரமாட்டான் ஆனதினால் தானிப்படி
பவுன்சு கூட சகாயமாய் வந்தவர்கள் சேவிச்சவர்கள் பகையான
மட்டுக்கும் முன்னுக்கு அவனுக்கு நல்லகாலத்துக்கு யேஷியமில்லை
யென்று முன்னமே பிடிச்சுச் சொல்லிவந்த சனவாக்கியம் அபத்
தமாய்ப் போமா ஒருக்காலும் போகத்தக்கதில்லை யென்று
சொல்லி இதல்லாமல் பின்னை ஒரு சேதி மன்சூரல்லிகான் பங்கா
ளம் வந்தவன் முன்னே அவுரங்காபாத்துக்கும் புறுணபுரிக்கும்
சிர்சங்கு யென்கிறவனை அனுப்பி நாசறுசங்கு சீமையெல்லாம்
சப்திபண்ணச் சொன்னதுமல்லாமல் கில்லாக்களெங்கே யிருந்
தாலும் வாங்கச்சொல்லியும் நாசறுசங்கு கசானா யிருக்கிறதை
யும் யெடுத்து ஆசூருக்கு அனுப்பிவிக்கச்சொல்லியும் உத்தாரம்
குடுத்து அனுப்பினதாகவும் அவன் வந்து புறுணபுரி அவுரங்கா
பாத்துக்கு சமீபத்திலே வந்து அந்த பிறுந்தியங்களிலே யிருக்

கிற சுபேதாரர்கள் சமேதாரர்கள் கில்லேதாரர்கள் வகையறு பாதுசா மனசப்சா சாப்பிட்டுக்கொண்டு அவர் உளக்குமிலே யிருக்கிறவர்களுக்கெல்லாம் யெழுதியனுப்பினது நாசருசங்குவினுடனே பேசக் கவையில்லை அவனுட ஒடுதி கேழ்க்க கவையில்லை யென்றும் சிர்சங்கு உத்திரவுப்படிக்கு நடந்துகொள்ளச் சொல்லியும் அவர் உத்திரவுப்படி நடந்து கொள்ளாமலிருக்கிறவர்களுக்கு பாதுசா கிசுமத்துக் கவையில்லை வசிர்மனசூரல்லிகான் எழுதின பர்வாணப்படிக்குப் பெகுபேர் சிர்சங்கைப் (Sherjang) போய்க் கண்டார்கள். றகோசிபூசலாவும் (Raghiji Bhonsala) பத்தேசிங்கும் போய்க் கண்டு சவாபாசிறுயனும் (Saw Baji Row) யென்கிறவன் ரூமறுசு யென்கிறவனே சாவுராசாவுக்குப் பதிலாக வைத்துக்கொண்டு தான் சகலத்துக்கும் பிறத்தி நீதியாயிருந்துக்கொண்டு ஒருத்தருக்கும் கவையில்லை யென்று யென்பிச்சுக்கொண்டு திறியுறான் யென்று சொல்லி தாங்கள் வேறே ஒருத்தரை வைத்துக்கொண்டு அவனைத் தள்ளி நடப்பிக்குறோமென்று கேழ்க்கப் பாசிறுயனும் நாசருசங்கும் ஒண்ணு யென்று யிவர்கள் சொன்னபடியினாலேயும் சிர்சங்கும் அறிந்து யிருக்கிறபடியினாலேயும் றகோஜி பூசலாவுக்கும் பத்தேசிங்குக்கும் உங்களுக்கும் சம்மதியான ருசாவாய் வைத்துக்கொள்ளச்சொல்லி உத்தாரம் குடுத்தபடியினாலே றகோஜீபூசலாவும் பத்தேசிங்கும் (Fatch Singh) அதின்பேரிலே நாசருசங்கு ருச்சியமும் சவாபாசிறுயன் ருச்சியமும் நிபாத்தம்பண்ணிப் போட்டதுமல்லாமல் வேறே பட்டம் கட்ட யெத்தனம் பண்றபடியினாலே பாசிறுயன் நாசருசங்கை வரச்சொல்லி யெழுதியனுப்பி வைச்சான் என்செருகு கபுறு நாசருசங்குக்கு வந்ததா யெழுதி அவர்கள் சீமைக்கு அனுப்பிவிச்சுக்கொண்டு போறதுகளும் யெருது சுமக்கிற சீமை வைக்கல் நாலஞ்சு ரூபாய் விக்கிறபடியினாலேயும் ஆனை குதிரை மாடு விஸ்தாரமய் சாகிறபடியினாலேயும் சாவாணி யிங்கே பண்ணமாட்டாரென்று சொல்லுகிறார்கள் அப்பாலென்னமாய் நடக்குமோ வென்று யெழுதியிருந்தது யென்று கபுறு சொன்னதுமல்லாமல் யிப்போ முசபர்சங்கு அண்டைக்கு காகிதாயிம் மோறுபண்தன் வகையறு போனார்களென்றும் அவருக்குச் சொல்லவேண்டிய விதமாய்த் தெரியப்படச் சொல்ல அவர் சம்மதிக்கமாட்டமென்குறார் என்று பேசிக்கொண்டு போனதாயி சேதி வந்தது.

ஆனுலிவர்கள் போனவிடத்திலே என்ன நடந்துதோ அவ ரென்ன வுத்தாரஞ் சொன்னுரோ தெரியவில்லை யென்று எழுதின தாய்ச் சொன்னேன். அப்பால் சந்தாசாயபுக்கு யேதாகிலும் சேதி வந்ததாவென்று கேட்டார் இந்தச் சேதி ஒன்றும் யெழுதி வரயில்லை யென்று சொன்னுர் யென்று சொன்னேன். அப்பால் சிதம்பரம் வகையரு சீமைகள் பேச்சும் பின்னையும் சிறிது சீமை கள் சப்த்தி பண்ணச்சொன்னது முதலான பேச்சுப் பேசி யிருந்து பாக்கு கிடங்கிற்கு வந்தேன்.

இத்தனுள் சாயங்காலம் அழைச்சனுப்பிவிச்சு மேட்டுப் பாளையத்திலே யிருக்கிற நம்முடைய தாஷமாமை அப்பாலே சிதம்பரம் சமீபத்திலேயே யிறங்கச்சொல்லி நீ சொன்னபடிக்கி காகிதமும் முசியே தெருவிர் (M. Tribert) பேருக்கு யெழுதித் தாறேனிதல்லாமல் ஒரு வெள்ளைக்கார திறகோமையும் ஒரு துலுக்கச் சவாரையும் ரெண்டு பேரையும் சிதம்பரத்துக்குப் போயி பணம் குடுத்தாலச்சு யில்லாவிட்டால் யினிமேல் மனம் பொறுக்கத்தக்கதில்லை கோட்டையை வாங்கி உன்னையும் பிடிச் சுக்கொள்ளுவோமென்று சொல்லிப்போட்டு வரச்சொல்லி எழுதுகிறேன் யென்று சொன்னுர். அது உத்தமந்தான் அப்ப டித்தான் செய்யவேண்டுமென்று சொன்ன பிற்பாடு அந்தக் காகிதம் யெழுதி முசியே திருவீரே (M. Tribert) அண்டைக்கு அனுப்பச்சொல்லிச் சொன்னுர். அந்தப்படிக்குச் சேவுகன் கையில் குடுத்துக் காகிதமனுப்புகிறபோது கவிச்சியப்பிள்ளை நம்முடைய குமாஸ்தாவுக்கு கூட யிந்த வயணம்மும் யெழுதி யிந்த தம்மக்கைக் காண்பிச்சு பணத்தைச் சறுக்கிலே வரப்பத்தச் சொல்லி எழுதியனுப்பினேன்.

1750 ஷு ஜூலை மீ 2 உ பிறமோதூத ஷு ஆனி மீ 22 உ குருவாரம்.

இத்தனுள் காலத்தாலே கோட்டையிலே பிடவை வற்த்த கர்களுது பார்வையானபடியினுலே கோட்டையிலே பார்வை பார்க்கிற யிடத்திலே யிருக்கச்சே துரையவர்களழைக்கிறுர்க ளென்று சேவுகன் வந்து அழைச்சான். போய் சின்னதுரை யுடனே சொல்லிப்போட்டு துரையவர்களண்டைக்குப் போன வுடனே துரையவர்கள் ஆற்காட்டுச் சேதியேதாகிலும் வந்ததா வென்று கேட்டார். இந்தமட்டுக்கும் பின்னம் கேழ்விப்படயில்லை

பென்று சொல்லி நம்முடவர்கள் சப்த்திப்பண்ணப் போனவர் கள் யிறவாசகல்லூர் (Eravasanallur) கோட்டையைப் பிடிச் சுக்கொண்டு வெள்ளைக் கொடி போட்டார்கள். அதிலே முன் னூறு சேவுகர்களும் அந்த சீமை அமுல்தார்களும் அங்கே யிருந்தவர்கள் பிறுன்சுக்காறர் பவுன்சு வில்தாரமாய் வருது யென்று கேழ்விப்பட்டவுடனே அவர்கள் அப்பிறம் காதவழிக் குள்ளாக ஒரு காடு சேர்ந்து பாளையப்பட்டிலே போயிருந்து அவர்கள் பெசமான்களுக்கு எழுதினார்களென்றும் அந்தப் பெலன் பார்த்துக்கொண்டு வருவார்களென்று நம்முடவர்கள் எழுதினார்களென்று சொன்னதுக்கு அப்துல்றயிமான் சேக்கு அசேன் சேக்குயிபுறும் தாலூக்குச் சிப்பாயிகள் அந்த சமயத் திலே யில்லையே போனவர்கள் நீ புதுசாய் வைத்து அனுப்பின வர்களா யென்று கேட்டார் நூன் சொல்லப்பட்ட அப்துல் றயிமான் வகைபறு தாலுக்கு சிப்பாயிகள் ஒருத்தராகிலும் யில்லை.

என் புதுசாயி நாட்டுத் துப்பாக்கிக்காறரை வைத்து உங்கள் கையில் மருந்துக் குண்டும் வாங்கி அனுப்பிவிச்சேனே அவர்களல்லவா தோறணம் வைத்தவர்கள் யென்று சொன்னப் போலே பெகு சந்தோஷமாய் அவர்களை பத்திரமாய் கில்லா விலே யிருக்கச்சொல்லு யின்னம் முப்பது வீவறு துப்பாக்கி மருந்து சிப்பமும் வாங்கி அவர்களுக்கனுப்பி பத்திரமா யிருக் கச்சொல்லென்று முப்பது வீவறும் மருந்துக்கு ஒடுதிகைப் பண்ணிக்குடுத்தால் கல்லதென்று வாங்கிக்கொண்டு யின்னம் நூறு துப்பாக்கிக்காறர்களை வைத்துக்கொள்ளுகிறோமென்று யெழுதினார்கள். அந்தப்படி வைத்துக்கொள்ளச்சொல்லி பதி லுத்தாரமும் யெழுதி அனுப்பிவிச்சேன் யென்று சொன்னேன். பணம் காசுக்கு விரைவுண்டா யிருக்குமாமென்று கேட்டார் அதுக்கு நான் சொன்னது ஆனிவரை சமையத்தில் பணம் ஆள் மகாணச் சிலவுக்குக் கூட அகப்படாத வேளை அத்துடனே கூட கலாபம் வந்து இரண்டு லக்ஷம் குதிரையும் அஞ்சாறு லக்ஷம் பிறசையும் வந்து பூமி கூட நாலாறு புருஷம் கூட வெட்டி கட்டு குலைகளையும் கூப்பிடக் கோழியுமில்லாமல் போச்சுது குட்டிச்சவார்களே யல்லாமல் செவர்மேலே கழியிருக்கிற கிரு மங்கள் ஒன்றுமில்லாமல் யிருக்கச்சே பண விரைவு யெங்கே யுண்டாயிருக்கப்போகுது வெளிக்கு யெல்லாம் யிப்போ நம்முட

லூரிலே யிருந்து நெல் போகாமல்போனல் வெளியிலே ஒருத்த ரிருக்கக்கூடாது திருவிதி அந்த வட்டங்களுக்கு தேவனும்பட் டணத்திலிருந்து போகுது யிப்படி யிருக்கச்சே யென்னமாய் நடக்கப்போகுது. ஆகிலும் யிப்போ விரைக்கிற கம்புக்கும் வரகுக்கும் மழையும் பேஞ்சு கலகமும் பயமுமில்லாதிருந்தால் ரெண்டு மாசத்துக்கு யிது அருப்பானல் அப்பாலதை சிவனம் பண்ணிக்கொண்டு நிலேச்சால் நிலேச்சார்களேயல்லாமல் மத்தப் படி வேறே நிறுவாகம் யிருக்குதாமென்று விஸ்தாரமாய்ச் சொன்னேன். சிதம்பரத்துப் பேச்சு யென்னுமென்று கேட்டார். இத்தனன் ஆறரை மணி வேளைக்கு என் குமாஸ்தா கலிச்சியப் பிள்ளை யெழுதி அனுப்பின காகிதம் சேதி ஆனல் வெள்ளைக் காறர்களும் சிப்பாய்களும் யெப்போ தச்சக்கடைக்கு வந்து சேர்ந்தவுடனே பதினய்யாயிரம் நாளை வருமென்று சொன்னேன்.

இத்தனள் பகலேக்கு மேலாக ஆறு மணி வேளைக்கி துரை யவர்களுக்கு ஆற்காட்டிலே யிருந்து வந்த சேதி யென்ன வயண மாவது முசபர்சங்கை ஆற்காட்டுக் கோட்டையிலே கலவை சபுதறுசேன்கான் வீட்டிலே காவல் வைத்து முன் 18 உ ஞாயத்துக்கிழமை ராத்திரி முசபர்சங்கு செவிரே ஒரு ஆள் போக வழி ஆக்கி வெளியே பிறப்பட்டு புதுச்சேரியே வாறதாயி யோசனைபண்ணி செவிரிலே துவாரம் பண்ணினுலுமிதிலே பொழுது விடிஞ்சுபோனபடியினலே செங்கள் பேத்ததுகளும் சுண்ணும்பு கட்டிபும் துளுமாயி விழுந்து கிடக்கிறதையும் வெளிக்கு வருமல் யென்ன முடிஞலும் நில்லாதென்று யோசனை பண்ணி அங்கே நாசறுசங்கு பாறுஷாகளிருக்கிறவர்களேயும் அழைத்து நான் வெளியே பிறப்பட்டுப் போகவேணுமென்று இந்தச் சுவரிலே துவாரம் பண்ணினேன் ஒரு நாள் நன்றாய் நுழைஞ்சு போகலாமாமென்று கேட்டாராம். அதுக்கு வந்து பாறுஷாகள் யேன் யிப்படி செய்தீர் கொஞ்ச நாளையிலே உம்முட மனதின்படியே சீர்மையும் பூமிகளும் உம்முட வசம்பண்ணி சிரோப்பாவும் கொடுத்து நடப்பிக்குறதாயிருக்கச்சே இப்படி நீ யேன் நடப்பிச்சிரென்று அவர்கள் சொல்லி யிதை மறைத் துச் சொல்லாமலிருப்போமாமென்றுல் யிவரிங்கே யிருக்கிற சவுக்கிக்காறர் யெல்லாம் அறியச்சொன்னதுமல்லாமல் இவரண் டைக்கு யிப்போ பெகு பேர் போக்குவரத்தாயிருக்கிருர்கள்

அவர்கள் பாத்தாலும் யிருக்கிறவர்களுக்கெல்லாம் தலேக்காக்கின வரும் ரூபாய்க்கு கபுலாய் அதுக்கு பதினுயிரம் ரூபா யிப்போ கையிலே குடுத்து மத்த அய்யாயிரம் ரூபா பெட்டு பத்து நாளே யிலே குடுக்க வாயிதாபண்ணி யிதிலே காணுகோயி நறசிங்க ருய்னும் முத்தாமியா மனுஷன் பேர் விளங்கனும் புதுச்சேரிக் குப் போய் அங்கே யித்து அங்கேதானே சம்மதிப்பண்ணிப் போட்டு வருவார்களென்று சொன்னுனென்று முத்தாமியா சொன்னதாக யெழுதினதுமல்லாமல் இன்ன மிந்தப் பணம் பதினுயிரம் ரூபாயும் வந்தயிற்பாடு பின்னேயும் சுறுக்கு பண்ணு கிறேன் யென்று யெழுதினதுக்கு சொன்னதுக்கு அப்படித்தான் செய்யவேண்டியதென்று சொல்லி முத்தாம்கான் தோலத்து மகம்மதுயென்கிறசோனகப்பயலேப்பகலேக்குமேலாகதிருவிதிக்கு அனுப்பி அங்கேயிருந்த சொறுதாதுகளேயும் சிப்பாயிகளும் யிரண்டு பிரக்கிகளும் கொண்டுபோகச்சொல்லி காகிதமெழுதி அனுப்பினேனே இவர்களின்று போய் சேருவார்களவர்களும் போனல் மத்தப் பணமும் சிக்கிறமத்துக்கு குடுத்துவிடுவா ரென்று சொன்னூர் அது மெய்தான் அவன் சாடையே அப்படிப் பட்டது மத்தப்படி சினேகமாய் ஞாயத்தையும் எண்ணி நடக் கிறவன் அவன் நல்ல சிவனுக்குப் பயந்து குடுக்கிறவன் என்று சொன்னேன். அப்பால் முன் பதினுயிரம் ரூபாயி நாலாம் நாள் வந்துதே மத்த ஆயிரம் ரூபா யெப்போ வரும் யென்று கேட்டார். இது அடங்கவறியாதென்று சொல்லி அப்பால் சான வாசுகாறுக்கு எச்சரிக்க அவன் வந்து சவரிலே ஆள் நுழையும் படியாக பண்ணியிருக்கிற தந்திரத்தையும் பார்த்து செல்லின கடைப்பாரைக்குப் பதிலாய் யிரும்பு குச்சு யிருக்கிறதும் பாக்க அப்பால் இதாயத்துமொகதின்கானேப் பார்த்து உம்முட மனே தாப்படிக்கி யெமெட்டு நாலையிலே சகல காரியமும் அனுகூலம் பண்ணிக் குடுக்கிறதாய் பேச்சு வார்த்தை நடந்த அதுக்குத் தக்கதாய் முன்னேயைப்போலே சவுக்கிகள் யெல்லாம் சக்குத்தி பண்ணிக் கவையில்லே. போயி பேசி வாறவர் வாட்டுமென்று உத்திரவு கொடுத்து சகல சலக்கறணையும் நடப்பிக்கச்சே நீர் யேன் யிப்படி நடப்பிச்சீர் இனி நாசறசங்கு அறியாமல் நட பிக்கவும் கூடாது அப்போதே யிரனுறு பேர் மட்டுக்கும் அறிஞ் சது நிக்குமா அப்பால் சொல்லாமல்ப்போனல் நமக்குத்தானே மோசமென்று சொல்லி அப்பால் நாசறசக்குவுடனே போய்ச்

சொன்னப்போலே அவர் மிகுதியும் கோபம்பண்ணி முன் பிருந்த சவுக்கைக்காறரையெல்லாம் வாங்கிப்போட்டு வேறே சக்குத்தியாயிருக்கிறவர்களை வைச்சதுமல்லாமல் முன் விபேடு தாதி (Liberty) ஆர் வந்தாலும் உள்ளே விடக்கூடாது உள்ளே யிருக்கிறவர்களை வெளியே விடக் கவையில்லே பெகு பத்திரமா யிருக்கச்சொல்லி திட்டம்பண்ணினுரென்று காறு வந்ததென்று சொன்னவுடனே பயித்தியம் பிடிச்சுதா தான் செய்த வேலையைத் தான் தானே யென் யிப்படியெல்லாம் அவரவரை அழைச்சுக் காண்பிச்சானென்று பயித்தியம் பிடிச்சாப்போலே செய்தா னென்று சொன்னுர். முன்னே வெளிப்படலாமென்று செய்தான் அப்பால் பொழுதுவிடிஞ்சுப் போனபடியினுலே பேயை மேலே போட்டுச் சொன்னதாய் தோத்தது என்று சொன்னேன் அப் பால் பின்னை யென்ன சேதி யென்று கேட்டார். ஆற்காட்டிலே சத்திலுமிருக்கிற சவுக்கைக்காறர் கையிலே சந்தாசாயபுக்கு யெழுதின ரேக்கா வொன்று அகப்பட்டது அதைக் கொண்டு போயி நாசருசங்கு கையிலே கொடுத்தார்கள் இதிலெழுதி யிருந்த வயணம் நாசருசங்கு யிங்கே கொஞ்ச பவுன்சுடனே யிருக்கிறுன். 2000 சொலுதாதுடனே நீர் வந்தால் நாசருசங்கை கைப்பிடியாய்ப் பிடிச்சுக்கொண்டு போகலாம் யென்றும் பவுன்சு வெகுசாய்ப் போய்விட்டுதென்றும் கொஞ்சம் பவுன்சுடனே யிருக்கிறுர் இதல்லாமல் எப்போதும் பெகு உசாறுயிருக்கிறு ரென்றும் ஸ்ரீ லோலனுகையுடனே யென்னேரமும் யிருக்கிற படியினுலே உங்கள் மனதின்படிக்கி நடந்தேறிப் போமென்று யெழுதியிருந்ததாம். அதைப் படிச்சுப் பார்த்தவுடனே சொலு தாதுகளெழுதியிருந்தபடியினுலே சந்தாசாயபுக்கு யெழுதினது டீக்காய் யேற்பட்டது. ஆறுலெழுதினவனின்னுனென்று யேற் படவில்லே. கொண்டுவந்த மனுஷனும் தப்பிப் போனுன். ஆன படியினுலே சவுக்கிகாறர்களுக்கு யெல்லாம் தாக்கீதுகளாய் சீட்டு கள் யாராகிலும் கொண்டுபோகாமல் பத்திரமாய் சாக்கிறதையா யிருக்கச்சொல்லியும் ராசாசந்திரசேனன் முதலான பேர்களையும் அப்துல்நபிகான் முதலான பேர்களையும் சுபேதார்களையும் கிட்ட சமீபத்திலே யிறங்கி ருமாருசாவுக்கி பத்திரமாய் சாக்கிறதையா யிருக்கச்சொல்லியும் புதுச்சேரிக்குக் கூட அறக்காறுகளை அனுப்பி சமாச்சாரம் அடிக்கடி விசாரிச்சு வரச்சொல்லியும் அனுப்பச்சொல்லியும் யிப்படியெல்லாம் நடந்தது யென்று

யெழுதியிருந்தது யென்று சொன்னேன். அப்பால் மிறத்து சல்விகான் மொகத்துமா பத்து லட்சம் ரூபாயாய்த் தேருகடை யாச்சுதென்று அஞ்சு லட்சம் ரூபாயாக தேருகடையாச்சு. இப்படி ரெண்டு விதத்திலே எழுதிவந்ததென்று சொல்லி இரண்டிலே ஒரு துகை தீர்ந்தது மெய்தானென்று சொன்னேன். அப்பால் கலவிக்கோட்டை முப்பத்திராயிரம் ரூபாயாய்த் தீந்தது யிமாம்சாயபு மகன் வந்து நாசறுசங்கு பேட்டியானுமென்றும் அவன்பேரிலே பெருசாய்த் தயவுபண்ணி சிறேப்பா குடுத்தா னென்றும் யிது முதலான சேதி யெழுதிவந்தது யென்று சொன் னுன். முசபர்சங்கு யென்ன வேலே செய்தானென்று சொல்லி அப்பாலிந்த சீட்டு யாரோ நாசறுசங்குக்குப் பயம் பிறக்கவேணு மென்றும் அவன் அப்பால் பிறப்பட்டுப் போகவேணுமென்று யெழுதிப்போட்டார்களென்று சொன்னுர். பின்னே யேதாகிலும் சேதி உண்டாவென்று கேட்டார். இது எழுதிவந்த சேதி வாய் விசேஷமாய் கேட்டதானுல் நான் ஆலம் யென்றும் ராசாருமச் சந்திரன் வகையிரு யிருக்கிற பெரிய மனுஷர்களெல்லாம் முசபர் சங்கை கைதியிலே யிருக்கிறவனே வெளிப்படுத்தி நாசறுசங் குக்குப் பதில் முசபர்சங்கு தக்கன் (Deccan) சுபாவுக்கு யென்று நாட்டி நாமிவரை வணங்கி நம்முட பவுன்சுகளும் நாமும் யேற்படுகிறபோது நாசறுசங்கு பிலன் யீன பெலனுயிருக்கும் யீன பெலனுயிருந்தால் கைப்பிடியாயகப்பட்டால் பிடிப்போம் இல்லாவிட்டால் அவனைச் சிரிக்கட்டிப் போடுவோமென்றும் யிப்படி யோசனைபண்ணி தீந்து அப்பால்தான் நாமும் முசபர் சங்கை வெளிப்படுத்தவெணுமென்று யோசனைபண்ணினுர்களாம் அதின்பேரிலே சுவரைக்கெல்லி இவனே வெளிப்படுத்த யோசனே பண்ணினதிலே பொழுது விடிந்துபோய்ச் சமையம் தப்பிப் போனபடியினுலே யிதாயித்துமொகதின்கான் பேய் வேஷத்தை மேலே போட்டுக்கொண்டு பயித்தியக்காறனைப்போலே பலவந்த மாயி நான் கெல்லினேன் என்று அவரவருடனே சொன்னதும் பேசினதும் சானவாசுகானுக்கும் பாத்தியா ராத்திரி முப்பதும் கெல்லினது யென் கையெல்லாம் சிவந்துபோச்சுதென்று சொன் னது பின்னே யொருத்தர்பேரிலேயும் சந்தேகம் தோத்தாமல் பயித்தியக்காறன் சாடையின்பேரிலே போகட்டுமென்று சொன் னதாய் நான் கேழ்விப்பட்டதுமல்லாமல் அவர்களித்தனே பிறயா சப்படுகிறவர்கள் யிரண்டு லட்சம் விருகன்மட்டுக்கும் ராசா

சந்திரசேனன் வகையறு கேட்டதாகவும் அதுக்கு உங்களுக்கு உங்கள் மத்தியஸ்தம் காரியமானபிறபாடு முசபர்சங்கு குடாட்டால் நான் குடுக்கிறேன் யென்று சொல்லி யெழுதிக் குடுக்கச்சொல்லி உங்களண்டைக்கு மனுஷர் வாறதாகவும் சேதி கேழ்விப்பட்டேன் என்று சொன்னதுக்கு அப்படி யெழுதிக் கொடுப்போமென்று அதுக்கு அடுத்த சம்மதியான பேச்செல்லாம் சொல்லி மனுஷர்களெப்போ வருவார்களென்று கேட்டார். நாளை வருவார்களென்று சொன்னேன். அப்பால் பிடவை சிலை வாயில்லை யென்று கேட்டதுக்கு காலதேச வர்த்தமானங்களையும் கொஞ்சநஞ்சம் சேலம் உடையார்பாளையம் முதலிய யிடங்களிலிருந்து வருகிறதும் டங்காசாலையிலேயிருக்கிற பிடவைகளை பேசச்சொல்லி எழுதியனுப்பினதும் திருவெத்தியூர் துலை சிதம்பரம் செனன்மனுபக்கன்பாளையம் காஞ்சிபுரம் யிந்த வட்டங்களிலேயிருந்து விஸ்தாரமாய் ஒன்பது கால் பனிரெண்டு கால் நெடுமுழம் கூடுகிறது. குலைக்க நாயும் கூப்பிடக் கோழியும் கூட யில்லாமல் குடிச்சுவரே யில்லாமல் கழி போட்டு செத்தை போட்ட விடு ஒன்று தப்பாமல்போயிருக்கிறது. நீங்களறிந்திருக்கிறபடியினாலே நான் சொல்லவேண்டியதென்னவென்றால் யிருக்கிற பருவத்தைச் சொன்னேன். அப்பால் நான் பாக்கு கிடங்குக்கு வந்தேன் ஆனால் பிடவை சேலி இவ்விடத்திலே நாசருசங்கு ஆற்காட்டிலே யிருக்கிறபடியினாலே நம்முட மனிதர் தாறுளமாய் வெளியே போய் சரக்கு கூட்டமாட்டார்கள் அல்லவென்று பிறப்பட்டால் யிருநூறு சிப்பாயிகளுடனே வெளியே பிறப்படவேணும். இந்தமட்டுக்கும் தோறணம் பூந்தமல்லி சீமைமட்டுக்கும் வைத்ததுமல்லாமல் இலவாசனூர் கோட்டை வாலிகொண்டாபுரம்மட்டுக்கும் தோறணம் வைத்தது பேர் மாத்திரமேயல்லாமல் குடியிருக்கிறானென்று அல்லவே தான் த்துருமித்தியம் வைக்குறதேயல்லாமல் பிறயோசனத்தைக் குறிச்சு அல்லாதபடியினாலே தாசத்து முக்கியமெல்லா முண்டாச்சுது நாசறுசங்கும் பயமுண்டாச்சுது யித்தனையும் பிடவை வாறதபடியினாலே பங்காளத்துக்குப் பயணம் அனுப்புவான் போலேயே தோத்துது. அங்கே பணத்தை அனுப்பி சரக்கை கூட்டிவிச்சு சீமைக்கு அனுப்புகிறது சாடையிலே நாலு லட்சம் ரூபாயும் கட்டி மோறப்பா (Maurepas) யென்கிற கப்பலையும் பயணம்பண்ணி அனுப்புகிற சாடை சரிதானென்று யோசனை

பண்ணிக்கொண்டேன். மொறபா யென்கிற கப்பல் திங்கள் கிழமைப் பயணமென்று சொல்லுகிறார்கள்.

1750 ஸு ஜூலை மீ 3 உ பிறமோதூத ஸு ஆனி மீ 23 உ சுக்கிறவாரம்.

இத்தனை நாள் காலத்தாலே பிறபுவண்டைக்குப் போன வுடனே பிறபு சொன்ன சேதி தஞ்சாவூர் ராசாவுக்கு ஆறும் நாள் சந்தாசாயபுவுக்கு தஞ்சாவூருக்கு பேஷக்கஷ் நிமித்தியம் கறுறுனாமா யெழுதிக்கொடுத்த யெழுபது லக்ஷத்துக்கு சீமை யின்பேரிலே நாற்பது லக்ஷத்து செல்வான் ரூபாயும் ரொக்கமும் முப்பது லக்ஷம் ரூபாயும் யெழுதிக்கொடுத்த கறுறுனாமாவுக்கு ரொக்கத்துடனே சேர்ந்ததுக்கு பத்துப் பதினொரு லக்ஷம் யென்ன சென்றுதோ அதைக்கொண்டும் மத்தப் பணம் அனுப் பச்சொல்லுவோமாவென்று யோசனைபண்ணி அதின்பேரிலே பின்னை யொருவிதமாய் யேதாகிலும் யெழுதப்போகாது சந்தா சாயபுவுக்கு நீங்கள் பேஷ்கஷ் நிமித்தியம் யெழுதிக்கொடுத்த கறுறுனாமா யென் கையில் அடகு வைத்து விஸ்தாரமான திரவியம் வாங்கியிருக்கிறபடியினாலே சந்தாசாயபு மனுஷர்கள் வந்து பணம் கேட்டால் குடுக்க கவையில்லை அந்தப் பணம் நம்மைச் சேரவேண்டியதென்று நீர் அறிந்திருக்கும்படியாய் யெழுதினோமென்று யெழுதச்சொன்னபடிக்கு யெழுதினபோது யிந்தக் காயிதம் போனவுடனே ஏழெட்டு நாளைக்கு ஒரு பிறமணா ளையும் பத்து சேவுகரையும் அனுப்பி பணம் கொடுத்தது அனுப் பச்சொல்லி காகிதமெழுதி அனுப்புவோமென்று சொல்லியிருந் தார். அந்தக் காகிதச் சேதியை யெடுத்து வைக்கீல் சுப்பய்யனை அனுப்பினோம் யென்றும் வைக்கீல் சுப்பய்யன் முகவார்த்தையும் கேட்டு கறுறுனாமாபடிக்கி செல்லுபோக மத்தப்பணம் அனுப் பச்சொல்லி யெழுதச்சொன்னார். செல்லு போகவென்று நாமா யிப்போதானே யேன் யெழுதவேணும் பணம் அனுப்பச்சொல்லி மொபாகமா யெழுதினால் அப்போ அவர்களது வயணம் யெழு தப்போறார்கள் அது பார்த்துக்கொண்டு அப்பாலதுக்குத்தக்கதா யுத்தரமெழுதலாமென்று சொன்னேன். நல்லது அப்படிதான் எழுது யென்று சொன்னார். அந்தப்படிக்கி அவருக்கெழுதின வயணம் சதர்சாயபுக்கு பேஷ்க்கஷ் நிமித்தியம் நீங்களெழுதிக் கொடுத்த கறுறுனாமாவுக்கு நக்கலும் குடுத்து வைக்கீல் சுப்பய் யனையும் அனுப்பிவிச்சோம். அந்தப்படிக்கு பணத்தோடே சேர்ந்

தது யாதொரு அட்டியும்பண்ணுமல் யிந்தக் காயிதம் கண்ட வுடனே அந்த க்ஷணம் பணம் றவாணுபண்ணி அனுப்பவேண் டியது பென்று யிதுக்கு முன் அஞ்சாறு னாளைக்குமுன்பாக இந்தக் காரியம் நிமித்தியமாய் ஒரு காயிதம் அனுப்பினது வந்தி சேர்ந்து பாத்துக்கொண்டு அதினாலே காரியம் அறிந்திருப்பீரே. மத்த சேதியெல்லாம் நம்முட வைக்கில் சுப்பய்யன் சொல்லச்சே தெரியவருமே யென்று யெழுதச்சொன்னர். அந்தப்படிக்கு யெழுதி மோருபண்ணி வைக்கில் சுப்பய்யன் கையில் குடுத் தேன். அப்பால் துரையவர்கள் வைக்கில் சுப்பய்யனை அப்பாலே அழைத்துப்போய் முன்னிந்தக் கருறுநாமா யெழுதிக்குடுத்த பிற்பாடு நம்முடவர்களும் சந்தாசாயபு அவர்களும் நடப்பிச்சதும் கருறுநாமாவுக்குமுன் நடந்ததும் பின் நடந்ததும் சமஸ்தமும் நீயும் கூடயிருந்து அவர் அனுபவமாச்சுதேயானபடியினாலே விஸ்தரிச்சு சொல்லவேண்டியதில்லையே நீ அவர்களுக்கு வெகு சாய் யிவடத்துப் பயத்தை உண்டாக்கி பணம் வருகிற உபாயம் பார்த்து அவர் பத்தின பணத்துக்கு நூத்துக்கு ஒன்று தரகு தருகிறேன் மனசுண்டாய் பிறயாசப்படச் சொல்லிச் சொல்ல அதுக்கு அவர் சலாம்பண்ணி சாப்பிடுகிறதெல்லாம் உங்கள் சாப்பாடாச்சுதே உங்கள் வேலைக்காறனுச்சு யெனக்கு குடுக்க வேண்டியதென்ன. போம்பு (Bombe) கோட்டையிலே போய் விழச்சே கூட பணம் குடாமல் நாழிகை கெடுவின்பேரிலே சொல்லி தந்தனை பண்றவர்கள் இப்போ கொஞ்சத்திலே குடுக் கிறுர்களா ஆனல் உங்களுடைய கீர்த்தியும் யோகாதிசபத்தி னாலே வந்தால் வந்ததேயல்லாமல் மத்தப்படி பெகு சண்டித் தனம் பண்ணுவார்களென்று சொன்னன் அதுக்கு துரை நல்லது யெப்படி பயம் வருத்திவிச்சு பிறயாசப்பட்டால் கூடி வருமென்று சொன்னதுமல்லாமல் மறுபடி நூத்துக்கொன்று வருகிற பணத் துக்கு தரகு தருகிறேன் யென்று மறுபடியும் சொன்னர். நல்ல தென்று சொல்லி திங்கள்கிழமை காலமே பயணமாய்ப் போரு ரென்று சொன்னேன். நல்லது போகச்சொல்லென்று சொன் னர். அப்பால் துரையுடனே சந்தாசாயபு காயிதமொன்று தஞ்சாவூர் முசா பேருக்குப் பணம் புதுச்சேரி கோவற்னதோ ருக்கு செலுத்தச்சொல்லி வாங்கி அனுப்பிவிக்கிறது நல்ல தென்று சொன்னேன். அந்தப்படிக்கி வாங்கி குடுத்தனுப்பு யென்று சொன்னர். மதனந்தபண்டிதனுடனே சொல்லி சந்தா

சாயபுவுக்குச் சொல்லி காகிதம் வாங்கி வைக்கில் சுப்பய்யன் கையிலே குடுக்கச்சொல்லி அனுப்பினபடிக்கி அவரும் கடுதாசி வாங்கி குடுத்தார் அப்பால் நான் பாக்கு கிடங்கியே வந்தேன்.

**1750 ஞூ ஜூலை மீ 5 உ பிறமோதூத ஞூ ஆனி மீ 25 உ ஆதிவாரம்.**

இத்தனுள் காலத்தாலே பெட்டு மணிக்கு துரையவர்கள் கோவிலுக்குப் போய் பூசை கேட்டு வந்து கப்பே குடிச்சு ஆன பிற்பாடு யென்னை அழைத்து யென்ன சேதி யென்று கேட்டார் மூந்தாம்நாள் இறவாசநெல்லூர் கோட்டை நம்முடவர்கள் வாங்கி வெள்ளைக்கொடி போட்டார்களென்று கபுறு சொன்னேனே இத்தனுள் சூரிய உதயுத்துக்கு வந்த கபுறு யென்னவென்றால் முன்னடி ஓடிப்போய்விட்ட உசேன்சாயபு தாயாருடைய சுவார்களும் உளுந்தூர் றகுநாதகபினர் யென்கிறவனும்கூட பின்னையும் ஆயிரம் பேர் சேவுகர்களும் துப்பாக்கிகாறர்களும் யிறநூறு சுவார்களும் கூட்டிக்கொண்டு வந்து கோட்டையிலே லக்கை யேறினர்கள் நம்முடவர்கள் நூறு பேர் கற்னுடக சேவுகருனபடியினலேயும் கொத்தலங்களும் வீடுகளும் அந்தக் கோட்டையைச் சுத்திலும் யிருக்கிறபடியினலேயும் அடைய விளைஞ்சான் சார்பனுவானபடியினலேயுமவர்கள் ஒரு மூலைக்கு வந்தது தெரியாமல் போனலும் நம்முடவர்களும் நாற்பது முப்பது பேர்களை சுட்டுத் தள்ளிப்போட்டார்கள் காயக்காறர்களுமுண்டு அப்பால் ரெண்டாயிரம் பேர் கும்பலுமல்லாமல் சீமை அவர்களுக்கு பெகுஸளாய் நடந்துவருகிறபடியினலே கும்பல் வெகு விஸ்தாரமாய்க் கூடினபடியினலே லக்கை யேறிக் கோட்டையைப் பிடிச்சுக் கொண்டார்கள் அஞ்சாறு பேர்களை வெட்டிப்போட்டார்கள் யென்றும் பின்னையும் அஞ்சாறு பேருண்டு யென்றுப்போலேயும் முப்பது நாற்பது பேருக்கு காயமும் யென்றும் மத்தப் பேர்கள் ஓடிப்போய்விட்டார்கள் யென்றும் அமுல்தாரன் வெங்கிட்டருயனைப் பிடிச்சுக்கொண்டு போனர்களென்றும் சேதி வந்ததென்று சொல்லி அப்பால் தேவனும்பட்டணம் மேஸ்தர் பிளேயர் துரை துபாசி முத்துகிருஷ்ணப்பிள்ளை யென்கிறவனுக்கு முன் பத்தாம் நாள் ஒரு காகிதம் உங்களுத்தாரப்படிக்கி எழுதினதுக்கு பதிலுத்தரம் யெழுதினன் யென்ன யெழுதினனென்றால் சின்ன சுபேதாரன் சேக்கசேன் மனுஷர்கள் செஞ்சி

யிலேயிருந்து கூடலூருக்கு வருகிற ஒப்பனேயை வாங்கிக்கொண்டார்களென்று யெழுதினதுக்கு அவர்களுபயத்திரவர்களும் வெளி மனுஷரென்று யெழுதினதுக்கு அவர்களுபயத்திரவர்களும் வெளி மனுஷர்களென்று எழுதினீர்களே கூடலூரிலேயிருக்கிற வர்த்தகன் முன் விக்கிறபாண்டி தான் ஒரு வருஷமாய் கூடலூரிலேயே யிருந்து வியாபாரம்பண்ணுகிறது மெய்யென்று காசுக்காறர்கள் அஞ்சாறு பேர்கள் கையெழுத்துப் போட்டதாய் ஒரு செறதிபிக்காவும் (Certificate) எழுதி அந்தக் காகிதத்துடனே கூட அனுப்பினேம் ஆனபடியினலே யிந்தப் பணம் இந்த சேவுகர் கையிலேதானே கொடுத்தனுப்பென்று தன்னுடைய வேலைக்காறனுக்கு யெழுதுகிற சாடையாய் கொஞ்சம் பருஷபடியாய் யெழுதினன் யிதல்லாமல் நான் செய்து யெடுத்துக் கொள்ளுகிற சாடையாகவும் இப்படி வாய்க்கு வந்தாப்போலே எழுதினனேயல்லாமல் மரியாதையாய் அதுப்பு வைத்து எழுதினவனல்ல நானே மத்தானுள் நீ யேன் சொல்லா போனுயென்று சொல்லப்போறீர்கள் யென்று சொன்னதேயல்லாமல் அவன் மரியாதையால் எழுதினுலும் பின்னை யொருவிதமாய் யெழுதினுலும் யெதிராளி யெந்த சாடையிலே யெழுதுகிருனே அந்த சாடையிலே நானும் உத்தரமெழுதுவேனென்று சொன்னதுக்கு துரையவர்கள் சொன்னது காயிதம் கொண்டுவந்த மனுஷனுக்குச் சொல்லுகிறதெந்த சாடையென்றல் உங்களிசமான் மரியாதையுடனே யெழுதவில்லை. அவர் மரியாதையுடனே எப்படி யெழுதவேணுமோ அப்படி காயிதம் எழுதினல் அதுக்குப் பதிலுத்தரம் யெழுதி அனுப்புகிறேம் என்று சொல்லி அனுப்பிவிடச்சொன்னர். அந்தப்படி வந்த பிறாமண அறக்காறன் ஒருத்தனும் தலுக்கன் சேவுகன் ஒருத்தனுக்கும் சொல்லி அனுப்பிவிச்சேன். அப்பால் துரையவர்கள் சொன்னது நேத்து ராத்திரி சந்தாசாயபு வீட்டுக்குப் போனீரே ஆற்காட்டு காரியம் பிற்சாதா (Pirzada) வுடனே பேசவும் கடப்பை அப்துல்நபிகான் கந்தனூர் இம்மத்துபகதூர்கான் சாவனூர் பங்காபுரம் அப்துல்நபிபுகான் யிவர்களுடனே பேசவும் பேச்சு வெளிக்கு வருமல் பார்க்கவும் சந்தி போசங்கிவிக்கவும் யெத்தனம்பண்ணுகிற நேற்பு ஒறப்பு யிதல்லாமல் பந்துக்களுண்டாயிருக்கிறவன் மகமதுகான் சிலேமான்சைக் குமாரன் மிசிரிக்கானே அனுப்பலாமென்றும் அவனிந்த வேலைக்கு யோக்கியனென்று நேத்து

றத்திரி சந்தாசாயபு உங்களுடனே சொன்னபடிக்கி அவனை அழைப்பிச்சு சம்மதிக்கப்பண்ணிக் காயிதமும் அவனை அனுப்பினதாயி பிரசாதாவுக்கு சந்தாசாயபுடைய காகிதமும் உங்கள் காகிதமும் யெழுதி தீந்தது. அப்பால் முசபர்சங்கை பட்டங் கட்டி ராசாருசங்கு பிறபஞ்சமில்லாமல்பண்ணினால் நீர் சொன்னபடிக்கி அந்தக் காரியஞ் செய்து முடிச்சவர்களுக்கு நீர் சொல்லப்பட்ட ரயாத்துக் கொடுத்து நடப்பிக்குறோமென்று உங்கள் காகிதத்திலேயும் சந்தாசாயபு காயிதத்திலேயும மோபாகமாய் துகை யேற்படாமல் யெழுதினோம் யிதல்லாமல் கறாறுநாமா நீங்களெழுதிக் கொடுக்கிறதாய் முன் யெழுதவேணுமென்று சொன்னார்களே யிந்தக் காகிதமே கறாறுநாமாவாய் யெழுதிப் போட்டோமென்று சொன்னதுக்கு யெழுத்தில் லக்ஷம் ரூபாய் யென்று முன் கண்டெழுவேணுமென்று நேத்து ஆகிபாசில் சொன்னனே யிப்போ மோபாகமா யெழுதினதென்னவென்று கேட்டார்.

சந்தாசாயபு கூட ஆகிபாசில் கூட துகை கண்டெழுதப் போகாது ஒரு வேளையிலே சீட்டுகள் சவுக்கியிலே அகப்பட்டால் மோசம் வருமென்று மோபாகமா யெழுதுகிறது நல்லதென்று சொன்னார்கள். ஆனபடியினாலே யெழுதினோமென்று சொன்னேன். அங்கே யெழுதின காகிதமெங்கே யென்று கேட்டார். அந்தத் துகையை யெடுத்துப் படிச்சுச் சொன்ன வயனம் நீரங்கே யத்தினம்பண்ணி நடப்பிச்சிருக்கிற காரியங்கள் மகம்மதுவா யென்கிற கிஸ்மத்துக்காறனாலேயும் மகம்மது பேர்விளங்கன் இஸ்மத்துக்காறன் முகவாற்த்தைக் கேழ்க்கச்சே சகலமும் தெரிய வருமென்று நீர் யெழுதின றோக்காவிலே தாக்கலாபண்ணின படியினாலே அவர்கள் முகவார்த்தையைக் கேழ்க்கப்பட்ட சேதியெல்லாம் மெய்யா யெண்ணி அதினாலே வரப்பட்ட சந்தோஷத்தை காகிதத்தினாலே யெவ்வளவென்று யெழுதப்போறோம் ஆனால் நீர் அந்தர்முகரூப லவுகீகக் காரியங்களை துறந்து வஸ்த்துவினிடத்தில் மனதை வைத்திருக்கிறவர்களுக்கு அனியாயமாய் நடக்கிற காரியங்கள் ஒருக்காலும் சம்மதியாதபடியினாலே அந்தப் பொல்லாப்பு ராச்சியத்துக்கு யில்லாமல் பரிகரிக்கும்படியாய் யோசனைபண்ணி நீர் அந்தபடிக்கிப் பிடிச்சக் காரியம் நிறுவாகம் பண்ணுகிறதுக்கு உங்களுக்கு சுவத்தாய்ப் பிறந்து யிருக்கிறபடியினாலே அது நிமித்தியம் உபசாரமா யெழுதவேண்டியதில்லையே. யிந்த நிறுவாகமாய் சேதி வந்தவுடனே இந்தக்

துக்கு வேறே கருருகமா யெழுதிக் கொடுக்கிறேன் கொண்டு போமென்று சொல்லி யில்லாவிட்டால் ஒரு காகிதத்தில் கைமெழுத்துப் போட்டு மோகரு பண்ணிக்கொடுக்கிறேன் கொண்டுபோமென்று துரை சொன்னார். அதுக்கு நான் யேழு லக்ஷத்துக்கு யெழுதிக் கொடுக்கலாம் வெறுங் காகிதத்தில் கைமெழுத்துப் போட்டு மொகருபண்ணிக் குடுக்கிறது யுக்தத் மல்லமென்று சொன்னேன் மெய்தான் எதுவும் கவையில்லை யிவ்வடத்துக்கு யெப்படி யுக்தமோ முன் சொன்ன துகைக்கு உசாக் கவையில்லை. தாழ்ந்த துகையிலே யெந்த துகையானாலும் யெழுதிக் கொடுமென்று சொன்னேன் அந்தப்படிக்கு துரை யவர்கள் சொன்னார்கள் நல்லதென்று மிசிரிகான் (Misirikhan) அனுப்பிவிச்சுக்கொண்டு வாசற்படிக்கு சீட்டும் வாங்கிக்கொண்டு போனான் அப்பால் கடப்பை அப்துல்நபிகான் அனுப்பின பேர் விளங்கன் பட்டாணியன் சிதம்பரத்திலிருந்துகொண்டு சந்தா சாயபுக்கு தான் வந்து கண்டு பேசுறதுக்கு சிதம்பரம் மமுது கான் பேருக்கு புதுச்சேரி கொவற்னதோர் காகிதமும் நங்கப் பன் காகிதமும் வேணுமென்று அசமத்துக்கான் பட்டாணிய னுடனே சொன்னபடிக்கு சுகமாய் வந்து கண்டு பேசிப் போகலா மென்று அதுக்கு சிக்கைக் கவையில்லை யென்றும் அந்தப் பட்டாணியனை தடையில்லாமல் அனுப்பிவிக்கச்சொல்லியும் முதாமியா பேருக்கு சேத்து முத்திரி யெழுதின காகிதம் மோகருபண்ணிக் கொடுக்கிறேனென்று சொன்னதுக்கு துரை யவர்கள் மோகருபண்ணிக் கொடுக்கச்சொல்லி அந்தப்படிக்கு மோகருபண்ணி சந்தாசாயபு சமேதாரன் சிதம்பரத்துக்குப் போற அசமத்துக்கான் நம்முட கிட்டகிலே வந்திருந்தவன் கையிலே குடுத்ததை அவன் வாங்கிக்கொண்டு அவனும் மானு கோசிசிவறாயன் குமாரன் திருமலைறாயனும் சிதம்பரம் மமுதுகான் மனுஷன் மமுதுகான்சுவார் பேர் விளங்கன் கீழ்ப்பட்டாணிய னும் புவனகிரி மொகத்துமாவுக்குப் பேசின வய்ணம் தானியம் வித்து அன்பதினாயிரம் ரூபாமட்டுக்கும் செலுத்துகுறதுக்கு புர்சத்துக்குக் கொடுக்கச்சொல்லி கேட்டதுக்கு அவன் நாளது வரைக்கும் நடப்பிச்ச மோசம் எல்லாம் சொல்ல அவர்களும் ஒத்துக்கொண்டு கடைசியிலே தானியம் வித்து குடுக்குறோம் பணம் செலுத்துகுறோமென்று சொன்னால் அதுக்கு நீங்கள் சம்மதிக்காமல் கூடாதே கச்சா வசூல் ஒப்பிக்குறோமென்று

சொல்லச்சே அதுக்கு நீங்கள் சம்மதிக்கவேணுமே யென்று கேழ்க்க சம்மதித்தான் கச்சா வசூல் சம்மதிச்சான் பணத்துக்கு வற்த்தகன் டிப்பு குடுத்தால் சம்மதி யில்லாவிட்டா லுன் பேச்சு நம்பப் போகாதென்று சொல்ல நல்லது அந்தப்படிக்கு அவ ருடனே பேசி தீத்துக்கொண்டு வாறோமென்று அசமத்துக்கான் வகையறா சொல்லி சம்மதிச்சுக்கொண்டு போனார். இத்தனாள் காலத்தாலே மிசிரிக்கான் சிலேமான்சை ஆற்காட்டுக்கு நவா ஞகப் போனான் அசமத்துக்கான் சிதம்பரத்துக்குப் போனான்.

**1750 ஹு ஜூலை மீ 6 உ பிறமோதூத ஹு ஆனி மீ 26 உ சோமவாரம்.**

இத்தனாள் காலத்தாலே ஆறு மணிக்கு பங்காளத்துக்குப் போற மோறபா (Mearuapas) வென்கிற கப்பலிலே நாலு லக்ஷம் ரூபா யேறிப் பயணம்பண்ணி அனுப்பினார்கள். யிந்தக் கப்பலிலே மூசே லத்துசஷை ஷெ பென்சாதி மதாம் யிசக்கூன் மெலம்தான்னூத்துறு வகையறா ஏறிப் போனார்கள்.

**1750 ஹு ஜூலை மீ 7 உ பிரமோதூத ஹு ஆனி மீ 27 உ அங்காரகவாரம்.**

மூன் ஜூன் மீ 15 உக்கு பிறமோதூத ஹு ஆனி மீ 5 உக்கு சோமவாரநாள் மூசியே கிலியார் கோன்சேலியோர் குவாருது மகசென் மறியோர்தேர் பெத்றுசாம் கையிலே பத்தின புதுச்சேரி விராகன் 3742-ம் பணம் 14-ம் காசு 48-ம் இந்த விராகன் மூவாயிரத்து யெழுநூத்தி நாற்பத்திரெண்டும் பணம் பதினாலும் காசு நாற்பத்தெட்டுக்கும் ரூபாயாய் மாத்திக்கொண்டு வந்து கொடுத்து யென்னுடை ரசீதை நான் வாங்கிக்கொள்ளக் கடவேனென்று யெழுதிக்கொடுத்ததுக்கு நாளது உ மூசே பெடுத்தல்மி வசம் செலுத்து. மேலே யெழுதின வராகன் மாாப்பு கணக்கு தீத்துக் குடுத்த ரூபாய் 13248-4-54 இந்த பதின்மூவாயிரத்து இருநூற்றி நாற்பத்தெட்டு ரூபாயும் பணம் 4-ம் காசு அன்பத்து நாலும் குடுத்து தீத்துப்போட்டோம்.

**1750 ஹு ஜூலை மீ 9 உ பிறமோதூத ஹு ஆனி மீ 29 உ குருவாரம்.**

இத்தனாள் காலத்தாலே மச்சலிபந்தரின்பேரிலே (Masulipatam) சண்டை குடுத்து மச்சலிபந்தரை கட்டிக்

கொண்டு அதுக்குத்தக்க புளோரி யென்கிற கப்பலும் பேர் விளக்கன் கப்பல் (லறசசோம்) (d'Argenson) யென்கிறதும் ஆக ரெண்டு கப்பலைப் பயணம்பண்ணி அனுப்பினார்கள் இதிலே யிறுநூறு சிப்பாயிகள் நூத்தன்பது சிப்பாயிகளும் தொப்பாசு களும் பத்து பேர் குந்தாணிப் பிரங்கிகள் பீரங்கிகள் மருந்து குண்டு வகையறு சண்டை சாமான்களெல்லாம் யேத்தி யிது களுக்கு மூசே லத்தூசையும் கூட யேத்தி யிதுக்கு யெல்லாம் மூசே கிலியாரை யெசமானுக்கி அனுப்பினார்கள் மூசியே கிலியார் முதலான பேர் யின்று சூரிய உதய வேளைக்கு யெல்லாம் : ப் போனார்கள். யிதின்பேரிலே வல்லூர் அந்தனான் ஷெடி சிறிய தகப்பனார் குமாரன் வெங்கண்ணான் ஏபனும் கும்பினீர் வர்த்தகர் குமாஸ்தாக்களும் குமச்சந்திரய்யன் தோரிசெட்டி வாச்சவப்ப செட்டி யிவர்களும் கூட ஏறினார்கள். கப்பலும் பாயெடுத்து ஓடினார்கள். ஒன்பது மணிக்கு கப்பல் சாடையாய்த் தெரிந்தது. அப்பால் மறைந்தது. யேனத்திலேயும் மச்சலிபந்தரிலேயும் சரக்குகள் கூட்டுறதுக்கு லக்ஷம் ரூபாய் யிந்த மச்சலிபந்தருக்கு கப்பலின்பேரிலே அனுப்பினார்கள். தொக்குநிசிங்கு குமாரன் ரூசா ரூமசிங்குக்கும் தத்துசவாதேசிங்கு குமாரன் நடுவல்வன் தக்குத்திலே யிருக்கிறவன் பேர் ஈசுரசிங்கு கூட சண்டை பண் ணுகிறான் சவாதேசிங்கு ராச்சியம் பேர் சாவாயி செயநகர யென்கிற பட்டணம் காறுபாறுபண்ணுகிறதுக்கு ஆம்போ யென்கிற பட்டணம் தக்குத்தி யிருக்கிறது தொக்குநிசிங்கு தம்பி பகத்சிங்கு மகாராசா இத்தனாள் குருவாரம் 26 உ சாயங் காலம் ஆறரை மணிக்கு சூரத்து சோடா காசிதுகள் வந்தவர்கள் சொன்னது பாதிசாபக்குசிலாபத்துகான் வந்து தொக்குடி சிங்கு தம்பிக்கும் தகித்தாய் நவகோடி மாறுவாடி ருசா தோக் குடிசிங்கு செத்துப்போனான். அவன் சேஷட்ட குமாரன் ரூசா ரூம்சிங்குபேரிலே போய் சண்டை பண்ணுகிறான். தொக்குடி சிங்கு குமாரன் ரூசாரூம்சிங்கு பிலன் லக்ஷம் சுவார்களுண்டாம் பத்துதி நாற்பதினாயிரம் குதிரை சவாராம் மத்தத்து முப்பது நாற்பதாக என்பதினாயிரம் குதிரையுடனே சண்டை போடுகிறான் காயம் கான் பங்குசரோயிலா (Kayim Khan Bangthav Rohilla Chid) சாதி பட்டாணி டில்லிக்கு கிழக்கு யிருபத் தைந்காதவழி அந்தமட்டுக்கும் பாதுசா போய் மறுபடி வந்தா ராம் அவர் போனது பறுகாபாத்து (Farrukhabad) யென்கிற

யில்லை அது கெங்கைக்கும் யெமுனைக்கும் நடுவே யிருக்கிறதாம் சயம்சான்பங்கசா-ரேமியிலாவை ஷெ சந்தியார் வந்து ஆறு மாசத்தைக்கு முன்னே கொன்றுபோட்டார்களாம். அவன் கில்லாவிலே ரெண்டு கோடி திரவியம் யிருந்ததைப் பார்த்து பாதுசா போய் யெடுத்து வந்தாரென்கிற சுபுறு மன்சூரல்லி கான் வசீர் பங்காள ராச்சியத்தண்டையிலே யிருக்கிறாபாத்து சுபாபுவின்பேரிலே சண்டைபண்ணி அவனை கைவசம் பண்ணிக் கொண்டு அவன் கையில் கப்பம் வாங்கிக்கொண்டு அந்தப் பிறுத்தியத்திலே யிருக்குறான் யென்கிற சுபுறு சொன்னான்.

**1750 ஹூ ஜூலெ மீ 18 உ பிறமோதூத ஹூ ஆடி மீ 6 உ சனிவாரம்.**

இத்தனுள் காலத்தாலே துரைபவர்களழைச்சனுப்பிவிச்ச மேஸ்தர் கோப்பு அவன் அழைத்துப்போன பவுன்சும் திரு வெண்ணெநல்லூர் சேர்ந்தார்கள் யென்றும் மறுதல்லிக்கான் பவுன்சும் அங்கே வந்திருந்து சேர்ந்தார்கள் அவர்களுமிவர் களும் யேகமாய் சேர்ந்தபடியினாலே யினிமேல் திருவிதியின் பேரிலே போயிறங்குவார்களோ அல்லவென்றா விழுப்புறத் தின்பேரிலே போயிறங்குவார்களோ தெரியாது அல்லவென்றா திருச்சிராப்பள்ளிக்குப் போவார்களோ மறுபடி ஆற்காட்டுக்குப் போவார்களோ யின்றையதினம் நடக்கிற சேதி நாளையதினம் வருமே. அதின்பேரிலே தெரியவருமென்று சொன்னேன். கோப்பும் பிறகே யெத்தனை பேர்கள் உண்டு போனவர்கள் நிச்சயமாய்ச் சேதி வரயில்லையாமென்று கேட்டார். யெப்படி நிச்சயமாய்ச் சொல்லுகிறது சொல்லுகிறவர்களெல்லாம் அபத்தம் சொல்லுகிறவர்கள். பேச்சை நம்பி சொல்லுகிறது. கூடலூரி லிருந்து வந்தவர்கள் வெள்ளைக்காரர்களும் சட்டைக்காரர்களும் அவர்களும் அன்னூறு பேருண்டென்றும் சிறிது பேர்கள் நூறு பேருண்டென்றும் சொன்னார்கள். சட்டைக்காறர்கள் வெள்ளைக் காறர்கள் கற்நாடக சிப்பாய்கள் யெல்லாம் ஆயிரம் பேருண் டென்றும் சொல்லுகிறார்கள். திருவிதியிலேயிருந்து வாறவர்கள் நம்முட சேவுகர்கள் போக்குவாத்திலே போய் விசாரிக்கிற பேர்களும் சட்டைக்காறர்களும் உண்டென்றும் சிப்பாயிகள் கற்னாடகத்தார்கள் அந்தத் துகைவட்டுக்கும் உண்டென்றும் சொல்லுகிறார்கள் யென்று சொன்னதுக்கு மூசெ லத்துசு

யெழுதின காகிதத்திலே சவரிமுத்து சேருவைக்காரன் சேவுகனை அனுப்பி திட்டமாய் விசாரித்துச் சொன்னது ரெண்டாயிரம் பேர்கள் வெள்ளைக்காறர்கள்மாத்திரம் யிருக்கிறார்கள் யென்றும் சொன்னதாய் முசே லத்தூசு யெழுதினபடிக்கு யிருக்கச்சே யதை மெய்யா யெண்ணிக்கொள்ளுகிறது சலத்தனத்தெல்லாம் அன்னூறு சொல்தாதுகளில்லை. யெப்படி யிந்த சனங்கள் சொல்லுகிறார்கள் அவர்கள் பேச்சை மெய்யா யெப்படி நம்புகிறது யென்று சொன்னார் அதுக்கு நான் சொன்னது நூறு குதிரையை அன்னூறு குதிரை யென்று சொல்லுகிறது சனங்கள் வாடிக்கை யென்று சொன்னேன். அதை மெய்தானென்று ஒத்துக்கொண்டார். நான் போனவுடனே செட்டிகள் மதாம் துப்ளேயிச்சு வழியிலே நல்லதம்பிசெட்டி அருணாசல செட்டி யென்குறவன் பேசி சிறிது பிறயோசனத்தையும் சொல்லி அந்த சனுவின்பேரிலே ஆங்காரத்தின்பேரிலே யென்னைக் கேளாமலும் அனுமதியில்லாமலும் நாமாய்க் குடுப்போமென்று யிருக்கிற செட்டிகளுக்கு யெல்லாம் நான் நலியப்பண்ணிக்கொண்டு வருகிறேனிவர் மாரிபத்தில் பேசப்போகாதென்றும் நாம் போய் முன்னே நின்று பேசினால் நம்முட சனுவு ஆறுக்காகிலும் உண்டா யென்கிறயோசனைபண்ணி யிவர்கள் வந்து மடமடவென்று தொரை அவர்கள் வீட்டு சாலையிலே வந்து நின்றார்கள் நானும் மெத்த நல்லதுதான் கெலித்தாலும் அவர்கள் ஆதாயம் தோத்தாலும் அவர்கள் நஷ்டம் நமக்கென்ன அவர்களுள் எப்படி சம்மதியோ அப்படி நடந்து கொள்ளட்டுமென்றும் எனக்கு ஒரு கடனிருந்ததென்னவென்றால் அதியாயத்தினால் நம்மையல்லாமல் யிவர்கள் அப்பிறம் பேசாதவர்களானபடியினாலே ஞாயப்படிக்கு யிவர்கள் காரியம் செய்துகொடுக்கவேணுமென்கிற கடனிருந்தது. அவர்களைத் தொட்டுத்தானே அந்தப் பாத்தியமில்லாமல் பண்ணிப்போட்டதும் நல்லது. காரியந்தான் யென்று யெண்ணிக்கொண்டு அவர்கள் காரியம் யெப்படியானாலும் சம்மதித்தாமென்று யோசனை பண்ணித் தீத்துக்கொண்டேன் இப்படியிருக்கச்சே துரையவர்கள் வெளியே வந்து யென்னத்துக்கு வந்தார்களென்று கேட்டார். நேத்து வரச்சொன்னீர்களே அதினாலே யிவர்கள் வந்தார்கள். வலங்கையார் வரயில்லை யென்று சொன்னேன். அவர்களும் வந்தபிற்பாடு வரச்சொல்லு யென்று சொன்னார். அந்தப்படிக்குச்

சொன்னால் கேழ்க்கமாட்டோமென்று நின்றுக்கொண்டிருந்தார்கள். மறுபடி யிந்த பக்கமாய்ப் போய் அந்த பக்கமாய் வந்து

னை யென்னமென்று கேட்டார். அவர்கள் உங்களுடனே சொல்லிக்கொண்டார்கள் நாங்கள் சொல்லிக்கொள்ளயில்லையே யென்றும் ரெண்டு பேச்சும் கேழ்க்கவேணுமென்றும் நாங்கள் நும்பினீர் வர்த்தகர்கள் யெங்களுக்கு நீங்கள் மத்தத்துபண்ணி நடப்பிக்கவேணும் யெல்லாருக்கும் யெங்கள் பேச்சுமேல் வட்டமாய் நடக்கப்பண்ணுறது உங்கள் கடனென்று சொன்னார்கள். அதுக்கு அவர்கள் யிடங்கை தேவடியாக்களுக்கு மரியாதை தெரியாதென்று சொன்னார். அதுக்கு அவர்கள் சொன்னது நாங்கள் போனால் வலங்கை தேவடியாக்கள் யெழுந்திருக்கிறார்களா அப்படித்தான் யிடங்கை தேவடியாக்களும் வலங்கையார் வந்தால் யெழுந்திருக்கிறார்களென்று சொன்னார்கள் அதுக்கு துரையவர்கள் முன் பின் யெழுந்திருக்க வாடிக்கை உண்டானால் யெழுந்திருக்கத் தேவையில்லையா யென்று கேட்டார். வாடிக்கையில்லை அவர்களுக்கும் எங்களுக்கும் அத்துப் பிறிஞ்சு சீட்டு கலி கூட எழுதப்பட்டதிருக்குது. அப்படியிருக்கச்சே எழுந்திருக்கக் காரியமென்னமென்று கேட்டார்கள். நல்லது அவர்கள் வரட்டும் அவர்கள் விசேஷத்தையும் கேட்டு அல்லோ உத்தாரம் குடுக்க வேணும் என்று சொன்னாப்போலே இவர்களிரண்டு பித்திசாம் எழுதி கையிலே வைத்திருந்ததைக் குடுத்தார்கள். அதைப் பார்த்துக்கொண்டு அப்பு குதிரைமேலே வந்தானென்று கேட்டார் வந்தானென்று சொன்னார்கள். நல்லது அப்பை அழைத்து வாயென்று சொன்னார். அப்பை யென்னமென்று கேட்டாலதை அது பொதுத்தெருவு அதினாலேறி வந்தேன். அது இடங்கைத் தெருவானால் நானேன் ஏறி வருகிறேன் என்று சொன்னான். அந்தத் தெரு ஆருதென்று சடைக்காறர்கள் வெள்ளைக்காறர்கள் பறயர்கள் சமஸ்தமான பேர்களும் வீடு யிருக்கிறது இவர்களுடைய அம்பட்டர் வீடு மூணு வீடு மாத்திரமிருக்கிறது. பறயர் போக்குவரத்து கலியாணம் சாவு முதலானதுகள் நடக்துகிறபடியினாலே நான் வந்தேனென்று சொன்னதுமல்லாமல் யிந்தக் கலாபம் நடக்கபிற்பாடானபடியினாலே நான் விசாரியாமல் வரவேணுமென்று சொன்னான். அதுக்கு துரையவர்கள் யென்னைப் பார்த்து நீ விசாரித்து வந்து கபுறு சொல்லு யென்று சொன்னார். அதுக்கு அப்பு என்னைப் பார்த்து நானிவர்கள்

பணிசவர் வீடு யிருக்குதென்று டோலென்கிற வெல்லைக்கார னிருக்கிற வீட்டுக்கு அப்பிறம்தானே நானிறங்கி வந்தேன் யென்று சொன்னான். அதென்னவென்று துரை கேட்டார். நானப்போதானே துரையுடனே சொல்லச்சொன்னேன். என்னுடனே சொன்னபடிக்கு அப்பு துரையுடனேயும் சொன்னான். அதுக்கு துரையவர்கள் நல்லது றங்கப்புள்ளே நீ நன்றாய் விசாரித்து நாளைக்குச் சொல்லென்று சொன்னார் அதுவுமல்லாமல் வலங்கையாரையும் நாளைக்கு வரச்சொல்லு. உபயத்திரவர் ஞாயமும் கேழ்ப்போமென்று யிடங்கையாரைப் போகச்சொன்னார் அதுக்கவர்கள் துரையவர்கள் நேத்துதானே உபயத்திரவரையும் வரச்சொன்னாலவர்கள் வரமாட்டோமென்று யித்தனை தாமசமாயிருக்கிறார்கள். அப்படியிருக்க நாங்களித்தனை யெறிஞ்சுவிட்டு கிடக்கிறோமாவென்று திரும்பியும் துரையவர்களண்டைக்குப் போய் தேவடியாக்களைமாத்திரம் விட்டுவிடச் சொல்லுங்கோள் நாங்களேதாகிலும் ஓடிப்போறோமா வியாச்சியமுண்டானது நாங்கள் பேசுகிறோமென்று சொன்னார்கள் அதுக்குத் துரையவர்கள் சொன்னது வலங்கையாரென்பேரிலே சலுத்தாரிடுவார்கள் பிறது பண்ணுவார்கள் ஆனபடியினாலே விடப்போகாதென்று சொல்லி நாளை வாருங்கோளென்று சொல்லிப் போகச்சொன்னார். அந்தமட்டுக்கும் இடங்கையார் அனுப்பிவிச்சுக்கொண்டு போனார்கள். அப்பால் அப்பு வந்து இளைச்சயப்பன் யிருக்கிற தெருவிலே ரெண்டு மூணு பேர் யிடங்கையாரிருக்கிறார்கள் யிரண்டு மூணு பேர் வலங்கையாருமிருக்கிறார்களதுவும் பொதுத் தெருவுதானே யென்று சொல்லி நீங்கள் தாயும் தகப்பனும் நன்றாய் விசாரிக்கவேணுமென்று சொன்னான். என்மட்டுக்கும் உபயத்திரவர்களும் பக்ஷபாதமில்லாமல் சமனாகப் பார்க்கிறதே அல்லாமல் வித்தியாசமாய் பார்க்கத்தக்கதில்லை யென்று சொல்லிப் போகச்சொல்லி அப்பால் பாக்கு கிடங்கியே வந்தவுடனே யிடங்கையாரும் அப்படியே உபசாரம் சொன்னார்கள் அதுக்கு நான் பதிலுத்தாரஞ் சொன்னது உபயத்திரவரும் மட்டுக்கும் சரியாய்ப் பார்க்கிறதேயல்லாமல் வித்தியாசம் பார்க்கத்தக்கதில்லை யென்று சொல்லிப் போகச்சொன்னேன் அவர்களும் அனுப்பிவிச்சுக்கொண்டு போனார்கள்.

1750 ஸுப ஜூலை மீ 22 உ பிரமோதூத ஸுப ஆடி மீ 12 உ புதன்கிழமை.

இத்தனுள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போன விடத்திலே சேதி யென்னவென்று கேட்டார். துரையவர்களுக்குச் சொன்னது நேத்தய சாயங்கால சமாச்சாரம் அரசூரண்டையிலே யிறங்கியிருந்த மமுதல்லிகான் லசுக்கர் திருவிதிக்கு மேற்கே கனிசப்பாக்கத்தண்டையிலே வந்து யிறங்கினதாகவும் மேஸ்தர் கோபுவை வரச்சொல்லி தேவனும்பட்டணம் புதிசாய் துரைத்தனம் வருகிறமட்டுக்கும் அமுல்பண்ணுகுற மேஸ்தர் லோரேன்சும் மேசரென்கிறவனு மெழுதியனுப்பினனும் அதுக்கு மேஸ்தர் கோப்பு வரப் பயணமாயிருந்தவனை மமுதல்லிகான் ரொம்பவும் உங்களை நம்பி னும் வந்தபிற்பாடு நீங்களிப்போ துரைத்தனம் வேறே வந்துதென்று பிறப்பட்டுப் போறேமென்றால் நான் நாசருசக்கு அண்டையிலே சொல்லி வந்தப் பேச்செல்லாம் அபத்தமாய்ப் போமென்று ரொம்பவும் பத்திமாவி சொன்னர் என்றும் அதுக்கு மமுதல்லிகான் ஒரு காகிதமும் மேஸ்தர் கோப்பு ஒரு காகிதமும் எழுதி தேவனும் பட்டணத்துக்கு அனுப்பிவிச்சதாகவும் அதுக்கென்ன உத்தரம் வருதோ அந்த த்தரம் பாத்துக்கொண்டு போறதாயிருக்கிறதாய் சேதி வந்தது. ஆற்காட்டு சேதி யிதாயத்து மொகதீன் கான் தம்பிக்கு—மூன்—2—செவ்வாய்க்கிழமை ராத்திரி கில்லத்து கொடுத்து யிதாயத்துமொகதின்கானண்டைக்கு அவனையும் நக்குசுபந்துகாரனையும் கூடக் கூட்டி உமக்கும் இரண்டு மூணு நாளையிலே சிரொப்பா குடுத்து உமது மனது சந்தோஷம் பண்ணிவிக்குறேமென்று சொல்லியனுப்பின பிற்பாடு நாலாறு தரம் மறுபடியும் ஆதரவான விசேஷமாய்த்தானே சொல்லி அனுப்பிக்கிறதுமல்லாமல் காலத்தாலே சாயங்காலம் சிரொப்பா குடுக்கிறதாய் சேதி சுறுக்காய் சொல்லுகிறார்கள். யெந்த வேளையிலே குடுக்கிறார்களோ தெரியாதென்று யெழுதிவந்ததென்று சொன்னேன் சிதம்பரம் புவனகிரி பட்டணம் குடுக்கிறதுக்கு வந்திருக்கிற சுறுப்புக்கு இன்னம் சேதி வந்ததில்லையாமென்று கேட்டார். நாற்பதினயிரம் 40000 ரூபாயிக்கு சேத்துப்பேட்டுப் பணம் பறங்கிப்பேட்டைப் பணம் சிறிது பறங்கிப்பேட்டை பூவிராகன் பின்னையும் பல தினிசாய் கூட லூர் வந்து சேர்ந்து

மென்று கபுறு வந்தது. அந்தக்ஷணம் விருமெசெட்டியை அழைப்பிச்சு அவர்கள் தம்பி கூடலூரிலிருக்கிறவனை பசினுசை ஒப்புக்கொண்டு பேரய் ரூபாய் மாத்தி அனுப்பச்சொல்லி விருமெசெட்டி ஓலை அவன் தம்பிக்கும் சருப்பு ஓலை அவர்கள் மனுஷருக்கு விருமெசெட்டி தம்பியும் நாற்பதினுயிரம் ரூபாயிக்கு வந்திருக்கிற சேத்துப்பேட்டுப் பணம் வகையறு ஒப்பிச்சுப்போட்டு அவர்கள் ஓலை வாங்கி இவ்விடத்துக்கு அனுப்பச்சொல்லியுமிப்படியாக உத்திரவு உபயத்திரவர்கள் ஓலை கூடலூருக்கு வாங்கி ஆளை அனுப்பிவிச்சேனென்று சொன்னேன். அப்பால் சாந்தாசாயபு நடக்கு வருஷாவருஷம் யெப்போதும் அவர் தவலத்துள்ள மட்டுக்கும் ஒரு நிருதிபண்ணி றொக்கமாய் நடப்பிக்கிற பேச்சக்கு கேத்து மீர்ஷமுடனே பேசினயே அதுக்கு முத்திரி யென்ன உத்தரம் வந்து சொன்னுனென்று கேட்டார் துரை யென்னவென்று யென்னைக் கேட்டார்கள். அதுக்கு நான் துரை யெனக்குத் தெரியுமோ துரையவர்களுங்கள் காரியத்தில் பிறயாசப்பட்டதும் யிப்போ பிறயாசப்படுகிறதும் லக்ஷாந்தரம் பெட்டிப்பணம் யெடுத்துக் குடுத்ததும் சிப்பந்திக்கு சித்தியாயங்களுடனே சேர்ந்து கூட மொக்குயாயிருக்கிறதுமல்லாமல்ப் பின் மச்சிலிபந்தர் வகையறு கோட்டடிகள் கூட கல்லப்பட்டு அவ்விடத்து வியாபாரம் கூட நின்றதுமல்லாமல் அங்கே யிருக்கிறவர்கள் அவஸ்தைப்பட்டு அது நிமித்தியம் இங்கேயிருக்கிற மூனு கப்பலுகளும் பவுன்சம் அனுப்பினதைத்தொட்டு யெத்தனை கற்சம் நில்வுமிப்படி பார்க்கப்போனுல் அனேகம் மலுக்கு சாவிதுகளெல்லாம் நீங்கள் நன்றுய் அறிந்திருக்கிறபடியினுலே யும் பிதல்லாமல் நீங்கள் கொடுத்த வில்லியநல்லூர் தாலூக்கும் பாகூர் தாலூக்கு கும்பினியைச் சேர்ந்து போனபடியினுலே யிவருக்கு இக்கட்டுக்கும் பிறயோசனமில்லாமலிருக்கிறதை யும் பாத்துக்கொண்டு அதுக்குத்தக்கதாய் நடப்பிக்கவேண்டியது. நீங்களையல்லாமல் ஒருத்தர் சொல்லப்போமா ஒருத்தருக்கு அந்த அருமைதான் தெரியுமாவென்று காரியம் கொண்டுபோற உங்களுக்குத் தோத்துகிறுப்போலே மத்தப்பேருக்கு யென் தோத்துமப்படி தோத்தமாட்டாது. ஆனபடியினுலே அவருடைய மகிமைக்கும் உங்களுடைய பெருமைக்கும் குடுக்கிறதெப்படி யுக்தமோ அப்படி செய்தால் திருப்திப்படுமோ அப்படி நீங்கள்தான் யோசனைபண்ணி நடப்பிக்கவேண்டியது

யென்று நேத்து ராத்திரி மீர்ஷுமுடனே சொல்லி அனுப்பி னேன். அதுக்கு உத்தாரம் யிப்போ மத்தியானத்துக்குள்ளே யாது சொல்லுகுறோம் யென்று நேத்து ராத்திரி சொல்லிப் போனுன் யென்று சொன்னேன். அதுக்கு யிந்த கலாபம் அடங் காததுக்கு முன்னே ஆனல் துகை ஒசந்து வருமென்று சீக்கிற மத்துக்குப் பேசி தீத்துப்போடென்று சொன்னர். நாளைய தினம் நாளேகன்றைக்குள்ளே தீரும்படியாய்ப் பார்க்கிறே னென்று சொன்னேன். அதுக்கு அப்படியே செய்யென்று சொன்னர்.

அப்பால் செம்பு சம்மதி கும்பினீருக்குச் சேருகிறதை உன்னை யெடுத்துக்கொள்ளச்சொன்னேன். யென்னைச் சேரு கிறதை கும்பினீர் வத்தகர் கையில் வாங்கின லக்ஷம் ரூபா யிக்கு சேத்துவிடச் சொன்னதுக்கு யென்னைச் சேரவேண்டிய பத்து செம்பை கும்பினீர் கணக்கிலே உன் பத்தாய் யெழுதி விச்சுப்போட்டு நீ சேத்துக்கொண்டு கும்பினீர் பத்து செம்பை என் கணக்கு ஆக கும்பினீர் வத்தகருக்கு குடுப்பிச்சா யென்று கேட்டார் முகியே கொற்னேத்து. யென் கையிலே றசீது வாங்கிக்கொண்டபடியினலே பெரிய துகையை நீலப்பிடவை விமசா யிதுகளுக்கு நீங்கயெடுத்துக்கொள்ளச்சொல்லி சொன் னபடியினலேயும் முகியே கொற்னேத்து பெரிய துகைக்கு யென்னை சீட்டெழுதிக் குடுக்கச் சொன்னபடியினலே யிந்த துகை கும்பினீரைச் சேர்க்கதென்று நான் சேத்துக்கொண் டேன் யிப்போ யென்னமாச்சுது. நீங்களதுக்கு ஒரு ஒடுதனுசு ஆறுபிரத்து நூத்து சில்வானம் விறுகனுக்கு ஒரு கினுசு குடுத் தால் அதை வாங்கி கும்பினீருக்குச் செலுத்திப்போட்டால் சரிப்பட்டுப்போகுமென்று சொன்னேன். நீ யெடுத்துக்கொண் டது யெத்தனை பாரமென்று கேட்டார் யிறநூத்தெழுபத் தொன்பது பாரமும் காநூத்தி யிருபத்தெட்டு றுத்தல் செம் பென்று சொன்னேன். வத்தகருக்கு யென் கடனுக குடுத்த பாரம் யெத்தனை யென்று கேட்டார். யிறநூத்தொன்பது பார மும் காநூத்திருபத்தஞ்சு என்று சொன்னதுக்கு யிந்த பத்து கும்பினீருதும் முன் யெழுதப்பட்ட பைத்து நீ யெடுத்துக் கொண்டது என்னுதுமானல் என்னமாச்சுது. சமாகற்சு வேறேவிதமா யெழுதவேணும் நல்லது நீ யெடுத்துக்கொண்ட

பாரத்துக்கு விலையும் துகையும் யெழுதி வையென்று சொன்னார். நல்லதென்று யெழுதிவைத்த வயணம் கம்பி செம்பு பாரம் 279-428 ரக்கு

பாரம் 1-க்கு பறங்கிப்பேட்டை விராகன் 91-ஆக வி. வி.—ப.—கா. 25.470-3 -25

உள்வட்டம் நக்ஷத்திரத்துக்கு விராகன் 100-க்கு 3-ஆக 764½-2¼ -0

போய் நீக்கு சுத்தம் நக்ஷத்திரம் விராகன் விலை 24.706-57

க்கு விராகன் 100-க்கு 350 ரூபாயாக ஆக கூடுதல் ரூபாய் 76.471-57

வர்த்தகருக்குகுடுத்தது உம்முட கணக்குக்கு ஆக கம்பி செம்பு பாரம் 209 ராத்தல் 425-க்கு விலை பாரம் 1-க்கு பறங்கிப்பேட்டை விராகன் 91-ஆக விராகன் வி.—ப. 19.099-13¾

இதுக்கு உள்வட்டம் பூவிராகன் 100-க்கு வி. 3-ஆக 573 போக நீக்கு நக்ஷத்திரம் விராகன் 18.526-13¾

இதுக்கு வி. 100-க்கு ரூபா 350-ஆக கூடின ரூபாயி 64.842-6¼

யென்று துகை சொல்ல யெழுதி பாத்துக்கொண்டு பறங்கிப்பேட்டை விராகன் யெட்டேகால் மாத்து ஆச்சுது நக்ஷத்திரம் விராகன் யெட்டு மாத்து ஆச்சே அப்படியிருக்க அதன் வட்டமாயிருக்கவேணுமேயல்லாமல் உள் வட்டம் வாக் காரியமென்னவென்று கேட்டார் முன்னெட்டேகால் மாத்து சுமாறாயிருந்தபோது அப்படிதான் அதனவட்டமாயி நடந்தது. அதின் யேழேமுக்கால் யேழரை யிப்படி சரிபோனபடிக்கெல்லாம் போடத்துவக்கினபடியினாலேயும் யிந்த வட்டங்களிலே பறங்கிப்பேட்டை விராகன் மாத்துக் குறைச்சல்.

1750 ௵ சூலை ௴ 24 உ பிறமோதூத ௵ ஆடி ௴ 12 உ சுக்கிறவாரம்.

இத்தனள் காலத்தாலே பிறபுவினிடத்துக்குப் போனவிடத்திலே மமுதல்லிகான் லக்ஷகர் நேத்து எங்கே வந்து

தவஸ் பேர்விளங்கன் பிரக்கி 4

குதிரை சுவார்கள் 25

இந்தப்படிக்கு மீர்சத்து அறக்காரும் மமுதல்லிகான் லசுக்கரிலேயிருக்கிற வெங்கிடேசர அறக்காறு ஆற்காட்டுக்கு மீர்சத்துக்கு எழுதின காகிதத்தில் எழுதியிருந்தபடிக்கு எழுதினது. அந்தக் காகிதம் பிடிச்சவந்ததில் யிருந்த யாதிஸ்த்து படிக்கு ஒரு மனிதனுக்கு பங்கிக்கு மமுதல்லிகான் தண்டிலே யிருந்து மீருசாயபு அறக்காறு வெங்கிடேசய்யன் யெழுதின காகிதங்கள் அறக்காறு சேத்துப்பேட்டுக்கு கொண்டுபோகச்சே விழுப்புறத்தண்டை கோட்டையிலேயிருக்கிற வெள்ளைக்காறர் மனுஷர் 11 உ பாத்துப் பிடிச்சக்கொண்டு வந்தார்கள். அவர்கள் மகாருசருச ஸ்ரீ துரையவர்களண்டைக்குப் போனவிடத்திலே அந்த அறுக்காறுவையும் காயிதங்களையும் யென்னண்டைக்கு ருச ஸ்ரீ துரையவர்கள் அனுப்பிவிச்சார்களந்தக் காகித சமாச்சாரம் தெலுங்கிலே யெழுதச்சொல்லி - ருமாஞ்சிபண்டிதன் நையில் குடுத்து கோதண்டருமய்யரையும் பாங்கிப்பேட்டை சேக்குசாயபு குமாஸ்தா சேஷகிரிபண்டிதரையும் கூட வைத்துக் கொண்டு தெலுங்கிலே யெழுதிவைக்கச்சொல்லி கொடுத்தோம் அந்த அறக்காறுவை அழைத்து உன் பேர் யென்ன நீ யார் யென்று கேட்டால் யென் பேரு சந்தாசி சேவிச்சவன் யென்று சொன்னான். சாயங்காலம் ரெண்டு நாழிகைக்கு தண்டு சமாச்சாரம் எல்லாம் தெலுங்குப்படுத்தின காகிதமும் பச்சினகை தண்டிலே யிருந்துவந்த காகிதமும் வாங்கிக்கொண்டு அறக்காறு சந்தாசியும் சேஷகிரிபண்டிதரையும் கோதண்டராமய்யரையும அழைத்துக்கொண்டு மகருச ஸ்ரீ துரையவர்களண்டைக்குப் போனேன். துரையவர்கள் கோட்டையிலே மேல்மெத்தையின் பேரிலே யிருந்தார்கள். அங்கே இந்த மூணுபேரையும் அழைச்சக்கொண்டுபோயிந்த சமாச்சாரம் யெல்லாம் வயணமாய்ச் சொன்னேன். அதுக்கு துரையவர்கள் தண்டிலே யிருந்துவந்த காகிதங்களெல்லாம் அறக்காறு சந்தாசி கையிலே குடுத்து உங்கள் துரைக்கு கொண்டுபோயி குடென்று சொல்லி சிலவு குடுத்து கூட அவன், பிறகே ஒரு கும்பினீர் சேவுகனையும் கூட்டி வழியிலே அப்பறமறியாமல் குண்டுக்கு அப்பிறம் வாக்சொல்லி அனுப்பிவிட்டார்கள்.

1750 ௵ ஜூலை ௴ 25 ௳ பிறமோதூத ௵ ஆடி ௴ 13 ௳ சனிவாரம்.

இத்தனுள்காலத்தாலே ஆறடிக்கிற வேளையிலே தேவனும் பட்டணத்திலே பீறங்கி விஸ்தாரமாய் கேழ்க்கப்பட்டது அது கடல் பீரங்கி சப்தமும் கேட்டபடியினாலே கப்பல் வந்தாக வேணும் யில்லாவிட்டால் பயணமாய்ப் போயிருக்கவேணும் மென்று தோத்துது. அந்தக் கப்பலிலே முப்பத்தேழு பெட்டி வெள்ளி வந்தது யென்று சொன்னார்கள். யிந்த வெள்ளி ஒலாந்தாக்காறர் சம்மதி யென்று சொன்னார்கள். யிந்தக் கப்பல் கப்பித்தான் பேர் யிந்தக் கப்பலிலே வந்தவர்கள் முசே சூது யெனக்கு கடன் குடுக்கவேண்டியவன் மாத்திரம் கெப்பீசன் வகையறு வந்தார்களென்று சொன்னார்கள் முப்பத்தேழு வெள்ளிப்பெட்டியும் பதினாயிரம் மார்க்கு யென்று சொன்னார்கள். யிந்தக் கப்பல்லே சேதிசீமையிலிருந்து லசீல் (Achille) யென்கிற கப்பலிவ்விடத்துக்கு வந்து அந்தக் கப்பலிவ்விடத்துக்கு வருகிற கப்பலானபடியினாலே யிந்தக் கப்பல் பயணமாய் வரச்சே அதுவும் வரப்பயணமா யிருந்து ஒரு வாரம் யெட்டு நாளைக்கு ஒரு வாரம் யெட்டு நாளைக்குள்ளாக வந்து சேருமென்று சொன்னார்கள். இந்தக் கப்பலிலே காவவாய் விறகு குச்சு விஸ்தாரமாய் வந்ததாய்ச் சொன்னார்கள் அப்பால் துரையவர்கள் யென்னை அழைப்பிச்சு முசே புரி (M. Bury) திருவீதியிலேயிருக்கிற வெள்ளைக்காறருக்கு சிறிது பணமும் காகிதமும் குடுப்பார். விழுப்புறத்துக்கு சிறிது பணமும் காகிதமும் குடுப்பார் அதை அங்கே யிருக்கிற வெள்ளைக்காறருக்கு அனுப்பு யென்று சொன்னா நல்லதென்று சொன்னேன் முசே புரியும் சொல்தாது கணக்கன் கையில் குடுத்து அனுப்பிவிக்குறேன் அதை விழுப்புறத்துக்கும் திருவீதிக்கும் அனுப்பென்று சொன்னா நல்லது யென்று சொன்னேன். அப்பால் துரையவர்கள் யென்னைப் பார்த்து ஆற்காட்டிலிருந்து யேதாகிலும் சேதி வந்ததாவென்று கேட்டார். ஒரு சேதியும் வரயில்லை யென்று சொன்னேன். கூடலூர் சேதி யேதாகிலும் வந்துதாவென்று கேட்டார் மஃமதலிகான் வகையறு போய் திருப்பாதிருப்புலியூர் சமீபத்தில் புல்லால்கொண்டுர் அந்த வட்டங்களிலே யிறங்கினார்களே அங்கேதானிருக்கிறார்கள் லசுக்கரிலே அரிசி முதலான சாமகிரிகைகள் பரிச்சேதம் அகப்படயில்லை. வெகு சனங்கள் சாப்பாடில்லாமல் பட்டினியா

யிருந்தார்களாம் மேஸ்தர் கோப்பு உள்ளே போனவன் மறுபடி வரக்கூடாதென்று சொல்லுகிறான் யென்று மழுதல்லிகான் யிப்போ புதுதாய் வருகிற கோவற்ணதோர் வருகிறமட்டுக்கும் அதிகாரம்பண்ணுகிற மேஸ்தர் லோரென்சு யென்கிறவனும் தன்னாலே உத்தாரம் குடுக்கக்கூடாதென்று சொன்னான். யென்றும் அதின்பேரிலே அவர்கள் ரொம்ப ரொம்ப விசாரமா யிருக்கிறார்களென்று வந்து கபுறு சொன்னதுமல்லாமல் அன்னூறு குதிரை சுவார்கள் பறங்கிப்பேட்டை புவனகிரி அந்த பிறுந்தியத்துக்குப் போனதாய் சேதி கேழ்க்கப்பட்டது யென்று சொன்னேன். யிதிலே மசுக்கரையிலே யிருந்து வந்த கப்பல் கப்பித்தான் யிங்கே வந்தான். வந்தவுடனே துரை அவர்களும் வந்தவனும் பேசிக்கொண்டு யிருந்தார்கள் நான் பிறப்பட்டு பாக்கு கிடங்குக்குப் போனேன்.

மறுபடி பதினொரு மணி வேளைக்கு அழைச்சனுப்பிவிச்சு சந்தாசாயபு வருஷா வருஷம் கொடுக்கிறோமென்று சொன்ன உடம்படிக்கை சீக்கிறமாத்துக்கு யெழுதி வாங்கிப்போடென்று சொன்னார். நல்லதென்று சொல்லிவந்தேன் அப்பால் நாலு மணிக்கு அழைச்சு ஆற்காட்டு சேதி வந்ததாவென்று கேட்டார். வரயில்லை யென்று சொன்னேன் அப்பால் கூடலூர் சேதி யேதாகிலும் வந்ததாவென்று கேட்டார் காலத்தாலே சேதி சொன்னேனே யித்தப்படி சேதி வரயில்லை யென்று சொன்னேன். அதின்பேரிலே வெளியே சவாரி போனார்கள். நான் பாக்கு கிடங்கியே வந்தேன். வரச்சே துரை கூண்டின்பேரிலே யேறச்சே முசே ரூதும் பின்னே ஒரு வெள்ளைக்காறனும் வந்து கண்டார்கள் துரையவர்கள் நானிப்போ வெளியே போறேன் பின்னமொரு வேளை வாவென்று சொன்ன சாடையாய்க் கண்டுது அப்பால் துரையவர்கள் சவாரி போனார். அப்பால் நான் பாக்கு கிடங்குக்கு வரச்சே முசே ரூது நன்றாயிருக்கிறாயாவென்று கேட்டார். உம்முட தயவினாலே யென்று உபசாரம் சொன்னேன். நானுமப்படிதான் குசலப்பிறசினை கேட்டான். அதன் பிற்பாடு முசே ரூது பாத்து நீ பெரிய பிசாசு சீமையிலே பிறுதுபண்ணி யேன் சேதப்படுத்தினாய் யென்று கேட்டான். யென் பணம் நான் வரப்பத்த வேண்டிய காரியம் ஞாயந்தானே யென்று சொன்னதுக்கு, லாரஞ்சுப்பழம் கொண்டுவந்தேன்

யெம்மாத்திரம் பழம் வேணுமென்று கேட்டான் உமக்கு சம்மதி யானது தயவுபண்ணி அனுப்பினலது வாங்கிக்கொள்ளுகிறேன் என்று உபசாரம் சொன்னேனே. அப்பாலுன்னுடனே நான் பேசவேண்டிய பேச்சுகளுக்கு நாளை காலத்தாலே உன் பிரே வுக்கு வருகிறேனென்று சொல்லிப்போட்டு பல்லக்குக்கு ஆறு போயணடர் அமத்திக் கொடுக்கவேணுமென்று சொல்லிப் போட்டுப் போனான். அப்பால் ஆறு மணிக்கு துரையவர்க ளழைச்சனுப்பிவிச்சு யேதாகிலும் மார்க்கட்டு சேதி வந்தா வென்று கேட்டார். வரயில்லை யென்று சொன்னேன். வாரத் தைப் போனதென்னவென்று தகராறுபண்ணினர். அங்கேயிருக் கிறவர்கள் கேட்ட சேதியை யெழுதுவார்கள். கேளாத சேதியை யெழுதார்களென்று சொன்னதுக்கு மச்சிலிபந்தர் பிடிச்ச சேதி ஆற்காட்டு வந்திருக்குமே யின்னமிங்கே யெழுதி வராதபோன தென்னவென்று மறுபடியும் கேட்டார் சந்தோஷ கபுறு பரவப் போறதானபடியினாலே உடனே வெளிப் பிறப்படமாட்டா தென்று சொன்னேனே யிதிலே மூசே பெடுத்தலமியும் மூசே பிறியேலும் வந்தார்கள். நான் பிறப்பட்டு வந்தேன் மறுபடி யெட்டு மணிக்கு அழைச்சனுப்பிவிச்சு வளவனூரண்டையிலே யிறங்கியிருந்த பவுன்சு கரையாம்புத்தூருக்கு வரச்சொல்லி யெழுதினல் சொப்பூரிலே வந்திறங்கினர்களா அது யெங்கே யென்று கேட்டார். அப்பிறம் தடவி ஒருவிதமாய் கரையேத்த விட்டார்கள் அப்பால் அரிசி ஒன்னரை படியும் ஒண்ணேமுக்கால் படியும் விக்குறார்களாம் நெல்லு அஞ்சு படி விக்கச்சே அரிசி ரெண்டு படி அரிசி விக்கச்சொல்லி நாளை தமுக்கு போடுவி யென்று சொன்னர். தோஸ்து மகம்மது இது மெத்தப் புண் ணியமுண்டென்றும் கீற்த்தி உண்டென்றும் சொன்னன். அதுக்கு நான் சொன்னது அப்படி கட்டு பண்ணிகிற வேளை அல்ல வெளியேயிருந்து ஒரு தானிய மணி வாரதில்லை. மகாறுசா துரையவர்கள் யோகத்தினாலே கடல் விளைஞ்சு தானியம் நாகூதி யில்லாமல்விக்குது யிப்படிப்பட்ட வேளையிலே கட்டுபண்ணினல் யெத்து வைத்திருக்கிறவர்கள் விக்குறதுக்கு பாலமாறுவார்கள். அப்பால் உங்கள் சித்தமென்று சொன்னதுக்கு வைத்திருக்கிற வர்களை தாக்கீதுபண்ணினல் கொண்டுவந்துவிப்பார்கள் என்று சொல்லி நீ கேலம்பண்ணினல் கொண்டுவந்துவிப்பார்கள் யென்று சொன்னர். அந்தக்ஷணம் பாக்கு கிடங்குக்கு வந்து

பெரியண்ணநயினருடனே சொல்லி நாளைக் காலத்தாலே ரெண்டு படி அரிசிக்கு குறையாமல் விக்கச்சொல்லி தமுக்குப் போடச் சொல்லி உத்தாரம் குடுத்தேன்.

இதல்லாமல் யித்தனள் சாயங்காலம் ஆறு மணிக்கு மச்சிலி பந்தரிலே யிருந்து முசியே கிலியார் அனுப்பின காகிதம் கொண்டுவந்து அந்த காகிதத்திலே முசியே கொக்கேத்து முசே லசேல் வகையறு மச்சிலிபந்தர் கொட்டடித்தார்கள். யெல்லாரையும் விட்டு மேளதாளத்துடனே சகல சம்பிரமத் துடனே கோசாகலந்தீர்கான் மனுஷர் பெரிய மனுஷர் கூட கூட்டிவந்து முசியே கிலியாரண்டையிலே ஒப்பிச்சு நாசறுசங்கு யெங்கள் யெசமானனபடியினலே அவனுத்தாரத்தைத் தள்ளாத படிக்கு யிவர்களை நீயங்கள் வீட்டிலே கொண்டுபோய் மரியாதை யாய் வைத்து யிருந்தோம். நீங்கள் முசே கொகேத்து வகை யறுவைக் கேட்டால் தெரியவருமென்று சொன்னர். அதுவு மல்லாமல் நீங்கள் மனம் பொறுக்கவேண்டுமென்று உபசாரமாய்ச் சொல்லி விருந்துக்குச் சகல சாமக்கிரிகைகளும் அனுப்பின ரென்று கோசாகலந்தீர்கான் வெகு பயந்து நடுங்கிக்கொண்டு யிருக்கிறனென்றும் யெழுதிவந்தது யென்று சொன்னர் ஊரிலே யெல்லாம் சுகமாய் வந்து அவரவர் பிறவாத்தகமென்ன உண்டோ அது செய்துகொண்டிருக்கலாமென்றும் நாங்கள் சனங்களை சுகப்படுத்த வந்தமேயல்லாமல் சென்ங்களுக்கு பொல்லாப்பு பண்ண வரயில்லையென்றும் நாங்கள் சத்துருவை நிக்கிறகம் பண்ணி வந்தமே அல்லாமல் குடிகள் வற்த்தகர்களுக்கு சுகங் குடுக்கவந்தோமென்று சொல்லி தமுக்குப் போடுவிச்சபடியி னலேயும் சிப்பாயிகளுக்கும் வெள்ளைக்காறர் வகையறுக்களுக் கும் யாதாமொருத்தராகிலும் ஒரு செத்தை அளவிலே யெடுத் தால் தூக்கிப் போடுவேன் யென்று சகல பேருக்கும் தாக்கீது பண்ணியிருக்கிறபடியினலே ஒரு முள்ளு முறியாமலிருக்கிற தைத்தொட்டு சகல சனங்களும் வெகு சந்தோஷப்பட்டு யிப்படி நீதியாய் துரைத்தனம்பண்ணினல் அப்போ சகல சனங் களுக்கும் சுகமாகுமென்று வெகு சந்தோஷத்துடனே வெளியே போயிருந்த சனங்களெல்லாம் மறுபடி வந்து சேர்ந்தார்களென் றும் ஒலாந்தாக்காறர்கள் பெண்டுகள் கூட வெளியே போயிருந்த

வர்கள் வந்து சேர்ந்தார்கள் யென்றும் காகிதம் கொண்டுவந்த சேவுகர்கள் சொன்னார்கள்.

இத்தனாள் ராத்திரி தெய்வனாபகசெட்டி வந்து சொன்னது. முசே கெலம்வீலுடனே மொக்காவுக்கு சரக்குக் கூட்டிக்கொடுக்க ஒடம்படிக்கைபண்ணி கூட்டிக்கொண்டோம் யென்று வந்து சொன்ன விலைப்படிக்கு யெழுதினது.

மொகார் சட்டம் ஒசத்தி காங்கு ஒலாந்தா கிழிவு கோடி 60 விலை 23 ஆக காங்கு ஒன்பதுகால் சிலம்புரி கோடி 90 விலை $23\frac{1}{2}$ ஆக காங்கு ஒன்பதுகால் கிழிவு ரேக்கு கோடி 15 விலை வி. $16\frac{1}{2}$ ஆக மேலே யெழுதப்பட்ட தினுசுகளுக்கு தீருவை சிலவுகட்டுக்குப் போடுறவர் தான் உள்பட முசே கெலம்வீலு (M. Glainville) தென்றும் வராகனுக்கு நூத்துக்கு ரூபா முன்னூத்தன்பதாகவும் P. 100 R. 360 தமிழ் புறட்டாசி மீ 30 உ குடுக்கவும் யிந்தத் துறைமுதல் கூடலூர் பறங்கிப் பேட்டை யிந்த மூணு துறையிலே குடுத்தாலும் மாதிரிப் படிக்குப் பாருவையிட்டு யெடுத்துக்கொள்ள உடம்படிக்கை யெழுதிக் குடுத்ததாய் தெய்வனாபகசெட்டி வந்து சொல்லி யெழுதிவிச்சான் யிந்த சரக்கு கூட்டுகிற பங்காளி பேர் வயணம் கங்கிபாடி வீருசெட்டி கறணபுரம் திருப்பளிசெட்டி தெய்வனாபக செட்டி யிதுக்கு வயணம் வீராசெட்டி பங்கு $1\frac{1}{4}$ திருப்பள்ளி செட்டி பங்கு $1\frac{1}{4}$ தெய்வனாபகசெட்டிக்கு பங்கு 1 ஆக பங்கு மூணெமுக்காலின்பேரிலே செய்து குடுக்க உடம்படிக்கை யென்று ஆனந்தறங்கப்பனுக்கு தாகு நூத்துக்கு ஒரு விறகன் விதம் குடுக்கிறதாய்ப் பேசி உடம்படிக்கைப் பண்ணிக்கொண் டோமென்றும் சொன்னான். யிதல்லாமல் நூத்தன்பது பாரம் பத்தேவியா (Batavia) சரக்கு சர்க்கரை பாரம் ஒன்றுக்கு ரூபா அன்பத்தொன்பதாக யெடுத்துக்கொள்ள பேசினதென்று சொன்னான். யிதல்லாமல் முன் ஆனி மீ காங்கு ஒலாந்தா கிழிவு கோடி அன்பதுக்கு 1-க்கு இருபத்தெட்டாகவும் ரூபா நூறு விறகனுக்கு முன்னூத்தன்பதாகவும் பேசி வாங்கிக் கொண்டதாய் எழுதிவிச்சு யிந்த அன்பது கோடி தென்னவறுய முதலியுடனே வெள்ளைக்காறன் பார்வைக்கு ஒப்பிக்க உடம் படிக்கைப் பண்ணிக்கொண்டு பணங்காசு குடுத்ததாய் சொன்னான்.

இதுக்கு ஆனல் பத்திக்கொண்ட ரூபா யெழுதிவைச்சது. காளதுவரைக்கும் தடவை 2-க்கு வாங்கின ரூபாயி 3855.

**1750 ஶு ஜூலை மீ 26 உ பிறமோதூத ஶு ஆடி மீ 14 உ பானுவாரம்.**

இத்தனுள் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்குப் போயி வந்த பிற்பாடு யென்ன சேதி யென்று கேட்டார். ஆற்காட்டிலே யிருந்து சேதி வரயில்லை கூடலூர் சேதி ஆனல் மேஸ்தர் லொரென்சு பரிச்சேதமாய் நாங்கள் மத்தத்து வரக்கூடாது யிந்த யிடத்துக்கு காபந்துகள் வந்தபிற்பாடு அவர்கள் சம்மதியானபடி நடப்பிக்கிறதேயல்லாமல் நான் சுவந்திரிகனல்லா உத்தாரம் குடுக்கிறதுக்கு யென்று சொன்னதாயும் மேஸ்தர் பிளேயர் எனக்கு தகராறுப் போச்சுதென்றும் யினிமேல் யென்னைத் தொட்டாகவேண்டியதில்லை யென்று சொன்னதாயும் அதின்பேரிலே நட்புச்சொல்லி காரியம் பார்ப்போம் யென்று யெத்தினம் பண்ணுகிறார்களென்றும் வந்தவன் சொன்ஞனென்று சொன்னதுக்கு ஒருக்காலும் மேஸ்தர் லொரென்சுத் தொட்டு உத்தாரம் குடுக்கக்கூடாது மேஸ்தர் லொரென்சு சென்னப்பட்டணம் துரையிலே யிருக்கிறவன் யிந்தக் காரியத்துக்கு உட்பட்டான் யென்றும் தொரையவர்கள் சொன்னர்கள். மெய்தானென்று சொன்னேன். யிப்படி பேசியிருக்கச்சே முசே செம்போல் வந்து ஆசாரப்பன் பெஞ்சாதி வியாச்சியாந் தீராமல் போனபடியினலே ஆசாரப்பன் கிளாசுக்காறர்களுக்கு கும்பினீர் சம்பளம் யிவன் கொடுக்கிறவனனபடியினலே யிவன்பேரிலே பணம் நின்றுபோய் குடுபடாமல்போனபடியினலே அவர்கள் யென்னேரமும் வந்து பிறுதுபண்ணுகிறார்களென்று சொன்னர் அப்பால் யென்னை அழைத்து யென்னவென்று கேட்டார். சூரப்பமுதலி பித்திசாம் குடுத்தது சிறிது தட்டுமுட்டுமாத்திரம் ஒப்பிச்சார்களென்றும் மத்த தட்டுமுட்டும் ரொக்கமும் அவர்கள் கொடுக்கவேணுமென்று பித்திசாமிலே யெழுதியிருந்தது மத்தியஸ்த்தை குறிக்கிறதுக்கு அவன் பக்ஷமாய் சொல்லுவார்கள் அதினலே முசே திலாரஷைசை குறிச்சு சொன்னனென்று சொன்னதினலே முசே திலார்ஷைக் குறித்துச் சொன்னேன் அதுக்கு சின்னதுரை முசே திலார்ஷு சொல்லுகிறது நியாயமல்லவென்று சொன்னதுமல்லாமல் பேருக்கு ரெவ்வெண்டு

பேரை குறிச்சுக்கொள்ளச் சொல்லுகிறதுதான் யென்று சொன்னதுக்கு துரை யென் பகுதியாய் ஒருத்தரை நேமிக்குறேன் யென்று சொன்னர் அந்தமட்டுக்கும் முசே செம்போல் அப்பாலே போனர் யென்ன யென்று கேட்டார். அப்பால் நடக்கவேண்டிய வயணம் சொன்னேன் நல்லது அப்படித்தானே நடத்துவோமென்று சொன்னர் அப்பால் மசுக்கரை லாஞ்சப்பழம் ரெண்டு பெட்டி வந்தது அதைப் பார்த்தவுடனே சிப்பாயிகளுக்கு கப்பித்தான் அப்துல்றயிமானை அழைக்கச்சொன்னர். அவன் வந்தவுடனே யிறதுர லாஞ்சப்பழம் யிருக்குது ஆற்காட்டுக்கு செயிதுசாயபு அண்டைக்கு அனுப்புவி யென்று சொன்னது மல்லாமல் நாசரசங்கு மமுதல்லிகானிந்த பாரிசம் வந்தவன் ஒரு வேலையும் செய்யாமல் யிங்கிரேசுக்காறரும் வரச்சொல்லி மோசம்பண்ணிப்போட்ட சாவு சேதியினாலேயும் பின்னையும் துர்க்கதாசுகான் காலம் பண்ணிப்போய் செங்கல்ப்பட்டு அண்டையிலே அடிபட்டதினாலேயும் ஷை துர்க்கதாசுகான் காலம் பண்ணிப்போட்டதினாலேயும் அவன் பவுன்சும் அடிபட்டுப் போனதுமல்லாமல் மச்சிலிபந்தர் பிடிச்சுக்கொண்ட சேதி வகையறு கேட்டு நாசரசங்கு மனசு யிளிச்சுப்போயிருக்கிறது யிந்த தித்திப்பும் போய் விழுந்து அந்தக் கசப்பை மறக்கப்பண்ணச் சொல்லென்று செய்துசாயபுக்கு நீ யெழுதியனுப்பென்று துரையவர்கள் அப்துல்றயிமானுடனே சொன்னர். அந்தப்படிக்கி யாதால்து மதனுக்தபண்டிதனை யெழுதிக் குடுக்கச்சொல்லி அப்துல்றயிமான் வாங்கிக்கொண்டு போனான். நானும் பாக்குகிடங்குக்குயே வந்தேன்.

அப்பால் முசே சூது (M. Soude) வந்து யென்னுடனே பேசியிருந்து எனக்கு கொடுக்கவேண்டிய வராகனுக்கு ரெண்டு மூணு நாளையிலே சம்மதிபண்ணிப் போடுகிறேனென்று சொன்னதிலே பாதி சத்தியாய் சம்மதிபண்ணுகிறேனென்று சொன்னான். அப்படி செய்யப்போகாது என் கடன்காறருக்கு பதில் சொல்லவும் யென்னையவர்கள் ரெம்ப சுறுக்குப் பண்ணுகுறார்கள் எல்லாம் குடுக்கவேணுமென்று சொன்னேன். நல்லது பார்ப்போம் ஒரு வருஷம் போனல் உனக்கு நான் பதினாயிரம் வறுகன் மட்டுக்கும் குடுத்து வாங்கிக்கொள்ளுவேன் என்று சொன்னான். அப்படி நீ குடுக்கக் கவையில்லை. நானினி ஒருத்தர் கையிலேயும் கடன் வாங்குறதில்லை எனக்கு வரவேண்டிய கடனை வாங்கி நான்

குடுக்கவேண்டியவர்களுக்கு கொடுத்து வீபுறு ஆக வேணு மென்று யிருக்கிறபடியினாலே யினிமேல் எனக்கு கடன் கவை யில்லை யென்று சொன்னேன். அப்பால் சீமை சேதியும் தன் பூறுவோத்திறம் முதலானதுகளும் பேசியிருந்து போனான். இத்தனைகாள் மத்தியானம் துரையவர்கள் முசியே பெடுத்தல்மே வீட்டுக்கு சாப்பாட்டுக்குப் போனார். பகலைக்கு மேலாக மூணு மணிக்கு துரையவர்கள் அழைச்சு முசியே லபோடுதுனே முன்னே ஏறிவந்த லசில் என்கிற கப்பல் வந்து துரை பிடிச்சுது. இந்தக் கப்பல் முசே லபோடுதுனேக்கு மெத்த வருத்தத்தைக் கொடுத்து கடசியிலே சீமையிலே காவல் வைக்கப் பண்ணிப் போட்டுது. முசியே லபோடுதுனே தம்பி முசே லவில்பாகு சீமைக்குப் போகச்சே சமீபத்திலே செத்துப்போனான் இப்படிப் பட்ட அலைச்சலைக் கொடுத்தக் கப்பல் வந்து யிப்போதான் துரை பிடிச்சுதே யென்று சொல்லச்சே பீரங்கி போட்டான் ஆற்காட்டிலே யிருந்து ஏதாகிலும் சேதி வந்துதாவென்று கேட்டார். வந்துது. சுப்பய்யன் தம்பி ஓலைப்படிக்கி நான் துரை யவர்களுக்குச் சொன்னதாவது நாசறுசங்கு கலாபத்திலே யிருக் தார் கலாபத்திலே யிருந்து மீருஷும்கானென்கிறவனை இரண் டாயிரம் குதிரை சுவார்கள் வைக்கச்சொல்லி உத்தாரம் குடுத்தா ரென்றும் அப்பால் மமுதல்லிகான் போய் வெகுநாளாய் ஒரு காரியமுமில்லாமலிருக்கிறானென்று வெகு கோபம்பண்ணி வரச் சொல்லி காக்கீது யெழுதச்சொன்னதாகவும் முசபாசங்கு நான் சாப்பிடாமலிருந்தவனுக்கு சமாதானம்பண்ணி சாப்பாடு பண் ணிவிக்கச்சொல்லி காசிதாயிம் ருமதாசபண்டிதனை அனுப்பி சமாதானம்பண்ணிவிச்சதாகவும் இருபது சொலுதாதுகள் புதுச் சேரியிலிருந்து ஓடிவந்தார்கள் அவர்களுக்கு சேவுகம் வைத் துக்கொள்ளுகிறோமென்று அன்னபானுதிகள் விசாரிக்கச் சொல் லிச்சொன்னார்கள். முசபர்கான் சயிதுசாயபுக்கு சிறிது வீதுரு கள் தண்ணீர் குடிக்கிறது வகையறு சாப்பாடு வைக்கிறது வகை யறு முதலானது வீதுருகள் இனிசும் ஒரு சின்ன பீரங்கியும் அனுப்பிச்சான். சயிதுசாயபு நாசறுசங்கு முன்னே வைத்தால் நாசறுசங்கு சயிதுசாயபுவை யெடுத்துக்கொள்ளச்சொன்னதாக வும் மச்சிலிபந்தர் சோடா வந்து காகிதம் நாசறுசங்கு பாத்துக் கொண்டுவந்து சோடாக்காறரை பிறஞ்தாபம் பண்ணவேண்டாம் என்று சொன்னதா யெழுதியிருந்தது. அந்தப்படிக்கு துரை

யவர்களுக்குச் சொன்னேன். ஆனல் ஆற்காடு தூங்குமென்று சொன்னர். தூங்காதே யென்னவிருக்குமென்று சொன்னேன்.

லே லசீல் (Achille) யென்கிற கப்பல் கப்பித்தான் நாளை யிறங்கிறேனென்று மூனுவது கையிலே சீமைக் காகிதங்களைக் கொடுத்து அனுப்பிவிச்சான். அவன் காகிதங்களைக் கொண்டு வந்தான். அவனைக் கண்டவுடனே சட்டை போட்டுக்கொண்டு கத்தி கட்டிக்கொண்டு யெதிரே பத்தடி போனர் கப்பித்தானல்ல. அப்பாலதை சட்டைபண்ணி உட்காரவைத்து பேசியிருந்து காகிதங்களை வாங்கிக்கொண்டு காம்பிறுவே போனர். நான் பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

இந்தக் கப்பலிலே நூத்திருபத்தஞ்சு பெட்டி வெள்ளி வந்துது பின்னையும் சகலாத்து யிருபது கட்டு மாத்திரம் வந்தது. பின்னை யென்ன தினிசு வந்துதே தெரியவில்லை ஆனல் மசக் கரையிலிருந்து காளவாய்க்கு விறகு குச்சு விஸ்தாரமாய் வந்ததாய்ச் சொன்னர்கள்.

### 1750 ஹூ ஜூலை மீ 28 உ பிரமோதூத ஹூ ஆடி மீ 16 உ செவ்வாய்க்கிழமை

இத்தனாள் காலத்தாலே சேத்து ஆறு மணி வேளைக்கு கண்ட சீமை கப்பல் இத்தனாள் ஆறரை மணிக்கு வந்து துரை பிடிச்சு. யிறங்கி போட்டு யெட்டு மணிக்கு கப்பல் கப்பித்தான் யிறங்கி வந்து துரையவர்களுக்கு சீமை காகிதம் குடுத்தான். யிந்தக் கப்பல் பிறன்சாவிட்டு யிப்பரெவரு மீ 27 உ பயணம் யிறப்பட்டு ஜூலை மீ 27 உ சேத்து துரை கண்டு லங்கோரம் போட்டபடியி னலே அஞ்சு மீ சரியாயாச்சுது யென்று துரையவர்கள் சொன்னர்கள் யிதல்லாமல் வந்தக்கர் கேட்டார்களே சரிகை நூல் இறநூத்தன்பது மார்க்கு வந்துமென்று சொன்னர் கப்பல் பேர் லரெனுசு (La, Reine) கப்பல் கப்பித்தான் பேர் முசியே லப்பிளிசியேர் (M. La Palissière) இந்தக் கப்பலிலே நூத்தி முப்பத்தஞ்சு பெட்டி வெள்ளி வந்துமென்று சொன்னர்கள் யிதிலே முசியே துவேலறு (M. Duvelaer) யெனக்கொரு காகிதம் துரையவர்கள் கடுதாசியிலே வைத்தனுப்பினன். அந்தக் காகிதத்தை முசியே பேரலோ (M. Boyellove) கையிலே குடுத்து எனக்கு குடுக்கச்சொல்லிச் சொல்ல என்னை யழைப்பிச்சு முசியே துவேலறு உனக்கு என்ன யெழுதினு

னென்று கேட்டார். நானின்னம் பார்த்ததில்லை யென்று சொல்லி யிப்புறத்தில் வந்து காகிதம் படிச்சுப் பார்த்ததில் போன வருஷம் முசியே ஞுதுபேரிலே வரவேண்டிய பணத்துக்கு பெருக்கிறசாம் (Procuration) பண்ணி அனுப்பினதுக்கு பதில் அவன் அவ்விடத்துக்கு வருகிறபடியினாலேயும் அவனுக்கு வரவேண்டியதும் மசக்கரையிலே ஆனபடியினாலே அவனுக்கு மசக்கரையிலே வரவேண்டிய பணத்தை அறுவாடு உன்னண்டைக்கு அனுப்பச்சொல்லியும் முசியே ஞுதையும் புதுச்சேரிக்குப் போய் உன்னுடனே தீத்துக்கொண்டு உனக்குப் பணம் சம்மதிபண்ணச்சொல்லி அவனை ஒபிரிகாரிடி சொல்லி முசியே தவீது பேருக்கு ஒரு காகிதமெழுதி நீ அனுப்பின பெறகிறுசாரும் அனுப்பினேன் என்றும் அவாக்தபடிக்கி நடப்பிப்பாரென்றும் லங்கேசு (lungées) சம்மதிக்கு திக்கிளேறசம் (Declaration) அனுப்பினேன் அது பார்த்துக்கொள்ளச்சே தெரிபவருமென்றும் உபசாரமா யெழுதியிருந்தது. பசினுசு காகிதத்தைக் கொண்டுபோய் துரையவர்கள் கையில் கொடுத்து மூக்குக்கண்ணாடியும் குடுத்து அதை படிச்சுப்பார்த்து குடுத்து விட்டார். அப்பாலென்னைப் பாத்து கும்பினீர் வற்தகர்களெனக்கு குடுக்கிறோமென்றும் சிதம்பரம் சம்மதியும் யேகத்துக்கு ஒரு றசீது யெழுதி வாங்கி வாவென்று சொன்னார். நல்லதென்று சொல்லிப்போட்டு வந்தேன்.

அப்பால் மூணு அரை மணிக்கு கோட்டையிலேயிருந்து துரையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு கூடலூர் சேதி யேதாகிலும் வந்ததாவென்று கேட்டார். முன்னே இங்கிரேசுக்காறர்கள் மறுதல்லிகானுக்கு மத்தத்துப் போறதில்லை யென்று மூந்தாம் நாள்மட்டுக்கும் சொல்லிவந்தவர்கள் நேத்தியதினம் சம்மதிச்சதாகவும் கோப்பும் வெள்ளைக்காறரும் போனதாய்ச் சொன்னதுமல்லாமல் பீறங்கி இருபத்து நாலு ரூத்தல் குண்டோடுகிறது நாலு பீறங்கி கூட கொண்டுபோயி மறுதல்லிகான் தண்டிலே கொண்டுபோய் சேர்த்ததாய் வழிபோக்கன் பிறுமணன் யின்று காலத்தாலே திருப்பாதிரிப்புலியூரிலே யிருந்து ஆறம்பரைக்குப் போறவன் சொன்னதுமல்[illegible] நானனுப்பின சேவகனிலே ஒருத்தனும் அப்படியே சொன்னானென்று சொன்னதுக்கு வெள்ளைக்காறர் பிறப்பட்டவர்களைத் தனே பேருண்டு யென்று சொன்னார்களென்று கேட்டார். அன்

னூறு பேர் வெள்ளைக்காறர்களும் சிப்பாயிகள் கற்னாட்டக சேவுகர் வகைபறா மூவாயிரம்மட்டுக்கும் கும்பல் காணுதென்றும் சொன்னானென்று சொன்னதுக்கு அவர்கள் அப்பால்ப்பட்டுப் போறதுக்கு யிவர்களுடைய பரிசத்திலேயும் கிட்டிபோட்டாப்போலே நெருங்கியிருக்கிறார்களே யெப்படிப் போவோமென்று சொல்லிக்கொண்டதுக்கு திருவண்ணைநல்லூர் செஞ்சி மட்டுக்கும் போறதுக்கும் மத்தத்துப்பண்ணி அனுப்பப்போறார்களாங் காட்டும் மென்று சொன்னார். எல்லாத்துக்கும் யோசனை பண்ணலாமென்று சொன்னதுக்கு துரையவர்களந்தப் பேச்சை விட்டு ஆற்காட்டு சேதி யேதாகிலும் வந்துதாவென்று கேட்டார். வரயில்லை யென்று சொன்னேன். அப்பால் மேல் விடுசைளெல்லாம் பாத்துக்கொண்டு இரண்டாவது அங்கணத்தே வந்தார். சீமையிலே யிருந்துவந்தவன் ஒருத்தன் மூசியே கெலமலவில் கூட யிவர்களிருந்தார்கள் அப்பால் பாதிரி பிரான்சுவா வந்தார். அவர்கள் பேசியிருந்தார். நானும் ஆறடிக்குந வேளைமட்டுக்கும் யிருந்து பாக்கு கிடங்குக்கு வந்தேன் துரையவர்கள் பின்னை அரை நாழிகைக் கிட்டை வந்து என்னை அழைக்கச்சொன்னாரப்போதான் கலிச்சியப்பிள்ளை நேத்து மத்தியானம் அனுப்பின சேவுகன் வந்து சொன்ன கபுறா யென்னவென்றால் நேத்தய்தினம் ராத்திரி சாமத்துக்கு மேஸ்தர் கோப்பும் 500 அன்னூறு சொலுதாதுகளும் மூவாயிரம் சிப்பாயிகளும் பெரிய பிறங்கிகளும் சின்ன பிறங்கிகளும் இழுப்பிச்சுக்கொண்டு திருவந்திரத்திலே யிறங்கியிருக்கிற மமுதல்லிகான் பாளையத்தில் போய்ச் சேர்ந்தார்கள். நானும் கூடப் போய் மமுதல்லிகான் லசுக்கரிலே ராத்திரி யிருந்து காலமே பிறப்பட்டு வந்தேனென்று சொன்னதுமல்லாமல் நாளையதினம் திருவீதி அந்தப் பிராந்தியங்களிலே போய்ச் சண்டைக்கு நிக்கவேணுமென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள் அவர்களிறங்கியிருக்கிறதுக்கு பாகூருக்கு சமீபமாமே அங்கே விசேஷிச்ச சிப்பாயிகள் வெள்ளைக்காறர்கள் ஒருத்தருமில்லை சேவுகர் இருபது முப்பது பேர் மாத்திரமல்லோ யிருக்கிறார்கள் இதைப் பெலக்கப் பார்க்கவேணுமென்று சொன்னதுக்கு அவர்கள் பறங்கிப்பேட்டையைப் பார்க்காப்போலே ஓடிப்போவார்களில்லாவிட்டால் சமேதார்கள் தானே மமுதல்லிகானைப் பிடிக்க வருவார்களென்கிற கனையாய்ச் சொன்னார். அதுக்கு நான் சுவாமி அப்படித் தயவு

பண்ணவேணும் மென்று சொன்னேன். இந்த சாடை அவர் சொன்னதேது யென்றால் அஞ்சாறு நாளைக்கு முன்னே முசபர் கான் வந்து துரையவர்களுடனே மமுதல்லிகான் வந்த பெகு தங்காவிலே யிருக்கிறான் அந்தச் சமேதார்கள் எனக்கு ரூச வட்டம் அனுப்பினார்கள். நீங்களெங்களை சேவகத்துக்கு வைத்துக்கொள்ளுகிறதானால் குதிரை சுவார்களெல்லாம் பிறப்பட்டு வருகிறதுமல்லாமல் மமுதல்லிகானை மோசம்பண்ணிக்கொண்டு வருகிறோமென்று சொல்லி அனுப்பினதாய் சொன்னதின் பேரிலே துரையவர்களதை மெய்யென்று யெண்ணி அந்தப் படிக்கு குதிரை சுவார்களுக்கும் சமேதார்களுக்கும் சொல்லி அனுப்பி மமுதல்லிகானைக் கூடப் பிடிச்சு வரச்சொல்லி சொல்லி அனுப்பிக்கச்சொன்னார். அந்தப்படிக்கு சந்தாசாயபு அண்டைக்கும்போய்ச் சொல்லி அஞ்சாறு நாளையிலே காரியம் அனுகூலமாகுமென்று சொல்லிக்கொண்டு உபயத்திரவரையும் சுசுக்காப்பிக்கொண்டு வருகிற சாடை கேழ்விப்பட்டிருக்கிறபடியினாலே அந்தச் சாடையிலே அசுவாரிசயமாய்ச் சொல்லுகிறார் யென்று யெண்ணிக்கொண்டு அப்பால் பல சேதியாயி அவர் கேழ்க்க நானுமுத்தரஞ் சொல்லிக்கொண்டு வரச்சொன்னா ஊரண்டையிலே நம்முடைய வெள்ளைக்காறர்கள் சிப்பாயிகளிறங்கியிருக்கிறவர்களுக்கு சறுதாறாய்ப் போயிருக்கிற முசியே லத்தூசுக் காகிதங்களனுப்பினான் அந்தக் காகிதத்திலே யெழுதியிருந்தது நேத்து ராத்திரி மேஸ்தர் கோப்பும் 900 தொளாயிரம் சொலுதாதுகளும் ரெண்டாயிரம் சிப்பாயிகளும் இருபத்து நாலு றாத்தல் குண்டோடுகிற பீரங்கிகளும் மருந்து குண்டுகளும் கற்னூதுகளும் யிது முதலானதுகளும் சண்டை சாமானுடனே வந்து சேர்ந்தார்களென்றும் அங்கே யிருந்து ஒரு யிங்கிரேசு சொல்தாது ஓடி வந்து அவன் சொன்னான் அவனைக் கூட்டி அனுப்பிவிச்சோம் அவன் மூக வசனம் கேட்டால் தெரியவருமென்று யெழுதினார்கள். அந்த காகிதம் பார்த்தவுடனே அந்த இங்கிரேசுக்காறனை அழைப்பிச்சு முசியே பிரியேலை அழைப்பிச்சு யிந்திரப்பிரேத்து யிடச்சொல்லி அவரிந்திரப்பிரத்தாரிட்டுச் சொன்ன வயணம்.

இத்தனாள் ராத்திரி பத்து மணிக்கு சாந்தப்ப சேருவைக்காறன் வந்து சதாசிவப்பிள்ளை வீட்டண்டையிலே நின்று சொன்ன சேதி இத்தனாள் சாயங்காலம் அஞ்சு மணி வேளைக்கு

பாகூர் கோட்டையைப் பிடிச்சுக்கொண்டு அதிலே யிருக்த முப்பது முப்பத்தஞ்சு சேவுகர்களையும் காயப்படுத்தி கோட்டையிலே போட்டு வைத்துக்கொண்டு யிருக்கிறதாய் அதிலே ஒரு சேவுகனுக்கு கையிலே காயப்பட்டிருக்குது. அவன் தப்பி வந்து துரையவர்களுக்கு கபுறு சொன்னானென்றும் அதுக்குத் துரையவர்கள் அந்தச் சேதியைக் கேட்டு வந்த சேவுகனைக் கூட்டிக்கொண்டுபோய் உங்களுக்கு கபுறு சொல்லச்சொன்னாரென்றும் அவனுக்கு நல்ல காயமானபடியினாலே அவன் யிசுபத்தாலுக்கு (Hospital) காயம் கட்டக் கூட்டிக்கொண்டு போனார்கள் யென்றும் காயம் கட்டிக்கொண்டு உங்கண்டைக்கு வருவானென்றும் துரையவர்களாய் இவன் வந்து கபுறு சொன்னவுடனே முசே லத்தூசுக்கு காகிதம் யெழுதி யிந்தச் சிணம் கொண்டுபோகச்சொன்னார். அதை ரெண்டு பேர் சேவுகர் கையிக் குடுத்து வாசற்படியும் தெற்பபிடிச்சு அனுப்பிவிட்டு உங்களுக்கு கபுறு சொல்ல வந்தேனென்றும் நான் கபுறு சொல்ல வந்தது அம்மாளறிஞ்சால் குடிகெட்டுப்போமென்றும் அறியப்போகாது என்றும் அம்மாள் பண்ணுகிற காறுபாறு உங்கள்பேரிலே சொல்லிமுடியாது என்றும் துரைக்கு மருந்துப் போட்டு துரையைக் கண்ணை மூடிப்போட்டாளென்றும் யிப்படி யெப்போதும் சொல்லுகிறதுதானிருக்குதே இன்றைக்கு கோபிச்சுக் கோபம் மிதமில்லை யென்று சவுரிமுத்து சேருவைக்காறனுக்கும் வில்லியநெல்லூர் காறுபாறு பண்ணுகிற றங்கப்பிள்ளைக்கும் சரிப்படாமல் சவுரிமுத்து இங்கேதானே வந்திருக்கிறானென்றும் அவன் வந்து ராத்திரியும் பகலும் செவி செல்லுகிறானென்றும் யிப்படி அம்மாள் பண்ணுகிற சக்காரியங்களுக்கு இப்போ பாப்பய்ய பிள்ளை வந்து கோள் சொல்லுகிறதும் கோவளத்திலே உங்கள் மனுஷர் பெகு பணம் அருவிடுகுறார்களென்றும் யிப்படி பல பேச்சாய் சொன்னான். மத்தப் பேச்செல்லாம் யிருக்கட்டும் இங்கிலீசுக்காறர் வந்து பாகூர் வாங்கினார்களா யில்லாவிட்டால் மமுதல்லிக்கான் மனுஷர் வந்து வாங்கினார்களா யென்று கேட்டதுக்கு மமுதல்லிகான் மனுஷர் நாலாயிரம் குதிரை சுவார்கள் வந்து சுத்திக்கொண்டு கோட்டையை வாங்கிக்கொண்டார் என்கிறதாய் வந்த சேவுகன் சொன்னானென்று சொன்னான். நல்லது நீ வீட்டுக்குப் போவென்று சொன்னேன் நல்லதென்று போனான்.

**1750 ஞூ ஜூலை மீ 29 உ பிறமோதூத ஞூ ஆடி மீ 17 உ புதவாரம்.**

இத்தனாள் காலத்தாலே துரையவர்களழைச்சனுப்பிவிச்சு சந்தாசாயபு அவர்கள் எனக்கு உடன்படிக்கை யெழுதி யெப்போ கொண்டுவாறமென்று சொன்னார்கள் யென்று கேட்டார். யெழுதி தயாறுபண்ணி மோகறு பண்ணியிருக்குது ஙீங்களெப்போ கொண்டுவாச்சொல்லிச் சொல்லுகிறீர்களோ அப்போ கொண்டு வருவார்களென்று சொன்னேன். நல்லது யின்று சாயங்காலம் கொண்டுவாச்சொல்லு யென்று சொன்னார் நல்லதென்று சொன்னேன். அதுக்கு துரையவர்கள் நான் சொன்னதாயி யிருக்கப் போகாது அவர்களா யென்னைப் பலவந்தம்பண்ணி நான் செய்த வேலைக்கு அவர்கள் சந்தோஷப்பட்டு நன்றிபறித்து நடக்கிறதா யிருக்கவேணுமேயல்லாமல் நான் சொன்னதாயி என் சம்மதியின் பேரிலே நீ யவர்களைக் கண்டு பேசினதாய்ச் சறுவாத்துமனாக யிருக்கப்போகாதென்று சொன்னார் அப்படி வருத்திவிப்பேன் நான்தானே உங்களுக்கு இந்த ஆலோசனை சொல்லி இந்த சமயத்திலே அவர்கள் கையில் ஒரு அத்தாக்ஷி வாங்கிக் கட்டிக் கொண்டால் நல்லதென்று சொன்னேன்தானே அப்படிப்பட்ட சொல் வருத்திவிப்பேனா இந்தமட்டுக்கும் நான் திறவவியே ரிட்டது (Travaille) சந்தாசாயபு–ரசாசாயபு–மீர்ஷம் நான் அறிந்ததேயல்லாமல் மத்தப்பேர் ஆரும் அறியார்கள் இப்போ யெழுதியிருக்கப்பட்டது கைக்குக் கொஞ்சம் கொஞ்சமாய் பஞ்சிட்டுப் பாரமேத்தி அவர்கள் வம்பினாலே தானே வருஷத்துக்கு மூணு லக்ஷம் சீமை கைவசமானால் அப்போவே பத்து லக்ஷம் குடுக்க காயிதம் யெழுதிவிச்சு மோகறும் தங்கப்பன் பிள்ளை இரண்டுபேரும் மோகறு பண்ணிவிச்சு காகிதத்தை வாங்கி கையில் வைத்துக்கொண்டேனென்று சொன்னேன். அந்தக் காகிதமெங்கே யென்று கேட்டார் அங்கிப் பையிலே யிருந்ததை யெடுத்துக் காண்பிச்சேன் பாத்து என் கையிலேதானே குடுத்து இன்றைய சாயங்காலம்தானே சந்தாசாயபையும் அவர் குமாரனையும் வந்து குடுக்கத்தக்கதாகப் பண்ணிவிக்கப்போடென்று சொன்னார் நல்லதென்று சொன்னேன். இப்படியிருக்கச்சே அப்துல்றயிமான் வந்து மமூதல்லிகான் பாளையத்திலிருந்து சமேதாரர்கள் வக்கீல்கள் நாலு பேர்கள் வந்தார்கள். 1360 குதிரைக்காறர்களுக்கு வைக்கீல்கள் கொண்டுபோய் குடுத்தது

போறுமென்று சேக்கசேன் முனிசி கையிலே யெழுதி வைச்சுக் கொண்டு வந்து குடுத்த பறதுபடிக்கு துரையவர்கள் தமிசிலாம் படியே மதனுந்தபண்டிதனைப் படிக்கச்சொல்லி நாம் சமேதாரர் போம்படியாகவும் அவர்கள் சுவார்களையும் கண்டு யெழுதி கைப் பாறுக. 1360 சுவார்களாச்சுது. நல்லது இந்த சுவார்களும் பிதுக்கு சமேதார்களும் வாரேறுமென்று சொல்லியல்லோ யெழுதி அவர்கள் வைக்கீல்களையும் அனுப்பிவிச்சார்களிந்தச் சேதி சந்தாசாபபு அறிவாரென்று கேட்டார். அறிவாரென்று சொன்னான். நல்லது சாயபவாலம் சந்தாசாயபை யிந்த மோகத் துமா பேசுகிறதுக்கு ஆக அழைச்சுக்கொண்டு வாறபோது இந்த வைக்கீல்களையும் கூட வரச்சொல்லென்று சொன்னார். அப்துல்றயிமான் நல்லதென்று சொன்னான். இதிலே மீர்ஷம் வந்து நவாப்சாயபு சொல்லச்சொன்னார் மமுதல்லிக்கானுக்கும் இங்கிரேசுக்காறர்களுக்கும் உடம்படிக்கையாய் நேத்து யிவர் களும் அவர்களும் புல்லாலியென்கிற தேவனும்பட்டணம் சீமை கிறுமம் விட்டு பட்டாம்பாக்கம் அந்த வட்டங்களிலே போயிறங் கினார்கள் யென்று சேதி வந்தது. ஆனபடியினாலே யினிமேல் சும்மாயிருக்கிறது காரியமல்ல அவன் பவுன்கிலே.

## 1750 ஹூ ஆகொஸ்து மீ 1 உ பிறமோதூத ஹூ ஆடி மீ 20 உ சனிவாரம்.

இத்தனாள்காலத்தாலே துரையவர்கள் அழைச்சனுப்பி விச்சு ஆற்காட்டு சேதி யேதாகிலும் வந்துதாவென்று கேட்டார். வரயில்லை யென்று சொன்னேன். நம்முடைய லசுக்கர் யெங்கே யிருக்குமென்று கபுறு மமுதல்லிகான் லசுக்கர் யெங்கே யிருக்கு தென்று கபுறு வந்துதென்று கேட்டார். நேத்து றாத்திரி நம்முட பவுன்சு சொன்ன ஊரிலேதானே யிருக்குமென்றும் மமுதல்லிக் கான் லசுக்கர் வரைப்பேட்டு உளக்கடை பக்கீர்பாளையம் ஆண்டிப்பாளையம் ஆண்டிப்பாளையத்திலே இறங்கியிருக்கிறார்க ளென்றும் சத்து திருவிதிக்கோட்டைக்கு சமீபத்திலே குதிரை சுவார்கள் போனால் கோட்டையிலே யிருக்கிற முசே சாம றேக்கு (Sombreuil) யென்கிற சார்சேந்து பீறங்கியினாலே போடுகிறானென்றும் கபுறு வந்தது. அந்தப்படிக்குத்தான் பின் னையும் இரண்டு மூணு பேர் வந்து கபுறு சொன்னார்கள் அதை உங்களுடனே சொன்னேன் அதுதான் கபுறு வேறே வந்த

தில்லை யென்று சொன்னேன். நேத்து ராத்திரி பிரங்கி சபுத்தம்
யேதாகிலுங் கேட்டுதாவென்று கேட்டார் நேத்து ராத்திரி நாலு
பிரங்கி பொறுத்து பொறுத்து கேழ்க்கப்பட்டுது யிதல்லாமல்
திருவீதி கோட்டையிலே யிருக்கிற அமுல்தாரன் றங்கோ
பண்டிதனெழுதின காகிதத்தில் புதவாரம் சாயங்காலம் குடுத்த
சண்டையிலே நூத்தன்பது பேர் சாவு யென்றும் காயக்காறர்
யித்தனை யென்று கணக்கு தெரியாதே ஆனை யொன்று காயப்
பட்டுதென்றும் அது சென்டா அடிச்சயிருந்த ஆனை யென்று
யிப்படியாக யெழுதியிருந்ததுமல்லாமல் மமுதல்லிக்கான் லசுக்கர்
ராத்திரியும் பகலும் திகிலுடனே யிருக்கிறார்களென்று யிது
முதலான சேதி யெழுதிவந்தது யென்று சொன்னேன்.

**1750 ௵ ஆகொஸ்து ௴ 2 ௳ பிறமோதூத ௵ ஆடி ௴ 21 ௳ ஆதிவாரம்.**

இத்தனாள் காலத்தாலே ஆறரை மணி யேழு மணி வேளைக்கு
நம்முட சேவகர் ரெண்டுபேரும் திருவீதி கோட்டையிலே
யிருக்கிற நம்முட காசா சேவகன் லச்சிராம் சேவகனும் வந்து
சொன்ன கபுறு யென்னவென்றால் மமுதல்லிக்கான் லசுக்கரிலே
யிருந்து நாங்கள் வந்தோம் மமுதல்லிக்கான் லசக்கர் பயிர்
புனுகு யெல்லாம் பூங்கோணம் கனிசபாக்க மிந்த வட்டங்களிலே
வைத்துப்போட்டு குதிரை சுவார்களையும் யிங்கிரேசுக்காறர்
களும் மயே சிப்பாயிகளும் பம்பாய்கள் வகைபறா அவர்கள்
தாலூக்குகளும் மமுதல்லிகான் தாலூக்கும் துப்பாக்கி சிப்பாயி
கள் சேவகர் வகையறாவும் ஒருமிச்சு நம்முட பவுன்சு சொன்னு
வுரைவிட்டு மளிகைமேட்டிலே எறங்கினவர்களும் யேகத்துக்கு
வந்து நேத்து 20 ௳ சனிக்கிழமை 15 நாழிகைக்கு துவக்கின
வர்கள் சாயங்காலம் ஆறு மணிமட்டுக்கும் சண்டைபண்ணினார்க
ளென்றும் யிதிலே ஒரு ஒபிசியாலுக்கு காயம் அஞ்சாறு வெள்
ளைக்காறருக்கும் சிப்பாயிகளுக்கும் காயம் ரெண்டு வெள்ளைக்
காறர்களுக்கும் நாலஞ்சு மயே சிப்பாயிகளுக்கும் சாவு யென்று
அவர்களிலே நூத்தியன்பது பேர்மட்டுக்கும் சாவு யென்றும்
காயக்காறர் மிதமில்லை யென்றும் நூறு நூத்தன்பது குதிரை
கள் படுகளையாய் விழுந்துபோச்சுதென்றும் சிறிது குதிரைகள்
காயமுண்டென்றும் ஒரு பீறங்கி வாய் பேந்துபோச்சென்றும்
அப்புறம் சிக்காயி பிக்கியாய் ஓடிபோய்விட்டார்களென்று யிது
முதலான சேதி வந்து சொன்னான். அந்தக் கபுறைக் கேட்டுக்

கொண்டு அவனையும் அழைத்துக்கொண்டு துரை வீட்டுக்கு வந்து துரையுடனே மேலெழுதப்பட்ட சேதியைப் பராவாருய் விஸ்தரிச்சு சொன்னதுக்கு.

1750 ஹூ ஆகொஸ்து மீ 3 உ பிறமோதூத ஹூ ஆடி மீ 22 உ சோமவாரம்.

இக்கனாள்காலத்காலே முசியே பரீரு வீட்டுக்குப் போய் சந்தாசாயபுக்கு கடன் காலாயிரம் ரூபா கேட்டு கடசி இரண்டு ஆயிரம் கேட்டதுக்கு தனக்கு மீருகுலாமுசேன் மருமகன் மீரல்லி அக்பர்சாய்புபேரிலே வரவேண்டியதை வாங்கி குடுக்கால் ரெண்டாயிரம் கொடுத்திருக்குதே மீருவெளித் தோட்டம் கொண்டது ரூபா 1500 யேகத்துக்கு 4500 ரூபாயி ஆகுதென்று சொல்லவந்தான். அதுக்கு ரபா சொன்னப்போலே குடுக்கிறவர்களல்ல யிதுக்குமதுக்கும் சாட்டப்போகாது. குடுக்கால் குடும் யில்லாவிட்டால் யில்லை யென்று சொன்னலப்புறம் அவர்களுக்கு அகப்படாமலிருக்குதா பின்னை ஒரு மாற்கம் பார்த்துக் கொள்ளுகிறார்களென்று சொன்னதுக்கு வேறே விதமாய் அகப்படாது யென்று சொன்னர். நல்லது யென்று அனுப்பிவிச்சுக் கொண்டு பிறப்படச்சே முசியே மீரு முசியே போலேயவும் அங்கே வந்தார்கள். அவர்களையுமனுப்பிவிச்சுக்கொண்டு துரையவர்கள் வீட்டுக்கு வந்தேன் அவரென்ன சேதி யென்று கேட்டார். எல்லாம் நல்ல சேதி யென்று சொன்னேன் திருவிதிச் சேதி யேதாகிலும் வந்துதாவென்று கேட்டார் நேத்து ராத்திரி யேழு மணிக்கு யென் சேவுகன் வந்து கோப்பு பயணமாய் தேவனம்பட்டணத்துக்குப் போருனென்று சொன்னதும் மமுதல்லிகான் லசுக்கர் கூச்சாய் மேற்கு முகமாய் செஞ்சிக்குப் போறதாய்க் காணுதென்று யிப்படியாய்ச் சொல்லிக்கொள்ளுகிறார்களென்று வந்து சொன்ன பேச்சு மெய்யாக காணவில்லை கோப்பு தன் பாளையத்தைப் பேத்து திருவிதிக் கோட்டைக்கு மேல்புரமாய்ப் போட்டானென்றும் மமுதல்லிக்கான் லசுக்கர் சிறுவத்தூர் மான்தேப்பு நாகலதேப்பு கடிலத்து ஓரமாயிறங்கி யிருக்கிறதாகவும் அதில் சிறிது பவுன்சு பண்ணுருட்டி பேத்து ரெட்டிச்சாவடி அண்ணாவய்யங்கார் வீடு துவசி வந்து சிறிது குதிரைகள் சமையாகுதென்று யெழுதிவந்ததென்று சொன்னேன். கூடலூர் சேதி யென்னவென்று கேட்டார். முந்தாம்

நாள் பண்ண சண்டையிலே யினிமேல் புவுன்சு நிற்கமாட்டாது யென்றும் கோப்பும் மதில்மேல் பூனையாயிருக்கிறனென்றும் அவர்கள் செயமானால் தானும் படகிலே பாதி பாக்கு போட்டேனென்றும் வடக்குப் படிச்ச கதையாய் அவர்கள் கெலிச்சால் தான் சகாயமிருந்து கெலிக்கப்பண்ணினேனென்று திருவிதி சீமையுங் கோட்டையும் கட்டிக்கொள்ளுவோமென்றும் அபசெயமானால் தான் மத்தியஸ்தமாயிருந்து பாத்துக்கொண்டு யிருந்ததாய் சொல்லியிருக்கிறதாய் சொன்னார்கள் யென்று சொன்னேன். இதல்லாமல் நம்முடவர்கள் மாளிகை மேட்டிலே சிறிது பேர்கள் திருவிதியைப் போய்ச் சேர்ந்தார்களென்றும் சிறிது பேர் திருவிதி பட்டணம் போய்ச் சேர்ந்தார்களென்றும் நம்முடவர்கள் பேந்து வந்ததை மமுதல்லிகான் லசுக்கரிலேயிருந்து சிறிது குதிரை சுவார்களும் துப்பாக்கி பிடிச்ச சிப்பாயிகளும் வந்து பெத்துரெட்டி மண்டபம் வந்து சேர்ந்தார்களென்றும் கபுறு வந்தது. நம்முடவர்களும் எச்சரிக்கையாயிருக்கிறார்களென்று நேத்து ராத்திரி பத்து நாழிகைக்கு யெழுதின காகிதம் வந்ததென்று சொன்னேன்.

தேவனாம்பட்டணம் கோபுதாரன் வந்தவனை கேட்டது நீங்கள் வந்தவர்கள் எங்கள் காம்பிறாவிலே கூட வந்து பேசுகிறீர்கள் எங்கள் சொபுதாறர் வந்தால் நீங்கள் அவன் சண்டை நாளிலே வந்தபோது நடத்துகிறது மரியாதையா யிப்போ சமாதானமாயிருக்கச்சே கூட நடத்துர சாவட யெனக்குத் தெரிஞ்சதில்லை யென்று கேட்டார். அதுக்கு மெஸ்தர் லாரென்சு புதுசாய் வந்தவனானபடியினாலே அப்படி நடத்தினான் நான் போய் நீங்கள் சொன்னதாய் சொல்லி யினிமேல் மரியாதை புடனே நடத்தச்சொல்லுகிறேன் யென்று சொன்னதும் அல்லாமல் இப்போது துரைத்தனம் மாறினவர்கள் பெகு பணம் செலவு யெழுதிப்போட்டு யெடுத்துக்கொண்டதாய் யிங்கே யிருந்து குவற்ணதோர் முதலானபேரில் கோடம்பண்ணி பரதாப்பு பண்ணிப் போட்டதாய்ச் சொல்லுகிறார்களென்று சொன்னான். பிறகாலே காகிதம் அனுப்புகிறேன் நீ போவென்று துரை போகச்சொன்னார். சொபுதாரர்கள் அனுப்பிவிச்சுக்கொண்டு போனார்கள் 2000 ரூபாயிக்கு செம்மாமழைப்பிக்கச்சொல்லி முசியே யெடுத்ல்மி பேரிலே ஒடுதினைசுபண்ணி என் கையில்

கொடுத்து சீக்கிரமத்துக்குப் பணத்தை வாங்கிக்கொண்டு செம்மரம் அழைப்பிக்கச்சொன்னார்.

ஆறு மணிக்கு சயிதுமத்தேன் வந்தான். நான் போயி சந்தாசாயபு அண்டைக்குச் சயிதுமத்தேன் வந்திருக்கிற காரியம் பேசப்போயிருந்து பதினொரு மணி அடித்தபிற்பாடு வீட்டுக்கு வந்தேன்.

**1750 ௵ ஆகொஸ்து ௴ 4 உ பிறமோதூத ௵ ஆடி ௴ 23 உ செவ்வாய்க்கிழமை.**

இத்தனாள்காலத்தாலே ஆறரை மணிக்குப் பிறப்பட்டு முசியே பெடுதல்மி வீட்டுக்குப் போய் நேத்து துரையவர்கள் செம்மரம் சம்மதி குடுத்த இருபதினாயிரம் ரூபா ஓடுதினாசை முசியே பெடுந்தல் மிகைப்பிலே குடுத்துப்போட்டேன். அதைப் படித்துப் பார்த்து ரசீது எழுதிக் கொடும் கோட்டைக்குப் போய் ரூபாய் அனுப்புகிறேன் என்று சொன்னபடிக்கு அந்த ஓடுதினாசு பின்பக்கத்திலே ரசீது யெழுதிக்கொடுத்து மன்னாரு நாயக்கன் குமாரன் வரதப்பநாயக்கனை அவரண்டை குடுத்து வரதப்பநாயக்கனுக்கும் இருபதினாயிரம் ரூபாயும் வாங்கி வீட்டிலே சிதம்பரமுதலியார் கையில் ஒப்பிவிக்கச்சொல்லி சொல்லிப்போட்டு நான் பாக்குக் கிடங்கிலே வந்தேன். துரையவர்கள் சேவகன் வந்து அழைக்கப் போனவிடத்திலே துரையவர்கள் நேத்து ராத்திரி பனிரெண்டு மணிக்கு திருவீதியிலிருந்து வந்த காகிதச் சேதி யென்னவென்று கேட்டார். நம்முட பவுன்சு திருவிதி கோட்டைமுதல் திருவிதி கிராமம் முதலா யிறங்கி யிருக்கிறார்கள் பண்ருட்டியிலே மமூதல்லிகான் லசுக்கரிலே சிறிது சுவார்கள் அங்கே யிருந்துக்கொண்டு கும்பல் காட்டிக் கொண்டு யிருந்தவர்களை நம்முட பவுன்கிலும் சேக்கசேன் முதலாய் சிறிது சுவார்களும் சிப்பாயிகளும் பிறப்பட்டு பண்ருட்டியின்பேரிலே நடந்தமாத்திரத்தில் அவர்கள் ஓடிப்போய் விட்டார்கள். நம்முட திறகோம் (Dragoon) சுவார்களி லொருத்தன் குதிரை போட்டு திருப்பிக்கொண்டிருந்தானாம் அவனை அவர்கள் சுவார்களில் துப்பாக்கி சுட இவன் காலிலே குண்டு பட்டுதாம். மத்த சமாசாரமெல்லாம் நேத்து ராத்திரி யெழுதிவந்த சேதி சொன்னேனே அது தவிர வேறே யில்லை. மூன்றாம்நாள் ஆதிவாரமும் சண்டையில்லை. நேத்து சோமவார

ரும் சண்டையில்லை யென்று சொன்னேன். மத்தபடி ஆற்காட்டிலேயிருந்து யேதாகிலும் சேதி வந்துதாவென்று கேட்டார். வேறே வரயில்லை யென்று சொன்னேன் மூன்றாம்நாள் பகலுக்கு மேலாக ஆனைகள்பேரிலே மருந்து குண்டுகள் வகையறா நஸ்துக்கள் கூட திருவிதிக்குக் கொண்டுபோனதை ஒப்பிச்சுப்போட்டு தானுமாமும் மூசியே வென்சாமும் (M. Vincen's) ஆனைகளும் கூட யித்தனுள் காலமே வந்து சேர்ந்தார்கள் யென்று சொன்னேன். மேத்து ராத்திரி சந்தாசாயபு அண்டைக்குப் போனவிடத்திலே யென்ன நடந்தது யென்று கேட்டார். அப்துல் நபிகானும் இம்மத்துபாதுர்கானும் அனுப்பின சயிதுமத்தென் னென்கிறவனும் சந்தாசாயபு ஷெ குமாரன் ரசாசாயபும் மூசபர்சந்து வீட்டுக்காரப்பாரி ஆசிபாசிவிவர்களிருந்தார்கள் நானும் ரமணியை அழைத்துக்கொண்டு போனவிடத்திலே சொன்ன சேதிகளும் நடந்த பூறுவோத்திரமும் அதுக்கு நான் சொன்ன உத்தரமும் சுருக்கத்திலே சொல்லுகிறேனென்று சொன்னதாவது. சயிதுமத்தேன் சொன்னது முன் அப்துல்நபிகான் இம்மத்துபாதுர்கான் சானேசிங்பாளக்கர் ராசாசந்திரசேனன் துகான் ராசாராமச்சந்திரராயன் சாவனூர் பங்காபுரம் சுபேதாரன் தம்பி அப்துல்வசீர்கான் வகையறா நாங்களனைவரும் யேகத்துக்கு கூடியிருக்கச்சே அதிலே எங்கள் பட்டாணிகள் வருப்புமாத்திரமிருக்கிற சுவார்களையும் நாசறுசங்கு அழைப்பிச்ச மழுதல்லிகான் பிறகே தயினத்துப் போகச்சொல்லி சொன்னதுக்கு நாங்கள் கூடாதென்று அப்பாலுங்களுக்கு வர்த்தமானத்தைச் சொல்லி அனுப்பினது நாங்கள் மகம்மதல்லிகான் தயினத்துக்கு ஒப்பி நாங்கள் கூட வாறோம் உங்கள் பவுன்சு வந்தால் அவன் யெங்கள் டேருவுக்கு ஆலோசனை பண்ண வருவான் அப்போ அவனைச் சரிக்கட்டிப்போட்டு நாங்கள் நடக்கிறோம் நீங்களெங்களை தொரத்திவாறப் பாவனையாயி பிறாலே வந்தால் செவ்வையாய் ஆற்காட்டே போய் நாசறுசங்கை கைப்பிடியாய்ப் பிடிக்குறதானாலும் அல்லது அதுக்குக் கூடாமல்போனால் அவனை சரிக்கட்டியாகிலும் போடுகிறோமென்று சொல்லி அனுப்பினதுக்கு நீங்களப்படியானால் மூசபர்சங்குக்கு மோசம் வரும் எங்கள் பவுன்சு யிங்கே மழுதல்லிகானைச் சரிக்கட்டுவார்கள் நீங்களங்கே நாசறுசங்கு காரியத்தைப் பாருங்கள் யென்று சொல்லியனுப்பினீர்கள். அதுக்கும் நல்ல

தென்று ஒப்பினேனும் யிப்பவும் மறுதல்லிகானே சரிக்கட்டச் சொல்லி அனுப்பினுல் யிவ்விடத்துக் காரியமெப்படியுண்டோ அப்படி நாங்கள் பார்க்கிறோம் என்றதுமல்லாமல் பின்னே யெந்த விதம் நீங்கள் சொல்லியனுப்பினுலும் உங்களுடைய பேச்சுக்கு கேச்சுயில்லே. எங்களை உங்கள் சரீரமெப்படியோ அப்படி யென்றுகிறதே அல்லாமல் பேதகமாய் எண்ணத் தேவையில்லே யென்று பின்னேயும் சொல்லத்தக்க உபசாரமாய் சொல்லி இம்மத்துபாதுர்கான் உங்கள் உருகள் பேருக்கு ஒரு காகிதமும் அப்துல்நபிகான் ஒரு காகிதமும் யெழுதினுர்கள். அந்தக் காகிதத்திலே உபசாரமும் மத்தச் சமாச்சாரமெல்லாம் சயிதுமத்தென் (Sayid-Mada uddinkhan) சொல்லத் தெரியவருமென்று யெழுதியிருக்குமென்றும் சொல்லி அந்தக் காகிதமும் கொடுத்தார்களென்று சொன்னேன். அவ்வடத்துக் காரியமவர்கள் நாசறுசங்கை சரிக்கட்டினுல் மறுதல்லிகான் தன்னிச்சையாய் ஓடிப்போனுன் யென்று சொன்னுர். அதுக்கு இந்த ஆலோசனேயெல்லாம் சொன்னதுக்கு சடசி அவர்கள் நம்முட பவுன்சு வந்துதானுல் அந்த நிபத்தைப் போட்டு தாங்கள் நாசறுசங்குவை சரிகட்டலாமேயல்லாமல் மத்தப்படி தாங்களாய் நடத்தக்கூடாது யென்று சொல்லவந்தாரென்று சொன்னேன். நல்லது போவென்று அசுவாரிசயமாய்ச் சொன்னுர். அப்பால் அப்துல்நபிகான் காகிதமும் இம்மத்துபாதுர்கான் காகிதமும் படிச்சு சொன்னேம் அதிலே உபசாரமும் மத்த சமாச்சாரமும் சயிதுமத்தேன் சொல்லத் தெரியவருமென்று யெழுதியிருந்தது. நல்லது சந்தாசாயபையும் சயிதுமத்தேனேயும் சாயங்காலம் வரச் சொல்லென்று சொன்னுர். நல்லதென்று கிருஷ்ணுறுபனுடனே சொல்லி அனுப்பினேன். அப்பால் காரைக்கால் முசியே றீஷூ (M. Le Richie) காகிதமும் வந்தது. அந்தக் காகிதத்தில் தஞ்சாவூர் ருசா மானேசியப்பாவையும் பரவாடைநாயக்கனேயும் பின்னேயும் முப்பது இரண்டு பேர்களேயும் காவல் வைத்தானும் இனிமேலவனுக்கு ருசரீகம் நடவாது யென்று சொன்னுர் முன் கற்னுடகமாயிருந்தது கடசியிலே துலுக்கர் கையிலேயும் மாராட்டியர் கையிலேயும் இந்த ருச்சியம் விழச்சே கற்னுடகத்தாரிலேயுமிந்தப்படிதான் பேலஹீனமும் உள்க் கலகமும் நடந்ததுதான் கற்னுடகத்தாரிடமாயிருந்த ருச்சியமெல்லாம் துலுக்கர் மாராட்டியர் வசமாச்சுது. அந்த பேலஹீனமும் உள் ஓடசலும் துலுக்

கருக்குள்ளேயும் மருட்டியர்களுக்குள்ளேயும் கண்டிருக்குது யினி மேல் சுவாமி யிந்த ராச்சியத்தை யார்வசம் பணணிவிக்கிறுரோ தெரியாதென்று சொன்னேன். அதுக்கு நகைச்சார் தஞ்சாவூரிலே யிப்போ ருசா காடேருவு பேச்சுக்கொண்டு யித்தனையும் நடத்தி னுனென்று சொன்னுர். இந்தக் காடேருவுதான் நாஞசாயபு மகனுக்குப் பெண்ணைக் குடுத்து யிருக்கிறுன். அவனுக்குப் பட்டங் கட்டிவிக்கவேணுமென்று முன் சுந்தாசாயபு தஞ்சா வூரின்பேரிலே மோகீம் போறபோது ருசவட்டம் அனுப்ப வில்லையா யிந்த காடேருவு யென்ன மோசம்பண்ண ராசாவுக்கு இந்த ஆலோசனை சொன்னுரோ தெரியாதென்று சொன்ன துக்கு அந்த சாடையை அந்தச்சினம் காரைக்கால் ரிஷிக்கு (M. Le Richie) காகிதமெழுதி அனுப்பினுர். அப்பால் சின்ன துரை வந்தவுடனே ஒலாக்தமென்ன விலே யென்று கேட்டார். நாற்பது நாலே முக்காலும் ஒன்பது வியனுலு விருகனும் ஆக நாற்பத்தெட்டாச்சுதென்று சொன்னேன். அந்த வயணங் கேட்டுக்கொண்டு காரைக்காலுக்கு காகிதமெழுதிவிக்கச்சொல்லி முசியே செம்போனுக்குச் சொல்லியனுப்பினுர்.

1750 ௵ ஆகொஸ்து ௴ 5 ௳ பிறமோதூத ௵ ஆடி ௴ 24 ௳ புதவாரம்.

இத்தனுள் காலத்தாலே பிறபுவினிடத்துக்குப் போன விடத்திலே ஆற்காட்டுச் சமாச்சாரமெழுதிவந்த சேதி சொன்ன வயணம் மமுதல்லிகான் நாசறுசங்குக்கு அறசி அனுப்பியிருந் ததில் யெழுதியிருந்த வயணம் பாகூர் கோட்டையிலெட்டாணு உடாயிச்சு ரெண்டு சண்டை குடுத்து நிறுவாகம் பண்ணினுேம் யென்று இங்கிரீசுக்காறர் ஒரு மத்தத்து பண்ணுமல் வந்தவர்கள் சும்மாயிருக்கிறுர்கள் அவர்களுக்கு குடுக்கவேண்டிய சீமை நிமித்தியம் முன்னெழுதினபடிக்கு தயவுபண்ணி யெழுதி யனுப்பவேணுமென்றும் ரஸ்த்து யில்லாமல் தடங்கலாயிருக்குது ரஸ்த்து அனுப்பச்சொல்லியும் யெழுதியனுப்பினதுக்கு நாசறு சங்கு அந்தக் காகிதத்தை சானவாசுகான் முதலான பேர்களை அழைப்பிச்சுக் காகிதத்தைக் காண்பிச்சு யிவனைப் பார் யிவ முகத்தைப் பார் இவன் சண்டைபண்ணுகிறதைப் பார். இவனை வந்து விடச்சொல்லென்று சொன்னதுக்கு மொபார்சுக்கான் யென்கிறவன் யிப்போதானே அவனை வரச்சொல்லி யெழுதப்

போகாதென்று சொன்னானும் அப்போ சானவாச்கானிருந்து கொண்டு மமுதல்லிக்கான் சொல்லுகிறதெல்லாம் பொய் யிவன்

ஆற்காட்டிலே யிருந்துவந்த சேதி சொன்ன வயணம் நாசறு சங்கு திமிரியில் மான் வேட்டையாடப் போயிருக்கிறானென்றும் அங்கே மமுதல்லிகான் யெழுதின அறசி வந்ததாகவும் அதிலே யெழுதியிருந்தது பாகூர் தோறணம் கட்டி அங்கேயிருந்த புதுச்சேரியார் டாணா உடாயிச்சுப்போட்டோமென்றும் பின்னையும் ரெண்டு சண்டைபண்ணி நிறுவாகம் பண்ணினதாய் யெழுதினதின்பேரிலே நாசறுசங்கு மமுதல்லகானைத்தொட்டு இதுவரைக்கும் ஒரு காரியமும் ஆகாமல்போனாலும் சிறிது சின்னங்களை மாத்திரம் சாக்குக்கு குடுத்தானென்று சொன்னானென்றும் அதுக்கு சானவாசுகான் சொன்னது மமுதல்லிகானைத்தொட்டு நிறுவாகமாகிற காரியமா யென்று சொன்னால் அப்போ உங்களுக்குத் தோத்தப்படயில்லை யெனக்கப்போதானே தெரியும் யிவனைத்தொட்டு ஒரு காரியமும் ஆகத்தக்கதில்லை யென்று தெரிஞ்சாலும் காரியத்தலவிலே உங்களுக்குத் தெரியும்படியாய்ச் சொல்லிப்போமென்று யிருந்தேன். யினிமேலவனங்கே யிருக்கிறதைத்தொட்டு அப்பிறதிஷ்ட்டியேயல்லாமல் கிறிகையில்லை யென்று சொன்னதுக்கு வரச்சொல்லி எழுதி அனுப்பென்று சொன்னதுக்கு மோபார்சுகான் இப்போ எழுதுகிறது அல்ல யின்னம் பார்த்துக்கொள்ளுவோம் யென்று சொன்னான் என்றும் மமுதல்லிகான் எழுதின அற்சியிலே இங்கிலீசுக்காரருக்கு சீமை பூமி தாகிரு நிமித்தியம் முன் அரசு பண்ணினபடிக்கு தயவுபண்ணாததினாலே அவர்கள் வந்தவர்கள் முகம் பாராமல் செய்யாமல் சும்மா யிருக்கிறார்கள் அதுக்கு இப்போ யாதொரு உத்திரம் தயவுபண்ணவேணுமென்றும் லசுக்கருக்கு ரஸ்து அனுப்பச்சொல்லியும் யெழுதினதுக்கு பதில் உத்தரம் ஒன்றுமில்லையென்றும் சானவாசுகானையும் காகிதாயிம் மோரோபண்டிதர் ருமதாசுபண்டிதனிவர்களை முசபர்சங்கு அண்டைக்குப் போய் காத்திரு சாமாவாயிருக்கச்சொல்லியும் அஞ்சாறு நாளையிலே சீரொருப்பா குடுக்கிறோமென்றும் சொல்லச்சொல்லியுமிப்படியாகச் சொல்லியனுப்ப யவர்களுக்கு முசபர்சங்குக்குப் போய் சொன்னார்களென்று மிப்படியாக யெழுதியிருந்த சேதியைச் சொன்னேனும் அப்பால் அக்பர்சாயபு சந்தாசாயபுக்கு யெழுதின காகிதத்தில் சந்தாசாயபு காரியம் அஞ்சாறு நாளையிலே அனு

கூலமாகுதென்று யெழுதியிருந்தது. இதல்லாமலும் துர்க்கா தாசுக்கான் செங்கல்பட்டும்பேரிலே சண்டைக்கு வந்து விழுந்து போனதுமிப்போ சபுசிக்கந்தர்கான் செங்கல்ப்பட்டு கில்லா வாங்கிக்கொள்ளுகிறதுக்கு ஆயிரங் குதிரையுடனே உழலூரண்டையிலே போயிறங்கினவன் தன் சிலவு நாற்பதினாயிரம் ரூபாயும் குடுத்துவிட்டால்தான் ஆற்காட்டுப் போய்ச் சேர்ந்து போறேன் யென்று செங்கல்பட்டு கில்லேதாரனுக்கு யெழுதினதாகவும் அதுக்கு தனக்கு அவகாசமில்லை செங்கல்ப்பட்டு கோட்டையும் புதுச்சேரி கோவறண்தோர் சந்தாசாயிபு ஆதினமாய் அவர்கள் மனுஷர் வந்து கோட்டையிலே வந்திருக்கிறார்கள் அதுவும் என்னுதினமாய் யிருக்கயில்லை யென்று எழுதினதாகவும் யெழுதியிருந்த சேதியைச் சொன்னேமிதிலே முசபர்கானும் தோஸ்து மகம்மதுவும் வந்தார்களிப்படியிருக்கச்சே திருவீதியிலிருந்து சமாச்சாரம் வந்தது. கோப்பு பயணம் போறதாய் மமுதல்லிகானைப் போய்க் கேட்டதாகவும் மூணு நாளைக்கு மாத்திரமிருக்கச்சொல்லி பிறார்த்திச்சதாகவும் சேதி வந்தது. அந்தச் சேதியும் மத்த லசுக்கர் சேதியும் நாசறுசங்கு திமிர்க் கோட்டையிலே வந்து வேட்டையாடும்பொருட்டாயிருக்கிறதும் யிப்போ றயிமுசான் (Ramzan) வந்தபடியினாலே இனிமேல் ஆற்காடு போய்ச்சேருவான் யென்றும் யிதுமுதலான சேதி பேசி யிருந்தார்கள்.

இத்தனாள் பகலைக்கு மேலாக மூணு மணிக்கு அழைச்சனுப்பிவிச்சு திருவீதியிலிருந்து சேதி வந்துதாவென்று கேட்டார். அப்போதான் ரெண்டு பேர் சேவுகர் திருவீதியிலிருந்து றங்கோபண்டிதர் சீட்டுக் கொண்டுவந்து குடுத்து சேதி சொன்னதென்னவென்றால் நேத்து ராத்திரி மூணு மணி வேளைக்கு இறநூத்தன்பது வெள்ளைக்காறர்களும் ஒரு தலைவனும் பிறப்பட்டு மமுதல்லிக்கான் தண்டிலே போறதுக்கு மத்தியே இங்கிரேசுக்காறர் பவுன்சு யிறங்கியிருக்கிறபடியினாலே அதைச் சுத்திக் கொண்டு மமுதல்லிக்கான் லசுக்கருக்குப் போய் அகாடியிலே விழுந்து மூணு தரம் துப்பாக்கி தீர்ந்ைபோட்டு வந்தார்கள். அதின்பேரிலே அவர்கள் தண்டிலே யிருக்கப்பட்டவர்கள்தானே இவர்கள் வந்துவிட்டது தெரியாமல் அவர்களொருத்தருக்கொருத்தர் பரஸ்பரம் சண்டைபட்டுக்கொண்டார்கள். முன்னிவர்கள் போய் விழுந்து சுட்டதும் அதிலே செத்துப்போன

வர்களும் காயம்பட்டவர்களும் யிவ்வளவு பென்று தெரியாது. அப்பாலிவர்கள்தானே பரஸ்பரம் சண்டைபட்டதில் பெவ்வளவு சேதமோ தெரியாது பென்றும் நம்முடை வெள்ளைக்காறர் போய் வந்தவர்களில் ஒருவர் ஒபிசியாலுக்கு கையில் காயமும் ரெண்டு வெள்ளைக்காறருக்கு அம்பு காயமும் யிது மெத்த அசிகாயமென்றும் இந்த வெள்ளைக்காறர் போனதும் வந்ததும் சேக்கசேன் முதலான துலுக்கர்கள்கூட அறிவார்கள் பென்று யெழுதியிருந்தது. அந்தச் சேதியை துரையவர்களுடனே சொன்னதுக்கு மெய்யா பென்று கேட்டார். அவ்விடத்து அமுல்தாரன் சீட்டு பாத்தியுஸ்தாய் யெழுதினனே பென்று சொன்னேன். அப்பால் துரையவர்கள் தேவனும்பட்டணம் மேல்தர் லேரென்சு மேசருயிருந்தவன் யிப்போ மேஸ்தர் சந்தாசு வருகிறபரியந்தரம் துரைத்தனம் பண்ணுகிறானே அவனுக்கும் நாகப்பட்டணத்துக் கோன்சேலுக்கும் காகிதமெழுதிக்கொண்டிருந்தபடியினாலே வெளியே சுவாரி போகாமல் வீட்டிலே தானே யிருந்தார். அப்பால் காயிதமெழுதி யிப்புறம் வந்தவுடனே யென்னைப் பார்த்துச் சொன்னது ஒலாந்தாக்காறர் மச்சிலிபந்தரிலே அவர்கள் கொடியை யிறக்கிப்போட்டதுக்கு நாகப்பட்டணத்துக் கோன்சேல்று யெழுதினது எங்களுக்கும் பாதுசாவுக்கும் குடுத்த யிடம் அவருத்தாரப்படிக்கு நாங்கள் கொடி போட்டுக்கொண்டது. அப்படியிருக்க நீங்கள் கொடி யிறக்கிப் போடச்சொல்லுகிறது ஞாயமில்லை பென்றெழுதினார்கள் அதுக்கு நாம் பதிலெழுதினது முன் பாதுஷா பந்தருயிருக்கச்சே சரி யிப்போ நாங்கள் மச்சிலிபந்தர் கட்டிக்கொண்டபடியினாலே நம்முடவர்கள் திட்ட ரெண்டு கொடி பறக்காதே ஆனபடியினாலே உங்கள் கொடியை வாங்கிப் போடச்சொன்னேன். யிப்பவும் பிறன்சு ருசாவினுடைய உத்தாரம் அழைப்பிச்சுக் கொடுத்தால் மகாருசருய்க் கொடி போட்டுக்கொள்ளலாம் மத்தப்படி போடக்கூடாதென்று பதிலுத்தாரம் யெழுதினேனென்று சொன்னார். அது ஞாயந்தானென்று சொன்னேன். அப்பால் சொன்னது இங்கிலீசுக்காறர்களுக்கு.

**1750 ஞு ஆகொஸ்து மீ 6 உ பிறமோதூத ஞு ஆடி மீ 25 உ வியாழக்கிழமை.**

லசுக்கருக்கு யெழுதி அல்லிக்கானையும் அவன் தம்பியையும் காவல்பண்ணச்சொல்லி அனுப்பினரே இத்தனாள் சாவடி கணக்

கப்பிள்ளே நயினர் சேருவைக்காறன் கும்பினீர் சேருவைக் காறன் சாந்தப்பன் முசபர்கான் மனுஷர் பிறமணருத்தன் காரியக்காறனருத்தன் பேரய் வெளியிலேயிருந்து வந்த தினிசுகளும் வீட்டுக்குள்ளே யிருந்த தினிசுகளும் பயர்வாறு யெழுதி யெழுதிவந்ததை தொக்காய் அந்த பக்கத்திலே யெழுதியிருக்கிறபடிக்கு நானெழுதினேன். ஆனல் முசபர்கான் சொன்னது பணங்காசு சமஸ்தமும் யெடுத்துப்போனர்களென்று சொன்னது அபத்தம் யெடுத்துப்போனது ஆனே குதிரை 7 துப்பாக்கி 13 உடுபிடவை சிப்பம் 5 யிது தவிர மத்தமெதல்லாம் வீட்டிலே போட்டு பத்திரமாய்ப் பெட்டியிலே வைத்துப் பூட்டியிருந்தது வெண்கலம் விளக்கு சைக்காலிச்சாசமுக்காளம் வகையறு ஒரு வீட்டுக்குள்ளே போட்டு சாத்தியிருந்துதென்று சாவடி கணக்கு அழகப்பமுதலியார் ஊர் கணக்கு சியாலம் தம்பி நடறுபன் கும்பினீர் சேருவைக்காறன் சாந்தப்பன் நயினர் சேருவைக்காற கோவிந்தப்பன் இவர்கள். வந்து யென்னுடனே சொன்னதுக்கு நீங்கள் துரையுடனே சொன்னீர்களாவென்று கேட்டதுக்கு நாங்கள் கபுறு சொல்லச்சே அவர் கோபிச்சுக் கொண்டு போனர். அப்பால் நாங்களென்னத்தை சொல்லப் போரோம் செவ்வையாய்ப் பிறப்பட்டு வந்துவிட்டோமென்று சொன்னர்கள்.

அல்லிகான் வீட்டிலே சோதிச்சு சாவடி அழகப்ப முதலியார் ஊர் கணக்கு நடறுபப்பிள்ளே கும்பினீர் சேருவைக்காற சாந்தப்பன் பாளேயக்காற சேருவைக்காற கோவிந்தப்பன் போய்ப் பார்த்து யெழுதிக்கொண்டுவந்த டாப்புகை முசபர்கான் மனுஷரும் கூட விருந்து யெழுதிக்கொண்டார்கள்.

துப்பாக்கி 23 கத்தி 21 பிஸ்தோல் 2 பிடவை சிப்பம் 37-க்கு பழசு புது உருப்படி 30 நகை உள்பட 560 றொக்கம் ரூபா 3048.

| | |
|---|---|
| றொக்கம் பூ புதுச்சேரி விறாகன் | 125 |
| தங்கக் காசு | 1 |
| பல்லக்கு | 2 |
| குதிரை | 8 |
| பொன் கங்கணம் சோடு | 2 |
| வெள்ளி சலங்கை சோடு | 3 |

| | |
|---|---|
| பசுவு எருமை | 8 |
| பொன் கடகம் | 2 |
| வெள்ளிக் கங்கணம் காப்பு உருப்படி | 10 |
| ருவுரேக்கு கை கல்விழைச்சது சோடு | 3 |
| வெள்ளிப் பன்னீர் சொம்பு | 1 |

சேத்து ருத்திரி பதினெரு நாழிகைக்கு முசபர்கான் துரையவர்களண்டைக்குப் போய் அல்லிக்கானும் அவன் தம்பியும் மமுதல்லிகானண்டைக்கு ஆளனுப்பி அங்கே சேவுகம் அமர்ந்து அறுநூறு சிப்பாயிகளையும் பிறநூறு சுவார்களையும் அழைத்து வாறேமென்றும் தனக்கும் தன் தம்பிக்கும் பேருக்கு அன்னூறு ரூபா சம்பளமும் மொகாறுபண்ணிக்கொண்டு யிங்கேயிருந்த தட்டுமுட்டு பணம் காசு ஆனை குதிரை பிடவை எருது மாடு பசு எருமை சமஸ்தமும் யித்தனுள் ருத்திரி சிப்பாயிகளும் சிறிது யெருதின்பேரிலே அரிசி சாமான் போச்சுதே அந்த சந்தடியின் பிறகே யிவர்கள் போனர்களென்று கபுறு வந்தது. அதின்பேரிலே குண்டுசாலையிலே யிருக்கிற சிப்பாயிகளுக்குச் சொல்லி ஆனை குதிரை சாமான் யெல்லாம் திருப்பி வந்து குண்டுக்குள்ளே வந்து சேர்ந்தது. அவனுக்கு ஆப்பித்தமாயிருக்கிற சிப்பாயி வெள்ளைக்கையன் வந்தான் வந்து இந்த சானசாமெல்லாம் பண்ணி அனுப்பினவனும் மமுதல்லிகானண்டைக்குப் போய் வந்தவனும் அவனை அரியாங்குப்பத்தின் வழியிலே பிடிச்சு வந்தார்களென்று சொன்னதின்பேரிலே அந்தச்சினம் முசியே லத்துசு.

1750 ஸு ஆகொஸ்து மீ 7 உ பிறமோதூத ஸு ஆடி மீ 26 உ சுக்குறவாரம்

இத்தனுள் காலத்தாலே அல்லிக்கானைப் பிடிச்சு வந்து கோட்டையிலே கஷோத்திலே போட்டார்கள். அப்பாலவனை அழைச்சு துரையவர்கள் மமுதல்லிகான் அண்டைக்குப் போறதுக்கு யோசனை பண்ணிவைக்கயில்லையா யென்று கேழ்க்க அவன் முசபர்கான் அபாண்டம் போடுகிறுனென்று சொல்ல அப்பால் அவனண்டையிலே யிருந்த வெள்ளைக்கையனை சாக்ஷி விட்டு மறுபடி கொண்டுபோயி கோட்டையிலே கஷோத்திலே போட்டார்கள்.

வெள்ளைக்கையன் சிப்பாயை நேத்து சாவடியிலே வைத்திருந்தவனை யிந்தச் சேதி மோக்காவாளாய்ச் சொன்ன பிற்பாடு கபினூர் வீட்டிலே வைத்து சாப்பாட்டுக்கு விசாரிக்கச்சொல்ல அவனின்ன மொருத்தன் சேக்ருயிமாமென்று சிப்பாயிருக்கிறான் அவனும் யென்னுடனே மமுதல்லிகான் வைக்கிலுக்குப் போய் வந்தவன் லசுக்கரிலே யிருக்கிறானென்றும் சொன்னான். ஆற்காட்டு சேதி நாசருசங்கு பிள்ளை சோமவாரம் நாள் பிறந்ததென்றும் திமிரிக்குப் போய் வாறானென்றும் முசபர்கான் மனுஷன் இறச்சந்துலாலா யென்கிறவன் சயிதுசாயபுவண்டைக்கு வந்து யேழாயிரம் சிப்பாயிகளுடனே நாசருசங்கு கோலுவுக்கு வாறோமென்று காகிதமெழுதினதாகவும் அந்தப்படிக்கு நாசருசங்குவண்டைக்குப் போய் கோலுவுக்கு பர்வானா வாங்கி அனுப்புகிறோமென்றும் சொல்லிவைத்திருக்கிறதாய் யிப்படி முசபர்கான் யித்துலாபண்ணுகிறான் யென்று சயறுமபண்டிதன் சொன்னான் யென்று யெழுதியிருந்தது. மமுதல்லிகான் முன் 20 உ சனிவாரம் நல்ல உத்தம தினமென்றும் சத்துருக்கள் பயந்து வோடினார்களென்று அறசி யெழுதினானென்று யிது முதலான சேதி யெழுதியிருந்ததை துரையுடனே சொன்னேன். பகலைக்கு மேலாக யிருபது நாழிகைக்கு அய்லத்துக்கான் பட்டாணி என்னுட சாறணி சுவார் வந்து சந்தாசாயபுடனே நேத்து சாயங்காலம் நம்முடவர்கள் மமுதல்லிகான் லசுக்கரிலே விழுந்து சண்டைபண்ணக் கூடாரம் போட்டாப்போல குதிரைகள் கட்டினாப்போலே போட்டுப் போட்டு ஓடிப்போனாப்போலேயும் நம்முடையவர்களும் கொள்ளையிட்டு வந்ததாய் சொன்னதாகவும் அதின்பேரிலே ஒரு பாகைக்கட்டி திருமலைராயனைக் கூட்டி அந்தச்சினம் துரையண்டைக்கு அனுப்ப அவருடனே சொல்லிக்கொண்டிருக்கச்சே முசியே லத்துசு—னாளது தேதி காலத்தாலே எழுதின காகிதம் வந்ததில் யில்லாத்தினாலே அவனை கோபிச்சுக்கொண்டு போகச்சொல்லி என்னை அழைச்சனுப்பிவிச்சு நடந்த சேதியைச் சொன்னதுக்கு யினிமேல் நடக்கப்போறதுக்கு யேஷியமென்று சொன்னேன். அஞ்சு மணிக்கு கோட்டையிலேயிருந்து அழைச்சனுப்பி முசியே செம் போல் (St Paul) முசியே கொறனே யிருக்கச்சே யிறுநூத்தன்பது மாற்கு சரிகை நூல் வந்திருக்குது. யிதில்லாமல் அஞ்சு வறத்தகர் நூதனமாய் சகலாத்து மாதிரி கொடுத்தார்

கள். அதை நானே பாத்து திட்டமாய்ச் சொல்லச்சொல்லிச் சரிகை நூலை யெடுத்துக்கொள்ளச்சொல் அப்படி தானே வறத் ருக்குச் சொல்லுகிறேன் என்று சொல்லிப்போட்டு அப்பால் முசியே கொற்னேயை பகலைக்கு மேலாக குடிச்சுக்கொண் டிருக்கிறதைத்தொட்டு யிப்போ சொன்ன பேச்சு மறந்து பேசு றுன் என்று கோபமாய்ச் சொன்னதுமல்லாமல் முசியே தும்மா யெப்போதும் பகலைக்கு மேலாக குடிச்சுக்கொண்டு யிருப்பா னென்று முசியே செம்போலுடனே சொன்னார். அப்போ நானுங் கூட யிருந்தபடியினாலே அதையுங் கேட்டுக்கொண் டிருந்து பிறப்பட்டு பாக்கு கிடங்கியே வந்தேன்.

அப்பால் இதாயித்து மொகதீன்கானுட காகிதம் துரை யவர்களுக்கு வந்தது அதிலெழுதியிருந்த வபணம் நான் துக்க சாகரத்திலே அழுந்தியிருக்கிறேன் ஆனபடியினாலே என் அக்கி கத்தெல்லாம் ஒரு அறசி யெழுதி நாசறுசங்குக்கு குடுத்தேன். அதைப் பாத்துக்கொண்டு அதின்கீழே சிறிது காரியத்தை உமக்கு சீரொப்பா குடுத்து விடுதலை பண்ணுமலிருக்கிறேன் யென்று தசுகத்துப் பண்ணினார் இப்பவும் அவரென்னிடத்தில் பக்ஷமாயிருக்கிறார். அதுக்கு எங்கள் தாயார் வந்தாலவருக்குப் பின்னையும் முலாயிசா ரொம்ப யிருக்கும் அவர்கள் வந்த உத்த ரக்ஷணம் எனக்கு விடுதலையாயி சீரொப்பாவும் அல்லவென்று நீங்களெங்கள் தாயாரை அனுப்புகிறதுக்கு அட்டி பண்ணினால் யென் காரியம் ஆலசியமாயி நின்றுபோம். அதைத்தொட்டு உங்களுக்கு வருகிற ஆதாயத்தை யென்னவென்றும் நீங்கள் பெகம்சாயபை அனுப்புகிறோம். யென்று யெழுதினால் நான் சானவாசுகானுடனே சொல்லி என் காரியம் அனுகூலம்பண்ணிக் கொண்டு அவர்களை அழைத்து வாறதுக்கு மனுஷர்களையும் அனுப்புகிறோமென்றும் யிதைத்தானே ரெட்டிச்சு ரெட்டிச்சு யெழுதியிருந்தது. அந்தச் சேதியையும் சொன்னேன். அப்பால் பெகம்சாயபுக்கு எழுதின காகிதத்தில் யிவ்விடத்திலென் காரியம் அனுகூலமாயிருக்குது நீங்கள் வாறுத அட்டியைத்தொட்டு தாமசமேயல்லாமல் மத்தப்படி தாமசமில்லை. யெந்தவிதமா கிலும் தெரியப்படச் சொல்லிக்கொண்டு நீங்கள் பிறப்பட்டு வறவும் யென்று யெழுதியிருந்தது. ஆசிபாசிலுக்கு கொவற்ன தோர்சாயபுக்கு தெரியப்படச்சொல்லி பெகம்சாயபு யிருக்கிற தைத்தொட்டு அல்லோ யிந்தமட்டுக்கும் அவனுக்கும் யிருக்க

வேண்டியதாச்சுதுயில்லாவிட்டால் முசபர்சங்கு அப்போ அகப் பட்டமட்டுக்கும் அரை நாழிகை நில்லானே யிவர்களைக் கூட தன்னைக் கூட கொண்டுபோய் விடுகிறதுமல்லாமல் அப்பால் தனக்கு விமோசனம் உண்டாயிருக்குமாவென்று சொன்னதுக்கு யிதுவுமல்லாமல் காவலிலே யிருக்கிறபடியினாலேயும் சிறு பிள்ளை யானபடியினாலேயும் யிக்கட்டு மொருநாளையும் அறியாதவனான படியினாலேயும் புத்தி சவிச்சுப்போச்சுதென்று சொல்லி பதி லுத்தாரம் யெழுதச்சொன்னது.

1750 ௵ ஆகொஸ்து ௴ 9 உ பிறமோதூத ௵ ஆடி ௴ 28 உ ஆதிவாரம்.

இத்தனாள் காலத்தாலே திருவிதியிலிருந்து வந்த கபுரு நம்முடவர்கள் சேக்கசேன் வகையறா சிப்பாயிகளும் சிறிது பேர்கள் வெள்ளைக்காறரும் நேத்து சனிக்கிழமை ராத்திரி பதினஞ்சு நாழிகைக்கு தயாறாய் மமுதல்லிக்கான் லசுக்கரிலே போய் சண்டை பண்ணவேணுமென்று யிருந்தார்கள். நாங்களும் பிறப்பட்டு தூக்கணம்பாக்கத்துக்கப்புறம் வரச்சே பதினேழு நாழிகை பதினெட்டு நாழிகை யிருபது நாழிகை அளவிலே சண்டை அத்திக்கொண்டு துப்பாக்கிகள் வேட்டு விஸ்தாரமாயும் பிறங்கி வேட்டு விஸ்தாரமாகவும் கேழ்க்கப்பட்டுது யென்று வந்து சொன்னார்கள். யிந்தச் சேதியை துரையவர்களுக்குச் சொன்னேன். இதல்லாமல் கோவளத்திலிருக்கிற முசியே பிளாம் (Mr. Blanc) துரையவர்களுக்கெழுதின காகிதத்திலே யும் முன் 22 உ திங்கட்கிழமை இங்கிலீசுக்காறர் பூந்தமல்லியை தோறணம் வைத்து யிங்கிலீசுக் கொடியையும் போட்டார்க ளென்று கபுறு வந்துதென்று யெழுதிவந்தது. அந்தக் காகிதம் துரையவர்கள் பாத்துக்கொண்டு உடனே நம்முட அமுல் செங் கல்ப்பட்டு அவால்தாரன் வெங்கட்டறாயனுக்கு கோவளம் அமீல் கிருஷ்ணபிள்ளைக்கும் யெழுதியனுப்பச் சொன்னதும் யிங்கிலீசுக் கொடி போட்டமட்டுக்கும் அமுல்தாரரை அந்த வழி போகத் தேவையில்லை யென்றும் பூந்தமல்லி சீமையல்லாமல் மைத்த சீமையைத் தோறணம் கட்டச்சொல்லி யெழுதியனுப்பச் சொன் னார். நானும் யெழுதியனுப்பிவிச்சேன். அப்பால் திருவிதியிலே பிறங்கியிருக்கிற நம்முடைய லசுக்கரிலிருந்தும் அல்லிக்கான் கோன்சேலியிலே யிருந்தவர்களென்று நாலஞ்சு பேர்கள் சிப்பா

யிகளையும் பிடிச்சு யிருபது துப்பாக்கிக்காறர்களையும் கூடக் கூட்டி அனுப்பினார்கள். அவர்களுடனே மமுதல்லிக்கான் லசுக் கரிலிருந்து உத்தியோக ரீதியாய் ரெண்டு பேர்கள் சிப்பாயிகள் வந்தவர்களையும் கூட கூட்டியனுப்பிவைத்தார்கள் யிவர்களிரண்டு பேரையும் யென்னையும் அவர்களையும் அழைத்துப்போய் மமுதல் லிகான் லசுக்கரிலே சமாச்சாரம் கேட்டு வந்து கபுறு சொல்லச் சொல்லி மத்த அஞ்சு பேரில் நாலு பேர்களை சாவடியிலே காவல் வைத்துப் போடச்சொல்லியும் ஒருத்தனை கோட்டை யிலே கொண்டுபோய்க் காவல் வைக்கச்சொல்லியும் சொன்னார் அவர்களை அந்தப்படிக் காவல் வைக்கச்சொல்லி அனுப்பிவிச்சு சேவுகத்துக்கு வந்த ரெண்டு பேர்களையும் அழைத்துக்கொண்டு நம்முட பாக்கு கிடங்கியிலே வந்து கேழ்க்க அவர்கள் சொன்ன வாய்மொழி மமுதல்லிகான் லசுக்கரில் நாசறுசங்கு தயினாத்து அய்யாயிரம் குதிரையுண்டு மமுதல்லிகான் சுவார்கள் 4000-5000 உண்டு மேன்தர் கோப்பு பிறகே வந்திருக்கிறவர்கள் வெள்ளைக் காறர் 300 சட்டைக்காறர்கள் 200 ஆக 500 தொப்பி போட்ட வர்கள் கல் துப்பாக்கிப் பிடிச்சவர்கள் சிப்பாயிகள் 1000 காணும் யென்றும் மூன் 20 உ சனி வாரம் சண்டையாச்சுதே அந்த சண் டையிலே 150-200 பேர்மட்டுக்கும் குதிரைகள் விழுந்துபோச்சு தென்றும் சனங்களும் அந்தமட்டுக்கும் உண்டென்றும் காயக் காறர்கள் அந்தமட்டுக்கும் அதிகாயங் கூட உண்டென்றும் அதின்பிற்பாடுதான் நாசறுசங்கு தயினாத்து சுவார்களிரெண்டா யிரத்தி அன்னூறு மட்டுக்கும் 2500 ஆற்காடு போய் சேர்ந்துப் போச்சுதென்றும் மத்தக் குதிரைகளிருக்கிறது. பேருக்கு குதி ரைகளேயல்லாமல் வால் தூக்கி யெடுத்து நிறுத்தவேணும் சண் டைக்கென்று பிறப்பட்டால் நல்ல குதிரையாய் 1000 குதிரை மட்டுக்கும் பிறப்படும் மத்ததெல்லாம் அப்படித்தான். அந்த 1000 குதிரை சுவார்களும் கல் துப்பாக்கி வைத்திருக்கிற சிப்பாயிகளுமாத்திரம்தான் சண்டால் போடப்போறது யென்று சொன்னான். அப்பால் கோப்பும் வெள்ளைக்காறரும் சும்மாய் அலங்கார வித்தியாசதியாய் வந்திருக்கிறதேயல்லாமல் அவர்க ளுங்கள்பேரிலே சண்டை பண்ணுகிறதில்லை யென்று சொல்லி தீர்ந்துயிருக்கிறது அந்தப் பேச்சு யென்றும் யிதல்லாமல் கோப் புக்கு நித்தியம் 1000 விறுகன் குடுக்க உடன்படிக்கை பண்ணி அழைத்துக்கொண்டு வந்தாரென்றும் அதுக்கு மூணு நாளையக்

கட்டடையைக் குடாமல் போனதைத்தொட்டு மேஸ்தர் கோப்பு பேரிறேன் என்று பேச்சு வார்த்தை நாளாம் நாள் நடப்பிச்சா னென்றும் அதன்பேரிலே நாலாம் நாள்வரைக்கும் கணக்குப் பார்த்து அய்யாயிரம் விருகன் குடுக்கவேண்டியிருந்து குடுத்து விட்டாமென்றும் இப்படியிருக்கச்சே மூந்தாம் நாள் தேவனும் பட்டணத்திலே யிருந்து மேஸ்தர் கோப்பையும் போயிருக்கிற வெள்ளைக்காறரையும் வரச்சொல்லி யெழுதிவந்ததாகவும் அதின் பேரிலே கோப்பு போறுமென்றும் பேச்சு வார்த்தை நடப் பிச்சு அதின்பேரிலே மமுதலிகான் கோப்புக் கூடாரத்துக்கு வந்துக் கட்டாரியைக் கையிலே குடுத்து யினிமேல் நாசறுசுக்கு அண்டையிலே நானுங்கள் காகிதத்து பாவசம் பாத்ததின் பேரிலே பவுருஷமாய் திருவிதி கோட்டை வகையரு பிறுன்சுக் காறர்கள் ட்டாணு போட்டிருக்கிற இடங்களிலெல்லாம் அவர்கள் ட்டாணுவைப் போட்டு கலக்கியோட்டிவிட்டு நாசறுசக்கு ட்டாணு போட்டு வாறேனென்று பெகு பவுருஷமெல்லாம் சொல்லிவந்த நானிப்போ எது அந்த முகத்தைக் கொண்டு போகப்போறேன். அப்படி தோத்துப்போய் வந்தேன் யென்று அவர் முகத்தின் முன்னே போய் நிற்குறதுவிட இவர்களுடனே சண்டைபண்ணி சிவனைவிட்டால் கீர்த்தியுண்டு அதுக்கு நீ பிறப்பட்டுப் போறதானால் நானேடிப்போறதுக்குச் சந்தேக மில்லை அப்படி யென்னைக் காட்டிக்கொடுத்துப் போறதுக்கு உனக்கு சம்மதியாயிருந்தாலும் உன் முன்னே வைத்தக் கட்டா ரியாலென்னைக் குத்திப்போட்டுப் போவென்று சொன்னதுக்கு நாமென்ன செய்வேன் முன் துரைத்தனம் பண்ணவர்களுக்கு சீமையிலிருந்து பரதாபு யெழுதிவந்தது. அவர்களுத்தியோகம் போய் காவலிலேயிருக்கிறார்கள். இவ்விடத்துக்கு துரைத்தனம் பண்ணுகிறதுக்கு யென்று யேற்படுத்தி யெழுதிவந்தவன் விசா யப்பட்டணத்திலே யிருந்து வருகிறமட்டும் காரியம் செலா யிச்சுக்கொண்டு யிருக்கிற மேஸ்தர் லேமொன்சு மேஜர் அவ னாலே ஒரு உத்தாரமும் கொடுக்கக்கூடாது ஆனபடியினாலே உன் காரியமொன்றும் மனஸ்கரித்து செய்கிறதுக்கு கூடாமல் வந்து விழுந்தது யிதல்லாமல் யெங்கள் ருசாவுக்கும் பிறுன்சு ருசாவுக்கும் சமாதானமாயிருக்கிறபடியினாலே நாங்களவர்கள் பேரிலே கத்தி யெடுத்து சண்டைபண்ணப்போகாத யிப்படிக் காரியங்களிருந்தாலும் நான் உன் காரியத்தினிமித்தியம் வெகு

பிறயாசப்பட்டு அவர்களுக்கெல்லாம் தெரியப்படச்சொல்லி அவர்களுக்குத் தளம் பாபீக்கமாயிருக்கிறப்போலே ஒரு மாற்கம் பண்ணி வெள்ளைக்காறர்மாத்திரம் சண்டைபண்ணாமல்போனாலும் சும்மா வந்திருக்கவும் மத்தத்தெல்லாம் பண்ணி நடப்பிக்கிறோமிப்போ அதுக்குக் கூட வாண்டாமென்று யெழுதிவந்தது யென்று சொன்னதுக்கு மமுதல்லிக்கான் கண்ணீர்விட்டு அழுது அங்கித்வுரை யெடுத்து யென் மானத்தை யெப்படியும் காப்பாத்தவேணுமென்று யெங்கெந்த விதம் பஞ்சரித்து சொல்ல வேணுமோ அந்தவிதமெல்லாம் பஞ்சரித்துச் சொன்னதின் பேரிலே தேவனாம்பட்டணம் மேஸ்தர் லோரென்சுக்கு மேஸ்தர் கோபு ஒரு காகிதமும் மமுதல்லிக்கான் ஒரு காகிதமும் தெரியப்பட யெழுதிக்கொண்டார்கள் யென்றும் சொன்னதும் மல்சமெதாரர்கள் தங்கா கொஞ்சமுண்டென்றும் யிதெல்லாம் என்ன லசுக்கரிலே அரிசியில்லாமல் மூணு பொழுது இரண்டு பொழுது நிறகாரமாயிருக்கச்சே அவன் அவன் லசுக்கர் யென்னமாய் நிபாயிக்கப்போகுது விசேஷிச்ச நாள் நில்லாது யென்று சொன்னதுமல்லாமல் மமுதுகான் லசுக்கரிலே பயம் வந்து சிப்பாயிகள் சமெதார்களுக்குப் பிடிச்சயிருக்கச்சே என்னமாயி நிபாயிக்கப் போறார்கள் தண்டு கலங்கியிருக்கிறபடியினாலே முனை செய்யப் படமாட்டாது எங்கள் கைத்து முன் சபுதரல்லிகானண்டையிலே கொலுவிருந்தோம். அப்பால் அனவறதிகானண்டையிலேயும் கொலுவிருந்தோம்அதை விட்டு தஞ்சாவூர் ராசாவினிடத்திலே கொலுவிருந்தோம் ஒரு மாசமாச்சுது சேவகம் விட்டு மமுதல்லிகான் லசுக்கரிலே வந்து நமக்குமவருக்கும் பணவிக்காதெபோனபடியினாலே சந்தாசாயபு சாக்கா பண்ணுவோமென்று பெகு மனது யிருந்து யிவ்விடத்துக்கு வாரமென்று உங்கள் லசுக்கரிலே வந்து சேக்கசென் முசியெ லாசைக் கண்டு பேசி அவர்களுக்தாரம் வாங்கிக்கொண்டு யிப்போ வந்த சிப்பாயிகளின் பிறகே வந்தோம். யிங்கே சேவகம் அமரந்தால் நல்லது யில்லாவிட்டால் யெங்கே அன்னைத்தக்கம் பிரிக்குதோ அங்கே போறோமென்று சொன்னார்கள். இவர்களிரண்டு பேரிலொருத்தன் தானிந்தப் பேச்சுகளெல்லாம் பேசினான். இவனைப் பாத்தால் மெத்தப் பொல்லாதவன்போலே தோத்திச்செயல்லாமலும் மோசம் பண்ணவந்தவன்போலேயும் தோத்திச்சயிதல்லாமலுப் கிரேஸ்த மார்க்கமாய் தோத்தயில்லை. அப்பாலவர் யிருதய.

சுவாமிக்குத் தெரியுமிது முதலான சேதி நான் மதனாந்தபண்டிதன் தோஸ்து மகம்மது மூனு பேரும் கேட்டபடியினாலே அந்த சேதியாம்படியே துரையவர்களுக்குப் போய் சொன்னதுக்கு இவர்களிரண்டு பேர்களையும் முசபர்கானழைத்துப் போய் சந்தாசாயபு பேட்டி பண்ணிவிக்கச்சொல்லு யிப்படி வாறவர்களை நம்பப்போகாது யென்று சொன்னதுக்கு யிதல்லாமல் யிவர்கள் பேச்சையே யெச்சரிக்கையா யிருக்கச்சொல்லென்று சொன்னார். அவர்களி ரெண்டு பேர்களையும் தோஸ்துமகம்மது பிறகே போகச்சொன்னேன். ஒரு மணி வேளைக்கு நேத்து ராத்திரி மூனு மணி வேளைக்கு முசியே லத்தூசு லாசு வகையறா சேக்கசேன் சண்டைக்குப் போனவர்கள் யெதிராளிகள் லசுக்கரிலே பெகு சாகிறதாயி முழித்திருந்து ஆயுதபாணியாயிருந்தபடியினாலே போனதும் மூனு காலு வரிசை தீந்ததும் வந்துவிட்டார்கள். அவர்கள் தண்டெல்லாம் பட்டம்பகலிலே வெளிச்சம்போலே பண்ணிக்கொண்டு மிதல்லாத துப்பாக்கிகள் ச்சாலு பாணா பிரங்கி சுட்டார்கள் யிங்கிரேசுக்காறர்கள் அஞ்சு பிறங்கி சுட்டார்களென்றும் வந்த சேவகன் சொன்னான் றங்கோபண்டிதன் காகிதத்தில் போய் வந்தார்கள். யெதிராளிகளெல்லாம் பெகு பெலக்கவையாகி ராத்திரி பகல் பண்ணிக்கொண்டு யிருந்தார்களென்று மதினாலே போனதும் தீர்கள் தீர்ந்ததும் வந்துவிட்டார்களென்று யெழுதியிருந்தது. இந்தச் சேதியை துரையவர்களுக்கு ஒன்னரை மணிக்குப் போய்ச் சொல்லிப்போட்டு அப்பால் சாப்பாட்டுக்கு இரண்டு மணிக்கு வீட்டுக்குப் போனேன்.

**1750 ௵ ஆகொஸ்து ௴ 10 ௳ பிறமோதூத ௵ ஆடி ௴ 29 ௳ சோமவாரம்**

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் யழைச்சனுப்பிவிச்சு கோயிலுக்குப் போய் வந்தவுடனே சமாசாரமென்னவென்று கேட்டார் நேத்து சாயங்காலம் சென்னப்பட்டணத்து சின்னதுரை தேவனாம்பட்டணம் வந்து சேர்ந்தானாம் அதன் பேரிலே என்ன ஆலோசனை பண்ணினார்களோ மேஸ்தர் கோப்பை மமுதல்லிகானுக்கு ஆதரவாய் அவன் லசுக்கரோடே கூட யிருக்கச் சொல்லியும் பிறான்சுக்காறர்பேரிலே சண்டை பண்ணவேண்டாம் யென்று யெழுதி மமுதல்லிகானெழுதின

காகிதத்துக்குப் பதிலாக காகிதம் மேஸ்தர் கோப்பை யிருக்கச் சொல்லி யெழுதினேமென்றும் அவனை வைத்துக்கொண்டு உம்முடைய காரியம் நிறுவாகம் பண்ணிக்கொள்ளென்று யெழுதி பின்னையும் யெழுத்தக்க உபசாரமாய் யெழுதியனுப்பினதாய்ச் சேதி வந்ததை கேழ்க்கப்பட்டுதென்று சொன்னேன். அப்பால் சப்புசிந்தர்கான் செங்கல்ப்பட்டு விட்டு மதிரூந்தகத்தண்டையிலே வந்திறங்கி அங்கேயிருந்து வந்தவாசியின்பேரிலே பிறப்பட்டு மமுதல்லிகான் பவுன்சு சேருகிறதுக்கு பெகு தூரம் மேற்கே பிறப்பட்டு போறுமென்று கபுறு வந்தது. போற வழியெல்லாம் முன் நாசறுசங்கு லசுக்கர்வந்திறங்கிபோது நிப்பாதம்பண்ணிப் போட்டார்களே யிதின் பிற்பாடு கொஞ்சமாய் குடிபடைகள் வந்து சேர்ந்து வீடுகளுக்குப் பதிலாய்க் குச்சுப் போட்டுக்கொண்டு பயிர் பச்சைக்கு மாறகமாய் பண்ணவில்லை. யெல்லா மிவர்கள் பவுன்சு போக்குவரத்திலே மறுபடி கொள்ளை சிறை பிடிக்குறதுகள் கூட நடந்து மறுபடி திக்காலொன்றாய் ஓடிப்போய்விட்டதாயி சேதி வந்தது யென்று சொன்னதுக்கு மெய்யா யென்று யெண்ணுகிறேன் யென்று சொன்னார். விழுப்புறத்திலே யிருக்கிறவர்கள் எழுதினதென்னவென்றால் செஞ்சி பரியந்திரம் மனுஷர்களை வைத்து கபுறு விசாரிக்கிறேன் மமுதல்லிகான் லசுக்கரிலேயிருந்தும் 100-50-20-10-5 குதிரை சவார்கள் போய்க்கொண்டே யிருக்கிறார்களேயல்லாமல் ஆற்காட்டு பவுன்சு மமுதல்லிக்கான் லசுக்கருக்குப் போகக்காணோமென்றெழுதி வந்தது யென்று சொன்னேன். முசபர்கான் வந்தான் அவன் சொன்னது மமுதல்லிகான் லசுக்கரிலேயிருந்து 600 குதிரைக்காறர்கள் சம்பளம் தீத்து வாங்கிக்கொண்டு அனுப்பிவிச்சுக்கொண்டு போனதாய் சேதி வந்தது யிதல்லாமல் நாசறுசங்கு தயினாத்து குதிரைகளிலே 2000 குதிரைக்காறர்கள் வாங்கிப் போனார்களென்றும் சேதி வந்தது. அவர்கள் லசுக்கரிலே அரிசி முதலானதுகள் மனுஷருக்கும் குதிரைகளுக்கும் கொள்ளு வைக்கல் முதலானதுகளும் அகப்படுகிறதில்லை யென்று ஒரு பட்டினி ரெண்டு பட்டினி யிப்படி சனங்கள் அவஸ்தைப் படுகிறார்களிதைத்தொட்டு ராத்திரி பகல் குதிரை சமேதாறர்கள் தங்கள் தங்கள் சம்பளமுங் குடுக்கச்சொல்லி மறியலிருந்து பெகு தொந்தரை பண்ணுகிறார்களென்று மினிமேல் மமுதல்லிப்பாளையம் நிற்கமாட்டாதென்று மிப்படியாக மமுதல்லிகான்

லசுக்கரிலிருந்தும் தாங்களனுப்பின வேவுக்காறர்களும் வந்து சொன்னதாய்ச் சேதி சொன்னான். யிப்படி யிருக்கச்சே பறங்கிப்பேட்டையிலிருந்து தெய்வனுபகசெட்டி வீறுசெட்டி முசியே கெலம்வீலுக்கு (M. Glainville) அழைப்பிச்ச காங்கு பிடவை நூறு கோடி ஒரு சலங்கில் வந்துதென்று கபுறு வந்துது யிதேது பிடவை யென்று கேட்டார். வீராசெட்டி கங்குப்பாடி வீராசெட்டி (Kangipatti Virachetty) முசே கெலம்வில் கையில் ஒப்பந்தம் பண்ணிக்கொண்டார்களே அதுக்கரக வந்ததென்று சொன்னேன். அதுக்கவர் யிப்படி படுத்திக் குலாரிலே ஆனால் பிடவை வருகுது கும்பினிருது கும்பினிருக்கு ஆனால் பிடவை வரயில்லை யென்று கேட்டார். இது கும்பினிர் சடம் வலம் மட்டப் பிடவை அப்பாலு: மிப்போ கூடினது அல்ல முன்னை மீ கூடினது கட்டுக்கடையா யிருந்து இப்போ யிவர்கள் வாங்கி அனுப்பினார்களென்று சொன்னேன். நீங்களெத்தனை நாளாச்சுது. பணத்துக்கு உத்தாரங் குடுத்து யினிமேல் நூதனமாய் சட்டம் கட்டி அல்லோ அப்பால் வழியில் கலாபம் யில்லாமலிருந்தால் வரப்போறதென்று சொன்னதுக்கு மறு வுத்திரஞ் சொல்லாமல் பிறப்பட்டு அப்புறத்துக் காம்பிறுவிலே போனார். அங்கேயிருந்து நடு சாலையிலே தொரேகத்து யென்கிற கம்பாய் சட்டம் லாகை லாகையாய் வந்ததை களயவெட்டுகிறதுக்கு பாத்துக்கொண்டிருந்தார்கள். நான் பாக்குக் கிடங்குக்கு வந்தேன்.

பதினொன்றரை மணிக்கு முசியே ருது வந்து எனக்கு கொடுக்கவேண்டிய 1600 விறுக்கும் வட்டி கொடுக்க நிறுவாகமில்லை யென்றும் நீ வட்டி விடாமல்போனால் எனக்குச் சக்குத்தியில்லை. அல்லவென்று கிட்டங்கியே போட்டுக்கொவென்றும் முதல் பணத்துக்கு 4600 விறுகன் கொடுக்கிறேன். மென்றும் மத்த 2000 விறுகனுக்கு ஒரு வருஷத் தவணை குடுத்தால் சம்மதிபண்ணிப் போடுகிறேன் இல்லையென்றால் ஒரு காசும் வரப்போறதில்லை. நான் கெட்டுப்போறதேயல்லாமல் வேறேயில்லை யென்றும் சீமை சட்டம் கிலவழிச்சுப் போட்டால் பளுவு நஷ்ட்டம் வந்தால் அதைத்தொட்டு கடன்காறருக்கு நஷ்டத்தைக் காண்பிச்சுது. அதுக்குச் சாதகஞ் சொன்னால் ஞாயத்துக்குள்ளே வொருக்காலும் அவனைக் கொடுக்க ஒப்பிரிகாரிடக்கூடாது

அந்தப்படிக்கு ராசாவினுடைய ஒடுக்கினை யென்று சொல்ல வந்தான். அதுக்கு நான் சொன்னது யிந்த யெடுபாடு யெடுத்து நீ மனதிலே வைத்துக்கொண்டிருக்கச்சே யெனக்கென்ன நீ பணம் குடுக்கப்போறாய் நானென்ன வாங்கப்போறேன் யெனக்குப் பிறுப்பத்தி யிருந்தாலும் உமக்கு யிந்த புத்தி வருறது ஆறு வருஷம் நான் சீமைக்குப் போய் வரந்தனிலும் மனம் பொறுத்ததுமல்லாமல் அவனுக்கும் யிந்த சண்டையைத்தொட்டு பெரு நஷ்டம் உண்டாயிருந்தாலும் அப்படி யிருக்கச்சே நம்மைத் தொட்டு நஷ்டமுண்டாயிருக்கச்சே யிவன் கடன்காறருக்கு மிவன் சம்மதிபண்ணிப் பரிசுத்தனாகட்டுமென்று யெண்ணாமல் சண்டித்தனம் பண்ணவேணுமென்று மனது யிருக்கச்சே எனக்கு நீர் குடுக்கப்போறதில்லை. நான் கடன்காறருக்கும் சம்மதிபண்ணப்போறதில்லை. நல்லது நீர் போம் உம்முட மனதின்படியே சுவாமியும் நினைக்கப்போறதில்லை யென்று சொன்ன மாத்திரத்தில் நாளை வந்து கண்டு பேசிக்கொள்ளுவோமென்று சொல்லி அனுப்பிவிச்சுக்கொண்டு போகச்சே சத்தே பச்சாத்தாபமாய்ச் சொல்லிப்போட்டு போனார். அப்பால் நானும் சாப்பாட்டுக்கு வீட்டுக்குப் போனேன்.

**1750 ஹூ செப்தம்பர் மீ 2 உ பிறமோதூத ஹூ ஆவணி மீ 21 உ புதவாரம்.**

இத்தனாள் காலத்தாலே அஞ்சு மணி வேளைக்கு விழுப்புறத்து அவில்தாரன் வைத்திலிங்கமுதலி காகிதம் கொண்டு வந்து குடுத்தார்கள். அந்தக் காகிதத்திலே யெழுதியிருந்தது நம்முட பவுன்சு சேத்து 20 உ மங்கள வாரம் இருபத்தஞ்சு நாழிகைக்குப் பிறப்பட்டு மமுதல்லிக்கான் லசுக்கருக்கு குமரமங்கலத்திலே யிறங்கி யிருந்தவர்களிலே அந்த பவுன்சின் பேரிலே போய் சண்டை போட்டு சேத்து சாயங்காலம் அஸ்தமன வேளையிலே முடிக்கினபடியினாலே மமுதல்லிகானும் அவர் பவுன்சும் கூடாரம் போட்டது போட்ட வாக்கிலே போட்டுவிட்டு ஓடிப்போனார்கள்.

கூடாரம் வகையறா சாமானுகளெல்லாம் போட்டு நெருப்பை போட்டு கொளுத்தினார்கள் மைத்தப்படி சிப்பாயிகளுக்கும் வெள்ளைக்காறர்களுக்கும் நல்ல கொள்ளை அகப்பட்டுதா

மென்றும் இருபதே சில்லரை பீறங்கிகளும் ஆயிரம் சசால்
மட்டுக்கும் துப்பாக்கிகள் ரெண்டாயிரம் மட்டுக்கும் அகப்பட்டு
தென்றும் கபலை அண்டிகள் செம்பு பாத்திரம் பிடவை சீலை
வகையறா கொள்ளை அகப்பட்டது லக்ஷாந்திரங்கள் மட்டுக்கும்
உண்டென்று யிப்படியாக அறுக்காறுகள் வந்து சொன்னார்க
ளென்று யெழுதி வந்தது. வந்த சேவுகர்கள் சொன்னது கூடா
ரங்கள் முதலானதுகளெரியுறது நாங்கள் வழியிலே வரச்சே
ஒழுகரை மேடுமட்டுக்கும் வெளிச்சம் பார்த்துக்கொண்டு வந்தோ
மென்று கபுறு சொன்னார்கள். நான் முகங் கழுவிக்கொண்டு
பழகயிது சாப்பிட்டு பிறப்படச்சே ஆறரை மணி அந்தமட்டுக்கும்
திருவிதி சேதி வருறதைத்தொட்டு அனுமானமாய் மெய்யோ
பொய்யோ யோசனை பண்ணிக்கொண்டு துரையவர்கள் வீட்
டுக்கு வந்தேன். அவர் படுத்துக்கொண்டு தூங்குனார். கதவுக
ளெல்லாம் சாத்தியிருக்குது யிப்போ பரிச்சேதமா யுள்ளே
போய் சொல்லப் போகாதென்று சொன்னார்கள். தியாகுவுடனே
சொல்லி துரையவர்கள் யெழுந்தால் நான் வந்து சொன்ன கபுறை
சொல்லச்சொல்லி அனுப்பிப்போட்டு பாக்கு கிடங்கியே வந்து
உளக்கார்ந்தவுடனே யேழு மணி வேளைக்கு திருவிதி அவில்தா
ரன் காகிதம் கொண்டுக்கொண்டு நாலு சேவுகர்கள் வந்தார்கள்
காயிதத்திலெழுதியிருந்தது ஆனால் சேவுகர்கள் விழுப்புரத்து
அவில்தாரன் யெழுதின காகிதச் சேதியாய் யெழுதியிருந்தது.
வந்த சேவுகர்கள் சண்டையின்போது கூடயிருந்தோமென்றும்.
நம்முடவர்களுக்கு கொள்ளையிட்டதில் லக்ஷாந்திரம் அகப்பட்டுது
யென்றும் யிருபத்திமூனு பீரங்கிகளிலே யொரு பீறங்கி நம்
முடவர்கள் கூட கொண்டுவந்தார்களென்றும் கூடாரமாம்படியே
கொளுத்திவிட்டார்களென்றும் பொழுது விடிகிற மட்டுக்கும்
யெறியுதென்றும் ஒரு ஒபிசியால் ஒருத்தன் செத்துப்போனா
னென்றும் நம்முட சிப்பாய்களிலே ஆறு ஏழு பேர்கள் நம்மு
டைய பட்டடையிலே நெருப்பு விழுந்து சிப்பாயிகளும் வெள்
ளைக்காறர்கள் ரெண்டு பேர்களும் செத்தார்களென்றும் அதிலே
ஒரு பலகை பேந்து காலிலே அடிச்சுதென்றும் மமுதல்லி
கானும் சிப்பாயிகளும் சுவார்களும் ஓடிப்போனயிடமின்ன
மென்று தெரியவில்லையென்றும் சொன்னார்கள். யிந்தச் சேதி
யும் தெரிஞ்சுக் கொண்டு துரையவர்களுக்கு எட்டு மணிக்கு
போய்க்கபுறு சொன்னேன். சொன்னமாத்திரத்திலே அவரு

டைய சந்தோஷத்தைக் காயிதத்திலே எழுதி முடியாது. அந்தக்ஷணம் மதாம் காம்பிருவிலே போயி சொன்னரப்படி வந்து இங்கிலீசுக்காரர் ஒரு நாய்கள் அவர்கள் பரவசத்தின் பேரிலே வந்தான். காசைசத்திக்கொண்டு கைவிட்டுவிட்டார்கள். வெகு கொஞ்சப்படுத்திப் பேசினதுமல்லாமல் அவர்களை இனி மேல் துலுக்கர் பரிச்சேதம் நம்பார்கள். என்றுமிவர்கள் பரவசம் குடாவிட்டால் முன்னைசராசங்குவே வாறதில்லை. அவனைப் போலே ஒத்தவன் வந்து ஓடிப்போயிருக்க மமுதல்லிகான் வருவானை பரிச்சேதமாய் அடியெடுத்துவையான். அவனுக்குப் பரவசத்தை சொல்லித் தலையைத்திருப்பி அழைப்பிச்சு நட்டாத்திலே விட்டுப்போட்டுக் காசைசத்திப்போடா பெட்டைக்கண்ணு வென்று உளுக்கார்த்துகொண்டு அப்பிறதிஷ்டையே உளுக்கார்ந்தார்கள் மமுதல்லிக்கான் சகலமும் போக்கடிச்சுக்கொண்டு போய்விட்டானோ அல்லவென்றயிதிலே செத்துப்போனனோ வென்று சொல்லியின்றுடனே சண்டை பேச்சு தீந்துபோச்சுது நான் கெட்டியாய் மனது பிடியாவிட்டால் இந்தக் காரியமிப்படி நடக்கறியாதென்று சொன்னார். உமக்குயிப்படிப்பட்ட மகத்தாகிய கீர்த்திவரவேண்டியிருக்கச்சே அப்படியேன் நடக்கும் கட்சியிலே திருவிதிக்கோயில் ஒரு கொத்தளம் அத்தனை காணுது அதை வாங்கறதுக்கு நாசறுசங்குதன் பவுன்சு 10000 பதினாயிரம் குதிரை சுவார்களும் யிருபதினாயிரம் ஹோமத்தையும் (Hommes) பீரங்கிகள் முப்பது நாற்பதுச்சால் ரேண்டாயிரம் கல் துப்பாக்கி அய்யாயிரம் ஆறாயிரம் பின்னையும் சண்டையும் சான்சாமுடனே வந்ததுமல்லாமல் இங்கிரேசுக்காறர் பவுன்சுகூட வந்து கோட்டையை திஷ்டிச்சுப் பார்க்குறதுக்கு கூடயில்லாமல் ஓடிப்போய்விட்டானென்றால் நாசறு சங்குக்கு யிதைவிட அபகீர்த்தியுமில்லை. உமக்குயிதைவிட கீர்த்தியுமில்லை. இந்தச் சேதியை யிதுக்கு நாற்பதாம் நாள் டில்லியிலே சமஸ்தசனங்களும் பேசிக்கொள்ளுவார்கள். யென்றும் உம்முட அதுருஷ்டத்தைப்போலே பாதுசாக்களுக்கு கூடயில்லையென்றும் சொல்லத்தக்க வுபசாரமாய் மெய்யின் பேச்சே ஏதோ அதைச் சொன்னேன். அதைக்கேட்டு சந்தா சாயபு பெகு சந்தோஷப்பட்டுக் கொண்டாரோ யில்லையோ வென்று கேட்டார் சந்தோஷமெல்லாம் வருதாச்சே தாங்களவர்கள் நிமித்தியத்தாலே யித்தனை பிறயாசைப்படுகிறது,

அவர அகோருத்திரமும் உங்கள் சமற்ணையும் உங்கள் ஞாப
கமும் உங்களை ஸ்தவுத்தியம் பண்ணுகிறதும் நீங்கள் செய்த
வுபகாரம் நானென்ன விதமாய் தீத்துக்கொள்ளப் போறே
னென்று சொல்லிக் கொள்ளுகிறுரென்று சொன்னேன். இப்போ
வருவாருமென்று கேட்டார். வருவாரென்று சொன்னேன்
மீர்ஷம் சாயபு வந்து துரையவர்களுக்கு முபாரக்குபாதி
(Congratulation) கொடுத்து நவாபு சாயபு யிதோவருவா
ரென்று சொன்னுர். நவாபு சாயபும் ருசா சாயபும் வந்தார்கள்.
துரையவர்கள் யெதிரேபோய் குசலப் பிறசினை கேழ்க்க அவரி
வரைக் குசலப் பிரசினைக் கேழ்க்க யிப்படி ஒருத்தருக்கொருத்தர்
பிரசினைக் கேழ்க்க அதன் பிற்பாடு சந்தா சாயபும் மமுதல்லி
கானை அடிச்சுத் துரத்தி பத்தே பண்ணதல்ல நாசறுசங்கு
வைத்தானே அடிச்சுத் துரத்தி தக்கணியெல்லாம் (Deccan)
செயிச்சதாய் யெண்ணிக்கொள்ள வேண்டியதுயிப்போ டில்லி
வந்து புதுச்சேரியும் மத்தளுச்சியமெல்லாம் இதன் கீழேயும்
ஆச்சுதென்று சொன்னதுமல்லாமல் இந்தக் கீற்த்தி சூரியப்
பிறகாசம்போலே பிறகாசிச்சுது உம்முட அதுருஷ்டமதுக்கு
சரியானதாய் பின்னையொருத்தர் அதிருஷ்டத்தைச் சொல்லப்
போகாது பாதுசாக்கள்கூட செயிக்கமாட்டார்கள். அப்படிப்
பட்ட நாசறுசங்கை செயித்தீரென்று ஸ்தவுத்தியமாய் சொன்
னதுக்கு துரையவர்கள் உபசாரமாய்ச் சொன்னுர். இப்போ
மமுதல்லிகான் யெங்கே ஓடிப்போவான் யென்று கேட்டார்.
திருச்சிறுப்பள்ளியே ஓடிப்போய்விடுவானென்று சொன்னுர்கள்.
அவன் பிறகே போற நாசறுசங்கு தயினுத்து குதிரைகள்
அவர்கள் திருச்சிறுப்பள்ளியை போகத் தக்கதாக பார்த்துயிருப்
பார்களோ வென்று கேட்டார் அந்த சமேதார்கள் யெங்கெங்கே
அபசெயப்பட்டு ஓடிப்போய்விட்டார்களென்று சொல்லி யிந்த
பத்தேக்கு சமானமான பத்தேவேறெயில்லை. ஆனபடியினலே
பீரங்கியுடனே சுடவேணுமென்று கேட்டார் அதுக்குத் துரை
றங்கப்பனுக்குங் காகிதமும் வந்ததுதே அந்த சேதியெல்லாம்
யல்லாமல் வேறே வெள்ளைக்காறர் காகிதம் இன்னம் வரயில்லை,
அது வந்தவுடனே பீறங்கி போடுகிறேமென்றும் பகலுக்கு
மேலே கோயிலுக்குப்போய் பூசை கேட்டு அப்போ போடுவிச்சு
ராத்திரிக்கு ஆட்டு பாட்டு மிதுகளெல்லாம் நடத்திவிக்குறேன்
யென்று சொல்லி பின்னையும் நாசறுசங்கு யிந்தச் சேதி கேட்ட

வுடனே ஓடிப்போவானென்று பாதுசா கேட்டாலும் மன்சூரல் லிக்கான் வசீருயிருக்கிறவர்கள் கேட்டாலும் பெகு சந்தோஷப் வார்கள். யென்றும் இது முதலான சேதி பேசி யிருந்து அப்பால் சாத்ரா செய்யப்புக்கு பன்னீர் பாக்கு வெத்திலே கொடுத்து அனுப்பிவிச்சுக் கொள்ளப்போகச் சொல்லிப் போகச்சே யிந்தச் சேதியின் பேரிலே காசகுசங்கு பேசச் சரிக் கட்டிப் போடுவார்களென்றும் முசபர் சங்குக்கு ஒரு வேளை தக்கன் வந்தாலும் (Deccan) வருமென்றும் சொல்லி அனுப் பிவிச்சுக் கொண்டும் மதாமையுங் கண்டு பேசிப் போட்டுத் தகப் பனும் பிள்ளையும் மீர்ஷூம் பிறப்பட்டுப் போனார்கள்.

அப்பால் இதாயித்து மோகதின்கான் குமாரன் சாதத்து உத்தினகானும் ஆசிபாசலும் அசிபேக்கும் வந்து மொபார்க்கு பாதி சொல்லி அவர்களும் போனார்கள். வெள்ளைக்காரர் சமஸ்த மானபேர்களும் வந்து பத்தே முபாற்கு கொடுத்துப்போட்டு போனார்களென்றும் பதினொரு மணிக்கு வெள்ளைக்காரர் காகித மும் வந்து கோட்டையிலே 23 பீரங்கி போட்டார்கள். கப்பல் களிலேயும் அப்படித்தான் போட்டார்கள். அந்த மட்டுக்கும் வரவர்களை காலமை மணிக்கு கோவிலுக்குப்போய் பூசை கேட்டு வரச்சொல்லி காகிதம் அனுப்பிவிச்சார்கள். நேத்து 20 உ செவ்வாய்க்கிழமை பகலுக்கு மேலாக ஆறு மணிக்கு அன்வறதி கான் குமாறன் மமுதல்லிக்கான் சண்டை போட்டு முறிஞ்சு பவுன்சுடனே கூட ஓடிப்போய்விட்டானென்கிறது வனியும் அதுக்குப் பண்டிகை கொண்டாடுகிறதும் பட்டணமெல்லாம் அறிஞ்சதுமல்லாமல் ஆற்காட்டுக்குக்கூட யின்று சாயங்காலம் சேதி போமென்று பிறசித்தமாய் சமஸ்தமான செனங்களும் அறிஞ்சார்கள். துரையவர்களுடைய சந்தோஷத்தை ஒரு மிதத் திலே யெழுதி முடியாது. சந்தா சாயபை சற்கரை பங்கிடச் சொல்லிச் சொல்லி அனுப்பச்சொன்னார் அவரும் மேளத்தாளத் துடனே சற்கரை பங்கிடச்சே வீதிக்கு வீதிப்போய பங்கிட் டார்கள்.

இத்தனாள் பகலுக்கு மேலாக அஞ்சு மணி வேளைக்கு கோட்டைக்குப்போய் பூசை சமஸ்தமான பேர்களுடனே கேழ்க்கச்சே கோட்டையிலே யிருபத்தொரு பீரங்கியும் கப்பல் களிலேயும் துவக்கத்திலேயும் முடிவிலேயும் பீறங்கி தீந்தார்கள்.

அப்பால் ராத்திரிக்குத் துரையவர்கள் விட்டிலே ஆட்டும் கூத்தும் பதினொரு மணி மட்டுக்கும் நடந்தது. அவ்விடத்திலே முசியே கொற்னேயும் பிஞ்சினேர் மகன் சீமையிலிருந்து யிவ் வருஷம் மல்சி யென்கிற கப்பலிலே வந்தவன் திருவீதிக்கு ஓபிசியாலாய்ப் போயிருந்தவன் கெட்டிச்சு யிருந்த துப்பாக்கியைத் தன் கையினாலே யெருதைக் குத்தினேன். யென்றும் அந்த விசை யிரண்டு வெடியெழும்பி குண்டு யிவனுக்குப்பட்டு மறணத்தை அடைந்தான் யென்று யெழுதி வந்தது யென்று துரையென்னுடனே சொன்னர்.

மமுதல்லிகான் கொஞ்ச பவுன்சு 2000 குதிரையுடனே சேத்து முறிஞ்சவன் திருவண்ணாமல்லூரிலே பிறப்பட்டுப் போனனென்று கபுறு வந்ததென்று சொன்னேன். மேஸ்தர் கோபபு மனுஷர் இரண்டாயிரம் பேர்கள் கல் துப்பாக்கிக் காரர்களும் மமுதல்லிகான் ஓடிப்போனவுடனே இவர்கள் தேவனும்பட்டினம் வந்து சேர்ந்தார்களென்று சேதி வந்தது யென்று சொன்னேன். அப்பால் 21 பிறங்கியும இரண்டு மொடுத்தியேயும் நம்முடவர்கள் பாளயம் கொண்டு வந்து சேர்ந்தார்கள் யென்று கபுறு வந்துதென்று சொன்னேன் பின்னையும் ஒன்பது பீரங்கியும் இரண்டாயிரம் ருயச்சூர் பாணமும் இரண்டு எருதும் பேரிலே பீரங்கி குண்டுகளும் வந்து சேர்ந்ததென்றும் அதின் பிற்பாடு எழுதின காகிதத்திலே யெழுதியிருந்தது. ஆக மமுதல்லிக்கான் லசுக்காிலே படாவு அகப்பட்டது முப்பது பிறங்கி சின்னதும் பெரியதும் இறண்டாயிரம் ருசசூர்பாணம் சசால் நானூத்திச் சில்வானம் மிரண்டு யெருது பீறங்கி கண்டுகளிது இன்னேரமட்டுக்கும் அகப்பட்டதா யெழுதி வந்தது யின்ன மெவ்வளவு அகப்படுமோ அறிய வேண்டியது.

### 1750 ௵ செப்தம்பர் ௴ 3 உ பிறமோதூத ௵ ஆவணி ௴ 22 உ குருவாரம்.

இத்தனள் காலத்தாலே துரையவர்கள் யெழுந்திருக்க ஒன்பது மணிக்குமேல் சென்றது அப்பால் துரையவர்களழைச் சனுப்பிவிச்சு மமுதல்லிகான் போனசாடை தெரியாமெ யெல்லா கேட்டார். இன்னம் சேதி தாக்கிகாய் வாயில்லே வந்தவுடனே சொல்லுகிறேனென்று சொன்னேன். அதுக்கு எந்த மாற்கமாய்

போனுர் பென்று ஆகிலும் ஆரும் சொல்லவில்லையா வென்று கேட்டார். திருவண்ணெல்லூர் மாற்கமாய்த்தான் போனு னென்று இரண்டாயிரம் குதிரை மட்டுக்கும் கூட கூட்டிப் போச்சுதென்றும் வழியிலே கண்டவர்கள் போக்குவரத்து மனு ஷர்கள் வந்து சொன்னதாய் விழுப்புரத்து தவால்தாறன் யெழுதியனுப்பி விச்சான். குதிரைகள் சின்னுபின்னமாய் தலே வாறுகெட்டு ஓடச்சே அப்பாலே யெவன் யெந்தவழி போற வன் யின்னுனென்று தெரியப் போறதில்லே—குறிப்பறிஞ்சவர்கள் சாடையாய்ப் பார்த்துச் சொன்ன சேதி யென்று சொன்னேன். நம்முடையவர்களுக்கு கொள்ளே அகப்பட்டது யெவ்வளவுண் டென்று கேட்டார் பதினுயிரம் குதிரையும் யிருபதினுயிரம் ஹோமம் கடைகள் வற்த்தகர்கள் யிப்படி பெகு பிறேசை யிருந்து யிருந்தாப் போலே யிருந்து போட்டது போட்டவர்கள் வாக்கிலே ஓடிப்போய் விட்டார்கள் ஆனபடியினுலே சகல வஸ்து வுகளும் கொள்ளேயிலே அகப்படும் ஆனுல் லக்ஷாந்திரம் கொள்ளே யேயல்லாமல் சாதாரணமாய்ச் சொல்லப் போகாதென்று சொன் னதுக்கு மெய்தானென்று ஒத்துக்கொண்டார். யிதிலே அவர வர் வெள்ளேக்காறர் வந்தார்கள். கானிப்பாலே பிறப்பட்டு வந்து உளுக்கார்ந்து கொண்டேன் மறுபடி துரையவர்கள் அங்கே வந்து கலாபம் தீந்து போச்சுதே இனிமேல் வியாபாரத்தின் பேரிலே சாக்கிறதை யெல்லாம் வைத்து வற்தகர்கள் வண்ணூர் முதலான பேர்களே சுருக்குப்பண்ணி சறக்குகளே சீக்கிறமத் துக்கு முஸ்தீது பண்ணி விக்கவும் யினிமேலிக்கக் காரியத்தில் சகல சாக்கிறதையும் பண்ணவும் யென்று சொன்னுர் நல்லது யென்று அப்படியே நடந்து கொள்ளுகிறேனென்று சொன் னேன். இனிமேலிந்தக் காரியத்திலே சாக்கிறதையாயிருந்து காரியம் பாரென்று சொல்லிப்போட்டுப் போனுர்.

இன்று முதல் கெத்தபுக்கித்து ஆனபடியினுலே நேத்தய வரைக்கும் சுக்கிறன் திசையிலே புதன் புக்த்தி ஆனபடி யினுலே நேத்தய மட்டுக்கும் சண்டை நடக்கவேண்டியது சிரி பிறமோதூத ஞ ஆவணி மீ 22 உ வியாழக்கிழமை முதல் சுக்கிற தெசையிலே கேத்துபுக்குத்தியான படியினுலே சண்டையிருது வியாபாரம் முதலானதுகள் பாக்கிய லாபங் களுண்டாயிருக்கும் யென்று கோபால்சாமி சாதகப்படி யென்று சொல்வார்கள் யிதல்லாமல் வைப்பூர் சீதாராம சோசியனும்

நாற்பத்தோரும் வருஷம் முதற்கொண்டு தெசாந்திர அபிசவரிய யோகமும் நடக்குமென்றும் யெழுதியிருக்கிறான் இதனுடைய பலன் அறிய வேண்டியது பகலைக்கு மேலாய் மூனு மணிக்கு அழைச்சனுப்பிவிச்சு யின்று முதற்கொண்டு வண்ணார் துரைக்கும் கெட்டணைக் கூட்டி கும்பினீர் பிடவைக் கிட்டங்கி முதலான யிடத்துக்குப் போய் விபாபாரம் சருக்கிலே சேருகிறதுக்கு வர்த்தகர் முதலானவர்களைக் கண்டிப்பு பண்ணி சருக்கிலே யித்தனை நாளும் சரக்குகள் வாறதுக்குத் தடையாயிருந்து வெளியே போறதுக்குத் தடையாயிருந்ததே யினிமேல் அந்தப் பயம் கவையில்லை. வர்த்தகர்களை துலைக்குப் பணங்களைக் கட்டிப் பிடவைகளை அழைப்பிக்கச் சொல்லி சருக்குப் பண்ணவும் வண்ணார் விஸ்தாரமாய்ச் சேர்க்கவும் என்று சொன்னார். நல்லதென்று சொல்லிப்போட்டு வண்ணாந்துரைக்குப் போனேன் அவரும் வந்தார். அவ்விடத்திலே பாத்துப்போட்டு கோட்டைக்குப் பிறப்படச்சே ஆளோட்டி வெள்ளைக்காரன் கணக்குப்பிள்ளைகள் வந்து சேருகிறதில்லை சேவுகர்கள் நாலு பேர்களிருக்கிறார்கள் யென்று சொன்னான். அதன் பேரிலே துரையவர்கள் யென்னைப் பார்த்து எத்தனை கணக்கப்பிள்ளை யென்று கேட்டார் நாலு கணக்கப்பிள்ளையும் ஒரு மணியக்காரன் இருக்கிறான் யிதல்லாமல் சேவுகர்தானிருக்கிறார்கள் யென்று சொன்னேன் அதுக்கு கும்பினீர் கிலவாச்சதே சத்திலும் மதிலும் ஒரு வாசற்படியும் வைக்கிறபடியினாலே ஒரு கணக்குப்பிள்ளை போதும் யென்று சொல்லிப்போட்டு கோட்டையே போனார். நான் பின்னையும் ரெண்டு நாழிகையிருந்து வண்ணார்களை ஆளுகளைச் சேர்க்கச் சொல்லி திட்டம்பண்ணிப் போட்டு பாக்குக் கிடங்கியே வந்தேன். சாயங்காலம் ஆன பிற்பாடு யேதாகிலும் சேதி வந்துதாவென்று கேட்டார். மமுதல்லிகான் திருக்கோவிலூர் போய்ச் சேர்ந்தானென்று சொல்லுகிறார்கள் யென்று சொன்னேன். பிடவைகள் சேர்ப்பாரென்று சொல்லி யித்தனை நாளும் சண்டையின் பேரிலே வைத்த நினைப்பை யினி வியாபாரத்தில் வையென்று சொன்னார். நல்லதென்று சொல்லிப்போட்டு வந்தேன் இந்தனாள் துலுக்கருக்கு ரமுசான் பண்டிகையான படியினாலே இதாயத்து மொகதின்கான் தாயாருக்கும் சந்தா சாயபுக்கும் மோபார்க்குபாதி (Congra-

tulation) போய்ச்சொல்லி சுசறும் அவ்வஞ்சு விருசுனும் வைத்துப்போட்டு விட்டுக்குப் போனேன்.

1750 ௵ செப்தம்பர் ௴ 4 உ பிறமோதூத ௵ ஆவணி ௴ 23 உ சுக்குறவாரம்.

இத்தனுள் காலத்தாலே துரையவர்களழைச்சனுப்பிவிச்சு திருவிதி முதலான பிடங்களிலேயிருக்து யேதாகிலும் செதி வந்துதாமென்று கேட்டார். திருக்கோவிலூர் யேரிக்கரையின் மேலே போயிறங்கியிருக்கிறதாகவும் காலிலே ஒரு குண்டு காயம் அசகாயமாய்ப்பட்டு யிருக்கிறதென்றும் உசேன் சாயபு தாயார் குமாரன் பிடே சாயபுக்கு காயம் பட்டதாகவும் சொல்லிக் கொள்ளுகிறார்கள் யென்று திருவிதிக் கோட்டையிலிருந்தும் விழுப்புறத்திலிருந்தும் யெழுதி வந்ததென்று சொன்னேன். அப்பாலென்னை அழைச்சு ஊரிலே உண்டான மாடுகள் கூலிக்காறர்கள் ஆனைகள் ஒட்டகங்கள் யிதுகளெல்லாம் திருவிதிக்கு யிப்போதானே அனுப்பு யென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். பரசுராம பிள்ளையையும் அழைத்துச் சொன்னார். அவனும் நல்லதென்று போனான். அவ்விடத்திலே பெரு தட்டு முட்டு அகப்பட்டதெல்லாம் லயெடுத்து வரவேணுமென்று யிதுகளை அனுப்பிவிக்கச் சொல்லிச் சொன்னார். ஆனபடியினாலே அனுப்பிவிச்சது யிதல்லாமல் நம்முட பவுன்சு திருவிதியிலிருக்கிறதை அப்பால் ஆற்காட்டு மார்க்கமாய் போகச்சொல்லி உத்தாரம் கொடுத்தார். அவைகளை அனுப்பிவிச்சேனென்று செஞ்சி மார்க்கமாய் ஆற்காட்டுக்குப் போற வழியிலே மசிலி மசிலிக்கிறாமங்கள் பேரும் காதங்களும் யெழுதிவிக்கச்சொன்னார். அந்தப்படிக்கு யெழுதி வைத்தேன். அப்பால் வந்தவாசி மாற்கமாய்ப் போறதுக்கும் சலமசனுக்கு கிறாமப் பேரும் காதங்களும் யெழுதச் சொன்னார். அந்தப்படிக்கு யெழுதி வைத்தேன் அந்தப்படிக்கு காகிதமும் முசியே தொத்தேல் பேருக்கு யெழுதியனுப்பிவிச்சார். பகலுக்கு மேலாக மூணு மணிக்கு அழைச்சனுப்பிவிச்சு ஆனைகள் ஒட்டகங்கள் கூலிக்காறர்களிதுகளெல்லாம் திருவிதிக்குப் போச்சாவென்று கேட்டார். போச்சுதுயென்று சொன்னேன் நாளைக்கு பிடவைப் பார்வையுண்டா யென்று கேட்டார். சலவைப்

பிடவை பாருவை யுண்டென்று சொன்னேன். அப்பால் நாலு மணி வேளைக்கு சுவாரி போனார் நானும் பாக்கு கிடங்கியே வந்தேன்.

ஆறுமணிக்கு வந்தழைக்கனுப்பிவிச்சு லசுக்கரிலே பெருமெருது காகப்பட்டது வழிச்சாறுகளுக்குச் சொல்லி வருகிற எருதுகளை ஒன்று விடவாண்டாம் பென்று சொல்லி அனுப் பென்று சொன்னார். அந்தப் படிக்கு வழிச் சேரியிலே யிருக்கிற கும்பினீர் மனுஷர்களுக்கும் நயினார் சேவுகர்களுக்கும் சொல்லி அனுப்பிவிச்சேன். மறுபடி வந்து திருவீதிக்கு ஆளனுப்பி கும்பினீருக்கென்று எண்பியாமல் பறய மனுஷர் வாங்கிறதாய் அகப்பட்ட எருதுகளை யெல்லாம் வாங்கச் சொல்லென்று சொன்னார் நல்லதென்று திருவீதி அவால்தாரன் பேருக்குக் காகித மெழுதி அனுப்பிவிச்சேன் ருத்திரி யேழு மணிக்கு தென்னண்டை பெரிய வருந்தாவிலே உளுக்கார்ந்து யிருக்கச்சே முசியே தெபரேன் முதலான மூணு வெள்ளைக்காறர்களிருக்கச்சே அழைக்கனுப்பிவிச்சு ஆலங்குப்பத்தில் சுண்ணாம்பா விஸ்தாரமாய்ச் சேர்ந்திருக்குதாம் அது யெடுத்து வாறதுக்கு மாடுயில்லையாம் எங்கள் மாடு எல்லாம் முன் தண்டுக்குப் போனாப் போலே யின்னம் வயில்லையாமென்று வெகு கோபமாய்ச் சொன்னார் முன்றலைது கொண்டு போனாப் போலே அவ்விடத்தில்தானே யிருக்குது வையில்லையென்று சொன்னேன். அதுக்கு அந்த வெள்ளைக்காறர்கள் பாத்து லக்ஷம் மாடுகள் தஞ்சாவூரிலே யிருந்து நம்முட பவுன்சு இங்கே வரச்சே தஞ்சாவூர் மாடுகளை ஒட்டி வந்தார்கள் யிப்போ அதிலே ஒரு மாடு ஊரிலே யில்லை இப்போ தண்டிலே ஆயிரம் மாடு அகப்பட்டுது எல்லாங் கூட ஊருக்கு வித்துப் போடுகிறார்கள் யென்று சொன்னார்.

அதுக்கு முசியே தெபரேன் யென்னைப் பார்த்து அவ்விடத்துக்கு மனுஷர்களை அனுப்பிக் கொள்ளப் போகாதா வென்று கேட்டார். நான் ஒருத்தரமுஞ் சொல்லாமலிருந்தேனோ கூட ஊரிலே யிருந்து மாருப்பட்டை போட்டு மூட்டைகள் வந்தது. அதேதென்று கேட்டார். கில்லரைக் கடைக்காறர்களுக்கு கடை தினுசு வந்துதென்று சொன்னேன் அப்பால் இஞ்சினீர் வந்து ஆலங்குப்பத்திலிருந்து எழுதி வந்தது. சுண்ணாம்பு விஸ்தாரமாய் சேர்ந்து யிருக்குது வண்டிகளுமிருக்குது காக்குயில்லை

யென்றெழுதி வந்தது யென்றும் சாக்குக் கொடுக்கச்சொல்லி வேணும் யென்றும் கேட்டான். எத்தனை வண்டிகளிருக்குது யென்று கேட்டார். எட்டு வண்டிகளிருக்கிறதென்று சொன்னான் அந்த மட்டுக்கும் நாளை பிடவை பார்வை யில்லையா வென்று கேட்டார். பிடவை பார்வையுண்டு பார்வை சொல்ல வந்தா னென்று சொன்னேன். அப்பால் நல்லது போமென்று சொன் னார். நான் பாக்கு கிடங்கியே வந்தேன்.

1750 ஹு செப்தெம்பர் மீ 5 உ பிறமோதூத ஹு ஆவணி மீ 24 உ சனிவாரம்

இத்தனாள் காலத்தாலே கும்பினீர் வர்த்தகர் சலவைப் பிடவை பார்வையானபடியினாலே நான் கோட்டைக்குப்போய் பிடவைப் பார்க்கிற யிடத்திலே யிருக்கிறபோது துரையவர்கள் சேவுகன் வந்து அழைச்சவிடத்திலே சின்ன துரையுடனே சொல்லிப்போட்டு துரையவர்கள் வளவுக்கு வந்து கண்டவுடனே ஆற்காட்டு சேதியேதாகிலும் வந்துதாவென்று கேட்டார். நம் முடை வக்கீல் யெழுதி அனுப்பின காகிதத்தில் முன் 22 உ செவ் வாய்க்கிழமை நாள் ராத்திரி நாசறு சங்கு ரங்கினிமாலிலே கச் சேரி பண்ணிப் பேசியிருந்து யெழுந்துப் போனவர்களில் சான வாசகானும் மோரோ பண்டிதனும் இரண்டு பேரும் யிந்தாயத்து மொகதின்கான் அண்டைக்குப் போயி நவாபு நாசறு சங்கு சொல்லச் சொன்னது ஆற்காட்டு தாலூக்கும் கில்லேத்து கொடுக்கிறோமென்றும் சொல்லச்சொன்னாரென்றும் சொல்லி போட்டு வந்தார்களென்றும் அவடத்துக்கு யோசனை அவரவர் சொல்லிக் கொள்ளுகிறது முசபர்சங்கு கில்லே குடுத்து சான வாசகானையும் வைத்துப்போட்டு நவாபு நாசறுசங்கு கூச்சாய் அபாங்கபாத்துக்குப் பயணம் சாகிப் போறாரென்றும் சானவாசு கானிருந்து யிவ்விடத்து மொகத்துமா பைசல் பண்ணுகிறா னென்றும் சொல்லிக் கொள்ளுகிறார்களென்றும் அப்பால் முன் அன்வறதிகான் நாளையிலே செஞ்சி கில்லேதார் ரூசேக்கல்லி சாயபுவுக்கு ஸ்ரீக்காகுளம் ராசமகேந்திரம் தாலூக்குடங்கா சாலே தாரோகா உத்தியோக முங்குடுத்து சிறேப்பாகுடுக்துப் போகச் சொன்னாரென்றும் மீந்துகடை கிமிதாரன் வந்து சானவாசகான்தான் ஊருக்குப்போறாரமென்று கேட்டதுக்கு நவாபு சாயபு கூச்சாய்ப் போயர் கூடப்போகலாமென்று

சொன்னதாகவும் அதின் பேரிலே நல்லதென்று சொல்லிப் போனுமென்றும் யிது முதலான சேதி யெழுதி வந்ததென்று சொன்னேன் அதுக்கு துரையவர்கள் சொன்னது முன் கடப்பை அப்துல் நபிகானும் கந்தனூர் யிம்மத்து பகதூர் கானும் மமுதல்லிகான் காரியம் நீங்கள் பாத்துக்கொண்டு உங்கள் பவுஞ்சு ஆற்காட்டின் பேரிலே நடந்தால் அந்தப் பகனை வைத்துக் கொண்டு நாசறு சங்கை சரிக்கட்டிப்போட்டு முசபர்சங்கை தக்கன சுபாவுக்கு உளுக்காரவைக்கிறோமென்று சொல்லியிருந்தார்கள் இப்போ மமுதல்லிக்கானை நாம் பிடித்து துரத்திவிட்டோம் அவனும் ஓடிப்போய்விட்டானே. கடப்பையாரும்-கந்தனூராரும் சொன்னபடிக்கு யிப்போ நாசறுசங்கை பிடித்துப் போட்டு விடலாமே. யிது நல்ல சமையமாச்சே யிதல்லாமல் நம்முட பவுஞ்சு ஆற்காட்டுக்கு நடக்கிறோமென்று நடந்தால் போதும் அந்தப் பற்கனை வைத்துக்கொண்டு நாசறுசங்கை சரிக்கட்டிப் போடுகிறோமென்று சொன்னபடிக்கு ஆற்காட்டு மார்க்கமாய் நடக்கச்சொல்லி திருவிதியிலிருந்து கொண்டிருக்கிற நம்முட பவுஞ்சு விழுப்புரம்போய் சேர்ந்தது மத்தும் பாதி பவுஞ்சும் நாளைய தினம் போகுமா நாளைய ன்னறைய தினம் போமே தெரியாதென்று சொன்னார். சுவாமியுடைய கிருபை உங்கள் பேரிலே பரிபூரணமாயிருக்கச்சே அதுவும் நடந்தாலும் நடக்குமென்றும் சொன்னேன் யிப்படியிருக்கச்சே மீர்ஷம் வந்து சந்தா சாயபு பெண்சாதி வந்தவாசியிலிருந்து யிவ்விடத்துக்கு வருகிறவர்கள் அழைத்து வாறதுக்கு நூறு மயே சிப்பாயிகளும் நூறு குதிரை சுவாரகளும் படா சாயபு அவர்கள் உங்களைக் கேழ்க்கச்சொன்னார்களென்று சொன்னார் அதின் பேரிலே விழுப்புரத்திலே நம்முட பவுஞ்சு யிறங்கியிருக்குது அந்தப் பவுஞ்சிலேயிருந்து அனுப்பச்சொல்லி மூசியே தொத்தேல் பேருக்கு ஒரு காகிதம் யெழுதிக்குடுத்து திருவிதிக்கு மனுஷரை அனுப்பிவிச்சால் அவர் உத்தாரங் குடுத்து கூட்டி அனுப்பிவிப்பாரென்று சொன்னார் அந்தக் காகிதத்தை வாங்கிக்கொண்டு மீர்ஷம் புறப்பட்டு போறதிலே மமுதல்லிகான் தோப்பு கானுவை நம்முடவர்கள் திருவிதியிலிருந்து அனுப்பிவிச்சது வந்து சேர்ந்ததென்று கபுறு வந்தது.

கபுறு வந்தவுடனே மமுதல்லிகானுக்கு காசநசங்குகுடுத்து அனுப்பின தோப்புகாறு வந்து சேர்ந்தது. நீங்கள் போய் தமாசு பாருங்கோளென்று சொன்னார் நல்லதென்று சொல்லி அப்பால் மமுதல்லிகான் திருக்கோவலூர் போய்ச் சேர்ந்தும் காலிலே காயம் பட்டுயிருக்கிறது முதலான சேதி பேசியிருந்து மீர்ஷம் போனான்.

அப்பால் முசியே பிலவான் கோட்டைகளுக்கு பலன் சாரிட்டு நிலுவை யெழுதிக்கொண்டு வந்தான். அதிலே சாறுபக் கிடங்கும்பேரிலே ஆறுயிரத்து சிலவானம் ரூபாய் நிலுவை யெழுதியிருந்ததைப் பார்த்து என்னை அழைத்து யித்தனை ரூபாய் யேன் வைத்திருந்தாய் செலுத்திப்போடாமல் யென்று கேட்டார். இத்தனை கொடுக்கவேண்டியிராது. இங்கிரீசுக்காறர் கலகத்தும்போது யேழெட்டு மாசம் துண்டு துண்டாய் விக்க வாண்டாமென்று நிறுத்திப்போட்டார்கள் அந்தப் பணமாத்திரம் நிக்கும் மத்தப் பணம் நூறு விறுகனைறக்குறைய சென்றிருக் கும் யென்று சொன்னதுக்கு இது இந்த வருஷம் ஆனி மீ மட்டுக்கும் நிலுவையாமென்று கேட்டார். அதுக்கு முசியே பிலவுவான் சொன்னது போன ௵ ஆனி மீ வரைக்கும் யென்று சொன்னான். ஆனாலிந்தமட்டுக்கும் நிலுவை பார்த்துச் சொல்லவேண்டியதென்று சொல்லி கும்பினிருக்குப் பவழச் சம்மதியும்—பணம் காசு கொடுக்கவேணுமே யென்று கேட்டார் குடுக்கவேணுமென்கிறதென்ன அபத்தமாய் வெகுசாய் நஷ்டம் வந்தது உங்களுக்கு நன்றாய்த் தெரியுமே நான் சிலவழிச்சுப் போடவில்லே பின்னை யொருவிதமாய்ப் போகவில்லை இங்கிலீசுக் காறர் கலாபம் வந்து இத்தனை நஷ்டம் வந்தது.

கடலின்பேரிலேயும் யிருந்தாப்போலே யிருந்து வியாபாரம் பரிச்சேதமாய் நின்றுபோய் ஆறு வருஷகாலம் நீளத்திலே நின்று அதைத்தொட்டு யெந்த துலே பணம் அந்த துலேயிலே முழுகிப்போனபடியாலும் கடனுக்கு உள்ளானேன் யென் கிறது உங்கள் மனதுக்கு நன்றாய்த் தெரியும். இந்தக் கடனிலே முழுகியிருக்கிற யென்னைச் சுகப்படுத்துகிறது உங்கள்பேரிலே விழுந்த பாரமென்று சொன்னதுக்கு சும்மாயிருந்து அப்பால் முசியே பிலவானுடனே மத்தக் கணக்கும் பேசிக்கொண்டு யிருந்தார். அப்பால் நான் யிப்புறத்திலே வந்தேன் 'அதின்

பேரிலே முசியே பிலவுவான் (M. Pilavoine) போன பிறகு யிப்போ நீ சரக்கு வாங்கியிருக்கிற பணம் சாடாவாய்ச் சேர்ந்துப்போச்சுதாவென்று கேட்டார். நான் வாங்கின பணத்துக்குப் போட்ட சரக்கு போக மத்தப் பணத்துக்கு நீங்கள் கூடச் சொன்னது எழுத்துப் பிடவை லீமாசா மசுக்கரை தினிசுகள் கூட்டியிருக்குது யிந்தப் பிரட்டாசி மீ கடசாரத்தில் அடைஞ்சுப் போமென்று சொன்னதுக்குச் சரியாய்ச் சென்று போமா யென்று கேட்டார். சரக்கு தயாராய் யிருக்குது எழுத்துப் பிடவை மாத்திரம் சதுரங்கப்பட்டணத்திலே தீருகிறார்கள். மத்த சரக்கெல்லாம் கூடி கிட்டங்கியிலே கையிருப்பா யிருக்குது நாளையத்தினம் வேணுமானாலும் கட்டுப்போட்டுத் தீத்துப் போடுகிறேன் யென்று சொன்னேன். கேட்ட பிறகு காம்பிராவிலே போனார். அப்பால் நான் பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

சாயங்காலம் ஆறு மணிக்கு முசியே கோற்னேயை துரையவர்களழைச்சனுப்பினார். அவன் துரையவர்களும் நானும் தோட்டத்திலேயிருந்து ஆற்காட்டு சேதி அவர் கேழ்க்க நான் சொல்லிக்கொண்டிருக்கச்சே முசியே கோற்னே வந்தான். வந்தவுடனே றெங்கப்பன் யிந்த ஹு நீலப்பிடவை யெழுத்துப் பிடவை லீமாசாவுக்கு பாப்புசெட்டி பேரெழுதிவிச்சு வாங்கின பணமிவ்வளவு அதுக்கு சரக்கு சென்றது இவ்வளவு யென்று கணக்குப் பார்த்து வந்து சொல்லென்று சொன்னார். பிடவை வரவெல்லாம் றங்கப்புள்ளை பேருக்கு வரவு வைத்து யிருக்குதென்று சொன்னான். அதுக்கென்ன அந்தப் பேருக்கு வரவு வைத்து யிந்தப் பேருக்கு பைத்தெழுதிப் போடென்று சொன்னார் நல்லதென்று சொல்லி யென்னையும் நாளைக் காலத்தாலே கோட்டையை வரச்சொல்லி சொல்லிப்போட்டு போறவன் நாளைக்கு நாயித்துக்கிழமையாச்சே ஆனாலும் பூசையான பிறகு பார்ப்போம் வாவென்று சொல்லிப்போட்டுப் போனான். அப்பால் துரை அவர்களும் தோட்டத்திலே யிருந்தவர் சாலையே போனார் நானும் முசியே கோற்னேத்துடனே பேசியிருந்தார் அப்போ நான் பாக்கு கிடங்கியே வந்தேன். மமுதல்லிகான் திருக்கோவலூர் யேரி யெதிவாயிலே இறங்கியிருக்கிறானேயல்லாமல் அப்பால் போகவில்லை யென்று வேகுக்காறர் வந்து சொன்ன சேதி துரையவர்களுக்கு யெட்டு மணிக்குச் சொல்லி அப்பால் வீட்டுக்குப் போனேன்.

**1750 ஸ்ரீ செப்தம்பர் மீ 6 உ பிறமோதூத ஸ்ரீ ஆவணி மீ 25 உ ஆதிவாரம்.**

இத்தனள் காலத்தாலே துரையவர்கள் கோவிலுக்குப் போய் பூசை கேட்டு வந்தவுடனே என்னையழைச்சு விருத்தா சலக் கோட்டையை ஒப்பிச்சுப் போடுகிறோமென்றும் அந்தக் கோட்டையிலே யிருக்கிற சமேதார்கள் வகையறு வகையறுவிலே கேட்டனுப்பிவிச்சபடிக்கி கவில் யெழுதியிருந்தோமே இப்போ பிறநூறு சிப்பாய்களையும் நாற்பது சுவார்களையும் அனுப்பி விச்சால் நாங்களாய்க் கோட்டையை விட்டுப்போட்டு அவர்கள் மனுஷருப்ப் போனர்களென்கிற பதிலாமையில்லாமல் கோட்டை பிடிக்க அவர்கள் மனுஷர்கள் வந்தார்கள் அவர்களுடனே பிலத்து சண்டை கொடுக்கப் பெலனிருக்குதா கவிலே வாங்கிக்கொண்டு கோட்டையை ஒப்பிச்சுப் போடுகிறோமென்று சொல்லி அனுப் பினர்களாம் அதின்பேரிலே பிறநூறு சிப்பாய்களையும் நாற்பது சுவார்களையும் விருத்தாசலம் கோட்டையிலே போயிருக்கச் சொல்லி அனுப்பினர்களாம் விருத்தாசலத்துக்குந் திருவீதிக் கும் பறங்கி யேழரை காதம் யெட்டுக் காதமுண்டென்று சொன் னேன். வெங்கிட்டாம்பேட்டைக்கும் திருவீதிக்கும் யெத்தனை காதமுண்டென்று கேட்டார். நாலு காதமுண்டென்று சொன் னேன். அப்பால் மொக்கா யாத்திரைக்கும் கோஸ்தேமால்பார் (Mochat malabar coast) யாத்திரைக்கும் கேமிச்ச லான்சோ மென்கிற கொம்பஞ்சி (Ship-Anson)க் கப்பலை பங்காளத்துக் குப் போகச்சொல்லிப் பயணம் பண்ணினர்கள். அந்தக் கப்பல் மச்சிலிபந்தர் பிடிச்சுப் போகச்சொல்லிச் சொன்னர். அந்தக் கப்பலின்பேரிலே 150 நூத்தன்பது சிப்பாயிகளையும் அன்பது பேர் வெள்ளைக்காறரையும் வத்தியனுப்புகிறோம் அங்கேயிருந்து வந்த சோடாக்காறர்கள் தேவடி முன்னே நின்றவர்களுடனே போகச்சொல்லி சொன்னேன். அவர்களும் போனர்கள். அப்பால் பதினொரு வேளைக்கு திருவீதியிலிருந்தும் சேக்கசேனும் முசியே புரி வகையறுவும் பயணமாயிருக்கிறர்கள் முன் போனவர்களும் யிவர்களும் வந்தவாசிப் பாட்டையாய் ஆற்காட்டுக்குப் போய் காணுமென்றும் வெளியிலே பிறன்சுக்காறர் பேர் சொன்னலும் துலுக்கர்கள் குதிரைகள் கூட தண்ணீர் குடிக்கிறதில்லை யென் றும் அப்படி முக்கியமெல்லாம் விபேகமும் பேச்சு யில்லாமலிருக்

கப்பட்ட மிருகங்களுக்குத்தானே அந்தக் கெதியானால் மனுஷர் களுக்கு யென்ன கெதியாயிருக்குமென்று அதின்பேரிலே பாத் துக்கொள்ளவேணும் யென்று எழுதி வந்தது என்று சொன் னேன். அது அபத்தமல்லாமென்று சொன்னார். அப்பால் கும்பி னீர் வர்த்தகர்களுக்கு முதலாய் தாக்கீதுபண்ணி சாக்குகள் சுறுக்கிலே வந்து சேர்ப்பாரென்று சொன்னார். மமுதல்லிகான் போய் அஞ்சாறு நாளாச்சுதே அவன் ஓடிப்போன நாள் முதலாய் தலைகளுக்குப் பணம் கட்டுகிறதும் அங்கங்கே முன் கூடியிருக்த பிடவைகளை அனுப்பி விக்கச்சொல்லியும் யெழுதி யனுப்பினார்களென்று சொன்னேன். நல்லது யென்று சொன்னார். அப்பால் சென்னபட்டணத்திலே மேஸ்தர் பெரேங்க யென் கிறவன் வற்த்தகர்களை அனியாயம் பண்ணுகிறதும் வற்த்தகர் கள் குடிவிலகு அப்பால்படுகிறதும் சியாமுசாக் கப்பல்காறன் கொஸ்தாந்தி (Constantine) யென்கிறவன் முதலான தறணு சேரி சியாம் முதலான யிடங்களிலே யிருந்து வந்த கப்பல் காறர்களை பண்ணுகிற அநியாயம் முன்னுக்கு ஒரு கப்பல்காறர் களும் சென்னபட்டணத்துக்கு வருகிறதில்லை யென்று சொன் னார்கள் யென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள் என்று சொன் னேன். மெய்தானபடிதானே கேழ்விப்பட்டேன் என்று சொன் னார் அந்தமட்டுக்கும் நான் அனுப்பிவிச்சுக்கொண்டு பாக்கு கிடக்கியே வந்தேன்.

இத்தனாள் பகலைக்கு மேலாக ஆறு மணிக்கு ஆற்காட்டிலே யிருக்கிற நம்முட வக்கீல் யெழுதின ஓலை வந்தது அதன் வயணம். நசறுசங்கு குத்தப்பா பண்டிகைக்கு வெளியிலே யீது காவுக்குப் போரத்துக்கு ஸ்நான்ம் பண்ணி உடுப்புகளில் உடுத் திக்கொண்டு பெகு சனனுகத்துடனே அம்பாரியின்பேரிலேறி னார். அப்பால் கடப்பை சுபேதாரன் அவர் தம்பியும் யெதினார் கள் கந்தனூர் சுபேதாரன் வகையறு சுபேதார்களும் நானவா சுகான் மோறோபண்டிதர் வகையறு முத்தசத்திகணதிவாக்கள் வகையறுக்களும் அவரவர் தங்கள் தங்கள் வாகனத்தின்பேரிலே யேறி நவபோத்து முதலான வாத்தியங்கள் மாயிமறுகதசு (Muttasadis) முதலான பிருதுகளும் சமேதாறர்களும் சுவார் கள் வகையறு சமஸ்தமான பேர்களும் போய் பண்டிகைக்கு குத்தப்பாதொழுதது. படிச்சு ஆனை பிறப்பாடு வாறபோது பொன்

னுலே பூ புண்ணி ரெண்டு பாரிசமும் யெறைச்சுக்கொண்டு வந்தா ரென்றும் யிப்படி வரச்சே பாசாரிலே மீர்சத்து யேறிவந்த யானை பேரய் ஙாசறுசங்கு யேறிவந்த ..........................

**1750 ஶு செப்த்தெம்பர் மீ 8 உ பிறமோதூத ஶு ஆவணி மீ 27 உ அங்காரவாரம்.**

இத்தனுள் காலத்தாலே பிறபுவினிடத்துக்குப் போன விடத்திலே அவர் கோவிலுக்குப் போகப் பயணமாயிருந்தார். ஆற்காட்டு சேதி யேதாகிலும் வந்துதா யென்று கேட்டார் யில்லை யென்று சொன்னேன். மமுதல்லிகான் திருக்கோவிலூரி லிருந்தவன் திருவண்ணாமலையைப் போய் சேர்ந்தானுவென்று கேட்டார். பேரய்ச் சேர்ந்தான் அங்கே சமேதாரர் சிப்பாயிகள் சம்பள நிமித்தியம் தங்கா பண்ணுகிறார்களென்று சொன்னேன். செஞ்சியிலே சிறிது குதிரைகள் சுவார்கள் சேர்ந்திருந்தவர்கள் யென்னமாயானுர்களென்று கேட்டார். அதுக்கு நான் சொன் னது நம்முட பவுன்சு விழுப்புறம் போன சேதி கேட்டதே சிறிது குதிரைகள் ஆற்காட்டே போய் சேர்ந்தது சிறிது சுவார் கள் திருவண்ணாமலையே போச்சுது என்று சொன்னேன். ஆற் காட்டிலேயிருந்து மூன்றாம்நாள் வந்த சேதியேயல்லாமல் மறு படி வராமலிருக்கிறதென்னவென்று கோபமாய்ச் சொல்லிப் போட்டு கோவிலுக்குப் பேரய்விட்டார். நானும் பாக்குக் கிடங் கியே வந்தேன்.

அப்பால் கோவிலுக்குப் போய் வந்தவுடனே போய் கான் பிச்சக்கொண்டதுக்கு வண்ணாந்துரையைப் போய் விசாரித்துவா சுருக்கிலே முஸ்தித்து ஆகவேணுமென்று சொன்னுர். நல்ல தென்று வண்ணாந்துரைக்கு அங்கே யிருக்கிற காரியக்காரனையும் வண்ணாரையும் தாக்கீதுபண்ணி அப்பால் பாக்கு கிடங்கியே வந்து சாப்பாட்டு வேளைக்கு வீட்டுக்குப் போனேன். பகலைக்கு மேலாக ஆறு மணி வேளைக்கு அழைச்சனுப்பிவித்து சேதி யேதாகிலும் வந்ததாவென்று கேட்டார். வரயில்லை யென்று சொன்னேன். அப்பால் சந்தாசாயபு மகனும் பிள்ளையும் அஞ் சாறு குதிரைக்காறர்களுமாய் வந்தப் பீகூர் யெழுந்தருளபண்ணிக் கொண்டு வருகிற வேடிக்கைப் பார்க்க வந்தவர்கள் நான் வண்டி யின்பேரிலே வரச்சே யென்னைப் பார்த்து அப்பறத்திலே

போய் நின்று சூத்தைக் காட்டிக்கொண்டு அந்தப் பக்கமாய் நின்றான். யிப்படிப்பட்ட அவமரியாதையாய் நடப்பிக்குற தேதென்று பெரு கோபமாய்ச் சொன்னார். அப்போ நான் யோசனைபண்ணி நினைத்தாலும் தோத்தாது அப்படி நினையாம லிருக்க சமையத்துக்கு உதவியாய்த் தோத்தினதென்னவென் றால் துலுக்கருக்குள்ளே ஒரு வாடிக்கை தகப்பனார் ஆகட்டும் காபந்து ஆகட்டும் தனக்குப் பெரியவர்களா யிருக்கிறவர்கள் யெதிரே வரக் கண்டால் முகத்துக்கு முன்னே காண்பிச்சுக் கொள்ளுகிற வாடிக்கை யில்லை அப்பாலே மறவாய் போய் நிற்குறதேயல்லாமல் முகத்துக்கு முன்னே வந்து நிற்குற வாடிக்கை யில்லை யிது தமிழருக்குள்ளேயும் வாடிக்கைதான் ஆனபடியினாலே உங்கள் ரூசாசாயபு தகப்பன் மரியாதையாயி யெண்ணிக்கொண்டிருக்கிறபடியினாலே அந்தப்படி மறவாய் நின் றதே அல்லாமல் மத்தப்படி அல்லவென்று சொன்னேன். அப்படியானால் ஞாயந்தானென்று ஒத்துக்கொண்டார். அப்பால் தோஸ்து மகம்மது மதனாந்தபண்டிதனுடனே இந்த வேளைக்கு நங்கப்பிள்ளை ரூசாசாயபுக்குந் துரையவர்களுக்கும் வரப்போகிற பொல்லாப்புக்கு துரையவர்கள் மனதுக்கு சந்தோஷம் வரும்படி சொல்லிப்போட்டது பெரிய காரியம் பண்ணினாரென்றும் மதனாந்தபண்டிதருடனே சொல்ல அன்னேரத்துக்கு பின்னை ஒரு விதமாய் தோத்தாமலிப்படித் தோத்திச் சொன்னது சந்தாசாயபுடைய நல்ல வேளை யென்று சொல்லி ஒருத்தருக்கு ஒருத்தர் பேசி வந்தார்கள். அப்பால் பாக்கு கிடங்கியே பந்த லிலே வந்தவுடனே மீரு அஷம் யிருந்தவுடனே மதனாந்தபண்டி தனும் தோஸ்து மகம்மதும் துரையவர்களிடத்தில் ரூசாசாயபுவி னுடைய பிறஸ்தாபம் நடந்ததும் நங்கப்பன் அதுக்கு சொன்ன வுத்திரவுமின்ன மினப்படி யென்று சொன்னார்கள். அதுக்கு யிந்த வேளையிலே யிருக்கிற கலாபத்துக்கு நீர் சந்தாசாயபு வினுடைய நல்ல வேளையினுட ரூபம் உம்முட ரூபமாய் வந்து நிறுவாகம்பண்ணித் தீத்துதென்று உபசாரஞ் சொல்லி அப்பால் இரண்டு கரிசை நெல்லும் மூனு கரிசை கோதும்பையும் சந்தா சாயபு அவர்கள் துரை அவர்களை கேழ்க்கச் சொன்னாரென்று சொன்னார்.

அதுக்கு அப்போ சமையமல்ல னாளைக்காகட்டும் யென்று சொல்லிப் போகச் சொன்னேன். போறவர் சந்தாசாயபுக்கும்

ருசாசாயபுக்கும் நடந்த பூருவோத்திரஞ் சொல்லுகிறேன் யென்று சொல்லிப் போட்டுப் போனார்.

1750 ௵ செப்த்தெம்பர் ௴ 9 ௨ பிறமோதூத ௵ ஆவணி ௴ 28 ௨ புதவாரம்

இத்தனை காலத்தாலே யெட்டு மணிக்கு துரையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு ஆற்காட்டு சேதி வந்துதாவென்று கேட்டார். வந்துதென்று சொன்னேன். குத்பா பண்டிகைக்கு கொண்டாடி அவரவர் நதிர் வைத்துக்கொண்டு ஆனபிற்பாடு நாசறுசங்கு விட்டுக்குப் போனார். போகச்சே மமுதல்லிக்கான் சேதி விசாரிக்கச்சொல்லி போனபிற்பாடு சானவாசுகான் அறுக்காறுக்களை அழைச்சு அங்கங்கே போகச்சொல்லி உத்தாரங் குடுத்துப் போகச் சொன்னா. மறுநாள் தறுபாறு பண்ணி மிறுத்துசல்லிகானைப் பார்த்து நீ போய் புதுச்சேரியார்பேரிலே சண்டை பண்ணச்சொல்லி சொன்னாரென்றும் மீர்சத்தைப் பார்த்து சண்டைக்குப் போகச்சொன்னால் நிறுவாகம் பண்ணுவானென்றும் கோடி ரூபா ஆகப் பண்ணிக் கொடுக்கிறோமென்றும் சொன்னாய் உன் பேச்சைக் கேட்டு நான் மமுதல்லிகானுக்கு சுபா குடுத்து பதினாயிரம் குதிரையும் கூடக் கூட்டி ரெண்டாயிரம் ச்சாலையும் குடுத்து ருச்சுர் ப்ராணம் அய்யாயிரம் பாணமும் கொடுத்து அனுப்பினதுக்கு சறுவ சோபனமும் கொடுத்துப் போட்டு கடசியிலே ஓடிவந்து என் முகத்திலே கறுப்பையும் பூசி நான் யிப்போ நீயாக் காட்டும் போய் அந்தக் கருப்பைக் கழுவிப் போடவேணும் யில்லாவிட்டால் உன்னை விடத்தக்கதில்லை. யென்று வெகு கோபமாய் சொன்னதுமல்லாமல் நீ கொடுப்பிக்கிறோமென்று சொன்ன கோடி ரூபாயிக்குச் சகலமும் பத்து லக்ஷம் ரூபாயெல்லாம் வந்திருக்குது. மத்தப் பணம் உன் கையிலே வாங்குவாமெனன்று பெகு கோபம் பண்ணி நீயும் மிருத்துசல்லிகானும் போகவேணும் யென்று சொன்னார் ஆமதுக்கவர்கள் நம்மைப் போகச்சொல்லி மெய்பாச் சொன்னால் ஓடிப்போறது உக்குத்தமேயல்லாமல் மத்தப்படி வேறே யோசனை யிருக்குமென்று யோசனை பண்ணிக்கொண்டு பிறப்பட்டுவிட்டே போனார்களென்று சான்வாசுகான் அழைச்சு வெகு கோபம்பண்ணிக்கொண்டு பிறப்பட்டு விட்டே போனார்க

ளென்று சானவாசகான் அழைச்சு பெகு கோபம் பண்ணி நீ புதுச்சேரியாருக்கு உளவாயிருந்து யித்தனை காரியமும் நடப்பிக் குறாய் யென்றும் சொன்னதுக்கு நான் அப்படி சுவாமி துரோகம் பண்ணுகிறவனல்லவென்று சொல்லவேண்டியபடிக்குச் சொல்லி அப்பால் மமுதல்லிக்கானை அனுப்பிவிக்கிறதைத்தொட்டு அப கீர்த்தி வருகிறதேயல்லாமல் யிதைத்தொட்டு கீர்த்தி வரத் தக்கதில்லை யென்று நான் சொல்லயில்லையா அப்போ அவனவன் தன் தன் காரியம் நிமித்தியம் சரிப்போனபடிக்கு சொன்ன படிக்கி தேவரீரவர்கள் நடத்தினபடியினாலே யென் கடன் சொல்லவேண்டியது சொன்னாப்போலே ஆச்சுதே பிசமானுக் குச் சம்மதியானபடியினாலே அப்படியே யிருந்தேனென்று சொன்னதுக்கு கோபமே பிறதாபமாய் நான்தானே போய் சண்டை குடுக்கிறேன் யென்று சொன்னதாகவும் ஆரூரிலே யிருந்தும் சீக்கிறம் வந்து அபாங்காபாத்து வந்து சேரச் சொல்லி யெழுதி வந்ததாகவும் பாசிருயன் குமாரன் னுவும் சுருக்கிலே வந்து சேரச்சொல்லி யெழுதியனுப்பினதாகவும் பேஷ்கானு வடக்கே கொண்டுபோய்ப் போட்டதாகவும் பதினஞ்சாந்தாரிக்கு சவாரிலே பயணம் போறானென்றும் யெழுதி வந்ததென்று சொன்னேன். மமுதல்லிக்கான் சேதி யென்னவென்று கேட்டார். திருவண்ணாமலையிலேதானே யிருக் கிறான் அப்பாலே போனவனல்ல சமேதாரர்கள் சிப்பாயிகள் வகையறா சாமான்கள் சம்பளக்காறர்கள் மெத்த சுறுக்குப் பண் ணுகுறார்களாம் நாசறுசங்கு மமுதல்லிக்கானை வரச்சொல்லி யெழுதியனுப்பினாலும் வந்தவர்களும் வெகு சறுக்குப்பண்ணி வரச்சொல்லி அழைக்கிறார்களாம் யிப்படி யிருக்குதென்று சேதி வந்ததென்று சொன்னேன். அப்பால் கப்பே குடிச்சு ஆன பிற்பாடு நீ போன வருஷம் வாங்கின பணத்துக்கு சரக்குப் போட்டது எம்மாத்திரம் நீ கொடுக்கவேண்டியதென்று கேட் டார். 40.000 வராகன் வாங்கினது அதுக்கு 28.000 விறாகனுக்கு சரக்கு சென்னது மத்தப் பன்னீராயிரம் 12.000 விறாகனுக்கு செல்லவேண்டியதுக்கு எழுத்துப் பிடவை ஆறாயிரம் வராகன் எழுத்துச் சீட்டிலேங்கீசு வகையறாவும் மசக்கரை தினிசு விமாசா காங்கு பிடவை கூலி வகையறா ஆயிரம் வராகனுது யிப்போ தயாறாயிருக்குது யெப்போ கட்டுப் போடச் சொன்

ஞல் அப்போ கட்டுப்போட்டுத் தீத்துப் போடுவிக்குறேன் என்று சொன்னேன்.

ஆனுலுன் கணக்கு யெழுதி யிருக்கிறதைக் கொண்டு வாவென்று சொன்னுர் அந்தப்படிக்கு கொண்டுபோய் கணக்கை படிச்சு சொன்னேன். நல்லது இந்த சாக்கு நிற்கிறது பிறத்தி யேகமாய் செலுத்திப்போட்டு இந்த செப்தெம்பர் மீ முதல் சனேரி மீ வரைக்கும் நீ எத்தனே வறுகனுக்கு கூட்டுவா யென்று கேட்டார். அன்பதினுயிரம் வறுகனுக்கு கூட்டலாம் யென்று சொன்னேன். அப்படியல்ல லக்ஷம் வறுகனுக்கு சாக்கு கூட்டவேணுமென்று சொன்னுர். சொன்னுப்போலே சாக்கு கூட்ட கவையில்லேபாவென்றும் சொன்னேன் அப்புறம் காம்பிறு விலே போனுர். நான் யோசனேபண்ணி யிப்போ வாங்கி ரூபா யிலே நூத்துக்கு பத்து விறுகன் அடிச்சுக்கொண்டு போகுது இப்போ ஒன்றும் சொல்லப்போகாதென்றும் சாடையாய்ப் பாக்கு கிடங்கியே வந்தேன் அரமணிக்கு சாயங்காலம் சந்தா சாயபு பெண்சாதி வந்தாள் துறவாசாவுக்கு சீட்டு குடுக்கவேணு மென்று மீரஷம் வந்து கேட்டான் அவனே அழைத்துப் போய் துரை முன்பாக விட்டு துரை கையெழுத்துப்பட வழுதாவூர் வாசற்படிக்கு சீட்டும் வாங்கிக்கொடுக்க தானியமும் கோதுமை யும் வேணுமென்று கேட்டதுக்கு அஞ்சு கரிசை கோதும்பை யும் ஒரு கரிசை நெல்லும் குடுக்கிறோமென்றும் சொல்லிப் போகச்சொன்னுர். அப்பால் ஒன்பதரை மணிக்கு சந்தாசாயபு மனுஷன் வந்து வாசற்படிக்கு குடுத்த காகிதத்தை மீருஷம் சாயபு பேர்க்கடிச்சுப் போட்டான் சந்தாசாயபு பெண்சாதி ஆனுல் வாசற்படியண்டை வந்து காத்திருக்கிறுர்களென்று சொன்னுன்.

ஆனுலிப்போ துரையவர்கள் படுத்துக்கொள்ளுவார்கள் நீபோய்க்கேதியோகு யென்று ஒரு சட்டைக்காறன் இருக் கிறுன் அவனுடனே யெச்சரித்தால் அவன் வாங்கி கொடுப் பான். போவென்று சொல்லிப் போகச்சொன்னேன். அந்தப் படிக்குப் போய் கியோகு வாசற்படி சீட்டு துரையிடம் வாங்கி வந்தான். இது கொண்டுபோறதுக்குள்ளே வழுதாவூர் வாசற்படி அண்டையிலே யிருந்தவர்கள் சென்னப்பட்டணம் வாசற்படிக்கு வந்தார்கள். சென்னப்பட்டணத்து வாசற்படிக்காறன் வழுதாவூர்

வாசற்படிக்கு அனுப்பினான். அதுக்கு அவன் நான் திறக்கப் போகாது யென்று ஒரு கொபுரலைப் போய் துரையவர்களைப் போய் கேட்டு வரச்சொல்லி அனுப்பினான். துரையவர்களை வந்து கேட்டதுக்கு உள்ளே விட்டுவிடச் சொல்லி யனுப்பினார். அவன் போறதுக்குள்ளே வண்ணார் துரையண்டையிலே கட்டி யிருக்கிற சாவடியிலே போய் இறங்கினார்கள் இந்தப்படி ஓடித் திரிஞ்சு கடசியிலே உள்ளே வராமல் வண்ணார்துரையிலே கட்டி யிருக்கிற சாவடியிலே யிறங்கி யிருந்தார்கள்.

அப்பால் ராத்திரி பதினொரு மணிக்கு துரையவர்களழைச் சனுப்பிவிச்சு மமூதல்லிகான் திருச்சினாப்பள்ளியே ஓடிப்போறா னென்று கபுறு வந்தது யென்று முசியே தொத்தேல் யெழுதி யனுப்பிவிச்சான் ஆனபடியினாலே சந்தாசாயபு அண்டைக்குப் போய் திருச்சினாப்பள்ளிக் கில்லேதாறனுக்கு ஒரு காகிதம் யெழுதியனுப்பச் சொல்லு யென்ன வயனமென்று சொன்னால் மமூதல்லிக்கான் சகலமும் போக்கடிச்சுக்கொண்டு காயத்துடனே ஓடிவாறான். அவனை கோட்டைக்குள்ளே யழைக்கவேண்டாம் அவன் வந்து கோட்டை கிட்ட பீரங்கினாலு பீரங்கிப் போட்டு சேரவொட்டாமல் பண்ணினால் உனக்கு ஒரு சாகீர் லக்ஷம் ரூபாயிலேயும் விட்டு ஒரு கில்லாவும் குடுத்து உன் பிள்ளையி னுடைய தலைமுறைக்குங் கூட நடப்பிக்குறோமென்று யெழுதி யனுப்பச்சொல்லி நீயும் யென் கடுதாசியாய் ஒரு காகிதம் மேலே யெழுதி அனுப்பென்று சொன்ன வயணமாம்படிக்கு எழுதி கில்லேதாரன்பேர் தெரியுமாவென்று கேட்டார். எனக்குத் தெரி யாது சந்தாசாயபுக்கும் தெரியாதென்று சொன்னேன். ஆனா லதுக்கு எப்படியென்று கேட்டார். திருச்சிராப்பள்ளி கில்லே தாரனென்கிற தெழுதி அனுப்புகிறது யென்று சொன்னேன். அந்தப்படி யெழுதியனுப்பு யென்று சொன்னார் நல்லதென்று சொல்லி மதனாந்தபண்டிதரை அழைச்சு அவரும் நானும் சந்தா சாயபு வீட்டுக்குப் போய் அவர் காகிதம் ஒன்றெழுதி விச்சு ரெண்டு காகிதமும் சேவுகர் கையில் கொடுத்து திருச்சிராப் பள்ளிக்குப் போகச்சொல்லிப் போட்டு நாங்களும் ரெண்டு மணிக்கு வீட்டுக்குப் போனோம்.

1750 ஞு செத்தேம்பர் மீ 10 உ பிரமோதூத ஞு ஆவணி மீ 29 உ குருவாரம்.

இத்தனுள் காலத்தாலே துரைபவர்களிடத்துக்குப் போன விடத்திலே நேத்து ராத்திரி திருச்சிறுப்பள்ளி கில்லேதார னுக்கு காகிதம் எழுதி அனுப்பச் சொன்னேன் சத்தா சாயபு காகிதம் யெழுதிக் கொடுத்தாராவென்று கேட்டார் யெழுதிக் கொடுத்தேமென்று சொன்னேன். நம்முட காகிதங் கூட அவர் காகிதங் கூட அவர்களிரெண்டு சேவுகர்களை நேமிச்சு அவர்கள் அவர்கள் கையிலே குடுத்தனுப்பச் சொன்னபடிக்கு அனுப்பிவிச்சேன் யென்று சொன்னேன். மமுதல்லிகான் சேதி யென்னமென்று கேட்டார் திருவண்ணாமலையிலிருக்கச்சே நாசறு சக்கு காகிதம் நீர் ஆற்காட்டுக்கு வரவேண்டாம் செஞ்சியே போய் சேரச்சொல்லி தான் பவுன்சு அனுப்பிவிக்குறோமென்று மிப்படியாக யெழுதிவந்ததுக்கு பதில் அவர்கள் பவுன்சுடனே தொடர்ந்து வாறார்கள் நானும் பெசான் சாமியுடனே யிருக்கிறேன் போறதிலே கிறுகையில்லை ஆனாலும் உம்முட ஒருதிக்கு ஒயமேதக ரிடவேண்டியது சறாரனபடியினால் போறேனென்று எழுதிக் கொண்டதாய் செஞ்சிக்கு வரப்போறதாகவுமிப்படியாக சேதி வந்தமேதன்று சொன்னதுக்கு அத்தனை பவுன்சுடனேயும் அத்தனை சான்சாமியுடனே வரச்சே யெகு பயந்து வந்து சுடகி முறிஞ்சு ஓடிப்போனவனிமேல் நம்முட பவுன்சு பாரிசம் யாருண் அப்படி ஆற்காட்டுக்கும் போறதில்லை திருச்சிறுப்பள்ளியே போவா னென்று சொல்லி ஏதாகிலும் பிடவை சேருகிறதை சேக்கிற மத்துக்கு கட்டுவிழுப்பாரென்று சொன்னார். சவ்வமேதன்று சொன்னேன் மத்தப்படி வேறே யெழுகத்தக்க அதிசெயமான சேதியில்லை பகலைக்கு மேளாகவும் யெப்போதும் குஸ்துமாது சாயங்காலம் மழைப் பிடிச்ச சேதி பாதி கேட்டார்.

1750 ஞு செப்தம்பர் மீ 11 உ பிரமோதூத ஞு ஆவணி மீ 30 உ சுக்கிறவாரம்.

இத்தனுள் காலத்தாலே துரையவர்கள் சேவுகன் ஆறுமை மணிக்கு வந்து அழைத்தான். போனவுடனே முசியே புசியும் சேக்கசேனும் போனவர்கள் முட்டத்தூரண்டையிலே போய்ச் சேர்ந்தார்கள் இன்றைபத்தினம் செஞ்சி போய் சேருவார்க

ளென்று சொன்னூர் முசியே தொத்தேல் முசியே லாசு முசபர் கானிவர்கள் அவர்களுக்கிவர்கள் யிறங்கி யிருக்கிற யிடத்துக்கும் மூனு மணி நாலு மணி நேரம் வழியுண்டு யிறங்கி யிருக்கிற யிடம் முசியே புசி போய் சேர்ந்த மறுநாள் முசியே தொத்தே லிவர்கள் போய்ச் சேருவார்கள் யிவர்களிருக்கிற ஊர் தும்பை யூரென்று சொல்லுவார்கள் என்று யெழுதி யிருந்தது யென்று சொன்னதுக்கு துமன்பயூர்விட்டு நேர்முகமாய் கேமூர் போய்ச் சேர்ந்தார்களென்று யெழுதி வந்துதென்று சொன்னூர். மமூதல் லிகான் யெங்கே யிருக்கிறூர் யென்று கேட்டார். செஞ்சிக்கு வடவண்டை ஆத்துக்கப்பிறம் பத்தேபேட்டை யென்றிருக்குது அந்தப் பத்தேபேட்டையிலே வந்திறங்கி யிருக்கிறதை யெழுதி வந்துதென்று சொன்னதுக்கு அவன் ஓடிப்போனவன் பேசாம லிருக்கிறவன் யெப்படி வருவான் வரமாட்டான் உனக்கெழுதின வன் போய் எழுதியனுப்பினுன் யென்று சொன்னூர். யெழுதி வந்த சேதியை சொன்னேன். ஆனலின்னங் கபுறு வரும் வந்தவுடனே தெரியுமென்று லகுவாய்ச் சொன்னேன் திருவண் ணுமலையிலே யிருந்தவன் கலசபாக்கத்தின்பேரிலே போனூரின் வழியாய் ஆற்காட்டைப் போகவேணுமென்று போனவன் அவ் விடம் விட்டு கிழக்கே செஞ்சியை வருவானென்று சொன்னூர். நாசறுசங்கு மமுதல்லிகானுக்கு யெழுதியனுப்பினது நீ சறுவா ததுமனுக வரவேண்டாம் செஞ்சியைப் போய் சேரச்சொல்லியும் தான் கும்மக்கு அனுப்புகிறேம் யென்று யெழுதி அனுப்பி விச்சான். அதினுலே ஆற்காட்டே போற ரேக்கு விட்டு செஞ் சியே வந்து சேர்ந்தானென்று யெழுதி வந்தது யென்று சொன் னேன் என்று சொன்னதுக்கு பேய்யா யெண்ணுமல்த்தானே வுத்தரம் சொன்னூர். ஆற்காட்டு சேதி யேதாகிலும் வந்ததா வென்று கேட்டார். நாசறுசங்கு வெளிக்கு ஆளப்பட்டாயி நான் தானே போறேனென்று அங்கங்கே போயிருக்கிற பவுன்சுகளை அழைப்பிக்கச்சொல்லி முன்னேதானே உத்தாரம் குடுத்து யிருந்தானே இப்போ பின்னையும் பெகு சுருக்கிலே தோப்புக் கானுவும் பவுஞ்சுகளும் சுறுக்கிலே பவுன்சு சேரத்தக்கதாக அழைப்பிக்கச்சொல்லி உத்தாரம் குடுத்தார் யென்றும் அப்துல் நபிகான் யிம்மத்து பாதுர்கான் வகையறுக்களை யிறப்படச் சொன்னுல் மமுதல்லிகான் பதினுயிரம் சுவார்களுடனே போய்

... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...

1750 ௵ செத்தேம்பர் மீ 28 உ பிரமோதூத ௵ புரட்டாசி மீ 16 உ சோமவாரம்.

இத்தனாள் கூடலூரிலே யிருந்து எழுதி வந்த வயணம் என்னவென்றால் தேவனாம்பட்டணம் துரைத்தனத்துக்கும் பங்காளத்திலிருந்து வந்த மேஸ்தர் சாந்தாசு யென்கிறவர் பிரட்டாசி மீ 16 உ சோமவாரம் மத்தியானம் பதினொரு மணிக்கு புதுச்சேரி துரைக்கு நேர் போயின கப்பல் அப்பறம் போகச்சே ஒரு மணி நேரத்துக்கு வழியிலேதானே கலங்கும் பேரிலே யிறங்கி நாலு மணிக்கி தேவனாம்பட்டணம் துறையிலே வந்து யிறங்கினார் யெதிரே மேசர் சாவியைக் கொண்டுபோய் கொடுத்து வெகு மரியாதைபண்ணி அழைச்சுக்கொண்டு வந்தார் வந்தவுடனே கோட்டையிலே மெத்தையின்மேலே யேறினார்கள் கொஞ்சம் தித்திப்பு சாப்பிட்டு அஞ்சு மணிக்கு சகல சம்பிரமத் துடனே சவாரி பிறப்பட்டார்கள் மேசரும் துரையும் ஒரு வண்டியிலேயும் பிளேரும் பின்னையொரு வண்டியின்பேரிலேயும் மாசு யென்கிறவனும் ஒரு வண்டியின்பேரிலேயும் போனார்கள். நாளது மீ 17 உ காலமே யெட்டு மணிக்கு துரையுடனே வந்த கப்பல் கிறிது தட்டுமுட்டு வெள்ளி பெட்டிகள் வந்து யிறங்கித்து பத்து மணிக்குமேல் பதினொரு மணி மட்டுக்கும் வந்த துரையும் மேசரும் கோப்பும் பின்னை ரெண்டுபேர் சாதிக்காறரும் குழுவல் கூடி பேசினார்கள். அவ்விடத்துக்கு துபாசிகள் வற்த்கள் தமிழர் ஆரும் போகாமல் கூடிப் பேசினார்கள் பேசினவுடனே பங்காளத்துக் கப்பல் பயணம்பண்ணி அனுப்பினார்கள் சாயங்காலம் துரை குமிசிலிலேதானே யிருந்துக்கொண்டு காகிதம் பத்திரம் பார்த்துக்கொண்டு யிருந்தார். 18 உ பதினொரு மணிக்கு சகலமான பேர் தமிழரையும் வெள்ளைக்காறரையும் அழைச்சு தமக்கு உத்தியோகம் ஆனதுக்கு கடுதாசி வாசித்துக் காண்பித்து 21 பீரங்கியும் போட்டார்கள். மேசர் சீமைக்கும் போறதாகவும் அவருடை உத்தியோகம் கோப்புக்கென்று சொல்லுகிறார்கள். சீமைக்குப் போறவர்களை மேஸ்தர் பிளேயர் மேசர் மேஸ்தர் மாசு யிவர்கள் மூனு பேரும் சீமைக்குப் போறார்கள். மேஸ்தர் கோப்பு வந்த துரையண்டை ரொம்ப சனுவாய் போக்கு வரத்தாயிருக்கிறார். தண்டு சமாச்சாரம் ஆறணிக்கப்புறம் சண்டை போட்டதாகச் சொல்லுகிறார்கள் அவர்கள் வக்கீல் ஒரு

பல்லக்குக்காறன் பத்து குதிரையுடனே வந்திருக்கிறன் அவனுக்கும் யின்னம் பேச்சுமுச்சு நடக்கவில்லே. யிப்போ வந்த துரை தண்டுக்கு யின்னம் காகித பத்திரமெழுதவில்லே பிடவை சிலே சிக்கிறமத்துக்கு முஸ்தீது பண்ணச்சொல்லி வற்தகருக்கு தாக்கீது சொன்னர்களாம். யிப்படியாக தேவனம்பட்டணத்திலே யிருந்து யெழுதி வந்தது.

1750 ஹூ ஒக்தோபர் மீ 8 உ பிறமோதூத ஹூ புறட்டாசி மீ 26 உ வியாழக்கிழமை.

இப்போதும் தேவனம்பட்டணத்திலேயிருந்து யெழுதி வந்த ஓலேப்படிக்குச் சமாச்சார வயணம் 25 உ வரைக்கும் சகல காரியமும் நன்மை வந்தவர் வெகு கட்டாக யிருக்கிறார் தாம் மாத்திரம் மெத்தைமேல் யிருக்கிறது ஆராகிலும் போகவேணுமென்றால் முதல் செந்திநேர் காவல் 2—வது செந்திநேர் குவாடுது காவல் மூணவது சேருவைக்காறர் காவல் நாலவது அவர் சொந்தம் துவாசி கிட்ட யிருந்து யின்னர் வந்திருக்கிறார்கள் யென்று கபுறு சொல்லுகிறது அவர் வரச் சொன்ன வித்தனே பேருக்கும் உத்தாரமான பிறகு விட்டுப் போகச் சொல்றது யில்லாவிட்டால் அந்தமட்டில் யிருக்கிறது துறைத்தனக்காறர் முதற்கொண்டு அப்படித்தானிதுவுமல்லாமல் மூந்தாம்நாள் ராத்திரி கோப்பை அழைப்பிச்சு நீ பிறன்சுக்காறருக்கு யிடங் கொடுத்து துலுக்கரை மோசம் பண்ணிவிடலாமா யிப்படி மோசம்பண்ணுகிற காரியத்துக்கு அவர்களுக்கு நம்பிக்கை சொல்லலாமாவென்று கோபம்பண்ணிப் பேசினாராம் அதின்பேரிலே அவர் சொன்னதுதானப்படி செய்த காரியமல்ல மேசர் உத்தாரப்படிக்கு செய்தேன். யென்று சொல்லி பின்னேயும் தம்முட சேவுக தற்மமும் சிறிது காரியமும் சொன்னர் மெய்தானென்று ஒத்துக்கொண்டு அந்தக் கோபம் அப்போ தானே பரிகாரமாச்சுது யென்று சொன்னர். இதுகளன்றைய தினம் நடப்பிச்சது மேஸ்தர் பிளேயர் யென்று சொன்னர்கள் மத்தப்படி கோப்பும் காவல் கட்டு யில்லாமல் மாசு வெளிக் காவல். மேசர் கோட்டைக்கு காவல் போக்குவரத்தாயிருக்கிறார் சீமைக் கப்பல் நாலு மூணு நாளையிலே பயணம் 1300. கட்டு யெறுது கமாண்டோர் கப்பல் வந்து மூணு நாள் துரை பிடிச்சு யிருந்து சென்னபட்டணத்துக்குப் போச்சுது. அவ்விடத்தி

மிவ்விடத்திலே விருகனுக்கு யெட்டு வெள்ளமென்று விக்குது சவுக்கையாக விருக்குது. தெற்கே யிருந்து பொதி வருகுது கெருடநதி பெண்ணை நதி தண்ணீர் அரை ஆறு வருகுது. அடிக்கடி சமாச்சாரம் வருகிறதுக்கு பிறயாசையா யிருக்குது யென்று 25 உ யெழுதின ஓலெ நவம்பர் 26 உ வந்தது. அந்த ஓலைப்படிக்கு யெழுதினது.

காலத்தாலே துரையவர்கள் அண்டைக்குப் போனவிடத்திலே நேத்து எழுதின-வோலே சேதி யின்று வந்த கூடலூரில் நடந்த சேதி யெழுதி வந்ததாம்படியே துரையவர்களுக்குச் சொன்னவிடத்திலே துரையவர்கள் கேட்டுச் சொன்ன உத்தாரப்படி மேஸ்தர் சாந்தாசு (M. Saunders) ஆனவன் வருகிறவர்களுடனே பேசுகிறது பிறயாசமானல் கும்பினீர் காரியமாகிறது யெப்படி நடக்கும் யென்றும் கேட்டார் யினிமேல் யென்னமாய் நடப்பிப்பானே யின்னோமட்டுக்கும் அவன் நடப்பிக்குற சாடை யிதென்று சொன்னேன். அப்பால் ஆற்காட்டு சேதி யென்னவென்று கேட்டார். முசியே தொத்தேல் யெனக்கெழுதின காகிதத்திலே தேசூர் வந்து நாசறுசங்கு பவுன்சு வந்துதென்றும் அதைத்தொட்டு தாங்கள் சேத்துப்பேட்டு அண்டையிலே யிறங்கி யிருந்தவர்கள் பத்தேபேட்டை வந்து சேர்ந்தார்கள் ஒரு வேளை செஞ்சியே வந்து சேர்ந்தாலும் சேருவார்கள்போலே காணுது இதல்லாமல் கடப்பையார் கந்தனூர் சாவனூர் பங்காபுரத்தாரார் சாஹேசி நிம்பள்க்கார். ருசா சந்திரசேனன் குமாரன் ருமச்சந்திரருயன் வகையிறு யிருக்கிற மன்சுதார்கள் சுபேதார்கள் நாசறுசங்குவைப் பிடிச்சுக் குடுக்குறோம் யென்று அல்லது சரிக்கட்டிப் போடுறோம் யென்று சொல்லி அனுப்பிவிச்ச காரியத்திலேயெல்லாம் முசியே தொத்தேல் நம்பவில்லை. அவர்கள் மோசம்பண்ண நினைத்ததாய் யெண்ணி யெனக்கு யெழுதினதுக்கு அவனுக்குத் தெரியும்படியாய் யெழுதியனுப்பிவிச்சேன் யென்று சொன்னர். யிதிலே சீமையிலிருந்து மசுக்கரை பிடிச்சு யிவ்விடத்துக்கு வருகிற கப்பல் துறை பிடிச்சு பிறங்கி போட்டான் கப்பல் போய் பார்த்துவரப் போனர் அப்பறம் கப்பலைப் பார்த்துப் போட்டு வந்து கப்பே குடிச்சு ருசியே செறசாமுடனே பேசி யிருந்தார். அப்பால் பாக்கு கிடங்கியே வந்தேன். யிப்போ வந்த சீர்ம கப்பல் பேர்

கநகூலி கப்பல் கப்பித்தான் பேர் மூசியே சுவானிசு யிந்தக் கப்பலின்பேரிலே நூறு பெட்டி வெள்ளி வந்து சரக்கு யென்ன வந்துதோ அறியவேணும்.

பங்காளத்திலே யிருந்து ஒரு சுலுப்பு மூசியே கடுத்தோ மென்கிறவனுது வந்தது. அதிலே அரிசி வந்தது. சாயங்காலம் ஆறு மணிக்கு போயி தஞ்சாவூரிலே ராசாவண்டைக்குப் போயிருக்கிற நம்முட வக்கில் சுப்பய்யன் எழுதின காகிதச் சேதி தான்டபிரனுரேபண்டிதனைக் கண்டு பேசி ராசா பேட்டி பண்ணிக்கொண்டு சந்தாசாயபுக்கு கொடுக்கிறோமென்று யெழுதிக் கொடுத்தது யெழுபது லக்ஷம் ரூபாய்க்கி செல்லு போக பாக்கி குடுக்கச்சொல்லி கேட்டதுக்கு அவர் அணைக்கட்டு உடைந்து போயி காவேரி வெள்ளம் சீமைக்குப் பாயாமல் போனபடியி னுலே பயிர் தாழ்த்தியாயிப்போயி இவ்வருஷம் பணம் காணு கிறது கஷ்ட்டம் வந்துது நாசறுசங்கு மனுஷர் வந்து பணம் குடுக்கச்சொல்லி காத்துக்கொண்டிருக்கிறார்கள் அவர்களுக்கு யில்லை யென்று சொல்லி போகச்சொல்லி சொன்னேன். அவர்கள் போகவும்வேணும் யிதல்லாமல் நாசறுசங்கு யிந்த ராச்சியத்திலே யிருக்கச்சே நாம் பணம் குடுத்தால் அவனுக்குப் போல் லாப்பு ஆதுமே யென்றும் ஆற்காட்டு சுபாவுக்கு ஒருத்தர் யேற் பட்டால் குடுக்கிறோம் யென்றும் யெல்லாத்துக்கும் மகாநாமா கழிச்சால் அப்படியே சந்தோஷம்பண்ணி செயங் கொண்டதுக்கும் துரையவர்கள் மமுதல்லிகானை ஓடிப்போகப்பண்ணின துக்கும் செஞ்சி கோட்டையை வாங்கினதுக்கும் மொபாரக்கு பாதி யெழுதி சிறுப்பா வகையறு பெகுமதி அனுப்புகிறோம் யென்றும் யிருக்கிறார்கள். யென்றும் மானேசி அப்பாவைக் காவல் வைத்திருக்கிறதே அவனை விட்டுவிட பவுன்சுக்கு பக்குசீ வுத்தியோகம் குடுத்துப் போடுகிறார்களென்றும் பாவாடை நாயக்கனை மூணு லக்ஷம் பொன் குடுக்கச்சொல்லி கேழ்க்கிறார்களென்றும் ராசா பேருக்கு தாக்கீது அனுப்பச்சொல்லியு மிந்தப் படியாக யெழுதி வந்த சேதியைப் போய்ச் சொன்னதுக்கு ஆனல் சுப்பய்யன் தஞ்சாவூரிலே யிருக்கிறானே யென்று கேட்டார் அவனிவ்விடத்துக்கு வுத்தாரமில்லாமல் வருவானு ஒருக் காலும் வரானென்று சொன்னேன். மெயிதான் முசியே ரிஷ (M. Le Richie) காரைக்காலிலே யிருந்து எழுதின காகிதத்

திலே சுப்பய்யன் தஞ்சாவூர் விட்டு புதுச்சேரியே வந்துவிட்டானென்று யெழுதினானென்று சொல்லி முசியே செம்போலே அழைத்துக்கொண்டு சீர்மைக்கு யெழுதுகிற காகிதத்திலே கையெழுத்துப் போட்டு வருவானோ யென்னமோ தெரியாது உள்ளே காம்பிறாவிலே போனார். நான் பாத்து கிடங்கியே வந்தேன்.

1750 ௵ ஒயித்தேபர் மீ 9 உ பிறமோதூத ௵ புறட்டாசி மீ 27 உ சுக்கிறவாரம்.

அப்பால் சானோசிநிம்பாளக்கர் அண்டையிலிருந்து வந்த முறாரிறாயன் வக்கீல் றங்கோபண்டிதன் வந்து சொன்ன சேதி முறாரிறாயனானல் ஆற்காட்டுக்கு வரயில்லே சாத்தாறாவிலே (Sattara) சாம்பாசிறாசா பன்னாடாவிலே (Pannada) யிருக்கிறவர் தாம் பட்டத்திலே யிருக்கவேணுமென்று பத்தேசிங்கு றகோசிபூசலா வகையறாக்களை கூட்டிக்கொண்டு அந்தப் பவுன்சும் தன் பவுன்சும் தயாருபண்ணிக்கொண்டு சாத்தாறாவிலே யிருக்கிற சவாபாசிறாயன் யிப்போ பட்டத்துக்கு வைத்த சாம்பாசிறாசா தம்பியை சிவாசி குமாரன் றாமறாசாவின்பேரிலே சண்டைபண்ணி பட்டந்தான் கட்டிக்கொள்ள வேணுமென்று யோசனைபண்ணி தசறா பண்டிகை கழிச்சவுடனே பிறப்படுகிறானென்றும் பன்னாடாவிலிருந்து சாம்பாசிறாசா முறாரிறாயனுக்கு பதினாயிரம் குதிரை சுவார்களைக் கூட்டிக்குடுத்து கொண்டுவரச் சொல்லி காகிதமெழுதி அனுப்பினபடியினாலே கஷ்டத்து மேலே வெங்கிட்டகிரி மூளவாயிலேயிருக்கிற முறாரிறாயன் பவுன்சு கூட்டிக்கொண்டு பிறயாணம் பன்னாடாவுக்குப் போறானென்றும் சானோசிநிம்பளக்கார் யென்கிற மறாட்டியன் பவுன்சு மனசுதாரன் சந்தாசாயபுக்கும் துரையவர்களுக்கும் சொல்லிச் சொன்னது செஞ்சி வாங்கினவுடனே உங்கள் பவுன்சு சகேலென்று ஆற்காட்டை வந்தால் காசறுசங்கை கைப்பிடியாய்ப் பிடிச்சுக்கொள்ளலாம். அவரவர் பவுன்சு கூடுது யின்னம் சாத்தாரா வகையறா யிடங்களுக்கு யெழுதி யிருக்கிறமட்டுக்கும் பவுன்சு வருமே அல்லாமல் வராமல் போகத்தக்கதில்லை. ஆனபடியினாலே உங்கள் பவுன்சு யிப்போ வருகுதுக்கும் நல்ல சமயமானபடியினாலே சீக்கிறமாத்துக்கு வரவேணும் காசறுசங்கை கைப்பிடியாய்ப் பிடிச்சுக் கொடுக்கிறோம் அல்லது அவன் காரியா

கிலும் சரிக் கட்டிப்போட்டு மூசபர்சங்குவை அவ்விடத்துக்கு வைக்கலாம். கந்தனூரார் கடப்பையான் சாவனூரான், பங்கா புரத்தான் ராசாராமச்சந்திரறாயன் வகையறா யிருக்கிற சறுதா றுகளெல்லாம் உங்களவர்களாயிருக்கச்சே நீங்கள் வந்து பவுன் சம்பேரிலே விழுந்தால் சண்டைபண்ணாமல் சேத்துப்பேட்டுக்கு வந்த உங்கள் பவுன்சு மறுபடி செஞ்சிக்குப் போய் சேருவா னென்றென்றும் நாங்கள் நிசாம் நாள் முதல்கொண்டு அவன் சோத்து சாப்பிட்டு அவன் மகன் நாசறுசங்குக்குத் துரோகம் பண்ணுகிறவர்களை நடக்க வென்ன பரவசமிருக்கும் யிவர்க ளிடத்திலே யென்று யெண்ணவேண்டாம் நாசறுசங்கு பண்ணு கிற அவமரியாதைகளினாலேயும் அவன் நடத்துகிற நடத்தைகளினா லேயும் அவனைப் பிடிச்சு கைதிபண்ணி பின்னை ஒருத்தரை அந்த யிடத்துக்கு ஸ்தாபிச்சால் ராச்சியம் சுகப்படும் செனங் களும் சுகப்படுவார்கள். நாசறுசங்கு யிடம் ஒன்று உண்டே அந்த யிடத்துக்கு மகிமையுண்டென்றும் பார்க்கிறோமென்றும் சொன்னதாயி முறாரிறாயன் வக்கீல் றங்கோபண்டிதனும் சந்தா சாயபு அண்டையிலிருக்கிற கானுக்கோயி சிவறாயன் குமாரன் திருமலைராவு வந்து சொன்னார்களித்தச் சேதியெல்லாம் துரை யவர்கள் கேட்டு எங்கள் பவுன்சு உங்கள்பேரிலே அவிசுவா சத்தைக்காட்டும் பயந்தும் வந்ததில்லை. மழை நிமித்தமே பிறப்பட்டபடியினாலேயும் ஆறுகளெல்லாம் தண்ணீர் பிரவாகம் வருகிறபடியினாலே வந்துவிட்டார்கள். இப்போவும் மழை விட்டு வழி சுத்த சரசமானப்போலே நம்முட பவுன்சு வருவார்க ளென்று சொல்லியும் நாங்களுங்களை அவிசுவாசமாயி ஒருக் காலும் யெண்ணுகிறதில்லை யென்றும் சொல்லி அவர் மறுபடி யிலே யெழுதி நாங்களுங்களவர்களா யெண்ணவும் என்கிறது மாத்திரஞ் யெழுதி அனுப்பிதுனுக்கைக்குப் பதில் மாத்திரம் பேர் வூரில்லாமல் பவுன்சு வருகிறது உங்களை அவிசுவாசமாய் யெண்ணாமல் நினைகிறது யெண்ணி யிருக்கிறோம் மற்ற சேதி யெல்லாம் றங்கோபண்டிதன் சொல்லக் கேளுமென்று யெழுதிக் கொடுத்து அனுப்பச் சொன்னபடிக்கு யெழுதிக்கொடுத்து உத்தர மும் சொல்லி றங்கோபண்டிதனுக்கு அம்பகமுஞ் சொல்லி அனுப்புவிச்சேன்.

அப்பால் சானேஸ் யெழுதின ரோக்காவை முசியே கோக்கேல் அவதாரிப்பட்டு சேத்துப் போட்டுவிட்டு செஞ்சி

சேர்ந்து அவனுக்கு பிந்த வயணமும் எழுதி அந்தக் காகிதத்தையும் ரோக்காவும் வைத்து அனுப்பினார். துரையவர்கள் சீர்மைக்கு யெழுதுகிற காகித அலுவலின்பேரிலே யிருந்ததினாலே வேறே பிறஸ்தாபம் யில்லை நான் பாக்கு கிடங்கியே வந்தேன்.

இத்தனாள் பகலைக்கு மேலாக நாலரை மணிக்கு முசியே கெற்ஷாமும் முசியே லூயிறும் செஞ்சிக்குப் போனார்கள்.

இத்தனாள் முசபர்கான் வழியிலே புதுசாய்ப் போட்ட சிப்பாயிகளுக்கு தன் சீட்டும் மொகாறுமில்லாமல் போற வாறவர்களை விடவாண்டாமென்று சொன்னாமென்று போக்குவரத்து செனங்கள் வந்து யென்னுடனே சொல்லிக்கொண்டதுக்கு நான் முசபர்கானை துரையவர்கள் உத்தாரங் குடுத்து அனுப்பினார்களா யென்று கேட்டு அனுப்பினதுக்கு துரையவர்கள் உத்தரவில்லாமல் புதுசாய் சிப்பாயிகளை வைத்துப் போட்டபடியினாலே அவர்களப்படி செய்தார்களென்றாப்போலேயுமிப்போ சொல்லி அனுப்பிவிச்சேன். தடை பண்ணவேண்டாமென்று சொல்லி அனுப்பினேன். அப்பால் விசேஷம் சேதியில்லை.

1750 ஷு ஒயித்தோபர் மீ 10 உ பிறமோதூத ஷு பிறட்டாசி மீ 28 உ சனிவாரம்.

இத்தனாள் காலத்தாலே யேழரை மணி அடிச்சவுடனே சிரஞ்சீவி அண்ணாசாமிக்கு காது குத்திவிச்சோம். பரமேசுவரனுடைய கடாக்ஷம் பரிபூரணமாயிருக்கிறபடியினாலே அவனுடைய யோகத்துக்குத் தக்கதாய் சகல சம்பிறமும் சகல வேடிக்கைகளும் சகல வாத்தியங்களுடனேயும் துவனிக்க பெரிய மனுஷர்கள் வந்திருந்து மங்களகரமாய் நடந்தது அப்பாலவரவர் பெருமதிகளாயி கும்பினீர் வர்த்தகர் குண்டூர் வெங்கிடாசல செட்டி சலது வெங்கிடாசலசெட்டி வகையறா ஆரார் கொண்டு வந்தார்களோ அவர்களுக்கு மறுபடி கொடுத்தனுப்பிவிச்சேன். மத்தியானம் சமஸ்தமான பேரும் விருந்து பண்ணிக்கொண்டு யிந்தப்படி சகலமும் சம்பிறமமாய் நடந்தது. பதினொரு மணி மட்டுக்கும் துரையவர்கள் மத்த கொமிசெலியோர்கள் கோன்சேல் கூடி சீர்மைக்கு எழுதின காகிதங்களையெல்லாம் படிச்சுப் பார்த்து கையெழுத்துப் போட்டார்கள். அப்பாலவரவர் அனுப்பி

விச்சுக்கொண்டுபோனார்கள். யென்னை யழைப்பிச்சு உப்பு சிக்கிறமத்துக்கு அழைப்பிச்சு பங்காளத்துக்குப் போற கப்பலுக்கு உப்பு யேத்திவிக்கச்சொல்லி சொன்னார் பகலைக்கு மேலாக பிடவை யேதாகிலும் கட்டு விழுமாவென்று கேட்டார். திங்கட்கிழமைக்கு விழுமென்று சொன்னேன். ஆற்காட்டு சேதி யேதாகிலும் வந்ததாவென்று கேட்டார். நான் ஒரு அரபியை அனுப்பிவைச்சிருக்கிறேன் அவன் நாசறுசங்கை கிசுமத்துக்காறன் அண்டையிலே யிருந்து கபுறு யெழுதி அனுப்புகிறானென்றும் பத்து வரிசையாயி அவன் காகிதச் சேதியும் அடிக்கடி சொல்லி யிருந்தேனே அவனிப்போ யெழுதின காகிதத்திலே திருவாத்தியூர் செய்யாறு ஆத்துக் கரைக்கி அக்கரைக்கி முதல் கலவைமட்டுக்கும் நாசறுசங்கு லஷ்கர் யிறங்கி யிருக்கிறதென்றும் நாலுநாளாய் மழை விடாமல் பெயுது அத்துடனே கொஞ்சங் காத்துடனே அடிக்கிறபடியினாலே லஷ்கரிலே யிருக்கிறவர்கள் யெல்லாம் பேசாறுப் ஓடிப்போற வழி பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். ராசாவுக்குப் போகவேண்டிய கபாடக்காறர்களுக்கு செய்யாறு இரு கரையும் பிறயள பிறவாகம் வருகிறபடியினாலேயும் மழையினாலேயும் போகக்கூடாததினாலேயும் அவரவர் குதிரைகள் யெருதுகள் மேச்சலில்லாமல் போனபடியினாலே யெருதுகள் குதிரைகளும் மடிஞ்சுப்போச்சுது. தண்டிலே பந்தோபஸ்து ரவ்வலேசம் யில்லை. சண்டைக்கிப்பறம் பிறப்படுகிற பவுன்சுபோலே சறுவாத்துமனுக காணயில்லை. சிறு பிள்ளை விளையாடுகிறவர்கள். இராசாவென்றும் கோட்டை யென்றும் சண்டை யென்றும் விளையாடுவார்கள். அதுவாகிலும் சத்து பந்துபஸ்துவாய் அவர்களுக்கேற்க்க காணும் அதுதானுமில்லை. அப்படி யெங்கத்துக் குதிரைகள் யெங்கே யிருக்குதோ அங்கே யிருக்குறதே அல்லாமல் நடக்கச் சொன்னால் பவுன்சு நடக்கிறதில்லை தோப்புகான ரெண்டு நாழிகை வழி வரவேணுமானால் சூரிய உதயந் துவக்கி ராத்திரி சாமமட்டுக்கும் செல்லுது அதின் பிறகே நாசறுசங்கு வாறதே அல்லாமல் முன்னதாய் நடக்கிறதில்லை. பவுன்சிலே பரிச்சேதமாயி ஆவிவலில்லை குதிரை 10.000 12.000 காணும் சண்டைக்கென்றால் ஒரு குதிரை முன்னுதாய் வாறதில்லை அல்லாம் பலாயனமாய்ப் போம் யிருக்கிற பெரிய மனுஷர்கள் சறுதாறுவாயிருக்கிறவர்கள் ஒருத்தரும் நாசறுசங்கு நடத்தைக்கி ருசியில்லாமல் இருக்கிறதுமல்லாமல் அவ

ரவர் பவுன்சுடனே கூட வரயில்லை ஆற்காட்டிலே தானே யிருந்து கொண்டு பழயப் பகனுவைப் போட்டுக்கொண்டு யிருக்கிறார்கள் இதல்லாமல் ஊரிலே அஞ்சாறு லட்சம் பிறசையுண்டு இந்தப் பிறயாசை அபகீர்த்திகளும் ஆங்காரிகளும் திருடுகிறவர்களும் நகைக்கிறார்களேயல்லாமல் சிப்பாயிகள் யென்று ஆயிரம் பேர் பிறப்பட்டுவிடமாட்டார்கள் சண்டை முகனையிலேயும் யிப்படி பலவிதத்திலேயும் பவுன்சிலே சாத்தையில்லாமல் யிருக்கிறதாக நம்முட பிறான்சுக்காறர் பவுன்சு வந்ததானால் நாசறுசங்குவை கைப்பிடியாய்ப் பிடியாகிலும் அகப்படுவான் அல்லது சரிப் பிடிச்சாகிலும் போடுவார்கள் ஆனபடியினாலே நம்முட பவுன்சு வந்தால் நாசறுசங்கும் அவர் பவுன்சும் முழுகிப்போம் அதுவே யல்லாமல் தப்பிப் போகத்தக்கதில்லை யென்று நம்முட பவுன்சு மாத்திரம் அல்ல பின்னை யெந்த சாதியாருட பவுன்சு வந்து விழுந்தாலும் நாசறுசங்கும் நாசரசங்கு பவுன்சும் முழுகிப் போறதேயல்லாமல் தப்பிப் போகத்தக்கதில்லை. யென்றும் மல்லூரிலே ரூபாயிக்கு பக்கா சேர் அஞ்சு சேர் விக்கிறபடியினாலேயும் அதுவும் அகப்படாமலும் ஊரிலே யிருக்கிறவர்கள் வெகு கஷ்டப்படுகிறபடியினாலே சத்துருக்கள் தளம் வந்தால் ஓடிப்போறதே அல்லாமல் நாசரசங்கு பவுன்சு நிற்குமென்று யெண்ணத் தேவையில்லை என்றும் அப்பால் தனக்குச் சிலவுக்குப் போறுது அனுப்பச்சொல்லி சமாச்சாரம் அடிக்கடி யெழுதுகிறதுக்கு ஒரு தெலுங்கு கணக்குப்பிள்ளையையும் யென் அண்டையிலே யிருக்கிற சேவகரில்லாமல் பின்னையும் பத்துப் பேர் சேவகரை அனுப்பிவிக்கச்சொல்லி யெழுதின பாரிசுக் காகிதத்தினுடைய சேதி யெல்லாம் துரையவர்களுக்குச் சொன்னவுடனே கேட்டு நகைச்சு அந்தக் காகிதத்தை தானே வாங்கிக்கொண்டு மூசே தொத்தேலுக்கு காகிதம் யெழுதி அதிலே வைத்து செஞ்சிக்கு அனுப்பினார். அவரந்த அபிப்பிறாயமும் அவர் யிந்த பிசினிக் காகிதத்தை தானே. மூசே தொத்தேலண்டைக்கு அனுப்பின சாடையும் அவர் யெதிரித்தளம் பாரியா யெண்ணி அல்லோ சேத்துப்பேட்டு அண்டையிலே யிறங்கி யிருந்தவன் செஞ்சி கில்லாவை வந்து சேர்ந்தான். ஆனபடியினாலே யெதிரியுடைய பவுன்சு யிருக்கிற லட்சணமிப்படி ஆளில்லாமலிருக்க அங்கே யிருக்கிற சறதாறுகளெல்லாம் நமக்கு அனுகூலமாயி வரச்சொல்லி அடிக்கடி மனுஷர்களை அனுப்பிக்கொண்டிருக்க

யிவனுக்கு அந்தச் சேதி யிவனுக்கு அந்தப்படி யெழுதி யிருக்கச்சேயும் யிவன் அதைதரிபபப்பட்டு வந்துவிட்டானென்றும் யிவனுக்கு இத்தனையும் பிரியம் அடிக்கடி யெழுதியும் நடக்கிறவனைக் காணத்தொட்டு அல்லவோ யித்தனை அலட்சியம்மா யிருக்குதென்றாப்போலேயும் யென்னினதாப் யெனக்குத் தோத்தினதை யெழுதிவிச்சேன்.

அப்பால் பகலுக்கு மேலாக ஒரு சேதியும் விக்ஷைகளாக எழுதத்தக்கதாக யில்லை. ஆகையால் எழுத யில்லை. சேத்திய தினம் 27 உ சுக்கிறவாரம் கோன்சேல் கூடி கலைஞ்சாப்போலே முசே செம்போல் (St Paul) சின்னதுரை கோட்டையிலே யிருக்கிறபடியினாலே பிடவை பார்க்கிற சாலையிலே வந்து நின்று சாவடி கணக்குப்பிள்ளை திருச்செலுவராயமுதலியையும் உளா கணக்கப்பிள்ளைகளையும் அழைப்பிச்சு சொன்னது யென்னவென்றால் யின்று முதல்கொண்டு சம்பாவுக்கோயிலார் கப்புசக்கோயிலார் மிசியோனேர் கோயிலார் யிவர்கள் மூன்று திரத்தார்களுக்கும் விட்டுகளின்பேரிலே வகையிரா அடமான சீட்டு யெழுதக் கவையில்லை விடுகள் வகையறு கொள்ளுகிற கிறய சீட்டு யெழுதக் கவையில்லை யென்ற உத்தாரம் குடுத்த மாத்திரமல்ல காகிதங்களும் யெழுதி வாடிக்கையாய் ஒட்டுகிற ஸ்தானங்களிலே ஒட்டிவிக்க உத்தாரம் குடுக்கப் போறோமென்றும் சொன்னார் நல்லதென்று யின்றைய தினம் சாவடியிலே நடந்த சேதியாம்படியே யெழுதிவிபுங்கோளென்று சொல்லிப் போகச் சொன்னார். திருச்செல்வராயமுதலியும் உளாக் கணக்குப் பேர் விளங்கனும் அனுப்பிவிச்சுக்கொண்டு போனார்கள். யிது காரியம் சீமையிலே பாதிரிகளுக்கு வெகு பணம் சேர்ந்து போச்சென்று முசாவா யிவர்களுட ஆஸ்தியில் அஞ்சில் ஒரு பங்கு வாங்கினதிலே வெகு பணம் சேர்ந்ததைப் பார்த்து சீமை பூமிகளின் பேரிலே அடமானம் பண்ணிக்கொண்டு பணம் குடுக்கிறதினாலேயும் கொள்ளுகிறபடியினாலேயும் விடுகள் தோட்டங்கள் பூதலானதுகளின்பேரிலே அடமானம் யெழுதிக்கொள்ளுகிறபடியினாலேயும் அது வட்டிகள் சேர்ந்து அதுகளிவர்களை சேர்ந்துப் போறபடியினாலேயும் மத்தப்பேர் பணத்துக்கு வழுசம் அத்துப் போறதுண்டு. அதினாலே அவன் பணம் அறண்மனைபைச் சேருகிறதுண்டு அல்லாது பின்னை ஒரு விதத்திலே சிலவழிச்சு விபா

பாரம்பண்ணி முறிஞ்ச யிப்படி நானுவிதமாய் பணம் போய் விடும் இந்தப் பாதிரிகளுக்குச் சிலவில்லை அழிவில்லை ஒருத்த னில்லா விட்டில் ஒருத்தனை பெரியவனாக வந்து யேற்படுகிற படியினாலே யிதுகளுக்கு விச்சித்து வருகிறதில்லை யிதல்லாமல் அவனவன் செத்துப்போறபோது கோயிலுக்கு இவ்வளவு யென்று ஆஸ்திக்குத் தக்கதாக யெழுதுகிறதுமுண்டே ஆனபடி யினாலேயும் அனுகூலமாயிருக்கிறவர்கள் சேர்ந்தவண்ணமாயி முழுக்க எழுதிவிக்கிறதுமுண்டு. இந்த விதத்திலே ராச்சியத் துப் பணம் யெல்லாம் பாதிரிகளைச் சேர்ந்து போறதுமல்லாமல் சீமை பூமிகள் தோட்டங்கள் வீடுகள் உடமை தட்டுமுட்டு சமஸ் தமும் யிவர்களாதீனமாய் போகுமென்றும் யோசனைபண்ணி ருசா பாதிரிகளுக்கு அடமானமாயி சேர்ந்திருக்கிற பூமிகள் தோட்டங்கள் வீடுகள் வகையறா சமஸ்தமும் யெடுத்துக்கொண் டதுமல்லாமல் யினிமேல் சாகிறவர்கள் பணம் யெழுதிவைக்க கவையில்லை யென்றும் யெழுதிவைச்சாலும் பாதிரிகள் கொண்டு வந்து ருசாவினுடைய பொக்கிஷக்காறன் கையில் முதலிட்டுப் போடுகிறதென்று வீடுகள் தோட்டங்கள் வகையறா கொள்ளவும் கவையில்லை அடமானம் பண்ணிக்கொண்டு பணமும் கொடுக்க கவையில்லை யென்றும் கட்டளையிட்டாரென்றும் அந்தக் கட்ட ளைப்படிக்கு யிப்படி பிரசிடத்துக்கு யெழுதிவந்ததாய் பெரிய மனுஷர்கள் சொன்னார்கள்.

**1750 ௵ ஒயித்தோபர் மீ 12 உ பிறமோதூத ௵ புறட்டாசி மீ 30 உ சோமவாரம்.**

இத்தனாள் காலத்தாலே கோட்டையிலே பிடவை பார்வை யிட்டு கட்டுப்போட்டு அதுபிற்பாடு நான் கோட்டைக்குப் போயி பதினொரு மணி மட்டுக்கும் இருந்தும் அங்கே யிருந்து பாக்கு கிடங்கியே வந்தவுடனே துரையவர்களழைச்சனுப்பிவிச்சு திரு வீதிக்கும் விழுப்புறத்துக்கும் காகிதமெழுதி முன்னூறு கூலிக்காறர்களை மாத்திரம் செஞ்சி சாமானெடுத்து வருகிற துக்கு அனுப்பச்சொல்லி யெழுதச் சொன்னார் அந்தப்படி யெழுதியனுப்பிவிச்சேன். ஆற்காட்டிலிருந்துவந்த சேதி நாசறு சங்கு கலவைக்கப்பிறம் யிறங்கியிருக்கிற விடத்தில் நித்தியம் மழை பெய்கிறதாயிருக்கிறபடியினாலேயும் காத்தடிக்கிறபடியி னாலேயும் செப்பாறு பிரவாகம் இருகரையும் புறண்டு வருகிற

படியினாலேயும் சனங்கள் படுகிற சங்கட்டம் காகிதத்திலே யெழுதி முடியாது. சாஹெபையும் ராமச்சந்திரராயனையு மிரண்டு பேர்களையும் முன்னே அமேறுலா யிப்போ போகச்சொன்னால் போனால் மோசம் வருமேதே அல்லாமல் காரியமில்லை பின்னேரத் தைகளுக்குச் சண்டையை நிறுத்தி சமாதானம்பண்ணிக்கொள்ளு கிறது யுக்குத்தமாயிக் காணுது வெகு நாளாயும் உங்கள் சொத்து சாப்பிட்டபடியினாலே உங்கமேலும் கோரி சொல்லுகிறோம் போய் சண்டை பண்ணினால் கெட்டியாய் மோசம் வரும் என்றும் பின்னையுஞ் சொல்லத்தக்கதாக சொல்லி அங்கேயிருந்து சான வாசகான் மோரோபண்டிதனண்டைக்கு வந்து முன் நாசறு சங்குடனே சொன்ன சேதியை இவர்களுடனேயும் சொன்ன துக்கு சானவாசகானும் மோரோபண்டிதனும் பதிலுத்தரஞ் சொன்னது நாங்களிப்போ சண்டை போடுகிற காரியமல்ல பவுஞ்சா பெரு சுவல்ப்பமாயிருக்குது இதல்லாமலிருக்கிற பவுன் சிலே ஆளில்லை காலாகாலமே பார்க்கவேணும் இந்த வேளை ஒரு விதமாய் சமாதானமாயி அவர்கள் கேட்டபடிக்கு நடத்திப் போட்டு அப்பால் பின்னை ஒரு சமயத்திலே நாமதுக்குத் தக்க காரியம் நம்முடைய மனோதரம் முடிய பார்த்துக்கொள்ளலாம் அல்லாவிட்டால் மோசம் வரும் கெட்டியாயென்றும் மென்ன சொன்னாலும் கெட்டுப்போற வார்த்தைகளாய்ச் சொல்லுகிற மீறசத்து மிறுத்துசல்லிக்கான் பேச்சு விசுவாசமேயல்லாமல் நம்முட பேச்சுக்களை விசுவாசமாய்த் தோக்கப்படயில்லையீசு வரன் சங்கல்ப்பம் கத்திகள் நடக்கவேண்டியிருந்தால் ஆரென்ன சொன்னாலென்ன கேழ்க்க வொட்டுமா பின்னையும் நாசறுசங்கு தவுலத்து மிவனுடனே முடிவாயிருக்குதோ வென்னமோ வென்று மிப்படிப்பட்ட பேச்சுக்கள் சொல்லி சாஹெபையும் ராமச்சந்திரராயனையும் போகச்சொல்லி அவர்களும் மனது பெருசாய் நொந்து சொல்லிக்கொண்டிருக்க டிக்காணுவுக்குப் போனார்களாம் அரிசி ரூபா 1-க்கு பக்கா நாலு சேர் கொள்ளு அஞ்சு சேர் சோளம் கேழ்வரகு அஞ்சு சேர் விக்குதென்று நாசறுசங்கு லசுக்கர் ஆறணிக்கும் கலவைக்கும் நடுவே யிருக்கிற தென்றும் மெழுதிவந்த சேதியை துரையவர்களுடனே சொல் லிப்போட்டு பாக்கு கிடங்கியே வந்தேன். சீமைக் காகிதங்கள் அவசரமாய் கப்பல் பிறயாணம்பண்ணி அனுப்ப வெழுதுகிற படியினாலே விசேஷிச்ச பேசுவார்த்தை நடக்கவில்லை. பகலைக்கு

மேலாக யெனக்கு சரீரம் சுவஸ்தமில்லாததினாலே வெளியே போகவில்லை.

1750 ஹூ ஒயித்தோபர் மீ 15 உ பிறமோதூத ஹூ அற்பிசி மீ 2 உ குருவாரம்

இத்தனாள் நடந்த சமாச்சாரம் என்னமென்றால் நேத்தய தினம் முதல் உ புதவாரம் நாள் பகலைக்கு மேலாக மூணும் சாமத்துக்கு மொகுலா நிக்கைக் குல்லாக்காறர்கள் முன்னூறு குதிரைக்காறர்கள் வந்து திண்டிவனத்திலே நம்முட அமுல்தாரர்கள் சேவுகர்ரிருந்தப் பேர்களை யெல்லாம் வெட்டிப் போட்டார்கள். என்கிற சமாச்சாரம் யித்தனாள் பொழுது விடிந்து ஆறு மணிக்குச் சமாச்சாரம் வந்தது. இந்தக் கபுறு துரையவர்களுடனே சொல்லுகிறதுக்கு யெனக்கு சொஸ்தமில்லாமல் நான் வெளியே போகாமலிருந்தபடியினாலே மதனாந்தபண்டிதனை அழைச்சனுப்பிவிச்சு திண்டிவனத்திலே நடந்த சமாச்சாரம் போய் துரையவர்களிடம் போய்ச் சொல்லச்சொல்லி யனுப்பிவிச்சேன்.

நாசறுசங்கு ஆனால் ஆறரை மணி முதற்கொண்டு வாழப்பந்தல் அந்தமட்டுக்குள்ளே இறங்கியிருக்கிறானென்கிறதாய்ச் சமாச்சாரம் வந்தது. நம்முட பவுன்சு முகியே கொத்தேதல் முதலாகிய சொலுதாதுகள் சிப்பாயிகள் எல்லாரும் பந்தே பேட்டைபண்டையிலே யிறங்கியிருக்கிறார்கள்.

1750 ஹூ ஒயித்தோபர் மீ 16 உ பிறமோதூத ஹூ அற்பிசி மீ 3 உ சுக்கிறவாரம்.

இத்தனாள் காலத்காலே நேத்தப்பதினம் தானே துரையவர்கள் நான் வரயில்லை யென்று காரியங்களெல்லாம் அப்படியிருக்குதென்று வரவேணும் யென்று சொல்லி யென்னவாயிருந்தாலும் தலை நோவும் தலை நோவும்பெரிலே சுரமாயிருந்தாலும் அதையும் பாராமல் காலத்காலே யெட்டு மணிக்குப் போனேன். போனவுடனே துரையவர்களும் சீமை கப்பாயித அலுவலிலே யிருந்துவர பாக்கு கிடங்கே வந்திருக்கிறானோ யில்லையாவென்று பார்க்கச் சொன்னார். வந்தவுடனே அந்த சேவுகன் யிந்த சேதியை யென்னுடனே சொன்னான். அதின்

பேரிலே மூன் தஞ்சாவூரிலே ராசரீகம்பண்ண விசயவருக நாயக்கன் குமாரன் செங்கமலத்தாசனாயக்கன்; பேரப்பிள்ளை மயிசூர் சமஸ்த்தானத்திலே போய் சேர்ந்திருக்கிறவன் அவன் காரைக்காலிலே யிருக்கிற மூசியே ரீஷிக்கு (M. Le Riche) ராசவட்டம் விட்டு தஞ்சாவூர் சமஸ்தானம் யெங்களை மோசம் பண்ணி மராட்டியர் வாங்கிக்கொண்டதேயல்லாமல் மத்தப்படியல்ல யிப்ப தஞ்சாவூர் கோட்டையை வாங்கிக் கொடுக்கிறதுக்கு நீங்க யெம்மாத்திரம் பணம் கேழ்க்கிறீர்களோ அந்தப் பணத்தை நான் மைசூர் ராசாவின் கையிலே வாங்கிக் கொடுக்கிறேன் யென்று சொன்னதாகவும் அதன் பேரிலே காரைக்காலிலே யிருக்கிற மூசியே ரீஷு யிவ்விடத்து துரைக்கு யெழுதியனுப்பினதாகவும் யிவரத்தப்படிக்கு மயிசூர் ராசாவினுடைய காகிதமும் வாங்கிக்கொண்டு அவர்களையும் வரச்சொல்லி யெழுதியனுப்பினதாகவும் அவர்கள் வருகிறார்கள் யென்று முன்னாலே கேழ்விப்பட்டிருக்க அவர்களிப்போ வூரே வருகிறோம் என்று கூடலூரிலே வந்து சேர்ந்து மூசியே ரீஷு துரைக்கு யெழுதின காகிதம் ஒன்றும் பிறகாசமுதலி தம்பி குழந்தைப்பமுதலி யென் பேருக்கு ஒரு காகிதமும் யெழுதிக் கொடுத்து அதைக் காரைக்கால் சேவகன் கொண்டுவந்து என் கையில் குடுத்திருந்தான் அதில் மூசியே ரீஷு துரைக்கு யெழுதின காகிதத்தைமாத்திரம் துரை கையிலே கொண்டுபோய் குடுத்து விசயருகவநாயக்கன் பேரப்பிள்ளையினுடைய அம்மானும் அவன் மகனும் இரண்டு பிறாமணாள் பத்து சேவுகர்களும் கூடலூர் அண்டையிலே யிறங்கி யின்னேரம் வாசுதேவபண்டிதன் சாவடியில் வந்திறங்கியிருக்கிறோமென்று சொல்லியனுப்பினார்களாம் யென்று சேதி சொன்னதுக்கு இரண்டாம் பேர் அறியாமல் உள்ளே வரச்சொல்லு யென்று சொல்லி மூசியே ரீஷு காகிதமும்படி........

## 1750 ஸு ஒயித்தோபர் மீ 22 உ பிறமோதூத ஸு அற்பிசி மீ 9 உ வியாழக்கிழமை.

இக்கனாள் காலத்தாலே பத்தேபேட்டையிலே நம்முட பிறான்சு அறமாதுக்கு கொம்மாந்தமாயிருக்கிற மூசியே தொத்தேல் சரீரம் சவஸ்தமில்லாமல் பிறப்பட்டு எழு மணிக்கு வந்து சேர்ந்தான். துரையவர்களும் போய் விசாரித்தார். இதல்லாமல்

பத்துநாய்க்கனே தனக்கு புலிகட்ட விருசா யெழுதிவந்த காகிதத்திலே பந்தரிலே யிருந்த ஒலாந்தா பெத்திரியார் தங்கள் சரக்கை யெல்லாம் கப்பலின்பேரிலே ஏத்திக்கொண்டு கொத்தப் பட்டணம் காக்கியநாடா வந்துவிடச்சொல்லி நாகப்பட்டணத்தார் எழுதியனுப்பினபடிக்கு தங்கள் ஒலாந்தா பெத்திரியி விருந்து கும்பினீர் சரக்கும் அவரவர் சொந்த சரக்கும் ஒலாந்தா கும்பினீர் வர்த்தகர் துபாசிகள் வகையறு சேர்ந்தவர். சரக்கை யெல்லாம் கப்பலின்பேரிலே ஏத்தி முன் அமாவாசை நாள் பயணம் பிறப்பட்டு ஒலாந்து பெத்திரி கப்பித்தான் சின்ன கப்பித்தான் வகையறு பிறுன்சுக் கோட்டையிலே யிருக்கிற மூசியே கில்லியாரை அனுப்பிவிச்சுக்கொள்ள வந்தவிடத்திலே யிவர் இராத்திரி சாப்பாட்டுக்குச் சொல்லினதின்பேரில் அவர்கள் இராத்திரி விருந்துக்கு பிறுன்சுக் கோட்டைக்கு வந்து ருதிரி விருந்து சாப்பிட்டு காலத்தாலே ஏறிப் போகலாமென்றிருந்தார்கள். அமாவாசை பெலத்த நாளானபடியினலே ஒரு பெலத்த காத்தடித்து ஒலாந்தா கப்பல் ரெண்டிலே ஏத்தியிருந்த ரொக்கம் சரக்கு வகையறு ரெண்டு கப்பலும் முழுகிப்போனதா யெழுதியிருக்குதென்று இவர்களுக்கு விருந்து சொன்னதினலே விருந்து சாப்பிட நின்றதினலே யிவர்கள் மாத்திரம் சரீரங்களுடனே தப்பினர்கள். யில்லாவிட்டால் யிவர்களும் முழுகிப் போயிருப்பார்களென்று எழுதியிருக்கிறதாய்ச் சொன்னன். இந்தச் சேதியை துரையவர்களுடனே போய் எச்சரித்தேன் நம்முட கப்பல் ஒன்று அங்கே யிருந்தது அதனுடைய சேதி யேதாகிலும் உண்டாமென்று கேட்டார். நம்முட கப்பல் சுகமா யிருக்குதென்று சொன்னேன். நேத்து முந்தாம்நாள் ரெண்டு நாளும் நாசறுசங்கு குதிரைகள் 400–500 இரண்டு மூணு பிரிவாய்ப் பிறப்பட்டு பெருமுக்கலுக்கு ரெவ்வெண்டு நாழிகை வழிமட்டுக்கும் வந்து கொள்ளையிட்டு சிறைகள்கூட பிடிச்சுக் கொண்டு போன சேதியை துரையவர்களுக்குச் சொன்னது மல்லாமல் செஞ்சி சீமை திண்டிவனம் சீமை விழுப்புறம் சீமை வகையறு யிருக்கப்பட்ட செனங்கள் சமஸ்தமான பேர்களும் பிறப்பட்டு சோழமண்டலமே கெதியாயிப் போருர்கள் பெகு பேர் கூடலூரிலிருந்து யிந்த வூருக்கு வலசை வாருர்களென்று சொன்னேன். கேட்டும் கேளாததும் சும்மாயிருந்தார்.

போம் வோயிசேன் என்கிற கப்பல் சித்ராவுக்கும் மெக்கா ஊக்தும் (Seddaht-nocha) பிறபாணமானபடியினலே பச்சை ரூபன் வரயில்லே. ஒரு செபது கொண்டி வந்து துரையவர்கள் கையில் அனுப்பிவிச்சுக்கொண்டு போனன். இக்த போ ஒயாசு (Bon Voyage) கப்பலின்பேரிலே துரை அக்காள் மகன் முசியே கெலம்வில் (M. Glainville) பேறிப் போறான் ஆனது கொண்டு யின்றைபத்தினம் முசாப்பு வைத்தபடியினலே பெரு சுருக்கிலே யேறச்சொல்லி பெருசாய் தாக்கீது பண்ணினர். இக்கக் கப்பலின்றைபதினம் ரூத்திரி பயணம் போகுது. இதிலே மோக்கா கோவற்ணதோருக்கு ஒரு காகிதமும் சித்ராவிலே செறீப்பு யென்கிறவனுக்கு ஒரு காகிதமும் பசா யென்கிற வனுக்கு ஒரு காகிதமும் ஆக மூணு காகிதங்களும் யெழுதி நேத்தபதினம்தானே மூசே கெவின்வீலே கையிலே கொடுத் தேன் இத்தனுள் ரூத்திரி போம் வயயசு (Bon Voyage) என்கிற கப்பல் சித்ர் மொக்காவுக்குப் போச்சுது.

1750 ஸ்ரீ ஒயித்தோபர் மீ 23 உ பிறமோதூத ஸ்ரீ அற்பிசி மீ 10 உ சுக்கிறவாரம்.

இத்தனுள் காலத்தாலே பிறபுவினிடத்துக்குப் போன விடத்திலே திருவாங்கோட்டு வாலமாற்தாண்டவருசாவினுடைய ஓலையை திருதிக்கியேம்பண்ணி ஆச்சுதாமென்று கேட்டார். கேட்டமாத்திரத்திலே முசியே லெப்போம் நேத்தயதினம் கப்பல் அலுவலேத்தொட்டு சாபு எழுதக்கூடாது யின்றைபதினம் ஒன் பது மணிக்கு நேத்தா யெழுதித்தாறேன் என்று சொன்னன். ஆனபடியினலே இப்போ வாங்கிவரச் சொல்லி மனுஷரை யனுப்பிவிச்சேனிப்போ வரும் யென்று சொல்லச்சே கொண்டு வந்து கொடுத்தான். அதைத் துரையவர்கள் கையில் கொடுத்த வுடனே படிச்சுப் பார்த்து அங்கேயிருந்து வந்த ஓலே யெங்கே யென்று கேட்டார் அங்கிப் பையிலேயிருந்து எடுத்துக் கொடுத் தேன் அதையும் திருதிக்சோமையும் வாங்கிக்கொண்டு இந்த ஓலேயுடனே கூட பிறான்சு யெழுத்திலே அங்கே யொரு வெள் ளேக்காறன் கையில் ஓலே மத்தலப்புபடிக்கு ஒன்று அங்கே யிருந்துதானே எழுதி அதிலே வாலமாறத்தாண்ட ராசாவும் கையெழுத்துப் போட்டு வந்திருக்குது. அந்தக் காகிதமும்

திருதிக்கிபோமும் யிவ்விடத்திலே முசியே லெபோம் கையில் பண்ணிவிச்சுக் கொடுத்ததும் அசல் ஓலையையும் யெகத்துக்கு ஒரு காகிதத்திலே வைத்து தம்முட மேசையின்மேலே வைத்துக்கொண்டு என்னை திருவாங்கோட்டு ராசாவினுடைய மனுஷர் தமிழொருத்தனும் சோனகனொருத்தனும் யிரண்டு பேர் பெரிய காரியக்காறர்கள் வந்திருக்கிறார்களே அவர்களை அழைப்பியுமென்று சொன்னார். அவர்கள் வந்தார்கள். உங்கள் ராசாவினுடைய சீமையிலே ஒலாந்தாக்காறர்களுது யெத்தனை கோட்டையிருக்குதென்று கன்னியர்குமாரி தொட்டு கிருஷ்ணாநதிமட்டுக்கும் யெழுதியிருக்கிற பிளாம் காகிதத்தை முன்னே போட்டுக்கொண்டு யிவர்களைக் கொல்லம்–கொச்சி–கல்குளம் முதலான யிடங்களை கேட்டாவிவர்களுக்கு தெற்கு வடக்கு தெரியாமல் சிறிது அவர் கேட்டதுக்கு சம்மதியாய்ச் சொன்னதுமுண்டு சொலுதாதுமுண்டு. அப்பால் ஒலாந்தாக்காறர்க்கு உங்கள் ராசாவினுடைய சீர்மையிலே யெத்தனை கோட்டை யெத்தனை பெத்திரி உண்டென்று கேட்டார். ஒரு கோட்டையும் நாலு பெத்திரியும் உண்டென்று சொன்னார்கள். யிங்கிலீசுக்காறர்களுக்கு ஒரு கோட்டையும் ரெண்டு பெத்திரியும் உண்டென்று சொன்னார்கள் அப்பால் துரையவர்கள் உங்கள் ராசாவுக்கு சத்துருவை அல்லவோ யெடுத்துவிட்டு ஒலாந்தாக்காறனவர்களுக்கும் மத்தத்தாயிருந்து உங்கள்பேரிலே ராசக்காரியம் பண்ணப்போறது அப்படி அவர்கள் செய்வார்களானால் நாங்களுங்களுக்கு மத்தத்துப் பண்ணுகிறோமேயல்லாமல் நாங்களாயவர்களுடனே பிறத்தியக்ஷமாய் சண்டா பண்ணுகிறதுக்கு சீமையிலெங்கள் இராசாவுக்கும் அவர்களுடைய ஸ்தாத்துக்கும் சமாதானமாயிருக்கிறபடியினாலே யென்று சொன்னதுக்கு திருவாங்கோட்டு ராசா மனுஷர் சொன்னது யிப்போ ஒலாந்தாக்காறர்களுக்கும் சமாதானமாய்த்தானே யிருக்குது யினி உங்களுக்கு கோட்டை போடுகிறதுக்கு யிடம் கொடுத்தால் அதின் பேரிலே அல்லோ எங்கள் சத்துருக்களை எடுத்துவிட்டு அவர்களுக்கு மத்தத்து பண்ணி அலம்பல நடத்திவைக்கப்போறான் அல்லாதபக்ஷத்துக்கு இப்போ சமாதானமாயிருக்கிறபடிக்கு அல்லாமல் நீங்கள் படைக் கூட்டும் ஆயுத சவறணையும் குண்டு மருந்து முதலானதுகளும் அதுக்கேத்தபடி வந்தால் நாமதை வைத்துக்கொண்டு நீங்களும் நாமும் ஒண்ணாயிருந்து எப்படி

நடப்பிக்கவேணுமோ அப்படி நடப்பிப்போமென்று எங்கள் ருசா சொல்லச்சொன்னார்களென்று சொன்னார்கள் நல்லது நாளைக் காலமே கோன்சேல் கூடி யித்தக் காரியம் பேசி அப்பால் உத்தரஞ் சொல்லுகிறோம் மென்று சொன்னார். சகல உடம்படிக்கையும் அங்கேயிருந்துவந்த பிறன்சு யெழுத்து காகிதத்திலேயும் அந்தப்படிக்கி சரிபாய் ஓலையிலேயும் தமிழிலேயும் வந்திருக்குதே அந்தப்படிக்கு நடப்பிச்சுக்கொள்ளுங்கோளென்று சொன்னார்கள். நல்லது துரையவர்கள் நாளையதினம் கோன்சேல் கூடி பதிலுத்தரம் சொல்லுகிறேன் போங்களென்று சொல்லி பாதிரிமார்கள் கடன் குடுக்கப்போகாது என்கிற சம்மதிகள் முதலானது பிறன்சு ருசா அந்த ராச்சியத்திலே கட்டளையிட்டபடிக்கு இவ்வருஷத்துக் கப்பலிலே யெழுதிவந்தபடிக்கு பிறன்சு எழுத்திலேயெழுதி அந்தக்காயிதத்தை பிரசித்தமான அஞ்சாறயிடங்களிலேயும் ஒட்டுகிறபடிக்கு துரையவர்கள் வாசற்கதவிலே ஒட்டின காகிதம் பார்த்து துரையவர்கள் முசியே புரி முசியே துப்பளாம் முசியே போர்ஷே யிவர்கள் கூட வந்து படிச்சுப் பார்த்து யினி பாதிரிமார்கள் ஒருத்தருக்கும் ஒரு காசு குடுக்கப்போகாது கையிலே பணமிருந்தால் கும்பினீர் பொட்டியிலே முதலிடுகிறதேயல்லாமல் பின்னை ஒன்றுஞ் செய்யக்கூடாதென்று துரையவர்களென்னைப் பார்த்துச் சொன்னார். அப்பால் முசியே தெபரேன் முதலான பேர்கள் பார்த்துப் படிச்சுப்போட்டுப் போனார்கள். அது துரையவர்களுங் காம்பிராவிலே போனார்கள். நானும் கல்குளம் ருசாவினுடைய மனுஷர்களும் பாக்குக்கிடங்கே வந்து அவர்களை விடுதியே போகச்சொல்லி நானும் பாக்குக் கிடங்கிலே வந்து ரெண்டு மணிக்கு வீட்டுக்குப் போனேன். நாசறசங்கு பவுன்சு பத்தேபேட்டைக்கு காதவழியிலே வந்திறங்கினதாக முசியே லத்தூசு யெழுதியனுப்பிவிச்சான் செஞ்சியிலேயிருக்கிற நம்முட ஆமீலும் தெசூரை (Desur) வந்தது. நம்முடவர்கள் வெள்ளைக்காரர்கள் பவுன்சு செஞ்சி ஆத்துக்கிக்கரையிலேதானே யிருக்குதென்று யெழுதியனுப்பிவிச்சேன்.

செஞ்சிக்கு தெற்கு கிழக்கு கிராமங்களிலேயிருக்கிற குடிகள் சமஸ்தமான பேர்கள் சோழமண்டலம் கெதியாய் வலசை போறார்களென்று அங்கங்கேயிருந்து எழுதி வருகிற சாடையை துரையவர்களுடனே சொன்னதுக்கு சும்மாயிருந்தார்.

1750 ௵ ஒயித்தோபர் மீ 24 உ பிறமோதூத ௵ அற்பிசி மீ 11 உ சனிவாரம்.

இத்தனாள் காலத்தாலே ஆறு மணிக்கு துவக்கி யேழு மணி மட்டுக்கும் நல்ல மழை பெஞ்சு அப்பால் பத்து மணி மட்டுக்கும் சிறுப் பெஞ்சுக்கொண்டு அப்பால் நின்றது. துரையவர்களைக் கண்டவிடத்திலே துரையவர்கள் முசபர்சானுக்கு விழுப்புறத்துக்குஞ் செஞ்சிக்கும் நடுமையத்திலே யிருக்கிற கிறாமங்களிலே யிருக்கச்சொல்லியும் மூசியே லத்துசு வாசசொல்லி யெழுதியனுப்பினால் நம்முடையவர்கள் பவுன்சைப் போய் சேரச் சொல்லியும் அவர்களழைபாவிட்டால் இருக்கிற யிடங்களிலே சத்துருக்கள் குதிரைகள் காலாட ஓட்டாமல் பத்திரமாய்ப் பார்க்கச்சொல்லியும்ப்படியாக யெழுதியனுப்பச் சொன்னதுமல்லாமல் செஞ்சியிலிருந்து பிறக்கிக் கொண்டுவாறதுக்கு இப்போ சமையமில்லாததைக்காட்டு மொகப்பு ஆயிருக்குமென்றும் யெழுதியனுப்பச்சொன்னார். அந்தப்படிக்கு யெழுதியனுப்பிவிச்சேன். அப்பால் துரை கடற்கரைக்குப் போய் வந்தபிறகு ஆசாரப்பன் தம்பி தயிரியனைக் காவல் வைத்திருக்குதே அவர்கள் நாலாயிரம் விறகனுக்கு ஆஸ்தி யெழுதி அதுக்கு சிறிது கடனெழுதிக் கொண்டுவந்து கொடுத்தார்கள் யெத்தனை நாள் போட்டு வைக்கிறது ஆனபடியினாலே நாளைக்காலத்தாலே உபயத்திரவர்களையும் அழைப்பிச்சுக் கேட்டு தீத்துப்போடுவோமென்று சொன்னார் நல்லதென்று சொல்லிப்போட்டு பனிரெண்டு மணி அடிச்சபடியினாலே வீட்டுக்குப் போனேன்.

அல்விக்கான சமேசாத்திலே போட்டுயிருந்துதேயவனையும் மாயேக்குப் போற வறகூலென்கிற கப்பலின்பேரிலே நாலு பேருடனே யேத்திவிட்டார்கள்.

இத்தனாள் ராத்திரி மயேக்கு வறகூலென்கிற கப்பல் வெள்ளிப்பட்டி யேத்திக்கொண்டு பயணமாயி போச்சுது. கப்பல் சப்பித்தான் மூசியே சுவானிசு.

1750 ௵ ஒயிந்தோபர் மீ 25 உ பிரமோதூத ௵ அற்பிசி மீ 12 உ ஆதிவாரம்.

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்குப் போயி வந்தவுடனே செக்கசேன் அனுப்பின காகிதச் சேதி

சொன்ன வசனம் உங்களுடைய உத்தரப்படிக்கு முறுத்திகா
னண்டைக்கு அனுப்பிவைத்து அல்லிக்கான் வந்தான். அவ்வி
டத்து சமாசாரஞ் சொல்லச்சே தெரியவருமென்று மின்னேரம்
அப்படி நடக்கிறது போசனையாய் காணுமென்று யெழுதியிருந்த
மத்தலப்பைச் சொல்லி அங்கேயிருந்து வந்த அல்லிகானென்கிற
சிப்பாயியையும் முன்னே நிறுத்தினவிடத்திலே யென்ன சொன்
னான் முறுத்திசல்லிகான் சொன்னது சந்தாசாயபுபேரிலே எந்த
பக்ஷம் வைத்திருக்கிறீர்களோ அந்தப் பக்ஷம் என்பேரிலே
வைக்கச்சொல்லும் னாற்காட்டு சுபா நாசறுசங்கு கையிலே
வாங்கிக்கொண்டு நாசறுசங்கை கேட்டதின்பேரிலே அனுப்பிப்
போட்டு உம்முடைய அண்டையிலே வாறேன். அந்த சிறுப்
பாவை சந்தாசாயபுக்கு குடுத்தாலும் சம்மதிகான் அப்படியல்ல
உன் கில்லாவிலேயும் உன் சாகீர்மட்டிலேயும் யிருக்கச்சொன்னா
லும் சம்மதிகானல்லாமல் சந்தாசாயபு திவானா யிருக்கச்சொன்
னால் அப்படி நடந்துக்கொள்ளுகிறேன் என்று துரைக்குச் சொல்
லச்சொன்னான் யென்று துரையுடனே வந்த அல்லிகான் சொன்
னான். துரை கேட்டு மகம்மதைப் பார்த்து தலையுமில்லை காலு
மில்லை சிறு பிள்ளை விளையாட்டென்று சேக்கசேனுக்கு நீ
யெழுதியனுப்பினி யென்று சொல்லி என்னைப் பார்த்து நீயும்
நம்முடைய காகிதமாய் அந்தப்படி யெழுதியனுப்பென்று சொன்
னார். நல்லதென்று அப்போ மதனாந்தபண்டிதருடனே சொல்லி
யெழுதச்சொன்னேன். அப்பால் சேக்குமகம்மது சரிப்புயென்கிற
வன் மியாகான் யென்கிறவன் முன் வந்தவன் கையிலே ஒரு காகித
மொன்றெழுதி அனுப்புவிச்சான். அதல்லாமல் வாய்விசேஷமாய்
சிறிது வார்த்தை சொல்லி அனுப்புவிச்சான். உங்கள் பவுன்சை
கூட்டினதைக் கண்டவுடனே பட்டாணியர் தங்கள் பவுன்சை
கூட்டிக்கொண்டு போய் நாசறுசங்குவைப் பிடிக்கவேணுமென்று
அனேகம் சமையம் பார்த்து உங்கள் பவுன்சுக்குச் சொல்லி
அனுப்பினால் உங்கள் பவுன்சு பரிச்சேதம் வாராமல் போனார்க
ளிப்படி காலதாமசம் ஆகுதென்றும் எதிரி பிளத்துக்கொள்ளு
கிறான் யினிபாகிலும் காலதாமசமில்லாமல் பவுன்சு பிறப்பட்டு
வரத்தக்கதாக உத்தரவுபண்ணவேணுமென்று சொல்லச்சொன்
னார்களென்று சொன்னதுக்கு நல்லது யிவ்விடத்துக்கு நீங்கள்
வரத் தவையில்லை. சகல உத்தர பிரதி உத்தரமும் நம்முட
பவுன்சு அவ்விடத்திலே யிருக்கிறப்போலே ஆச்சுதே அங்கே

யிருக்கிற சறுதாறுகளினண்டைதானே சால்சவாபு நடப்பிக்குறதேயல்லாமல் யிவ்வடத்துக்குப் பரிச்சேதமாயி மனுஷர் வரவுங் கவையில்லை யென்று சொல்லி அந்தப்படிக்குத்தானே பதிலுத்தரம் எழுதிக் கொடுக்கச் சொன்னார் அந்தப்படிக்கு யெழுதிக் கொடுத்து மீயாகானென்கிறவனைப் போகச்சொல்லி சொன்னார் அவனும் அனுப்பிவிச்சுக்கொண்டு போனான்.

இத்தனாள் பகலைக்கு மேலாக ஆறு மணிக்கு துரையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு முசபர்கான் யென்ன யெழுதியனுப்பினானென்று கேட்டார். தன்னை முசியே லத்தூசு முசியே லாசும் வரச்சொல்லி எழுதி எழுதியனுப்பிவிச்சார்கள். நீங்களும் முசியே லத்துச வரச்சொல்லி யெழுதினால் போகச்சொல்லி உத்தாரங் கொடுத்தபடியினாலே நானும் யின்றையதினம் காலமே கூச்சபண்ணி பத்தேபேட்டைக்கிப்பரம் ஆத்துக்கு இக்கரையிலே நம்மிட பவுன்சு யிறங்கியிருக்கிற யிடத்தே போயி சேரு சேருகிறேன் என்றெழுதின காகிதச் சேதியைச் சொல்லி அப்பால் ஆசாரப்பன் தம்பி தைரியமென்கிறவனும் ஆசாரப்பன் பெண்சாதியுடைய பிறேக்குறோதோறாய் வந்திருக்கிற மலையப்ப முதலி சூரப்பமுதலி இரண்டு பேர்கள் வந்து யிருக்கிறார்கள் யென்று சொன்னவுடனே அழைக்கச்சொன்னார். வந்தவுடனே தைரியத்தைப் பார்த்து யிந்தமட்டுக்கும் அவர்களுக்கேன் பணம் குடுத்து தீத்துப் போடவில்லை யென்று கேட்டார். கணக்கு யிருக்குது பார்த்துக்கொள்ளச் சொல்லுங்கள். சீமதலையான் பணம் குடுத்துவிடுகிறோம் இரண்டு பேர்களை மத்தியஸ்தர்களை நேமிச்சு தீத்துப் போடச்சொல்லுங்கோளென்று சொன்னதுக்கு சூரப்பமுதலி சொன்னது சின்னமுதலியார் சாவடி துபாசித்தணம் பார்க்குறபடியினாலென்னக்கு மத்தியஸ்தமிருந்து யாரும் சொல்லமாட்டார்கள். முன்னே மத்தியஸ்தர் கூடியிருந்த பெண் கனியாதானமாய்க் கொடுத்து பரியமிட்டதென்று தீற்கிறதற்கு மத்தியஸ்தர் கூட்டி அப்பால் சாதியார் மகானாடு கூடி தீராமல் கடசியிலே கோட்டையிலே கொண்டுபோயி வைத்த பிற்பாடல்லோ தீத்தார்கள் அப்படி மூனு வருஷகாலம் சென்னுதே அதுக்குள்ளே கணக்குகள் சரிப்போனபடி யெல்லாம் யெழுதி வைத்துக்கொண்டார்கள்.

செத்துப்போன ஆசாரப்பன் கையெழுத்தாயிருந்தால் ஒத்துக்கொள்ளுகிறோம் அப்பாலும் உங்கள் முன்பாக தகப்பன் கும்பினீரை முப்பது வருஷகாலம் சேவிச்சு ஒரு காசு ஆஸ்தி யில்லாமல் செத்துப்போனான் யிப்போ ஆசாரப்பனுக்கு ஆஸ்தி யில்லை யென்றவர்களிப்போ மூணு மாசமாய் காவல் வைத்துப் பிற்பாடு லக்ஷமாயிரம் விராகனுக்கு தகப்பனுக்கு ஆஸ்தி உண்டென்று கணக்கொன்று எழுதி கடனுமெழுதிக்கொண்டு வந்தார்களே யென்று யிது முதலான பேச்சுக்கள் அனேகம் பேச்சு.

**1750 ௵ ஒயித்தோபர் ௴ 26 உ பிறமோதூத ௵ அற்பிசி ௴ 13 உ சோமவாரம்.**

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போன விடத்திலே மழை பெய்கிறபடியினாலே நம்முட பவுன்சு வெளியே யிறங்கியிருக்க கூடாது நம்முட பவுன்சு பதினைஞ்சு நாளையிலே யிப்போ நாமெழுதினபடிக்கு நாசறுசங்கு பவுன்சம்பேரிலே போய்சண்டை பண்ணினால் நாசறுசங்கை கைப்பிடியாய் அகப்படுவான் அல்லது சரிக்கட்டியாகிலும் போடலாம் என்று சொன்னது மல்லாமல் பட்டாணியர்களும் வரச்சொல்லி எத்தனை மனுஷர்களை அனுப்பிவிச்சார்கள் நாசறுசங்குக்கும் அப்போ விஸ்தாரமாய்ப் பிலன் யில்லை பலஹீனமாய்ப் பயந்துகொண்டிருந்தான் அந்த சமயமும் முசே தொத்தேல் முதலான ஒபிசியாலுமார்களினால் கெட்டுப்போச்சுது யிப்போ மழை விஸ்தாரமாய் பெய்கிறபடியினாலே நம்மடவர்கள் துப்பாக்கிகள் பீரங்கிகள் வழங்கக்கூடாது. இதைத்தொட்டு யெதிரிக்கு பெலன் கொடுத்தது. யென்று சொன்னார் மெய்தானென்று ஒத்துக்கொண்டு பேசிக்கொண்டிருந்து அப்பால் வீட்டுக்குப் போனேன். பகலைக்கு மேலாகவும் மழையானபடியினாலே விஸ்தாரமான சேதி நடக்கவில்லை.

இத்தனாள் காலத்தாலே கோவளத்திலேயிருந்து படகின் பேரிலே வீருமருசாவென்கிற பாளையக்காறனைக் கொண்டுவந்து யிறங்கி சோலுதாதுகளும் சட்டைக்காறர்களும் படகிலே கூட வந்தவர்களை துரையவர்களுத்தாரப்படிக்கு சாவடியிலே கொண்டு போய் காவல் வைத்தார்கள் அப்பால் நான் சாயங்காலம் ஆறு மணிக்கு போனவுடனே துரையவர்கள் சொன்னது வீருமருசா

யென்கிறவனை கோவலத்திலிருந்து முசியே பிளாம் அனுப்பி விச்சாரனை அவனை நீ யழைத்துப்போய் நாலு சேவுகர்களை பகல்மார் கூட வைத்து ரூமர் நயினர் வீட்டிலே போய் படுத்துக் கொள்ளச்சொல்லி அப்பாலெப்படி அவன் சம்மதி தீர்க்க வேணுமோ அந்தப்படி மாற்கம் பாத்துக்கொண்டு உனக்குச் சம்மதியானபடி தீத்துப்போட்டு போகச்சொல்லு மென்று சொன்னார். நல்லதென்று சொல்லி யிவன் அபாதிக்காறன் கலியாண ராசாவையும் வரச்சொல்லி யெழுதியனுப்பினேன் அவனும் வருகிறானே வந்தவுடனே மாற்கமா யிவனும் அவனுக்கும் பேர்பாதி காவலே நேமிச்சு யிவன் குஞ்சு குழந்தைகள் சமுசாரத்தை யிவ்விடத்திலிருக்கச்சொலலி பேசிக்கொண்டு அப்பால் விடவேணும் யிவன் மெத்த பொல்லாதவன் நம்முட அமுல்தாரனை யெட்டு நாளையிலே பிடிச்சு ஒப்பிக்குறேன் என்று தற்பேசி மகம்மதுடனே உடன்படிக்கை காகிதம்கூட யெழுதிக் கொடுத்தான். அவன் பின்னையும் அனேகம் பொல்லாப்பெல்லாம் செய்திருக்கிறான்.

ஆனபடியினாலே இவனைப் பத்திரப்படுத்தி யிவன் குஞ்சு குழந்தைகளை கோவளத்திலேயாகிலும் யிவடத்திலேயாகிலும் குடியிருக்கச் செய்துகொண்டு அப்பால் விடவேணும் அல்லாமல் போனால் சும்மா விடப்போகாது என்று சொன்னேன். அதுக்குனக்கெப்படி சம்மதியோ அப்படி செய்யென்று சொன்னார். யிதிலே மழை பெலத்தபடியினாலே பாக்கு கிடங்கியே வந்து அப்பால் விட்டுக்குப் போனோம்.

**1750 ஸு ஒயித்தோபர் மீ 27 உ பிறமோதூத ஸு அற்பிசி மீ 14 உ அங்காரவாரம்.**

இத்தனாள் காலத்தாலே துரையவர்களிடத்துக்குப் போன விடத்திலே முன் 11 உ சனிக்கிழமை சாயங்காலம் நம்முட பவுன்சு செடி சுவாரியாய் பிறப்பட்டு சோனூர் அந்த வட்டங்களிலே போயிறங்கினாப்போலேயும் அதிலே கிறான்சு (M. Des Granges) என்று திறாகோம் (Dragoon) குதிரைக்காறர்களுக்கு பெரியவனாகயிருந்தவனும் நாற்பது திறாகோமுகளும் குதிரைகள்பேரிலே யேறிக்கொண்டு நாசறுசங்கு பவுன்சு சிறிது குதிரைகள் கண்டதின்பேரிலே போட்டாப்போலேயும்

கூட சிறிது குதிரைக்காறர் துலுக்கர்கூட போனதாகவும் சாயங் கால வேளையானபடியினாலேயும் மழையும் மிகுதியும் பெய்கிற படியினாலேயும் துலுக்கர் சுவார்கள் துப்பாக்கி சுடக்கூடாது நாமிப்போ திரும்பி நம்முடைய தண்டை போய் சேருவோமென் றால் முசியே கிறன்சு யென்கிற திறகோம் ஒபிசியாலும் திறகா முகளும் கேளாமல்ப்போய் சத்துருக்கள் தண்டின்பேரிலே போய் விழுந்தார்கள். துலுக்கர் சுவார்கள் அந்த நியாயத்தைச்சொல்லிப் போட்டு நம்முட பவுன்சை வந்து சேர்ந்தார்கள். வெள்ளைக்காறர் கள்நாற்பது திறகோமுகளும் முசியே கிறன்சேயும் நல்ல சண்டை பண்ணி அவர்கள் கையில் மறணத்தையடைந்தார்கள் இந்தக் கபுறு நம்முட பவுன்சுக் கவந்து நம்முடவர்கள் 12 உ ஆதி வாரம் காலத்தாலே போய் நல்ல சண்டை பண்ணினார்கள் அதின் பேரிலே நாசறுசங்கு பவுன்சு மூனு நாழிகை வழி பின் வாங்கி னார்கள் யென்று யெழுதி வந்ததென்று சொன்னார் யெனக்கும் செஞ்சியிலிருக்கிற அமுல்தாரன் யெழுதி அனுப்பினதென்ன வென்றால் மொகுலா குதிரை நாலாயிரம் குதிரைமட்டுக்கும் வந்து அங்கங்கே பதுங்கியிருந்தாப்போலேயும் திறகோமுகள் அன்பது குதிரைக்காறர்களும் ஒரு ஒபிசியாலும் போய் சிறிது குதிரைக்காறர்களைக் கண்டார்கள்போலே அவர்கள்பேரிலே குதி ரைகள் போட்டு மொகுலன் அன்னூறு குதிரைக்காறருக்கு யெசமான் முன் திண்டிவனம் முதலான யிடங்களிலே வந்து அமுல்தாரர்களையும் குடிகள் கடைக்காறர்களையும் வெட்டிப் போட்டுப் போனவனை மீர் முசபர்கான் அவனையும் அவனுடனே கூட சிறிது மொகுலரையும் கொன்று அப்பால் நம்முட திறகோ முகள் வழி அறியாததைத்தொட்டு மழை பெய்கிறபடியினாலே யும் இருட்டானபடியினாலேயும் துப்பாக்கி கத்திரிச்சுப்போன படியினாலே அவர்கள் நாலாயிரம் குதிரை யானபடியினாலேயு மிவர்கள் அன்பது குதிரைக்காறர்களில் பத்து குதிரைக்காறர் கள் தப்பி வந்தார்கள் மத்த நாற்பது குதிரைக்காறர்களும் சேதப்பட்டுப்போனார்கள்போலேயும் மறுநாள் நம்முடவர்கள் பவுன்சு யிந்தக் கபுறு கேட்டு கெடிசுவாரியாய் போயி பெகு பேர்களை சேதப்படுத்தி மழை மிகுந்த மழையானபடியினாலே செஞ்சிக் கோட்டையே வந்து சேர்ந்தார்கள் யென்றும் அந்தப் பவுன்சும் இரண்டு மூனு நாழிகை வழி பின்னடைஞ்சதென் றும் சிறிது குதிரைகள் சகாணுமட்டுக்கும் வந்து காண்பிச்சுக்

கொண்டு போனார்களென்று சீமை வழியிலே யிருக்க அமுல்தார்கள் யெல்லாம் விட்டுப்போட்டு அப்படி அப்படியே போய் விட்டார்களென்று யெழுதிவந்த சேதியைச் சொன்னேன். இதல்லாமல் நம்முடவர்கள் பவுன்சுக்கு ரஸ்த்து பரிச்சேதமாய் அகப்படுகிறது வருத்தமாயிருக்குதென்று யெழுதி வந்ததென்று சொன்னதுக்கு நீ விழுப்புறம் முதலான யிடத்துக்கு யெழுதி யனுப்பி அங்கே கம்பு நெல்லு வரகு அகப்பட்டது செஞ்சிக்கு அனுப்பிவைக்கச் சொல்லி யெழுதியனுப்பச் சொன்னார் நல்லதென்று சொல்லி வீட்டுக்குப் போனவுடனே எழுதியனுப்பிவிச்சேன்.

இத்னாள் திருவாங்கோட்டு வாலமாத்தாண்ட ருசாவுக்கு யெழுதுகிற காகிதம் துரையவர்கள் பிறான்சிலே யெழுதிக் கொடுத்தபடியினாலே முசியே லெபோம் அண்டைக்குப் போய் வாலமாத்தாண்ட ருசாவினுடைய மனுஷர்கள் மாலுபிள்ளையும் சேறுமுகவி—மாக்காயனேயும் கூட அழைத்துக்கொண்டு போய் அவர்களுக்கும் காகிதப் பயனை வெளிப்படுத்தி நானும் தமிழிலே யெழுதினேன். ஆனால் நங்கள் ருசா யெழுதின காரியத்துக்கு பதிலுத்தாம் மூணு சம்மதி யெழுதப்படயில்லை யென்று சொல்லி ஒரு துணுக்கையிலே யெழுதிக் கொடுத்து அப்பாலும் யின்னம் நாங்கள் போய் இன்றைக்கு ஆலோசனை பண்ணிக்கொண்டு நாளையதினம் வந்து சொல்லுகிறோமென்று பிறப்பட்டுப் போனார்கள் யித்னாள் மழை பேஞ்சுது. முசபர்கானும் செஞ்சியே போய் சேர்ந்தேனென்று யெழுதியனுப்பினான்.

## 1750 ஷு ஒயித்தோபர் மீ 28 உ பிறமோதூத ஷு அற்பிசி மீ 15 உ புதவாரம்

இத்னாள் காலத்தாலே பண்டிகையானபடியினாலே துரையவர்கள் கோவிலுக்குப் போயி பூசை கேட்டு வந்த பிறகு நாங்கள் போய் காண்பிச்சுக்கொண்டவிடத்திலே முசியே சொறனேக்கி உத்தாரங் கொடுத்து அனுப்பிக்கிறேன் மூணு கரிசை அரிசி தண்டுக்கு அனுப்புகிறதுக்கு அதுக்கு மாடுமுஸ்தீதுபண்ணி அனுப்பிவை யென்று சொன்னார். நல்லது வூரிலே யிருமாடுகளை சேர்ப்பிச்சு அனுப்புகிறேனென்று சொன்னேன். பரசுராமபிள்ளையையும் அழைப்பிச்சு பிசுக்கோத்து அரிசி வகை

யரு அனுப்பச்சொல்லி சொன்னார். சம்பாசிருசா அனுப்பின காகிதம் பிரான்சிலே திருக்கிறதோ பண்ணியிருக்குதாவென்று கேட்டார். யிருக்குமென்று சொன்னேன் கொண்டுவரச் சொன்னார் கொண்டுபோய்க் கொடுத்தவுடனே அதிலே கண்ணாடி சீனும் தோப்பா தினிசு வகையரு அனுப்பச்சொல்லி யெழுதி யிருக்குதே அந்தப்படி தை மீ அனுப்புவோமென்று சொன்னார் நல்லதென்று சொன்னவுடனே இந்த சம்பாசிருயனின் துரைத்தனத்திலே தானுபசேன் முதலான கோட்டை யென்று சொன்னார் ஆம் யென்று சொல்லி இப்போ இங்கிரிகள் கப்பலுகளைப் பிடிக்குறார்கள் அவர்களுமிவர்கள் மனுஷர்தான் யென்று சொன்னேன். ஆனால் பெரிய ருசாதான் கண்ணாடி முதலான தினிசுகள் வகையரு தை மீ அனுப்புவோமென்று சொன்னார் அப்பால் பனிரெண்டு மணியானபடியினாலே வீட்டுக்குப் போனேன்.

இத்தனாள் முசபர்சானுக்கு மிறுத்தசல்லிகான் காகிதம் அனுப்பினால் அதை வெள்ளைக்காறர்களை வைத்துக்கொண்டு காகிதத்தைப் படிச்சு தனக்கு வந்த பிறதிஷ்டையை அல்லாருக்கும் அறிவிச்சதுமல்லாமல் அந்தக் காகிதத்தில் பறங்கி யெழுத்திலே யெழுதிவிச்சு அதை வெள்ளைக்காறர் கையில் குடுத்து எனக்கு அனுப்பிவிக்கச்சொன்னான். இனிமேல் காகிதம் வந்தால் நம்மண்டைக்கு அனுப்புகிறதே அல்லாமல் அங்கே யிருக்கிற வெள்ளைக்காறருக்கு சேதி சொல்லவேண்டாமென்று யெழுதச் சொன்னார். அந்தப்படிக்குயெழுதியனுப்பிவிச்சேன்.

1750 ஸ்ரீ ஒயிந்தோபர் மீ 29 உ. பிரமோதூத ஸ்ரீ அற்பிசி மீ 16 உ குருவாரம்.

இத்தனாள் காலத்தாலே தீபாவளி பண்டிகை அமாவாசையானபடியினாலே அதிகாலமே பெகு பேர் ஸ்னானம் பண்ணி வந்து மேபார்க்கு பாதி கொடுத்துப் போறார்கள். அப்பால் நாசறுசங்கு லசுக்கரிலே யிருந்து நம்முட பவுன்சு வேவுகம் கிருஷ்ணசி யென்கிறவன் காசிதாயிம் காகிதம் கொண்டு வந்து கொடுத்தான். அவனையும் துரை முன்பாக கொண்டுபோய் விட்டு காசிதாயிம் காகித சேதி துரையவர்களுடை சொன்னதுக்கு நாசறுசங்கு லசுக்கர் யெங்கே யிருக்குமென்று கேட்டார்.

கிருஷ்ணுசி சொன்னது வெள்ளிமேட்டு பேட்டைக்கு ரெண்டு நாழிகை வழி யீசானிய மூலையாயி நாசறுசங்கு லசுக்கர் யிறங்கி யிருக்கிறது நம்முடவர்கள் பவுன்சு செஞ்சியிலே யிருக்கிறதும் நாசறுசங்கு லசுக்கருக்கும் காதம் காத மரையுண்டு பதினய்யாயிரம் குதிரை சண்டைக் குதிரையாயிருக்கும் மத்தப்படி கச்சரைத் தட்டுமுட்டு வாணிகள் பயிர் புணுகாவிலேயிருக்கிறது. அந்தமட்டுக்கும் உண்டு. நாசறுசங்கு ஆனல் சானவாசுகான் மோரோபண்டிதன்பேரிலே அவிசுவாசமா யெண்ணி யிருக்கிற படியினலே புதுச்சேரியார் மொகத்துமாவோடே சேர்ந்தது நாங்கள் பேசுகிறதில்லை யென்று சானவாசுகானும் மோரோ பண்டிதனும் யிருக்கிறர்கள் நாசறுசங்கு யிவர்கள் நம்முட உப்பு சாப்பிட்டு நமக்கே துரோகம் நினைத்தார்கள் என்கிற அவிசுவாசமா யெண்ணி யிருக்கிறர்கள் மீரசத்தும் மீறுத்சல்லிகானும் நாசறுசங்குக்கு கோன்சேலியோரா யிருந்து என்னேரம் நம்முட புதுச்சேரியார் சந்தாசாயபு காரியத்திலே பெகுவாய் நெருடாய்ச் சொல்லிக்கொண்டு காரியத்தை சாகி நடக்கவொட்டாமல் பண்ணிக்கொண்டு வருகிறர்கள் கடப்பையார்கள் கந்தனூரான் சாவனூரான் பங்காபுரத்தான் யிவர்கள் மூணு பேரையும் காவல் பண்ணவேணுமென்று கருத்துண்டு சமையமல்லசெய்யக்கூடாது யென்று பாத்துக்கொண்டிருக்கிறர்கள் இனி யிவர்களும் அந்த சாடை அறிந்து அவனை முழுக்கடிக்கவேணுமென்று இருக்கிறர்கள் லசுக்கரிலே ஆனல் பிறுன்சுக்காறர்கள் யிதோ வந்தார்கள் அதோ வந்தார்கள் என்கிற பயம் ஒருத்தரும் தூங்குறதில்லை யென்று இது முதலான சேதி கிஷ்ணுசி சொன்னதின்பேரிலே சனியனென்று நம்முடவர்கள் சண்டை போட்டார்கள் யென்றும் சேதி யென்னவென்று கேட்டார். பத்துப் பதினஞ்சு நாளைக்குமுன்பாக திண்டிவனம் கொளுத்தி நம்முட அமுல்காறர்களை வெட்டிப்போட்டு பெருமுக்கல் முதலான யிடங்களிலெல்லாம் பெகு பறாக்கிறமசாலியாய்த் திரிஞ்ச மீர்முசபரல்லி யென்கிற மொகுலா குதிரைக்கு சறுதாருக வந்தவன் நம்முடவர்கள் சுட்ட குண்டிலே விழுந்து போனன். பின்னையொ காலேகான் யென்றொரு சறுதாரன் அவனும் குண்டுபட்டு செத்துப்போனனும் பின்னை யொரு மொகுலன் கோஞ்ச சமேதாரன் ஒருத்தன் கூட விழுந்ததுமல்லாமல் பின்னையும் பத்து பதினஞ்சு மொகுலன் செத்தார்களாம் பத்து பதினஞ்சு பேருக்கு காயம்

பண்ணி அப்பால் நம்முடவர்கள் கொஞ்சம் நூற்ப்பது அன்பது பேர் திறகோமுகள் வந்தபடியினாலே அவர்களிரெண்டாயிரம் மூவாயிரம் குதிரை சுவார்களானபடியினாலேயும் மழை மிகுதியாய் பெயுறபடியினாலேயும் யிருட்டின் வேளையானபடியினாலேயும் புத்தஞ்சு பேர் தப்பி வந்தது போக மத்தப் பேர்களை சரிப்பிடிச்சுப் போட்டார்களென்று மிப்போ அந்தச் சேதி வரச்சே ராசறுசக்கு கூடாரத்தண்டை யிருக்கிறேனென்றும் சொன்னான். அந்தச் சேதியை சொல்லென்று கேட்டார். காசிதாபஞ் சொன்னதானால் ராசறுசக்கு அபிப்பிறாயம் வந்து உங்களுக்கும் தனக்கும் சமாதானமாயித்தானே யிருக்கவேணுமென்றும் முசபர்சங்குமேரிலே அந்த சினேகம் வைத்து நடப்பிச்சிர்களோ அந்த சினேகம் வைத்து நடப்பிக்கவேணுமென்றுமப்படி நடப்பிக்கிறதுக்கு நீங்கள் சந்தாசாயபு பேரே எடுக்க கவையில்லை முசபர்சங்கு பேரும் எடுக்க கவையில்லை. உங்கள் சாகிர் உங்களுக்கு யெழுதிக் குடுக்கிறோம் ஆற்காட்டு சுபா அன்வறிதிகான் வமுசத்தாருக்கு குடுக்கிறதுக்கு சம்மதியில்லாவிட்டால் பின்னை யாருக்கு ஆகிலும் கொடுக்கிறோம் உங்களுக்கு முசபர்சங்கு கொடுக்கவேண்டிய பணம் சீட்டுப்படிக்கிக் குடுத்து விடுகிறோம் யென்றும் யிப்படியாக முன் சொல்லி யனுப்பிச்சிருந்தும் நீங்கள் பிகாடியாய் கொண்டு வாறீர்கள் யிதல்லாமல் யெங்களுக்கு சத்துருவாய்ப் பிறப்பட்டு முசபர்சங்கு எங்கள் வசமானுப்போலே நாங்கள் சண்டை தீந்துபோச்சென்று நாங்கள் ஆற்காட்டுக்கு யெங்கள் காரியத்திலே யிருந்தால் நீங்களுங்கள் காரியத்தைப் பார்த்துக்கொண்டு உங்களுக்கு விட்ட சாகிர் உங்களிடமான கிறுமம் அதனுடனேயும் யிறுமல் சீர்மை யெல்லாம் கட்டி ஆற்காடுமட்டுக்கும் கட்டினால் நாங்களெப்படி சகிச்சுக் கொண்டிருப்போம் அப்பால் மமுதல்லிகானும் சிறிது பவுன்சும் அங்கங்கே சீர்மை கட்டினவிடத்துக்கு அனுப்பிவிச்சால் அவனையும் அடிச்சு துறத்தி செஞ்சியும் கட்டிக்கொண்டு நாமிருக்கிற ஆற்காட்டின்பேரிலேயும் சண்டைக்கு வந்தால் அப்பால் நாமும் லாச்சாறாய் சண்டைக்குப் பிறப்பட்டோம் யென்றும் யிப்பவும் அங்கேத்தம் நடந்து போனதெல்லாம் போகட்டும் யினியாகிலும் நீங்கள் முன் யிமாம்சாயபு யிருக்கச்சே யெப்படி உங்களுக்கும் யெங்களுக்கும் சினேகம் நடந்ததோ அப்படியே யிருக்கவேணுமென்று யிப்படி ஆணை சத்தியம் பிறமாணங்கள் நடக்கவும்

நாசறுசங்கு புதுச்சேரிக்கு வரவும் சகல தமாசு பாண வேடிக்
கைகள் பார்த்து சந்தோஷமாய் நீங்களெந்தக் காரியம் கேழ்க்
கிறீர்களோ அதுகளையெல்லாம் நடப்பிச்சு சினேக மூலியமாய்
செய்து குடுக்கிறோம் அதுவேயல்லாமல் பயந்து பெலகீனமாய்
நக்காறவாய்ப்போலே போய் உங்களுக்கு சீர்மை கொடுத்தாப்
போலேயும் அல்லோ ஆகுது. ஆனபடியினாலே யிப்படி செய்
கிறது நல்லதென்று காசிதாயிம் காகிதத்திலே யெழுதியிருந்த
சம்மதி யென்னவென்றால் யென்னை யிந்தச் சால்சவாபிலே
பேசச்சொல்லி யெழுதினால் பேசுறோமென்றும் வெகு நாளாய்
வெகு நாளாய் நீங்களாய்க் காகிதமெழுதாமல்போனாலும் நாமே
யெழுதினோம் யென்றும் நாங்களிந்தக் காரியத்துக்கு யெட்டு
மாசமாச்சுது ஒரு காரியமும் அனுப்பாமல் போனீர்கள் யினிமே
லப்படி செய்யாமல் சினேகம் மூத்தறோத்திர நடக்கும்படியாக
வும் செனங்களும் ராச்சியமும் சுகப்பட்டு நபாபு நாசறுசங்கு
சினேகமும் நடக்கிறாப்போலேயும் நடப்பிக்கச்சொல்லியும் மத்தச்
சேதியெல்லாம் கிருஷ்ணாசியுடனே சொல்லி அனுப்பினோம்
அவன் வந்த முகதாவிலே சொல்லுவன். கேழ்விப்பட்டு அதுக்
குத்தக்க யோசனைபண்ணி நடப்பிக்கச்சொல்லியும் சமாதான
மாய்ப் போகவேணுமென்றும் யிப்படியாக யெழுதியிருந்த சேதி
யையும் துரையவர்களுடனே சொன்னேன். அதுக்கு பதிலுத்
தரம் யெழுதச்சொன்னது நாசறுசங்குக்கும் நமக்கும் யிப்படி
யிப்படி யிருக்கிறது உத்தமல்ல சினேகமாய் யிருக்கவேணும்
நாம் யெப்போதும் நாசறுசங்கு சினேகிதம் கோரி யிருக்கிறோ
மென்றும் குடிகள் ராச்சியமும் சுகமாயிருக்கவேண்டும் அல்லாமல்
வேறே யில்லை. யிப்போ நீர் மத்தியஸ்தம் வந்து பேசுகிற
தானால் மெத்தவும் சந்தோஷம். ஞாயமாமப்டியேதிருக்கிற
தானால் யெனக்கு சம்மதி யிப்படி நீர் ஞாயமாமப்டியே தீற்
பீரென்று கண்டால் நாங்கள் பின்னை யொரு வழியிலே யேன்
பேச நினைப்போம் நீர் பெகு புத்திசாலி யென்று கேட்டு யிருக்
கிறோம் ஆனபடியினாலே யிது சுகமாயித்திருமென்று நினைக்
கிறோம். மத்த சமாச்சாரமெல்லாம் கிருஷ்ணாசி முகவ சனத்தி
னாலே நீர் அரிஞ்சுக்கொண்டோமென்றும் யெழுதச்சொன்னார்.

அந்தப்படி காகிதமெழுதி யனுப்பினவுடனே மறுபடி ட
கச்சொல்லி கேட்டு மொகுறுபண்ணியானவுடனே கிருஷ்ணாசியை
அழைத்து உன்னுடனே காசிதாயிம் முகவார்த்தையாய்ச் சொன்

னதுக்குப் பதிலுத்தரம் நீர் சொல்லுகிறது. நாசரசங்குவிடம் நாங்கள் சிநேகம் பண்ணுறதேயல்லாமல் சண்டை பண்ணுறதில்லை. என்றும் முன் சொன்னபடியே யெல்லாம் சொல்லிச் சொல்லி யிந்த சால்சவாபு நடக்கச்சே அவர்கள் சுவார்கள் வந்து சண்டை பண்ணக் கவையில்லை. யெங்களவர்களுக்கும் நாங்கள் அப்படி யெழுதியனுப்புகிறோம் யென்று சொல்லியும் சொன்னார். நல்லதென்று அந்தப்படி சொல்லுகிறேன் யென்று காகிதம் வாங்கிக்கொண்டு அனுப்பிவிச்சுக்கொண்டு போகச்சே யிவனுக்கு முப்பது ரூபா குடுக்கச்சொல்லு யென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன்.

அப்பால் வாலமார்த்தாண்ட ரூசா காகிதம் அனுப்பயில்லையேயென்று கேட்டார் நீங்களெழுதிக் கொடுத்தபடிக்கு முசியே லபோம் அண்டைக்குப் போய் அவர்கள் மாலுப் பிள்ளையையும் செருமுதலியையும் வைத்துக்கொண்டு தமிழிலே யெழுதி ஆச்சுது. அதிலே மூணு காரியம் தாங்கள் ரூசா எழுதின காகிதம் யெழுதினதுக்கு உத்திரம் யெழுதவில்லை யென்று அவர்கள் தகராறு பண்ணுகிறார்களென்று சொன்னேன். ஆனாலவர்களை அழைப்பி யென்று சொன்னார். அவர்களும் வந்து உளுக்கார்ந்தவுடனே யெந்தக் காரியம் தகராறுபண்ணிச் சொன்னீர்களென்று கேட்டார் அதுக்கு அவர்கள் சொன்னது யெங்கள் ரூசா யெழுதின காகிதத்திலே பிறான்சு கும்பினி தவிர மத்த தொப்பிக்காறர் யெங்கள் ராக்கியத்திலே நடமாட்டம் செய்து குடுக்கவேணுமென்று யெழுதினதுக்கு அப்படி செய்கிறோமென்று யெழுதவில்லை அதொன்று இரண்டாவது நீங்களாய் முன்னே சண்டை குடுத்தால் உங்கள்பேரிலே குத்தமாச்சுதே அதை யெண்ணி உங்களுக்கு நாங்களொரு மத்தத்து முதவி ஒத்தாசை செய்கிறதில்லை யென்று யெழுதியிருக்குதே அந்த வாசகம் யெழுதப்போகாது உங்களை நாங்களாய் அழைக்குறது யெங்கள் சத்துருக்கள் கொஞ்சம்நஞ்சம் அத்த சேஷமிருக்கிறதை சரிப்பிடிக்கவேணும் யென்று அல்லோ யித்தனை பிறயாசைப்படுகிறது. நாம்தானே யெங்கள் சத்துருக்களை சரிப்பிடிச்சுப்போட சாமற்தியமுண்டு ஒலாந்தாக்காறன் அவர்களுக்கு உதவியாயிருக்கிறான் யென்றில்லோ உங்களை வரவழைக்கிறதென்று சொன்னார்கள்.



